# திருவாசகம்
## சில சிந்தனைகள்

(திருச்சதகம் – திருஅம்மானை)

2

பேராசிரியர்

**அ.ச. ஞானசம்பந்தன்**

கங்கை புத்தக நிலையம்

# திருவாசகம்

## சில சிந்தனைகள்

{திருச்சதகம் - திரு அம்மானை}

②





பேராசிரியர்
அ. ச. ஞானசம்பந்தன்

அன்பளிப்பு :
தஞ்சாவூர்
நடராஜ பிள்ளை உலகநாதன் M.A B



கங்கை புத்தக நிலையம்
13, தீனதயாளு தெரு,
தியாகராய நகர்,
சென்னை - 600 017.

முதற் பதிப்பு : டிசம்பர், 1999


விலை : ரூ. 75.00

- TITLE : THIRUVASAGAM - SILA SINTHANAIGAL - 2
- AUTHOR : Prof. A.S.GNANASAMBANDAN
- LANGUAGE : TAMIL
- EDITION : First Edition, December, 1999
- No. OF PAGES : viii + 398 = 406
- PUBLISHED BY : GANGAI PUTHAKA NILAYAM
  13, DEENADAYALU STREET
  THYAGARAYA NAGAR
  CHENNAI - 600 017.
- PRICE : Rs. 75.00

PS. SP. Meyappan & Co. Chennai - 17 ☎ : 8251093

73-2



# படையல்

என்னைவிடப் பல்லாண்டுகள் மூத்தவர்களாயினும்,
1932ஆம் ஆண்டு முதல் என்னோடு நெருங்கிப் பழகி,
என்னை மகனாகவே பாவித்து,
தேவை ஏற்பட்டபோதெல்லாம்
என் வாழ்க்கையைத் திசை திருப்பியவர்கள் இருவர்.

மனத்திற்பட்டதை
மேடையில் அஞ்சாமல் கூற ஊக்கம் தந்தவரும்,
திருவாசகத்திற்கு என்போக்கில் உரைகாணவேண்டும்
என்று என்னைத் தூண்டியவரும்

தமிழ்த் தென்றல்
**திரு. வி. கலியாணசுந்தரனார்**
அவர்களே ஆவார்.

ஆன்மீகத் துறையில் என்னை உந்திச் செலுத்தி, தம்
பூத உடலை நீத்த பிறகும், இன்றும் அத்
துறையில் என்னை வழிநடத்திச் செல்பவர்

பல்கலைச் செல்வர்
**டாக்டர். தெ. பொ. மீனாட்சிசுந்தரனார்**
அவர்களே ஆவார்.

இந்த இரு மகான்களுக்கும் மிக்க பணிவன்புடன்
இந் நூலைப் **படையல்** செய்து
அவர்களின் ஆசியை வேண்டி இறைஞ்சுகின்றேன்

**அ. ச. ஞானசம்பந்தன்**

# முன்னுரை

1950ஆம் ஆண்டில் தமிழ்த் தென்றல் திரு. வி. க. அவர்கள், திருவாசகத்தை விஞ்ஞானக் கண்கொண்டு பார்த்து நான் ஓர் உரை காணவேண்டுமென்று பலமுறை தூண்டினார்கள். அத்தோடு நில்லாமல் தம்முடைய வாழ்க்கைக் குறிப்பில் என்னைப்பற்றி எழுதிய பகுதியிலும் இக் கருத்தை வெளியிட்டிருந்தார்கள். ஏனைய பக்தி நூல்களினின்றும் 'திருவாசகம்' மாறுபட்டது. இந்நூல் ஓர் இறையன்பரின் 'அனுபவப் பிழிவு' என்ற' கருத்தைத் தொடக்கத்திலிருந்தே கொண்டிருந்தேன். வாலாயமாகக் கூறும் பதவுரை, பொழிப்புரை முதலியன இந்நூலுக்கு ஏற்றதல்ல என்ற கருத்தும் என் மனத்தில் வலுவாக இடம் பெற்றிருந்தது. அன்றியும், திருவாசகத்தைப்பற்றி நினைக்கும் போதெல்லாம் ஓர் அச்சஉணர்வு தோன்றியமையால் இம்முயற்சியில் அப்போது ஈடுபடவில்லை.

தமிழ்த் தென்றல் அவர்கள் கூறி நாற்பத்தொன்பது ஆண்டுகள் கழித்து திடீரென்று சில எண்ணங்கள் மனத்தில் தோன்றலாயின. இந்த எண்ணங்களும், அவற்றைத் தோற்று விக்கும் திருவாசக அடிகளும் அடிக்கடி படம்போல் மனத்தில் தோன்றி மறைந்தன. திருவாசக அடிகள் இந்த எண்ணங்களைத் தோற்றுவித்தன என்பது உண்மைதான். ஆனால் அச்சொற்கள், அவை குறிக்கும் பொருள்கள் என்பவை நேரடியாக இவ் எண்ணங்களைத் தோற்றுவிக்க வில்லை. அதன் மறுதலையாக, அச்சொற்கள் குறிப்புப் பொருளாக (suggestion) இவ் எண்ணங்களைத் தோற்று வித்தன. அவ் எண்ணங்களுக்குக் கோவையாக ஒரு வடிவு கொடுக்கும் ஆற்றல் என்பாலில்லை. எனவே, சில அடிகளைப் படித்தவுடன் அத் தொடர்கள் என் மனத்தில் என்ன எண்ணங்களைத் தோற்றுவித்தனவோ அவற்றை

அப்படியே கூறியுள்ளேன். இவ்வாறு சொல்வதற்குத் தொல்காப்பியத்தில் வரும் 'இறைச்சி' என்ற சொல் வலிவு தந்தது.

அனுபவத்திற்கு வடிவு கொடுக்கும் திருவாசகப் பாடல்கள் ஒரு கோவையாக, ஒரு வரன்முறைக்கு உட்பட்டு வருமென்று சொல்வதற்கில்லை. கோவையும், வரன் முறையும் வேண்டுமானால், அங்கே அறிவு தொழிற்பட வேண்டும். அறிவு தொழிற்படத் தொடங்கினால், உணர்வு குறையத் தொடங்கிவிடும்.

இக்கருத்துக்களை மனத்தில் கொண்டு ஒரு அடியையோ, சில அடிகளையோ அவ்வப்பொழுது படிக்கச் சொல்லிக் கேட்கும்போது என்ன சிந்தனைகள் மனத்தில் தோன்றினவோ அவையே இங்கு இடம் பெற்றுள்ளன. இச்சிந்தனைகள் என்னுடைய அறிவின் துணைகொண்டோ, அறுபது வருட இலக்கியப் பயிற்சியின் விளைவாகவோ தோன்றியவை அல்ல.

யாழ்ப்பாணம் திரு. மார்க்கண்டு அவர்கள் இரண்டு அடிகளையோ, நான்கு அடிகளையோ படித்துக் காட்டிய உடன் அந்த விநாடி என் மனத்தில் தோன்றிய சிந்தனைகளே இங்கு இடம்பெற்றுள்ளன. அதனாற்றான், திருவாசகம் – சில சிந்தனைகள் என்று இந் நூலுக்குப் பெயரிடப்பெற்றுள்ளது. மணிவாசகர் அருள் இருப்பின் திருவாசகம் முழுமைக்கும் இதே முறையில் சிந்தனை களைத் தொடர்ந்து எழுதலாம் என்று எண்ணியுள்ளேன்.

திருச்சதகம் முதல் அம்மானை முடிய உள்ள இந்த நூலையும் என் வாய்மொழியைக் கேட்டு கைப்பட எழுதியவர் யாழ்ப்பாணம் திரு. ச. மார்க்கண்டு ஆவார். இவருக்கு என் நல்வாழ்த்துக்கள் பெரிதும் உரியனவாகும்.

எழுதி முடித்த பின்னர் ஒவ்வொரு வரியாகப் பார்த்து தடைவிடைகளை எழுப்பி ஒரு முழுவடிவம் பெறுமாறு

செய்ததுடன் படிகளைத் திருத்தும் பணியையும் மேற்கொண்ட முனைவர். மா. ரா. போ. குருசாமி, இதய மருத்துவ நிபுணர் டாக்டர். ந. சிவராசன், இரயில்வேயில் மின்னியல் தலைமைப் பொறியாளராக இருந்து ஓய்வுபெற்ற திரு. C. P. கௌரிசங்கர், திரு. ச. மார்க்கண்டு ஆகிய இந் நால்வர்க்கும் என் நல்வாழ்த்துக்கள் உரியன.

இவர்கள் நால்வரும் என்மாட்டுக்கொண்ட அன்பினால் இதனைச் செய்தார்கள் என்று கூறுவதைவிட திருவாசகத்தின்பால் அவர்கள் கொண்டுள்ள எல்லையற்ற ஈடுபாடே இதனைச் செய்யுமாறு தூண்டிற்று என்பதே உண்மையாகும்.

வழக்கம்போல இதனை நன்முறையில் அச்சுக்கோத்துத் தந்த 'சிவசக்தி கணினி அச்சுக்கோப்பாளர்'களுக்கும் என் நல்வாழ்த்துக்கள் உரியன.

சிறப்பாக நூலை வெளியிட்ட 'கங்கை புத்தக நிலைய' உரிமையாளர் திரு. திருநாவு. இராமநாதன் அவர்களுக்கு என் நல்வாழ்த்துக்கள் உரியன.

சென்னை–83
**டிசம்பர்**, 1999

**அ.ச.ஞானசம்பந்தன்**

# பொருளடக்கம்

T.N. [illegible]

# 5. திருச்சதகம்

திருவாசகத்தில் அமைந்துள்ள முதல் நான்கு அகவல்கள் இறைவனது பெருமை பேசுதல், அவன் அடிகளாருக்கு அருள் செய்தமைபற்றிப் பேசுதல், அவனுடைய எளிவந்த தன்மைபற்றிப் பேசுதல் ஆகிய வற்றை உள்ளடக்கி நின்றன. நான்காவதாகவுள்ள போற்றித் திருஅகவல் ஆன்ம யாத்திரையின் குறிக்கோள், அவன் அருளைப் பெறுதலே ஆகும் என்று அறுதியிட்டுக் கூறிவிட்டு, அந்த அருளைப் பெறுவதற்குரிய வழியையும் 'போற்றி, போற்றி' என்று கூறுவதன்மூலம் எடுத்துக் காட்டுகின்றது.

திருச்சதகம் தொடங்கி, அச்சோப் பதிகம் முடிய உள்ள பகுதிகளில் நான்கு, ஆறு, எட்டு அடிகள் கொண்ட பாடல்கள் இடம் பெற்றுள்ளன. திருச்சதகப் பாடல்கள் நூறும் பத்துப் பத்தாகப் பகுக்கப்பெற்றுள்ளன. இவற்றில் முதல் பத்துப் பாடல்கள் கட்டளைக் கலித்துறையால் அமைந்தவை. அடிகளாருக்கு ஐந்து நூற்றாண்டுகள் முற்பட்டவராகிய காரைக்கால் அம்மையாரே, தம் 'இரட்டை மணிமாலை'யில் கட்டளைக் கலித்துறையைப் பயன்படுத்தி உள்ளார். இன்று கிடைக்கின்ற நூல்கள் அளவில் கட்டளைக் கலித்துறையை முதன்முதலாகக் காண்பது அம்மையாரின் பாடல்களிலேயே ஆகும்.

மன உருக்கம், பக்தி இவற்றை வெளியிடுவதற்குக் கட்டளைக் கலித்துறை, எண்சீர்க் கழிநெடில்அடி ஆகிய

---

இனிவரும் சிந்தனைப் பகுதிகளுள் திருவாசகத்தை மேற்கோளாக எடுத்துக்காட்டும் பொழுது, திருவாசகப் பாடல்களின் தொடர் எண்ணையே தந்துள்ளோம்.

நீண்ட பாடல்களே பொருத்தம் உடையனவாகும். வெண்பா, குறட்பாப் போன்றவை கருத்தைச் சொல்லப் பயன்படுமேதவிர, உணர்ச்சியை வெளியிடப் போதுமானவையல்ல. சங்கப் பாடல்களில் உணர்ச்சியை வெளியிட ஆசிரியப்பா, கலிப்பா என்ற இரண்டும் பயன்படுத்தப் பெற்றுள்ளன. நற்றிணை முதலிய நூல்களில் காணப்பெறும் ஆசிரியப்பா சிறந்த கருத்துக்களை வெளியிடினும் உணர்ச்சிகளுள் சிறந்ததாகிய காதல் உணர்ச்சியை முழுதும் வெளியிடுமாறில்லை. ஆனால், நெய்தற் கலியிலும் மருதக் கலியிலும் வருகின்ற நீண்ட பாடல்கள் மிகச் சிறந்த முறையில் உணர்ச்சியை வெளியிடுகின்றன.

பக்தி உணர்ச்சியும் உணர்ச்சிகளில் சிறந்ததாகலின் அதனை வெளியிடக் கட்டளைக் கலித்துறை, கலிவிருத்தம், எண்சீர் விருத்தம் ஆகியவை ஏற்புடையவை. இந்தக் கருத்திலேயே திருவாசகம் இவ்வகைப் பாடல்களைப் ப்யன்படுத்தியுள்ளது. தேவார காலத்தில் எழுந்த இசைப் பாக்கள், இசையை அடிப்படையாகக் கொண்டு பக்தியைத் தோற்றுவித்தன. திருவாசகம் இசைப்பா அன்று என்றாலும், நாலு சீர், ஆறு சீர், எட்டுச் சீர் என்று இசைப் பாக்களில் வருவதுபோலச் சீர்களை ஏற்றுக்கொண்டாலும் தேர்ந் தெடுத்த சொற்களைப் பயன்படுத்துவதன் மூலம் பக்தி உணர்ச்சிக்குத் தலையாய இடம் தந்தது.

நூறு பாடல்களுடன் அந்தாதியாகத் தொகுக்கப் பட்டிருத்தலின் திருச்சதகம் என்ற பெயரை முன்னோர் வழங்கினர்போலும். சதகம் என்று கூறினால் ஒரே வகையான பாட்டுக்கள் நூறு அமைந்திருப்பதே முறை யாகும். ஆனால், திருவாசகத்தில் உள்ள திருச்சதகத்தில் கட்டளைக் கலித்துறை, தரவு கொச்சகம், எண்சீர் விருத்தம், அறுசீர் விருத்தம், கலி விருத்தம் என்பன போன்ற வேறுபாடுகளுடன் கூடிய பாடல்கள் •பத்துப்

பத்தாக இடம்பெற்றுள்ளன. ஒவ்வொரு பத்திற்கும் பழங் காலத்திலேயே ஒவ்வொரு தலைப்புத் தரப்பெற்றிருந்தது. நூறு பாடல்களைக் கொண்ட சதகம் என்று பெயரிட்டுவிட்டுப் பத்துப் பத்தாகப் பிரித்து ஒவ்வொரு தலைப்பின்கீழ்க் கொண்டுவருவது சரியா என்பது ஆராயத் தக்கது. அன்றியும். ஒவ்வொரு பத்துப் பாடலுக்கும் கொடுக்கப்பட்டுள்ள உள்தலைப்பில் ஒன்றிரண்டு போக ஏனையவை அதன் பின் வரும் பாடல்களோடு ஒரு சிறிதும் பொருந்துமாறு இல்லை. எனினும், அவை இப்பதிப்பில் இடம்பெற்றுள்ளன. சங்க இலக்கியத்துள் ஒன்றாகிய ஐங்குறுநூற்றில் பத்துப் பத்தாகப் பிரிக்கப் பெற்றுள்ள நூறு பாடல்கள் ஒரு தனித்தலைப்புடன் விளங்குவதைக் காணலாம். அன்று சதகம் என்ற வட சொல் புழக்கத்தில் இல்லை. ஆனாலும், ஐங்குறுநூற்றில் உள்ள நூறு பாடல்கள் ஒரு தலைப்பினுள் வந்ததாலும், அவை பத்துப் பத்தாகப் பிரிக்கப்பட்டிருந்ததாலும் அனைத்துப் பாடல்களும் ஆசிரியப்பாவாகவே அமைந்து உள்ளன. திருவாசகத்தில் அவ்வாறு இல்லை.

## மெய்யுணர்தல்

**5.** மெய் தான் அரும்பி விதிர்விதிர்த்து
உன் விரை ஆர் கழற்கு என்
கை தான் தலை வைத்து கண்ணீர்
ததும்பி வெதும்பி உள்ளம்
பொய் தான் தவிர்ந்து உன்னைப் போற்றி
சய சய போற்றி என்னும்
கை தான் நெகிழவிடேன் உடையாய்
என்னைக் கண்டு கொள்ளே **1**

அரும்பி-புளகாங்கிதங்கொண்டு. விரை-மணம். ததும்பி-இமைகளில் வழியக்கூடிய அளவு நிரம்பி. கைதான்

நெகிழவிடேன்-ஒழுக்கம் தளரேன். கண்டுகொள்-இயல்பைக் கண்டு அடிமையாகக் கொள்.

ஒருமனிதனுக்குப் புறப்பகுதி, அகப்பகுதி என்ற இரண்டு பகுதிகள் அமைந்துள்ளன. நம் கண்ணால் காணக்கூடிய உடம்பும் பல்வேறு உறுப்புக்களும் புறப்பகுதி எனப்படும். மனம், சித்தம், புத்தி முதலிய அந்தக்கரணங்கள் அகப்பகுதி எனப்படும். கை, கால் முதலிய புறப்பகுதிகளில் தோற்றுவிக்கப்படும் மாறுபாடுகள், அம்மனிதனுடைய மூளையின் கட்டளையால் நிகழ்வன ஆகும். ஆனால், மனம், ஆழ்மனம் என்பவற்றில் தோன்றும் உணர்ச்சிகள் அவனது கட்டளைக்குக் கீழ்ப்படிவதில்லை. இந்த அகப்பகுதிகள் புறப்பகுதியின்மேல் ஆட்சி செலுத்தக் கூடியவை. ஒருவன் உடலைக் குறுக்கிக்கொண்டு கையைத் தலைமேல் குவித்துக்கொண்டு வாயினால் இறைவன் திருநாமங்களை ஒப்பிக்கலாம். இத்தகையவருடைய மனம் எங்கேயோ சஞ்சரித்துக்கொண்டிருக்கலாம். மனம் வேறு, உடல் வேறாக இருக்கும் இந்நிலையைப் பொய்ந்நிலை என்று கூறவேண்டும்.

இதன் மறுதலையாக, மனத்தில் பக்தி நிரம்பிவழிந்து, அது சித்தத்திலும் சென்று தங்கிவிடும் நிலை ஏற்படுமேயானால் அதன் விளைவாக உடலில் தோன்றும் மாற்றங்கள் பல உண்டு. அத்தகைய ஒரு நிலையைத்தான் திருச்சதகத்தின் முதல் பாடல் குறிக்கின்றது. உடல் விதிர்விதிர்த்தல், கண்ணீர் ததும்பி வழிதல், உள்ளம் பொய்தவிர்தல் ஆகியவை ஆழ்மனத்தில் நிறைந்துள்ள பக்தியின் விளைவாகத் தோன்றும் அடையாளங்களாகும். இந்நிலையில், இறைவன் திருவடிகள் அந்த ஆழ்மனத்தில் பதிகின்றன. அந்தத் திருவடிகளுக்கு வணக்கஞ் செய்யும் முறையில், கைகள் தலைமேல் ஏறிக் குவிகின்றன; வாய் 'போற்றி சயசய' என்று பாடுகின்றது.

'கைதான் நெகிழவிடேன்' என்று அடிகளார் பாடுவது, அவனுடைய விரையார் கழல் உள்ளத்துள் பதிந்திருத்தலின் கையை நெகிழவிடமாட்டேன் என்ற கருத்தைக் கூறுவதாகும்.

இப்பாடல் பொய்தவிர்ந்த உள்ளத்தில் இறை உணர்வு தோன்றும்பொழுது நிகழ்கின்ற நிகழ்ச்சிகளைப் படம் பிடித்துக் காட்டுவதாகும். ஆழ்மனத்தில் திருவடி நிறைந்திருந்து, அதன் பயனாக உடலிலே மாறுபாடுகள் தோன்றினாலும் இந்த இறை அன்பர்கள், இந்த அனுபவம் எங்கே தம்மை விட்டுப் போய்விடுமோ என்ற அச்சம் காரணமாக, 'என்னைக் கண்டுகொள், என்னை விட்டு விடாதே' என்றெல்லாம் பேசுவார்கள்.

திருவாதவூரர் என்ற அமைச்சர், மாணிக்கவாசகராக மாறி, இறையனுபவத்தை முழுவதுமாகப் பெற்று, பின்னர் அந்த அனுபவம் நீங்கிய நிலையில் இப்பாடல்களைப் பாடுகின்றார். தாம் எதிர்பாராமல் இருக்கவும், குருநாதர் தாமே வந்து ஆட்கொண்டு தம்முடைய மனநிலையை மாற்றியதால் 'கைதான் நெகிழ விடேன்' என்கிறார். இத்தகைய உறுதிப்பாடு அவரிடம் தோன்றாத காலத்தில், தாமே வந்து ஆட்கொண்ட குருநாதர், இப்பொழுது உறுதிப்பாடு முழுவதுமாகக் கைவரப்பெற்ற நிலையில் மறைந்துவிட்டார். ஆதலால்தான், அடிகளார் இப்பொழுது குருநாதரிடம் ஒரு விண்ணப்பத்தைச் செய்கிறார். 'ஐயா! உன்னைச் சரணமடைந்து அதன் விளைவாகக் கை நெகிழவிடாமல் இருக்கின்றேன். எனவே, என்னைக் கண்டு கொள்வது உன் கடமை' என்ற கருத்தில் பேசுகின்றார்.

விரையார் கழல் என்ற சொற்கள், நாவரசர் பெருமானின் 'இன மலர்கள் போது அவிழ்ந்து மதுவாய்ப் பில்கி நனைந்தனைய திருவடி' *(திருமுறை: 6:14-1)* என்ற தொடரை நினைவூட்டுகின்றன.

6. கொள்ளேன் புரந்தரன் மால் அயன்
வாழ்வு குடிகெடினும்
நள்ளேன் நினது அடியாரொடு
அல்லால் நரகம் புகினும்
எள்ளேன் திருஅருளாலே
இருக்கப்பெறின் இறைவா
உள்ளேன் பிற தெய்வம் உன்னை அல்லாது
எங்கள் உத்தமனே 2

புரந்தரன்-இந்திரன். நள்ளேன்-நட்புக்கொள்ளேன். எள்ளேன்-இகழேன். உள்ளேன்-நினைக்கமாட்டேன்

*'இந்திரன் முதலியோர் பதங்களை வேண்டேன். அடியார்களுடன் சேர்ந்திருப்பதாயின் நரகத்திலும் இருப்பேன்' என்கிறார்.*

*ஆன்மிகத்தில் முன்னேறுபவர்கள், தாம் செல்லும் வழியில் செல்பவர்களின் நட்பையே விரும்பவேண்டும் என்பதை மிகப் பழங்காலந்தொட்டே இந்நாட்டவர் அறிந்திருந்தனர். புத்ததேவன் 'சங்கம் சரணம் கச்சாமி' என்று சொல்வதும், 'நல்லார் இணக்கமும் நின் பூசை நேசமும்' (திருவேகம்பமாலை-5) என்று பட்டினத்தார் சொல்வதும், 'துரும்பனேன் என்னினுங் கைவிடுதல் நீதியோ தொண்டரொடு கூட்டு கண்டாய்' (தாயு: சுகவாரி—7) என்று தாயுமானார் சொல்வதும் இக்கருத்தை வலியுறுத்தும்.*

7. உத்தமன் அத்தன் உடையான்
அடியே நினைந்து உருகி
மத்த மனத்தொடு மால் இவன்
என்ன மன நினைவில்
ஒத்தன ஒத்தன சொல்லிட
ஊர் ஊர் திரிந்து எவரும்
தம் தம் மனத்தன பேச
எஞ்ஞான்றுகொல் சாவதுவே 3

மத்த மனம்-பித்து. ஒத்தன-விரும்பியவாறு.

இந்தப் பாடலுக்கு மரபு நிலையில் நின்று பொருள் கூறியவர்களும் உண்டு. சாதாரண உலகியலில் உள்ளவர்களுக்கு அறிவும் பொறி, புலன்களும் தொழிற்படுவது போல் இறை அனுபவ முதிர்ச்சியில் திளைப்பவர்களுக்கு இந்த அறிவும், பொறி, புலன்களும் தொழிற்படுவதில்லை. உணர்வுக்குக் கட்டுப்பட்ட நிலையில் அறிவு தன் தொழிலைச் செய்யாமல் அடங்கி விடுவதாலும், 'மீதூர்ந்து இன்னது செய்கிறோம்' என்று அறியும் வரம்பைக் கடந்து உணர்வு தொழிற்படுவதாலும் இந்த நிலையை இறைப் பிரேமை (divine ecstacy) என்று சொல்லுகிறோம்.

இருபத்து நான்கு மணி நேரமும் இவர்களுடைய பொறி, புலன்கள், மனம், சித்தம், புத்தி, அகங்காரம் ஆகிய அனைத்தும் இறையனுபவத்தில் மூழ்கி இருத்தலால் கால்கள் போனபடி நடப்பதும், தமக்குத் தாமே சிரித்துக் கொள்வதும், திடீரென்று கைகொட்டி ஆர்ப்பதும், திடீரென்று அழுவதும் இப்பெருமக்களுக்கு இயல்பாகும். இறையனுபவத்தில் மூழ்காமல், அறிவின் தொழிற்பாட்டை இழந்து வாழ்பவர்களை மனநிலை திரிந்தவர் (பயித்தியம்) என்று கூறுகிறோம். மேலே கூறிய செயல்கள் இருவருக்கும் பொதுவானவை ஆகும். இவ் இருவரிடையே வேறுபாடு காண்பது எப்படி என்ற வினாவிற்கு, இருபதாம் நூற்றாண்டில் வாழ்ந்த கவிச்சக்கரவர்த்தி பாரதி விடை கூறுகின்றார். புதுவையில் வாழ்ந்த குள்ளச்சாமி என்ற சித்தரை, ஊரார் அனைவரும் பயித்தியம் என்றே கூறிக் கொண்டிருந்தனர்; பாரதியும் அதனையே நம்பியிருந்தார். ஒரு நாள் குள்ளச்சாமியின் கண்களை நேரடியாகப் பார்க்கும் வாய்ப்பு, பாரதிக்குக் கிடைத்தது. அக்கண்களின் கூரிய பார்வையைக் கண்ட பாரதி, உண்மையைப் புரிந்து கொண்டார்.

அடிகளாரைப் பொறுத்தவரை அமைச்சர் பதவியைத் துறந்து ஒற்றை ஆடையுடன் ஊர்கள்தோறும் திரிந்த காரணத்தால், அவர் காதுபடவே, பயித்தியம் என்று பொருள்படப் பல்வேறு சொற்களால் அவரை எள்ளி நகையாடினர்.

இந்த வசைச்சொற்கள் அடிகளாரின் காதுகளில் விழுந்து, அவர்கள் என்ன பேசுகிறார்கள் என்பதை அறிந்து கொள்ளும் அளவிற்குப் பயன்பட்டன. ஆனால், தம்மை ஒருவர் வசைபாடும்போது அதனைக் கேட்டுச் சினங் கொள்வதும், எரிச்சல் படுவதும், வெறுப்புக் கொள்வதும் சாதாரண மக்கள் மனநிலை ஆகும். மக்கள் தம்மை பயித்தியம் என்று கூறியபொழுது, அச்சொல் அடிகளாரின் காதில் பட்டதே தவிர, மேலே கூறிய சினம் முதலிய எந்த எதிர்ச்செயலும் அவர் மனத்தில் எழவில்லை.

என்றாலும், அச்சொற்கள் காதில் விழுந்ததும், அவருடைய அறிவில் சென்று பட்டதும் உண்மைதான். அவ்வாறு காதில் விழுந்ததை, இன்ன சொற்கள் என்று புரிந்து கொள்ளும் மனநிலையைக்கூட அடிகளார் விரும்பவில்லை. இத்தனை இறை இன்ப அனுபவத்திலும், மனத்தின் அடித்தளத்தில் எங்கோ ஒரு மூலையில், 'நான்' என்ற ஒன்று செயலிழந்து கிடக்கிறது. பிறர் பயித்தியம் என்று கூறிய சொற்கள் இந்த 'நானை' மெள்ள உசுப்பிவிடுகின்றன. முடங்கிக் கிடந்த 'நான்,' தன்னை யாரோ பயித்தியம் என்று சொல்கிறார்கள் என்ற நினைவில் ஒரு விநாடிக்கும் குறைந்த நேரத்தில் தலை தூக்க ஆரம்பிக்கிறது. இச்சொற்களின் தாக்கத்தால், அந்த 'நான்' முழுவதுமாக எழுந்து எதிர்ச்செயலில் ஈடுபடுவதற்கு முன்னர், இறையனுபவ ஆனந்தம் அந்த 'நானை' அமிழ்த்தி விடுகிறது. எனவே, பிறர் கூறும் பயித்தியம் என்ற சொல் அடிகளாரைப் பொறுத்தமட்டில் எந்தத் தாக்கத்தையும், விளைவையும் ஏற்படுத்திவிடவில்லை.

*ஆனாலும், சொற்களின் பொருளைப் புரிந்துகொள்ளுமாறு செய்தது முடங்கிக் கிடந்த 'நான்' ஆகும். அது தொழிற்பட்ட நேரம் அரை விநாடிக்குக் குறைவாயினும், அதுகூட இருக்கக் கூடாது என்று விரும்புகிறார் அடிகளார். அதாவது அந்த 'நான்' முழுவதுமாக இறந்து விட வேண்டும் என்பதையே 'எஞ்ஞான்றுகொல் சாவதுவே' என்று குறிப்பிடுகின்றார்.*

இதே *கருத்தை* 'நான் கெட்டவா பாடித் தெள்ளேணம் கொட்டாமோ' *(திருவா:254) என்று அடிகளாரே பின்னரும் குறிப்பிடுகின்றார்.*

*பிற்காலத்தில் வாழ்ந்த அருணகிரியார்,*

சும்மா இரு சொல் அற என்றலுமே
அம்மா பொருள் ஒன்றும் அறிந்திலனே

**(கந்தரனுபூதி –12)**

*என்றும்,*

இறந்தேவிட்டது இவ்வுடம்பே

**(கந்தர் அலங்காரம் –19)**

*என்றும் பாடியுள்ளமை இங்கு நோக்கற்பாலது.*

**8.** சாவ முன் நாள் தக்கன் வேள்வித்
தகர் தின்று நஞ்சம் அஞ்சி
ஆவ எந்தாய் என்று அவிதா
இடும் நம்மவர் அவரே
மூவர் என்றே எம்பிரானொடும்
எண்ணி விண் ஆண்டு மண்மேல்
தேவர் என்றே இறுமாந்து
என்ன பாவம் திரிதவரே! 4

அவிதா-முறையீட்டுச்சொல். திரிதவர்-திரிவர். தகர்-ஆட்டுக் கடா.

தேவர் முதலியோர், தக்கன் வேள்வியில் அவிசை உண்டனர். ஆலகால நஞ்சு கண்டவிடத்து 'காப்பாற்று' என்று முறையிட்டனர். இதனை அறிந்திருந்தும், இவ்வுலகிடை வாழும் பூசுரராகிய வேதியர், சிவ பெருமானின் தனித்துவம் தெரியாமல், அவன் மூவருள் ஒருவன் என்று சொல்லிக்கொண்டு இறுமாந்து திரி கின்றனர். ஐயோ பாவம்!

9. தவமே புரிந்திலன் தண் மலர்
இட்டு முட்டாது இறைஞ்சேன்
அவமே பிறந்த அரு வினையேன்
உனக்கு அன்பர் உள் ஆம்
சிவமே பெறும் திரு எய்திற்றிலேன்
நின் திருவடிக்கு ஆம்
பவமே அருளு கண்டாய்
அடியேற்கு எம் பரம்பரனே 5

முட்டாது-குறைவற. அவம்-வீண். ஆம்-அடியார்களிடை உளதாகிய. பவம்-பிறப்பு.

இப்பாடலுக்கு மரபுபற்றிப் பொருள் எழுதியவர்கள் உண்டு. தனித்தனியாக ஒவ்வோர் அடியாக எடுத்து, சரியை, கிரியை என்று பொருள் செய்வதைக் காட்டிலும், பாடல் முழுவதையும் மனத்துள் வாங்கிக்கொண்டு சிந்தித்தால் பின்வருமாறு பொருள்கூறலாம் என்று தோன்றுகிறது.

'தவம் செய்யவில்லை; மலரிட்டு வணங்கவில்லை; உன் அடியார் கூட்டத்தோடு உடனிருக்கும் பேற்றைப் பெறவில்லை; பயனற்ற பிறவியை எடுத்துள்ளேன் என்றாலும், உன் திருவடிக்கண் சேரும் தகுதியை அளித்து அருளுவாயாக எம் தலைவனே!' என்ற பொருள்பட வரும் இப்பாடல், குருநாதரிடம் இறையனுபவம் பெற்று, பின்னர் அது நீங்கியவழி அடிகளாருக்கு உண்டான பெரு

வருத்தத்தை வெளியிடுகிறது. தாம் பெற்ற அனுபவம், அடியார் கூட்டத்தின் நடுவே, குருநாதரின் எதிரே இருந்த பொழுது கிடைத்ததாகும். இப்பொழுது அது போய் விட்டதென்றால், அடியார் கூட்டத்தோடு இல்லாமல் தாம் தனியே விடப்பட்டதால் அந்த அனுபவம் போய் விட்டதோ என்று கலங்குகிறார்.

தவம் செய்யவில்லை, மலரிட்டு வணங்கவில்லை எனினும் அந்த அனுபவம் கிடைத்தது. ஆனால், இப் பொழுது அது போய்விட்டது என்றால், இவை இரண்டையும் வாலாயமாகச் செய்யாததனாலோ என்ற ஐயம் மனத்திடை உறுத்துகின்றது.

**10.** பரந்து பல் ஆய் மலர் இட்டு முட்டாது
அடியே இறைஞ்சி
இரந்த எல்லாம் எமக்கே பெறலாம்
என்னும் அன்பர் உள்ளம்
கரந்து நில்லாக் கள்வனே நின் தன்
வார் கழற்கு அன்பு எனக்கும்
நிரந்தரமாய் அருளாய் நின்னை
ஏத்த முழுவதுமே 6

பரந்து-எல்லாத்தலங்களிலும் சென்று. ஆய்மலர்-வண்டு, பூச்சி, புழுக்கடி, சிதைவு, முறிவு முதலியன இல்லாது ஆய்ந்த மலர். இரந்த எல்லாம்-குறையாக வேண்டிற்று எல்லாம். கரந்து-மறைந்து. நிரந்தரம்-எப்பொழுதும்.

இப்பாடல் செல்கின்ற முறையில், 'பரந்து, பல் ஆய் மலிரிட்டு, முட்டாது அடியே இறைஞ்சி இரந்து' என்றதால், சம்பிரதாய வழியில்நின்று பூசனை புரிகின்ற பலரும் ஒன்றை இரந்து நிற்கிறார்கள். அது என்ன வென்றால், 'எல்லாம் எமக்கே பெறலாம்' என்றதால் உலகத்திலுள்ள எல்லா நலங்களும், எல்லாச் சிறப்புகளும் எமக்கே அருள வேண்டும் எனக் கேட்பதாகும். இப்படி

ஒரு குறிப்பிட்ட பயன் தமக்கு வேண்டும் என்ற கருத்துடன் வலம்வருதல், மலரிட்டுத் திருவடியைத் தொழுதல் ஆகியவற்றைச் செய்கின்றவர்களை, அன்பர் என்று அடிகளார் குறிப்பிடுவது எதிர்மறைப் பொருள தாகும். அதாவது, உண்மை அன்பு இல்லாதவர்களை 'அன்பர்' என்ற சொல்லால் குறிப்பிடுகின்றார்.

மலரிட்டு வழிபட்டதன் இறுதியில், எல்லாம் எமக்கே பெறலாம் என்று இருந்தால் அந்தப் பூசை மிகவும் குறைபாடுடையது ஆகும். எனவே, அத்தகையவர் உள்ளத்தில் நில்லாதவன் இறைவன் என்கிறார். அப்படியானால்—அவர்கள் உள்ளத்தைவிட்டு வெளியே சென்றுவிட்டான் என்றால், இவருடைய பொக்கம் இறைவனால் அறியப்படாமல் போய்விடுமோ என்ற ஐயத்தைப் போக்குபவர்போல, அவர் உள்ளத்தில் கரந்து, கள்வனாக மறைந்து நின்று அவர்கள் பூசையைக் கண்டு நகையாடுகிறான் என்கிறார். உள்ளத்தில் நிற்றல், அந்த உள்ளத்தில் தன்னலமும், ஆசையும் இல்லாதவழியே நடை பெறுவதாகும். அத்தகையவர் உள்ளத்தில் நிலைபேறாக நின்றுவிடுகிறான் என்பது தேற்றம். அவ்வாறில்லாத, பயன் கருதிப் பூசை செய்வோர் உள்ளத்தில், அவன் வெளிப்பட நிற்கமாட்டான். ஆனால், கள்வன்போல் கரந்துநின்று அவர்கள் செயலைக் கண்டுகொள்கிறான் என்று பொருள் கொள்வது சரியென்றே தோன்றுகிறது. 'கரந்து நின்று' என்பது 'மறைவாக நின்று' என்ற பொருளையே தரும். மறைந்து நின்றான் என்றால், நிலையாக நிற்கவில்லை என்பது பொருளாகும்.

இப்பாடலின், பின் இரண்டு அடிகளில் 'உன் திருவடிக்கண் அன்பை, முழுவதும் ஆகவும், நிரந்தரம்' ஆகவும் செலுத்துகின்ற ஒரு தகுதியை அருள்வாயாக என்கிறார்.

நின்னை ஏத்த எனக்கு அருள்புரியாய் என்று சொல்ல வந்த அடிகளார் இரண்டு சொற்களைப் பெய்கின்றார். 'நிரந்தரமாய்' என்ற சொல்லும் 'முழுவதுமே' என்ற சொல்லும் ஆழ்ந்த பொருளுடையவை. நின்னை முழுவதுமாய் ஏத்த என்பதால், ஏத்துதலே வழியாகவும் பயனாகவும் அமையவேண்டும் என்கிறார். அதாவது ஏத்துதலாகிய வழியைக் கொண்டு இறுதியில், இரந்து எல்லாம் எமக்கே பெறலாம் என்ற எண்ணத்தோடு ஏத்துதலை மறுத்து 'முழுவதுமாக ஏத்த' என்கிறார்.

அடுத்து, நிரந்தரமாக என்ற சொல்லும் இக்கருத்தை வலியுறுத்துவதாகும். பயன்கருதி ஏத்துபவர்கள், அப்பயன் கிட்டியவுடன் ஏத்துதலை மறந்துவிடுவர். இது உலகியற்கை. அதனை மறுப்பது கருதியே 'நிரந்தரமாய்' என்றார்.

11. முழுவதும் கண்டவனைப் படைத்தான்
முடி சாய்த்து முன்நாள்
செழுமலர் கொண்டு எங்கும் தேட
அப்பாலன் இப்பால் எம்பிரான்
கழுதொடு காட்டிடை நாடகம்
ஆடிக் கதி இலியாய்
உழுவையின் தோல் உடுத்து
உன்மத்தம் மேல்கொண்டு உழிதருமே 7

முழுவதுங் கண்டவன்-பிரமன். அவனைப்படைத்தான்-திருமால். அப்பாலன்-அப்பாற்பட்டவன்; அகப்படாதவன். கழுது - பேய். கதியிலி-எல்லாரும் அடையுமிடம் தானாதலன்றித் தனக்கோர் இடமில்லாதவன். உழுவை-புலி.

நான்முகனும் திருமாலும் தேடவும் அவர்களுக்கு அகப்படாமல் அப்பால் நின்றவன், இப்பூவுலகில் , புலித் தோலை உடுத்துச் சுடுகாட்டிடைப் பேய்களோடு ஆடுபவனாகவும், உன்மத்தன்போல எங்கும் திரிபவனாகவும் உள்ளான் என்க.

12. உழிதரு காலும் கனலும் புனலொடு
மண்ணும் விண்ணும்
இழிதரு காலம் எக் காலம் வருவது
வந்ததன் பின்
உழிதரு கால் அத்த உன் அடியேன்
செய்த வல் வினையைக்
கழிதரு காலமும் ஆய் அவை காத்து
எம்மைக் காப்பவனே 8

உழிதரும்-உலாவும். கால்-காற்று. இழிதருகாலம்-ஐம்பெரும் பூதங்களும் தத்தம் தன்மாத்திரையில் ஒடுங்கும் காலம். உழிதரு கால் அத்த-என்றும் ஆடுகின்ற அத்தனே. அவைகாத்து-மீண்டும் என்னைப்பற்றாதே காத்து.

*ஐம்பெரும் பூதங்களும் அழிகின்ற சர்வ சங்கார காலத்தையும் நிர்ணயிக்கின்ற காலத்தத்துவமாக நிற்பவனே! யாம் செய்த பழவினைகள் வந்து பற்றாமல் காத்தருள வேண்டுகிறேன் என்கிறார்.*

13. பவன் எம்பிரான் பனி மா மதிக்
கண்ணி விண்ணோர் பெருமான்
சிவன் எம்பிரான் என்னை ஆண்டு கொண்டான்
என் சிறுமை கண்டும்
அவன் எம்பிரான் என்ன நான் அடியேன்
என்ன இப் பரிசே
புவன் எம்பிரான் தெரியும் பரிசு
ஆவது இயம்புகவே 9

கண்ணி-தலையிற்சூடும் மாலை. புவனம்-உலகம்.

*'அனைத்தையும் படைப்பவனும், பிறைமதி சூடியவனு மாகிய பெருமான் மிக அற்பனாகிய என்னையும் ஒரு பொருளாக்கி என் குறைகளைக் கண்டுகொள்ளாமல் என்னை ஆட்கொண்டான். இறப்ப உயர்ந்தவனாகிய அவன், இறப்ப இழிந்தவனாகிய என்னையும் ஆட்*

கொண்டது அவனது கருணையினாலேயேயாம் என்பதை உலகம் அறிந்து பேசட்டும்' என்கிறார்.

14. புகவே தகேன் உனக்கு அன்பருள்
யான் என் பொல்லா மணியே
தகவே எனை உனக்கு ஆட்கொண்ட
தன்மை எப் புன்மையரை
மிகவே உயர்த்தி விண்ணோரைப்
பணித்தி அண்ணா அமுதே
நகவே தகும் எம்பிரான் என்னை
நீ செய்த நாடகமே 10

உனக்கு அன்பர்-உன்னன்பர்; உருபு முறைப்பொருளில் வந்தது. பொல்லாமணி-முழுமணி. தகவே-தகுதியாகுமா.

'துளையிடப்படாத மணி போன்றவனே! உன் அன்பர் கூட்டத்திடைப் புகுவதற்கு ஒரு சிறிதும் தகுதியில்லாதவன் ஆகிய என்னை, நீ ஆட்கொண்ட தன்மை தகுமோ? பொருத்தமுடையதோ? இப்படித் தகுதி இல்லாதவர் களையும் உயர்த்தி, விண்ணோரையும் தாழும்படியாகச் செய்கிறாயே. நீ ஆடுகின்ற இந்நாடகம் நகைப்பிற்குரியதாக அல்லவா இருக்கிறது' என்க.

அறிவுறுத்தல்

15. நாடகத்தால் உன் அடியார்போல் நடித்து
நான் நடுவே
வீடு அகத்தே புகுந்திடுவான் மிகப் பெரிதும்
விரைகின்றேன்
ஆடகச் சீர் மணிக் குன்றே இடை அறா
அன்பு உனக்கு என்
ஊடு அகத்தே நின்று உருகத் தந்தருள்
எம் உடையானே 11

ஆடகம்-பொன். மணி-மாணிக்கம். என்னோடு அகத்தே-எனக்குள் மனத்தே.

நாடகத்தால் என்று தொடங்கும் இப்பாடல் எளிதாகப் பொருள் விளங்கிக்கொள்ளும் நிலையில் அமையவில்லை. திருப்பெருந்துறை நிகழ்ச்சியை மனத்தில் வைத்துக்கொண்டு, இப்பாடலை நோக்கியபொழுது தோன்றிய சில கருத்துக்களைத் தந்துள்ளேன்.

அமைச்சர் கோலத்தில் இருந்தவர் திருவடி தீட்சை பெற்று, முற்றிலும் புதிய மனிதராகி இறையனுபவத்தில் திளைக்கின்ற நேரத்தில், எதிரே, குரு இருக்கின்றார்; இவரைச் சுற்றி அடியார் திருக்கூட்டம் இருக்கின்றது. அந்த அடியார்கூட்டத்தின் இடையே தம்மை இருக்குமாறு பணித்தவர் குருநாதர் என்பதை நன்றாக அடிகளாரால் உணர முடிகிறது. குருநாதரைச் சிவன் என்று தேறிவிட்ட காரணத்தாலும் அவருடைய திருவடி சம்பந்தம் பெற்றதாலும் அடியார் கூட்டத்தினிடையே இருக்கும் வாய்ப்புக் கிடைத்ததாலும் வீடுபேறு தமக்கு உறுதி என்ற நினைவில் இறையனுபவத்தில் ஆழ்ந்துள்ளார் அடிகளார்.

சில விநாடிகள் கழித்துக் கண்களைத் திறந்து பார்க்கையில் குருவும் இல்லை; அடியார்கூட்டமும் இல்லை. திடுக்குற்ற அடிகளாருக்கு, அந்த விநாடி மனத்தில் தோன்றிய எண்ணமே இப்பாடலாக வெளிப்படுகிறது. தம் முடைய அன்பு பொய்; தாமும் பொய் என்ற எண்ணம் வலுவடைகின்றது. பொய்யன்புடன் மெய்யடியார் கூட்டத் துள் நுழைந்து வீடுபேறு கிட்டிவிட்டதாகவே எண்ணி மகிழ்ந்திருந்த நிலையை 'மிகப் பெரிதும் விரைகின்றேன்' என்ற சொற்களால் குறிப்பிடுகின்றார். தாம் பொய்யன் என்ற எண்ணம் அடிகளாரை வலுவாகப் பற்றியிருந்தது என்பது, திருவாசகத்தில் இருபது இடங்களுக்கும் மேலாகத் தம்மைப் பொய்யனென்று அடிகளாரே, கூறிக்கொள்வதால் தெளிவாகிறது.

திருப்பெருந்துறையில் குருநாதர் திருவடிகளில் வீழ்கின்ற வரையில் அவர் அமைச்சர் உடையுடன் இருந்த

திருவாதவூரரே ஆவார். அப்படியிருக்க 'நாடகத்தால் உன்அடியார்போல் நடித்து நான் வீடகத்தே புகுந்திடுவான் விரைகின்றேன்' என்று கூறியது ஓர் அடியாரின் புறவேடத்தைக் குறிப்பதன்று என்பதை விளங்கிக்கொள்ள முடியும். எனவே, அடியார்போல் நடித்தல் புறவேடத்தைக் குறிக்கவில்லை என்றால் பின்னர் எதனைக் குறித்தது? உண்மை அடியாரின் தலையாய இலக்கணம் அசைக்க முடியாத இறை அன்பாகும். குருநாதரின் தீட்சையும், அடியார்களின் சேர்க்கையும் மெய்யன்பு உடையவர் களுக்கு மட்டுமே கிடைக்கும். இவை கிடைத்துவிட்டதால் தாம் கொண்டிருந்த அன்பு உண்மையானது; அந்த அன்பின் பயனாகத்தான் இவ்வடியார் கூட்டத்தினிடையே இருக்கும் வாய்ப்புக் கிடைத்தது என்று கருதியிருந்த அடிகளாருக்கு, அவர்கள் அனைவரும் மறைந்தவுடன் தாம் கொண்டிருந்த அன்பின்மேல் சந்தேகம் வந்துவிட்டது. தம் அன்பு பொய்யானது; ஆதலால்தான் அவர்கள் மறைந்தனர் என்று நொந்த அடிகளார். 'இடையறா அன்பு ஊடகத்தில் நிறைந்து நின்று உருகும் வாய்ப்பைத் தருவாயாக' என வேண்டிக் கொள்கிறார்.

16. யான் ஏதும் பிறப்பு அஞ்சேன்
இறப்பு அதனுக்கு என் கடவேன்
வானேயும் பெறில் வேண்டேன்
மண் ஆள்வான் மதித்தும் இரேன்
தேன் ஏயும் மலர்க் கொன்றைச்
சிவனே எம்பெருமான் எம்
மானே உன் அருள் பெறும் நாள்
என்று என்றே வருந்துவனே 12

ஏதும்-சிறிதும். என்கடவேன்-என்ன செய்யவல்லேன். தேனேயும்-தேன் பிலிற்றும்

இப்பாடலில் வரும் பிறப்பஞ்சேன், இறப்பதனுக்கு என்கடவேன் என்ற தொடர்களுக்குப் பிறப்பு, இறப்பு

என்னும் சுழற்சியில் சிக்குவதைப் பாடியுள்ளதாகப் பொருள் கொள்வது சிறப்புடையதாகத் தோன்றவில்லை. திருப்பெருந்துறை அனுபவத்திற்கு முன்னர் இப்பாடல் பாடப்பெற்றிருப்பின் அவ்வாறு பொருள்கொள்வதில் தவறில்லை.

திருப்பெருந்துறையில் குருநாதரையும், அடியவர் களையும் பார்த்து, குருநாதரின் திருவடி தீட்சை பெற்ற பின்னர் அதுவே வீடு என்று கருதினார். அந்தத் திருவடிகளைப் பார்த்துக்கொண்டு இருப்பதே வீடுபேறு என்று எண்ணினார். அதாவது, அத்திருவடிகளைச் சதாசர்வ காலமும் ஊனக் கண்களால் கண்டு கொண்டிருப்பதே வீடுபேறு என்று கருதினார். இந்த வீடுபேறு அடிகளாரைப் பொறுத்தவரை மானுட உடலோடு, அந்த உடலுக்குரிய கண்களோடு இருக்கும் பொழுதே கிடைத்த பெரும் பேறாகும். அதனால்தான், 'மெய்யே உன் பொன் அடிகள் கண்டு இன்று வீடுற்றேன்' (திருவாச:1-32) என்று முன்னரும் கூறியுள்ளார். இதனைப் பெற்றுவிட்ட பிறகு உடலைத் துறந்து வீடுபேற்றைப் பெற வேண்டும் என்ற பழைய நினைவு நீங்கிவிட்டது.

குருவின் திருவடி தரிசனமே வீடுபேறு என்று நினைத்தார் ஆதலின், எத்தனைத் தலங்களுக்குச் சென்று வழிபட்டபோதும் அவன் குருவடிவாகி வந்த அந்தக் காட்சி அவர் மனத்தை விட்டு அகலவில்லை. நாளாவட்டத்தில் இந்த உடம்பு இருக்கும்பொழுதே, இந்த ஊனக் கண்களால் அந்தக் காட்சியை மறுபடியும் பெற வேண்டும் என்ற அவா வளர்ந்து வளர்ந்து, அவரை ஆட் கொண்டதாகலின் அடியார் வேண்டுதலை நிறைவேற்றும் குருநாதர் திருக்கழுக்குன்றத்தில் அடிகளாரின் விருப்பப்படியே குருநாதர் வடிவில் தரிசனம் தருகிறார். 'பிணக்கிலாத பெருந்துறைப் பெருமான்' என்று தொடங்கி

'கோலம் நீ வந்து காட்டினாய் கழுக்குன்றிலே' என்று முடிகின்ற, (திருவாச:468) பாடலும்,

> துயக்கு அறுத்து எனை ஆண்டுகொண்டு நின்
> தூய்ம் மலர்க்கழல் தந்து எனைக்
> கயக்க வைத்து அடியார் முனே வந்து
> காட்டினாய் கழுக்குன்றிலே
>
> (திருவாச: 474)

என்ற பாடலடிகளும் மேலே கூறிய கருத்தை வலியுறுத்தக் காணலாம்.

சாதாரணமாக, பிறப்புக்கு அஞ்சுவதாகவே பெரியோர்கள் பாடியுள்ளனர். ஆனால், அடிகளார் 'யான் ஏதும் பிறப்பு அஞ்சேன்' என்று பாடுவதன் நோக்க மென்ன? பிறப்புப்பற்றிய அச்சம் எதனால் போயிற்று என்ற வினாவை எழுப்பினால் பெருந்துறையில் குரு நாதரின் திருவடிக்காட்சியை இப்பிறப்பிலேயே பெற்றதால் பிறப்பு அஞ்சேன் என்று உறுதியாகப் பாடமுடிந்தது. ஆனால், அக்காட்சி நிலைபேறுடையதாக அல்லாமல் ஊனக் கண்களிலிருந்து மறைந்துவிட்டமையின் 'அது மீண்டும் கிடைக்காமலேயே இறந்துபடும் நிலைமை எய்துமோ' என்ற எண்ணம் தோன்றலாயிற்று. அப்படி இறப்பு ஏற்பட்டால் அதனைத் தடுக்கும் ஆற்றல் தம்பால் இல்லை என்பதை நினைந்தவுடன் 'இறப்பதனுக்கு என்கடவேன்' என்று பாடுகின்றார்.

இரண்டாவது அடியில் விண்ணுலகம் பெறினும் வேண்டேன், மண்ணுலகம் ஆளும் ஆட்சியும் வேண்டேன் என்று கூறுவதால் அத்திருவடிக் காட்சிக்குப் பதிலாக ஒருவேளை இறைவன் இந்த இரண்டினையும் தருவதாக இருப்பினும் அவற்றை வேண்டேன் என்றார்.

மண் அரசாட்சியையும் விண் அரசாட்சியையும் ஒருசேர ஒதுக்கிய அடிகளார், அடுத்த இரண்டு அடிகளில்

வேறு ஒன்றை வேண்டுமென்று கேட்கின்றார். 'உன் அருள்பெறு நாள் என்று? என்றே வருந்துவனே', என்று கூறுவதால் அடிகளாரைப் பொறுத்தமட்டில் குருவின் திருவடி தரிசனமும் இறையருளும் ஒன்றே என்ற அவரது மனோநிலையை விளங்கிக்கொள்ள முடிகிறது.

உண்மை அடியார்களைப் பொறுத்தமட்டில் திருவடி தரிசனமே வீடுபேறாகும் என்ற கருத்து சைவம், வைணவம் என்ற இரண்டிலும் இடம் பெற்றிருப்பதை அறிய முடிகிறது.

அண்டர்கோன் அணி அரங்கன் என் அமுதினைக்
கண்ட கண்கள் மற்று ஒன்றினைக் காணாவே
(நாலாயிர: 936)

என்னும் திருப்பாணாழ்வாரின் பாசுரப்பகுதி மேலே கூறிய கருத்தை வலியுறுத்துவதாகும்.

17. வருந்துவன் நின் மலர்ப் பாதம் அவை
காண்பான் நாய் அடியேன்
இருந்து நல மலர் புனையேன்
ஏத்தேன் நாத் தழும்பு ஏறப்
பொருந்திய பொன் சிலை குனித்தாய்
அருள் அமுதம் புரியாயேல்
வருந்துவன் அத் தமியேன் மற்று
என்னே நான் ஆம் ஆறே 13

காண்பான்-காண்பதற்கு. பொற்சிலை-மேருவாகியவில்.

திருப்பெருந்துறையில் குருதரிசனமும், குரு அருளும் கிடைத்த பிறகு அடிகளார், பெரிதும் ஈடுபட்டது குருவின் திருப்பாதங்களிலேயே ஆகும். இனி, குருவானவர் மறைந்த பிறகு அவரின் மறைவுக்கு வருந்துவதைக் காட்டிலும் தம்மைப் பெரிதும் ஈடுபடுத்திய அந்தத் திருப்பாதங்களைக் காணமுடியாமல் போய்விட்டதே என்றுதான் அடிகளார்

பெரிதும் வருந்துகிறார். அந்தத் திருவடிகளை நினைந்து நினைந்து பலமுறை பேசியுள்ளதை இதற்கு முன்னரும் கண்டோம்.

இப்பாடலிலும் அதே கருத்து மீட்டும் பேசப் பெறுகிறது. 'நாயடியேன் நின் மலர்ப்பாதம் அவை காண்பான் வருந்துவன்' என்று கூறிய பிறகு, மீட்டும் அத்திருவடிகளைக் காணும் பேறு பெற்றால் தாம் என்ன செய்ய விரும்புகிறார் என்பதை இரண்டாவது அடியில் பேசுகின்றார். திருவடிகளைக் காணுகின்ற நேரத்தில் ஒளிக்கும் இச்சோரன் ஓடிவிடாமல் இருக்க 'நாண் மலர்ப் பிணையலின் தாள் தளை இடுமின்' (திருவாச: 3—142,143) என்று முன்னரும் பேசியுள்ளார். இப்பொழுது அத்திருவடிகளைக் 'காணும் பேறு கிடைத்தால் இருந்து மலர் புனைய வேண்டும், நாத்தழும்பேற ஏத்த வேண்டும் என்று தம் உள்ளக்கிடக்கையைப்' பேசுகின்றார்.

திருவடி தரிசனம் கிடைத்தபொழுது 'யானேதும் பிறப்பு அஞ்சேன்' என்று பாடிய அடிகளார், இப்பொழுது திருவடிகள் மறைந்துவிட்டமையின் தாம் தமியராக இருப்பதாக உணருகிறார்.

**18.** ஆம் ஆறு உன் திருவடிக்கே அகம்
குழையேன் அன்பு உருகேன்
பூமாலை புனைந்து ஏத்தேன் புகழ்ந்து
உரையேன் புத்தேளிர்
கோமான் நின் திருக்கோயில் தூகேன்
மெழுகேன் கூத்து ஆடேன்
சாம் ஆறே விரைகின்றேன்
சதிராலே சார்வானே 14

புத்தேளிர்-தேவர். தூகேன்-அலகிடேன். சதிர்-சாமர்த்தியம்

அடிகளார், திருப்பெருந்துறை நாடகம் நடந்து முடிந்த பிறகு முதலில் வருந்தினாரேனும் தாம் எதற்காக உலகிடை

விடப்பட்டோம் என்பதைப் புரிந்துகொண்டார். பிறகு பல தலங்களை வழிபட்டுக்கொண்டு செல்கையில் தோன்றிய எண்ணங்களுக்கு வடிவு கொடுக்கிறது இப்பாடல். எந்நேரமும் அகங்குழைந்து உருகிஉருகி ஊற்று எழும் கண்ணீர் அதனால் உடம்பு நனைந்து இருந்தார் ஆயினும், தம்முடைய ஆதர்ச புருஷராகிய கண்ணப்பரை ஓயாது நினைத்தலின், அவர்போன்ற அன்பும் உருக்கமும் தம்பால் இல்லையே என்று வருந்துவதை முதலடி தெரிவிக்கின்றது.

அடிகளார் செல்லுமிடங்களில் உள்ள திருக்கோயில் களில் பல அடியார்கள் திருத்தொண்டில் ஈடுபட்டுள்ளதைப் பார்க்கின்றார். அவர்களைப்போல, திருக்கோயிலை அலகிட்டு, மெழுக்கிட்டு, பூமாலை புனைந்தேத்தி வழிபட முடியவில்லையே என்ற வருத்தம் இடையிடையே தோன்று கிறது. இத்தகைய திருப்பணிகளைச் செய்வதால் ஒரு வேளை தம்முடைய உருக்கமும் அன்பும் மிகுதிப்படுமோ என்ற எண்ணம் தோன்றியதால்போலும் இரண்டு, மூன்றாம் அடிகளில் தாம் இவற்றைச் செய்யவில்லையே என்று வருந்துகிறார்.

ஏதோ ஒரு திருக்கோயிலில் தங்கி இத்திருப்பணிகளில் ஈடுபடாமல் அவரைத் தடுத்தது யார்? தாராளமாக அவர் இந்தத் தொண்டுகளில் ஈடுபட்டிருக்கலாம். இவற்றில் ஈடுபடவேண்டும் என்ற விருப்பமும் அவர்பால் ஓரளவு இருந்திருக்க வேண்டும். பின்னர் ஏன் அதனைச் செய்யவில்லை? இந்தத் தொண்டுகளில் ஈடுபடுவதற்காக அவர் படைக்கப்படவில்லை. இத்தகைய தொண்டில் ஈடுபட்டிருந்தால், ஈடுபடும் தொண்டருக்கு ஆன்ம முன்னேற்றம் கிடைக்குமென்பது ஒருதலை. ஆனால் அடியார்களுடன் அவரை அழைத்துச் செல்லாமல் தில்லைக்கூத்தன் அவரை விட்டுச் சென்றதற்குக் காரணம், அவர் மூலம் பராஅமுதாகிய திருவாசகம் வெளிப்பட வேண்டும் என்பதுதானே! எனவே, ஓரிடத்தில் தங்கித்

திருக்கோயில் தொண்டில் ஈடுபடவிடாமல் அடிகளாரை உள்ளிருந்து உந்தித் தள்ளுபவன் தில்லைச்கூத்தன் அல்லனோ?

என்றாலும், அடிகளார் எதிர்பார்த்த அளவுக்கு மன உருக்கமும் அவனைப் புகழ்ந்து பாடும் வாய்ப்பும் இன்மையால் 'சாமாறே விரைகின்றேன்' என நொந்து கொள்கிறார்.

**19.** வான் ஆகி மண் ஆகி
வளி ஆகி ஒளி ஆகி
ஊன் ஆகி உயிர் ஆகி
உண்மையும் ஆய் இன்மையும் ஆய்
கோன் ஆகி யான் எனது
என்று அவர் அவரைக் கூத்தாட்டு
வான் ஆகி நின்றாயை
என் சொல்லி வாழ்த்துவனே 15

வளி-காற்று. ஊன்-உடல்; ஆகுபெயர். கூத்தாட்டுவான்-வினைக்கயிற்றால் அகங்கார மமகாரமுடைய ஆன்மாக்களாகிய பாவைகளை ஆட்டுபவன்.

இப்பாடலில் இரண்டாவது அடியிலுள்ள 'உண்மையுமாய் இன்மையுமாய்' என்பது சிந்திக்கப்படவேண்டிய ஒன்றாகும். உண்மை, இன்மை என்பன முறையே உள்ள பொருள், இல்லாத பொருள் என்ற பொருளையும், உண்டு, இல்லை என்ற பொருளையும் தந்துநிற்பன ஆகும். ஒரு பொருள் உண்டு என்றால், அப்பொருள் இல்லை என்ற மறுதலைக்கு அங்கு இடமில்லை. அதேபோன்று இல்லை என்று கூறிவிட்டால், உண்டு என்ற மறுதலைக்கும் அங்கு இடமில்லை. அப்படியிருக்க இறைவனை 'உண்மையுமாய்' என்றும் 'இன்மையுமாய்' என்றும் கூறுவது எவ்வாறு? முற்றிலும் முரண்பட்ட இரண்டை எடுத்துக்கொண்டு, இவை இரண்டுமே இறைவன்தான் என்று சொல்லுகின்ற

மரபு தமிழர்களைப் பொறுத்தமட்டில் என்றுமே இருந்துவருகின்ற ஒன்றாகும். உண்மை என்பது ஒரு முனை என்றால், இன்மை என்பது அதன் மறு முனையாகும்.

ஒரு பொருளை உண்டு, இல்லை என்று நாம் கூறுவது கால, தேச, வர்த்தமானங்களுக்கு உட்பட்டே ஆகும். அறிவு ஒன்றால்மட்டுந்தான் இந்த வேறுபாட்டை, முரண்பாட்டை அறிய முடியும். உணர்வு உலகத்தில் செல்லும்பொழுது முரண்பாட்டிற்கு அங்கு இடமேயில்லை. எல்லாவற்றையும் கடந்து நிற்கின்ற பரம்பொருளை உண்மை என்று கூறுவதோ, இன்மை என்று கூறுவதோ இயலாத காரியம். உணர்வினால் உணர முற்படும்போது அந்தப் பொருள் எங்கும் நிறைந்திருக்கின்றது. உணர்பவர்களின் உள்ளே நின்று உணரப்படு பொருளாய் அது அமைந்துவிடுகிறது. எனவே அது உள்பொருளாய், உண்மையாய் விளங்கக் காண்கிறோம். அதே கடவுட் பொருளை அறிவின் துணைகொண்டு ஆராயத் தொடங்கினால், வெங்கா யத்தைத் தோலுரித்துக்கொண்டே சென்றால், இறுதியில் ஒன்றும் மிஞ்சாததுபோல இந்த ஆய்வாலும் கடவுள் என்ற ஒரு பொருள் இல்லை என்ற முடிவிற்கு வர நேரிடும். வேத காலத்திலேயேகூட இப்படி ஆராயும் கூட்டமொன்று இருந்தது என்பதை அறியமுடிகிறது. எனவே, இன்மையுமாய் உள்ளவனும் அவனே என்ற கருத்துப்பட அடிகளார் பேசுகின்றார்.

'கோனாகி யான் எனது என்று அவரவரைக் கூத்தாட்டுவான் ஆகி' என்பது அடுத்துநிற்கும் தொடராகும். பொம்மலாட்டத்தில் பொம்மைகள் கை, கால், தலை முதலியவற்றை ஆட்டி, பேசுவதுபோலும் இயங்குகின்றன. குழந்தைகள் அதனைப் பார்க்கும்பொழுது திரைக்குப்பின் ஒருவன் இருந்து இவற்றை இயக்குகிறான் என்பது தெரியாமல், பொம்மைகளே இவற்றைச் செய்கின்றன என்று நினைக்கின்றன. அதேபோல வளர்ந்து

விட்டவர்கள்கூட, நான் யார் தெரியுமா? இவை எல்லாம் என்னுடைய சொத்துக்கள் என்று கை, கால்களை ஆட்டி நெஞ்சை நிமிர்த்திப் பே.சுகின்றனர். இந்த 'யானும்' 'எனதும்' யாரைச் சுட்டுகின்றன? அழிகின்ற உடம்பையா? அழியாது உள்ளே நிற்கும் ஆன்மாவையா? ஆன்மாவைத்தான் என்பது அனைவருக்கும் நன்கு விளங்கும். ஆன்மாவை இவ்வாறு உணரவும், பேசவும் செய்தது யார்? அவன்தான் பொம்மலாட்டக்காரனாகிய கோன்(தலைவன்) என்கிறார் அடிகளார்.

இந்தப் பொம்மைகள் உணர்ச்சியும், அறிவும் பெற்றால் தங்களை ஆட்டுவிப்பவன் பொம்மலாட்டக்காரன் என்பதை எளிதில் உணர்ந்துவிடும். உலகில் வாழ்கின்ற நாம், நம்பாலுள்ள அறிவையும் உணர்வையும் நன்கு வளர்த்துக்கொண்டால், நம்மையும், நம்மை ஆட்டுவிக்கும் தலைவனையும், மறைத்து நிற்கின்ற பொம்மலாட்டத் திரை போன்ற அஞ்ஞானத் திரையை நீக்கி, யான் என்றும் எனது என்றும் நம்மைப் பேசவைப்பவன் தலைவனாகிய இறைவனே என்பதை உணர முடியும்.

**20.** வாழ்த்துவதும் வானவர்கள்
தாம்வாழ்வான் மனம்நின்பால்
தாழ்த்துவதும் தாம் உயர்ந்து தம்மை
எல்லாம் தொழவேண்டி
சூழ்த்து மதுகரம் முரலும் தாரோயை
நாய் அடியேன்
பாழ்த்த பிறப்பு அறுத்திடுவான்
யானும் உன்னைப் பரவுவனே 16

தாழ்த்துதல்-தன்முனைப்பின்றித் தாழச்செய்தல். மதுகரம்-வண்டு. பாழ்த்த பிறப்பு-பயனற்ற பிறப்பு.

பிறப்பு—இறப்பு, சுழற்சியில் சிக்கித் தவிக்கின்றவர்களை வாழ்த்துவதில் பொருளுண்டு. 'இந்தப் பிறப்பு இன்னும்

சில காலம் நீண்டு செல்வதாக' என்பதே அவ்வாழ்த்து தலின் பொருளாகும். பல்லாண்டு பல்லாண்டு வாழ்ந் தாலும் அதற்கொரு முடிவுண்டு. ஆதலின். இவ்வாழ்த்துக் கள் அந்த முடிவை இன்னும் சில காலம் தள்ளிப்போடு வதற்குப் பயன்படுமே தவிர வேறெவ்விதப் பயனையும் தருவதில்லை.

அப்படியிருக்கப் பிறப்பு, இறப்பு இல்லாதவனாகிய இறைவனை வாழ்த்துவது பொருளற்றதாகிவிடும் அன்றோ! ஆனால் தேவர்கள் ஏன் இறைவனை வாழ்த்துகிறார்கள்? சாவாமருந்து என்று நினைத்து அமுதை உண்டபின்னும் சாவு நெருங்கி வருகின்றதென்பதை அறிந்த தேவர்கள், நஞ்சை உண்டும் சாவாதிருக்கின்ற ஒருவனை வாழ்த்தக் காரணமென்ன? உண்மையில் அந்த வாழ்த்து அவனைக் குறித்து எழுந்ததன்று. அவனை வாழ்த்தி வாழ்த்தித் தாம் மேலும்மேலும் வாழவேண்டும்; ஏனையோர் அனைவரும் தம்மை வணங்கிப் பணிபுரியவேண்டும் என்ற ஆவலினாலுமே அவனை வாழ்த்துகின்றனர்.

தேவர்களாக ஆகியும்கூட அவர்கள் எவ்வித வளர்ச்சியும் அடையாமல் தம் வாழ்நாளை நீட்டிக்க வேண்டும்; தம்மை அனைவரும் தொழவேண்டும் என்ற அற்ப ஆசையினால் உந்தப்பெறுகிறார்கள் என்பது குறிப்பெச்சம்.

அதிகாரத்தின் எல்லையில் நின்றவர் ஆதலால், இனித் தம்மைப் பிறர் தொழவேண்டும் என்று அடிகளார் விரும்பவில்லை. சேவடிகள் தீண்டப்பெற்றுப் பிறவிப் பயனைப் பெற்றுவிட்டவர். ஆதலால், வாழ்நாளை நீட்டிக்க வேண்டும் என்ற விருப்பமும் அவருக்கில்லை.

அடியார் கூட்டத்தினிடையே இருக்கவும், திருவடிகளைத் தொட்டு வணங்கவும் திருப்பெருந் துறையில் வாய்ப்புக் கிடைத்ததல்லவா? அந்த வாய்ப்புக்

கிடைத்தபொழுது திருவாதவூரர் என்ற மனிதர் இந்தப் பரு உடலுடன்தானே இருந்தார்? இந்தப் பரு உடலில் பொருந்திய கண்களால்தானே திருவடிகளைத் தரிசனம் செய்தார்? இறையனுபவத்தில் இந்த உடம்போடு மூழ்கியிருந்த அவர், கண்களைத் திறந்தவுடன் அதிர்ச்சிக்கு உள்ளானார். காரணம், இவர் ஊனக் கண்களால் கண்ட அந்தக் குருவும் அங்கில்லை; அடியவர் கூட்டமும் அங்கில்லை; இவ்வுடம்பினுள் கிடைத்த இறையனுபவமும் இப்பொழுது இல்லை என்பதே ஆகும். இந்த மூன்றும் மறைந்ததற்குரிய காரணத்தை அடிகளார் நினைந்து பார்க்கிறார். தசைப் பொறியாகிய இந்தப் பரு உடல் அடியவர்களுக்கு இல்லை; குருநாதருக்கும் இல்லை. ஆதலால், அவர்கள் உடனே மறைந்துவிட்டனர். அவர் களோடு சேர்ந்து குருநாதரின் சேவடிகளை எப்போதுமே தரிசித்துக்கொண்டிருக்கும் வாய்ப்பை இழந்ததற்கு ஒரே காரணம், தாம் இந்த உடம்புடன் இருப்பதே என்ற முடிவுக்கு வந்துவிட்டார் அடிகளார். ஆதலான் பாழ்த்த பிறப்பு அறுத்திட வேண்டும் என விழைகின்றார்.

21. பரவுவார் இமையோர்கள்
பாடுவன நால்வேதம்
குரவு வார் குழல் மடவாள்
கூறு உடையாள் ஒரு பாகம்
விரவுவார் மெய் அன்பின்
அடியார்கள் மேன்மேல் உன்
அரவு வார் கழல் இணைகள்
காண்பாரோ அரியானே 17

குரவு-குராமலர். விரவுவார்-கலப்பார். அரவு வார் கழல் இணைகள்-பாம்பையும் வீரக்கழலையும் அணிந்த திருவடிகள்.

விண்ணுலகில் தேவர்களும் வேதங்களும், மண்ணுலகில் மெய்யடியார்களும் இறைவனுடைய

புகழைப் பாடிப் பரவுகின்றனர். இறைவனோ இவர்களில் பலர் காட்சிக்கு அப்பாற்பட்டவனாக, உமை ஒரு கூறனாகத் திகழ்கின்றான். ஆனாலும், தேவர்களோ வேதமோ மெய்யடியார்களோ அத்திருவடிகளை முழுமை யாகக் கண்டதில்லை.

'கண்ணால் யானும் கண்டேன் காண்க' (திருவாச:3-58) என்று அடிகளாரே கூறியுள்ளமையின் இப்பாடலின் முடிவில் 'மெய்யடியார்கள் காண்பாரோ' என்று கூறி உள்ளது சிந்திக்கத் தக்கது. காணுதல் என்ற சொல் கட்புலனால் காண்பதையும், அறிவின் துணைகொண்டு ஆய்ந்து காண்பதையும் குறிக்கின்ற சொல்லாகும். கண்ணால் ஒரு பொருளைக் கண்டுவிட்டால் உடனே அதன் இயல்பு முழுவதையும் அறிந்துவிட முடியாது. இக்கருத்தை வலியுறுத்திப் 'பூதங்கள் தோறும்' என்று தொடங்கும் திருப்பாடலில் 'கேட்டு அறியோம் நினைக் கண்டு அறிவாரை' (திருவாச:372) என்று அடிகளார் பாடியுள்ளமை நோக்கத்தக்கது.

'கண்டறிவாரை' (கேட்டு அறியோம்) என்று ஒருசொல் நீர்மைத்தாய்ப் பொருள் கொண்டால் 'கண்ணால் யானும் கண்டேன் காண்க' என்பதனோடு மாறுபடும். இறை வடிவை ஊனக் கண்களாலும் கண்ட மகான்கள் பலர் உண்டு. ஆனால் அவர்கள் கண்டார்களேதவிர அவன் இயல்பை யாரும் முழுதாக அறியவில்லை. காரணம், இறைவனே 'தம் பெருமை தான் அறியாத் தன்மையன்' (திருவாச: 274) ஆதலால், அவனுடைய இயல்பை அவனால் படைக்கப்பட்ட ஏனைய உயிர்கள், எத்துணை உயர்ந்த நிலையை அடைந்திருப்பினும், அறிதல் இயலாத காரியம். எனவேதான் கண்டு, அறிவாரைக் கேட்டு அறியோம் என்று பாடினார் அடிகளார்.

இப்பாடலிலும், மெய்யன்பின் அடியார்கள் காண்பரோ என்று கூறியது அறிவாலும் உணர்வாலும் அவன் இயல்பைக் காணமுடியாது என்றபடி.

'மெய்' அன்பர் என்று அடைகொடுத்துக் கூறிவிட்டு 'இமையோர்கள்' 'நால்வேதம்' என்ற இரண்டிற்கும் அடைகொடுக்காமல் கூறியமை கருத்துடையதாகும். இமையோர்களுக்கு மெய்யன்பு இல்லை என்பது பண்டுதொட்டே இந்நாட்டார் கண்ட உண்மையாகும். பாடுவன நால்வேதம் என்பதிலும் வேதத்தின் தனித்தன்மை பேசப்பெற்றுள்ளது. வேதத்தின் மந்திரங்கள், சொற்கள் என்பவை ஒலி அளவால் (Phonetic Value) பயன்தருபவையே தவிர அவற்றிற்கு வேறு தனிச்சிறப்பு இல்லை. இறைவனிடத்து அன்பு கொள்ள இந்தச் சொற்கள் உதவி செய்வதில்லை. எனவேதான் 'பாடுவன நால்வேதம்' என்றாரே தவிர அன்போடு பாடுவன என்று கூறவில்லை.

**22.** அரியானே யாவர்க்கும்
அம்பரவா அம்பலத்து எம்
பெரியானே சிறியேனை
ஆட்கொண்ட பெய்கழல் கீழ்
விரை ஆர்ந்த மலர் தூவேன்
வியந்து அலறேன் நயந்து உருகேன்
தரியேன் நான் ஆம் ஆறு என்
சாவேன் நான் சாவேனே! **18**

அம்பரவா-ஞானாகாசத்தில் விளங்குபவனே. நயந்து-விரும்பி. அறியானே-அறியப்படாதவன்.

இப்பாடலின் முதலடி சூக்குமத்தில் தொடங்கித் தூலத்திற்குச் செல்கின்றது. 'யாவர்க்கும் அரியானே' என்றதற்குப் புறப்பொருள்கள், கருவி, கரணங்கள் ஆகியவற்றின் துணையில்லாமல், அறிவு ஒன்றையே

துணையாகக் கொண்டு உள்ளேயுள்ளே தேடிச் சென்ற போதும் கிட்டாதவனாய், அரியனாய் உள்ளான் என்க. இந்த நுண்மை நிலையை விட்டு, அகண்ட பேரண்டப் பெருவெளியைக் கண் முதலிய பொறிகளின் துணை கொண்டு காண்டல், கருதுதல் முதலிய துறைகளில் சென்று அவனை அறியவோ, தெரியவோ, காணவோ முற்பட்டாலும் அவன் அதிலும் சிக்குவதில்லை. அவன் சிக்குவதில்லை என்ற காரணத்தால் அவன் இல்லையோ என்று நினைந்துவிட வேண்டா. அவன் அம்பரமாய் உள்ளான். அதாவது எங்கும் நிறைந்த பெருவெளியாய் உள்ளான்.

அம்பரம் அல்லது பெருவெளி என்று கூறியவுடன் நம்முடைய பொறி, புலன்களுக்குப் புறத்தேயுள்ள பெரு வெளியையே நினைக்கின்றோம். ஆனால், அகமுகமாக நோக்கத் தொடங்கினால் உள்ளேயும் ஒரு பெருவெளி இருப்பதையும் புறத்தே உள்ள பெருவெளிக்குள்ள அனைத்தியல்புகளும் உள்ளேயுள்ள பெருவெளிக்கும் உண்டு என்பதையும் அறிதல் கூடும். இதனைக் கூறவந்த நம் முன்னோர் 'அண்டத்திலுள்ளது பிண்டத்திலும், பிண்டத்திலுள்ளது அண்டத்திலும் உள்ளது' என்று கூறிப்போயினர். உள்ளத்து உணர்வால் காணமுடியாத போது அகத்தும் புறத்தும் பெருவெளியாய், அம்பரமாய் நிற்கின்றவனை இந்த இரண்டாவது முயற்சியாலும் காணமுடியவில்லை என்கிறார்.

மூன்றாவதாக உள்ளது 'அம்பலத்து எம்பெரியானே' என்பதாகும். அம்பலத்தில் ஸ்தூல, சூக்கும வடிவோடு இறைவன் இருக்கின்றான். மந்திர சொரூபமாகச் சூக்கும வடிவுடன் தில்லையில் உள்ளான். அதே தில்லையில் ஸ்தூல வடிவுடன் நட்டம் பயின்றாடும் நாதனாகவும் உள்ளான். அரியனாகவும் அம்பரனாகவும் உள்ள நிலையில் அவனைப் பற்றிக்கொண்டு உறவு கொண்டாட முடியாது.

ஆனால், தில்லையில் ஸ்தூல வடிவுடன் நட்டம் பயில்கிறவனைப் பற்றிக்கொண்டு உறவு கொண்டாட முடியும். ஆதலால் 'எம் பெரியானே' என்றார்.

தில்லையில் உள்ள ஸ்தூல வடிவிலும் அடிகளார் மிகுதியும் ஈடுபாடு கொண்டது அந்தத் திருவடியிலேயே ஆகும். காரணம் திருவாதவூரர் என்ற மனிதரை ஒரே கணத்தில் மணிவாசகராக மாற்றியது அத்திருவடியே ஆதலால், அதன்மாட்டுத் தனி ஈடுபாடு கொண்டார். அதன் பயனாகவே 'சிறியேனை ஆட்கொண்ட பெய் கழல்' என்ற தொடர் அடுத்து வருகின்றது.

தம்மை மாற்றிய இப்பெய்கழலுக்கு எவ்விதம் நன்றி பாராட்ட முடியும் என்று நினைத்த அடிகளார், வேறு ஒன்றும் செய்ய முடியாவிடினும் மணம் நிறைந்த மலர்களை இட்டாவது தம் நன்றிப் பெருக்கினைக் காட்டவில்லையே என்று வருந்துகிறார். அதுதானும் முடியாவிட்டாலும் அந்தத் திருவருளை நினைந்து 'வியந்து அலறேன்' என்கிறார். எதிர்பாராத ஒன்று ஒருவரை எதிர்ப்படும்போது அங்கு வியப்புத் தோன்றும். மனத்தில் தோன்றிய வியப்பு ஓ! ஆ! என்ற ஒலிகள் மூலம் வெளிப்படும். இந்த ஒலிகள் நீளும்பொழுது அலறலாகப் பரிணமிக்கும். **கனவேயும் தேவர்கள் காண்பு அரிய கனை கழலோன்.. நனவே எனைப்பிடித்து ஆட்கொண்ட** *(திருவாச:244)* நினைவு தோன்றுந்தோறும் நன்றிப் பெருக்கால் அந்தக் கழலுக்கு மலர் தூவி, அலறவேண்டும் என்று தோன்றுகிறது. இவை இரண்டையும் செய்யஇயலாமையின் 'விரையார்ந்த மலர்தூவேன் வியந்து அலறேன்' என்று கூறுகின்றார்.

மலர் தூவுதலும் வியந்து அலறுதலும் ஒரோவழி நடக்கக்கூடிய செயல்களே தவிர, இருபத்து நான்கு மணி நேரமும் நடைபெறக்கூடியவை அல்ல. ஆனால், சதா சர்வகாலமும் அந்த நன்றியை நினைந்து நினைந்து

உருகலாம் அல்லவா? அதுவும் நடைபெறவில்லையே என்று வருந்தும் அடிகளார் 'நயந்து உருகேன்' என்றார். இம்மூன்றானும் முறையே மெய், மொழி, மனம் என்பவற்றால் செய்யப்பெறவேண்டியவற்றைக் கூறினாரா யிற்று.

'பெரியானே· சிறியேனை ஆட்கொண்ட பெய்கழல்' என்றதால் இறைவனுடைய எளிவந்த தன்மையைப் பெய்கழலின்மேல் ஏற்றியவாறு காண்க.

23. வேனில் வேள் மலர்க் கணைக்கும்
வெள் நகைச் செவ்வாய்க் கரிய
பானல் ஆர் கண்ணியர்க்கும்
பதைத்து உருகும் பாழ் நெஞ்சே
ஊன் எலாம் நின்று உருகப்
புகுந்து ஆண்டான் இன்று போய்
வான் உளான் காணாய் நீ
மாளா வாழ்கின்றாயே 19

வேனில் வேள்-மன்தன். பானல்-குவளை.

இப்பாடலின் முதலிரண்டு அடிகள், மனித மனத்தின் இயல்பைக் கூறுகின்றன. பசி, தாகம் போன்ற இயற்கை உணர்ச்சிகளைப்போல் அல்லாமல் பாலுணர்ச்சி மிக ஆழமானதாகும். பசி போன்றவை உணவைப் பெற்றவுடன் அந்த நேரத்திற்கு அடங்கிவிடுதல் கண்கூடு. அவ்வாறின்றிப் பாலுணர்ச்சி எந்த நிலையிலும் அடங்காததாய் மேலும்மேலும் விரிவதாய் இருப்பதை மனவியலார் எடுத்துக் கூறுவர். வயது முதிர்ந்த நிலையிலும் இது மீதூர்ந்து நிற்குமென்பது விசுவாமித்திரன், யயாதி முதலியோர் கதைகளால் நன்கு அறியப்படும்.

இதற்குப் புறநடையாக, எண்பது வயதைக் கடந்த அப்பர் பெருமான் எதிரே, திருப்புகலூரில், அரம்பை

ஊர்வசி முதலானவர்கள் வந்து நட்டம் ஆடினபோதும் பெருமானுடைய மனத்தில் எவ்விதச் சலனமும் ஏற்படவில்லை என்ற செய்தி பெரிய புராணத்தில் பேசப் பெற்றுள்ளது.

அனுபவிக்கப்படும் பொருளும் அனுபவிக்கும் ஆற்றலும் இல்லாத நிலையிலும் மனத்தில் இந்த எண்ணப் பேயாட்டம் நடைபெறுவதை மனவியல் அறிந்தவர்கள் கூறுவர். இத்தகைய சராசரி மனித மனநிலையை ஏறட்டுக் கொண்டு பாடிய அடிகளார் இந்த நுணுக்கத்தை நன்கு அறிந்திருந்தமையின் 'பதைத்து உருகும் பாழ்நெஞ்சே' என்று கூறினார்.

'பதைத்து உருகும்' என்ற சொற்கள் சிந்திக்கத் தக்கன. பதைத்தலும் உருகுதலும் காம வயப்பட்ட மனத்திற்கும் பேரின்ப அனுபவத்திற்கும் பொதுவாக அமைந்துள்ளன. இக்கருத்துச் சரியானதே என்பதை விளக்கும் முறையில் இப்பாடலின் மூன்றாவது அடியில் 'ஊன் எலாம் நின்று உருகப் புகுந்து ஆண்டான்' என்று வருவதைக் காண்க. அவன் புகுந்து ஆண்டபொழுது ஊனெலாம் நின்று உருகிற்று. இங்கேயும் பரு வடிவினனாக வந்து புகுந்து ஆளவில்லை. அவன் வந்தான் என்பதைக்கூட அறிய முடியவில்லை. அப்படியானால் புகுந்ததையும் ஆண்ட தையும் அடிகளாரால் எவ்வாறு தெரிந்துகொள்ள முடிந்தது? 'ஊனெலாம் நின்று உருக' என்ற தொடர், அவன் ஆண்டபொழுது, அதன் பயனாக விளைந்த மெய்ப்பாட்டைக் கூறுகின்றது.

சராசரி மனிதர்களுக்குப் பாழ் நெஞ்சு பதைத்து உருகுவதற்குக் காரணமாய் இருப்பது மகளிர்மேல் கொண்ட காம இச்சையேயாகும். அந்த இச்சை உள்ளே புகுந்தவுடன் நெஞ்சு பதைத்து உருகிற்று. அடிகளாருக்குக் குருநாதர் அருள் செய்தவுடன் ஊனெல்லாம் நின்று

உருகிற்று. ஒன்று சிற்றின்பத்தால் விளைந்தது, ஏனையது பேரின்பத்தால் விளைந்தது. இவை இரண்டிலும் உருகுதல் பொதுத்தன்மை என்றாலும், நுண்மையான ஒரு வேறுபாட்டையும் அடிகளார் இரண்டு சொற்களில் வைத்துக் காட்டுகின்றார். சிற்றின்பத்தில் நெஞ்சுமட்டும் உருகிற்று. அதுவும் நிலை இல்லாத காம இச்சையால் தோன்றியமையின் நுண்மையான நெஞ்சை மட்டும் உருக்கிற்று. பருப்பொருளான உடலை உருக்கும் ஆற்றல் அதன்பால் இல்லை என்பதை அறிவிக்கப் 'பதைத்து உருகும் பாழ்நெஞ்சே' என்றார். ஆனால், பேரின்ப அனுபவத்தில் ஊனெலாம் நின்று உருக என்றமையின் பருப்பொருளான உடம்பின் உருக்கத்தைக் கூறினார். எனவே, நெஞ்சின் உருக்கம் சொல்லாமலே பெறப்பட்டது. அன்றியும் 'நின்று உருக' என்று கூறியமையின் பேரின்பத்தால் வரும் உருக்கம் நிலைபேறானது என்பதும் பெறப்பட்டது. இதற்குமட்டும் நின்று என்று அடை கொடுத்தமையின் சிற்றின்ப உருக்கம் நிலைபேறுடையதன்று என்பதும் பெறப்பட்டது.

திருப்பெருந்துறையில் பருவடிவுடன் அமர்ந்திருந்த குருநாதர் இவரை ஆட்கொண்டதைச் சுற்றி நின்றோர் அனைவரும் கண்டனர். அவர்களைப் பொறுத்தவரை குருநாதர் என்ற பருவடிவம், திருவாதவூரர் என்ற பருவடிவம் என்ற இரண்டும் இருந்ததை மறுப்பதற்கில்லை. திருவடி தீட்சை செய்தமையின் 'ஆண்டான்' என்று அவர்கள் கருதியதிலும் புதுமையில்லை.

ஆனால், அவர்கள் கற்பனைக்கும் அப்பாற்பட்ட ஒரு நிகழ்ச்சி அங்கு நிகழ்ந்தது என்பதை ஒரு சிறு சொல்லின் மூலம் அடிகளார் விளக்குகிறார். அந் நிகழ்ச்சி யாது? திருவடி தீட்சை செய்து ஆட்கொண்ட வெளிப்படையான நிகழ்ச்சி நடைபெறும்பொழுதே, குரு வடிவில் இருந்த

இறைவன் பிறர் அறியாமல் இவருள் புகுந்துவிட்டான். தம்மை ஆட்கொண்ட செய்தியைப் பல இடங்களில் கூறும் அடிகளார் 'புகுந்து' ஆண்டான் என்ற சொல்லையே பயன்படுத்தியுள்ளார்.

எடுத்துக்காட்டாக,

**பொருளா என்னைப் புகுந்து ஆண்ட பொன்னே**
**(திருவாச:385)**

என்றும்,

**ஆடுவித்து என் அகம் புகுந்து ஆண்டது •**
**(திருவாச:573)**

என்றும்,

**......ஆட்கொண்டு உள்ளே புகுந்த விச்சை**
**மால் அமுதப் பெருங்கடலே .........**
**(திருவாச : 30)**

என்றும் கூறியுள்ளமை நோக்கத்தக்கது.

'புகுந்து' என்ற சொல்லை 'ஆண்டான்' என்ற சொல்லோடு சேர்த்தே அடிகளார் பயன்படுத்தும் காரணமென்ன? புறத்தே இருந்து ஆட்கொண்டால் அதனை அனுபவிக்கின்ற மனித மனம் எவ்வளவுதான் அந்த அனுபவத்தில் ஈடுபட்டாலும் அது தன்னை மறந்துவிடுவதில்லை. அன்றியும், அனுபவம் என்பது அலைபோல் ஏறி இறங்கும் தன்மையுடையது ஆதலின், இறங்கிய நிலையில் மனத்தின் சேட்டைகள் ஒரோவழி வெளிப்படுதலும் இயல்பு. திருப்பெருந்துறை நாடகத்தின் பின்னர் அடிகளாரின் மனச்சேட்டை ஒரு விநாடிகூட வெளிப்படவில்லை. 'அது எதனால்' என்று நினைக் கின்றார். ஒரே ஒரு காரணத்தால்தான் அது முடியும். குரங்காட்டியைப்போலப் புறத்தே நின்று ஆட்கொண்டால் ஒருசில விநாடிகளேனும் மனக்குரங்கு தன் வேலையைச் செய்தே தீரும். அவ்வாறு நடைபெறமுடியவில்லை என்றால், ஆட்கொண்டவன் புறத்தே நின்று இவ்வனு

பவத்தைத் தரவில்லை, தம்முள் புகுந்துவிட்டான். அதனாலேயே மனக்கோட்டம் தவிர்ந்தது; உள்ளம் உருகிற்று; ஊன் உருகிற்று. அதுவும் நிலைபேறுடையதாக உருகிற்று என்பதைக் கூறவே ஊனெலாம் நின்று, உருக 'புகுந்து' ஆண்டான் என்கிறார் அடிகளார்.

அவன் புகுந்து இறையனுபவத்தில் முழுவதுமாக அடிகளாரை மூழ்கடித்தான் என்பது உண்மை. அப்படியிருக்க 'இன்றுபோய் வானுளான் காணாய்' என்று பேசுவதன் நோக்கமென்ன? அவன் புகுந்ததை, புகுந்த பின்னரே, நிறைந்த அனுபவத்தின் விளைவாக இவர் அறிந்தார். அனுபவத்தில் நிறைந்து மூழ்கியிருந்தபொழுது அங்குப் புகுந்தவனும் தனியே இல்லை; அடிகளாரும் தனியே இல்லை; அனுபவம் ஒன்றுமட்டுமே எஞ்சி நின்றது. இந்த அனுபவம் முழுவதுமாக நிறைந்து நிற்பதற்குக் காரணமே அவன் தம்முள் புகுந்ததுதான் என்று அடிகளார் கருதினார்.

இப்பொழுது அனுபவம் வடியத் தொடங்கிவிட்டது. அனுபவத்தில் மூழ்கியிருந்த அடிகளார் அனுபவ வெள்ளத்திலிருந்து வெளிப்பட்டு நிற்கின்றார். புதிய சிந்தனை பிறக்கின்றது. வெள்ளம் ஏன் வடிந்தது? தாம் ஏன் வெளிப்பட்டு நிற்கவேண்டும்? இவை இரண்டும் நிகழக் காரணம் என்ன என்ற எண்ணம் தோன்றியவுடன் அடிகளாருக்கு விடை கிடைக்கின்றது. புகுந்து ஆண்டவன் இப்பொழுது தம்மைவிட்டு வெளிப்பட்டுத் தம்மைத் தனியே விட்டுவிட்டு வானிற் சென்று தங்கிவிட்டான். அதனால்தான் தம் அனுபவம் வடிந்து தாம் வெளிப்பட்டு நிற்கும் நிலை ஏற்பட்டது என்று உணர்ந்து பாடுகின்றார்.

'புகுந்து ஆண்டான்' என்ற தொடர் கொஞ்சம் சிக்கலானது. புகுந்து என்ற வினையெச்சம் ஆண்டான் என்ற வினை கொண்டு முடிந்ததேனும் ஆளுதல் ஆகிய

செயலுக்குப் புகுதலாகிய செயல் துணையாக நிற்பதையே இந்த வினையெச்சம் உணர்த்துகிறது. புகுந்து என்றுமட்டும் கூறினால் அதுவரையில் அந்த இடத்தில் இல்லாத ஒருவர் புறத்தே நின்று இப்பொழுது உள்ளே புகுந்தார் என்ற பொருளையே அறிவிக்கும். இறைவன் ஒருவனைத் தவிர வேறு நிலையியற்பொருள், இயங்கியற்பொருள் அனைத்திற்கும் இது பொதுவாகும். காரணம், பொருள் புறத்தே நிற்கும்போது அகத்தே இல்லை; அந்தப் பொருள் அகத்தே புகுந்த பிறகு புறத்தே இருக்க வாய்ப்பில்லை. எனவே, புகுந்தான் என்று கூறினால் இதுவரையில் அங்கில்லாமல் இருந்த ஒருவன் இப்பொழுது புதிதாகப் புகுந்தான் என்ற பொருளையே தரும்.

ஆனால், புகுந்து ஆண்டான் என்று மணிவாசகர் கூறும்போது இறைவனை அல்லவா குறிப்பிடுகின்றார்? எங்கும் எல்லாவற்றிலும் ஊடுருவி நிற்கின்ற ஒரு பொருளல்லவா இறைவன்! அப்படியானால் மணிவாசகரின் உள்ளத்தில் புகுந்து ஆண்டான் என்றால் அதற்கு முன்னர் அந்த உள்ளத்தில் அவன் இல்லையா? உள்ளத்திலும் அவன் முன்னரே இருக்கிறான் என்றால், புகுந்தான் என்ற சொல் பொருளின்றி வற்றும். பாடுபவர் மணிவாசகர் ஆயிற்றே! அப்படிப் பொருளின்றி வற்றும் ஒரு சொல்லைப் பல இடங்களில் அவர் பயன்படுத்துவாரா? எனவே, இதற்கொரு உட்பொருள் இருத்தல் வேண்டும். இறைவன் உள்ளே இருப்பினும் அவன் இருக்கின்றான் என்ற நினைவு அவர்பால் முன்னரில்லை. திருவடி தீட்சை பெற்ற பிறகு கிடைத்த புதிய அனுபவத்திற்குக் காரணம் புறத்தே குருவடிவில் இருக்கின்ற இறைவன் இப்பொழுது தம்முள் புகுந்ததாக அவர் உணர்கின்றதே ஆகும். புகுந்து என்ற சொல்லைக் கேட்டவுடன் கை, கால்களோடு கூடிய நாம், காலின் உதவி கொண்டு, ஓரிடத்தில் புகுவதை மனத்தில் வைத்துக்கொண்டு, அடிகளார் கூறும் புகுந்து

என்ற சொல்லுக்குப் பொருள் காண்பது தவறாக முடிந்துவிடும்.

உள்ளே மறைந்து நிற்கும் பொருள் இதுவரை அவருக்குத் தெரியாமல் இருந்துவந்தது உண்மை. இப் பொழுது அப்பொருள் புறத்தேயிருந்து உள்ளே புகுந்ததாக அவர் நினைக்கின்றார். உள்ளத்தைக் கடந்தும் அதன் உள்ளேயும் இருப்பதால் 'கடவுள்' என்ற பெயரைப் பெற்ற அப்பொருள் மறுபடியும் உள்ளே புகுவதாக நினைப்பதில் தவறொன்றும் இல்லை.

கால்களின் உதவிகொண்டு புகுதல் அன்று இது. இதனையே கம்பநாடன் 'வாராதே வரவல்லாய்' (கம்பர்: விராதன்—54) என்று கூறுகின்றார். வருதலாகிய செயல் நடைபெறாமலும், வந்துவிடும் ஆற்றல் அப்பொருளுக்கு உண்டு. எனவே, அடிகளார் கூறும் 'புகுந்து' என்ற சொல் இப்புதிய பொருளில் பொருள் கொள்ளப்படவேண்டிய ஒன்றாகும்.

என்றும் உள்ளேயுள்ள பொருளைப் புதிதாகப் புகுந்து ஆண்டான் என்று பேசிய அடிகளார், இப்பொழுது அப்பொருள் தம் உள்ளத்தை விட்டு நீங்கி வானத்திற்குச் சென்றுவிட்டது என்று நினைத்துப் பேசுகின்றார். இவை இரண்டு கூற்றுக்களும் உள்ளத்து உணர்ச்சியின் ஏற்றம், இறக்கம் என்ற அடிப்படையில் அடிகளாரின் உள்ளத்துள் தோன்றிய எண்ணங்களே தவிர, இறைவன் உண்மையில் புதிதாக அவர் உள்ளத்தில் புகவும் இல்லை, அவ் உள்ளத்தை விட்டு நீங்கி வானத்திற் சென்று தங்கிவிடவும் இல்லை. இறைவனின் இலக்கணத்தை நன்கு அறிந்த அடிகளார் இவ்வாறு கூறுவது அவருடைய மனத்துள் தோன்றிய மகிழ்ச்சியாலும் துயரத்தாலுமே தவிர உண்மையில் நடைபெற்ற ஒன்றன்று.

24. வாழ்கின்றாய் வாழாத
நெஞ்சமே வல் வினைப் பட்டு
ஆழ்கின்றாய் ஆழாமல்
காப்பானை ஏத்தாதே
சூழ்கின்றாய் கேடு உனக்குச்
சொல்கின்றேன் பல்காலும்
வீழ்கின்றாய் நீ அவலக்
கடல் ஆய வெள்ளத்தே 20

வாழாத நெஞ்சம்-வாழவேண்டிய முறைப்படி வாழாத நெஞ்சம். அவலக்கடல்-துன்பக்கடல்.

இப்பாடல், மேலோட்டமாகப் பார்ப்பதற்கு அடிகளார் தம் மனத்தை முன்னிலைப்படுத்திப் பேசி உள்ளதுபோல் தோன்றும். ஆழ்ந்து நோக்கினால், மனித சமுதாயம் முழுவதையும் முன்னிலைப்படுத்தி, மிகத் தேவையானதும் இன்றியமையாததுமான ஒரு கருத்தைச் சொல்ல விழைந்த அடிகளார், அதற்குப் பதிலாகத் தம் மனத்தை முன்னிலைப்படுத்திச் சொல்கிறார் என்பது தெளிவாகும்.

'மனமே நீ அவனிடம் ஆட்படுவாயேயானால், நீ வீழ்ச்சியடையாமல் காத்துக் கைதூக்கிவிட ஒருவன் இருக்கின்றான். அவனை மறந்ததால் இப்பிறப்பில் இவ் உலகிலும், மறுபிறப்பில் ஏனைய உலகிலும் அவலக்கடலில் வீழ்கின்றாய்' என்பதே இப்பாடலின் பொருளாகும்

## சுட்டறுத்தல்

பின்வரும் பத்துப் பாடல்களுக்கும் சுட்டறுத்தல் என்று முன்னோர் தலைப்பிட்டுள்ளனர். பின்னர் வந்த உரையாசிரியர்கள் இத்தொடருக்குப் பல்வேறு வகையாகப் பொருளுரைத்துள்ளனர். இவ்வாசிரியனுக்குத் தோன்றிய சிந்தனை வருமாறு:

ஒரு பொருளைச் சுட்டுதல் என்பது ஒருவருடைய அறிவின் துணை கொண்டு செய்யப்பெறுவதாகும். அறிவின் துணையால் செய்யப்பெறும் எந்தச் செயலுக்கும் அடிப்படையில் 'நான்' என்பது நின்றே தீரும். அறிவின் அடிப்படையில் நிற்பதே 'நான்' தான். பிரபஞ்சத்தையோ அதிலுள்ள பொருள்களையோ கடந்து நிற்கின்ற இறை வனைச் சுட்டிக் கூறத்தொடங்கினால் சில அடிப்படைகள் வெளிப்பட்டே தீரும். சுட்டுபவனாகிய நான், சுட்டப்படுவ தாகிய பொருள், சுட்டுகின்றதாகிய செயல் என்ற மூன்றும் அங்கு இடம்பெறும். சுட்டு அறுபட வேண்டுமேயானால் அதற்கு மூலமாகிய 'நான்' அறுபட வேண்டும். 'நான்' அற்றுவிட்டால் அறிவால் செயற்படும் சுட்டும் அறுபட்டுப் போய்விடும். 'நான்' இருக்கின்றவரை அறிவு உண்டு; அறிவிருக்கின்றவரை 'நான்' உண்டு. இங்குச் சுட்டறுத்தல் என்று பெரியோர் கூறியது சுட்டுக்கு மூலமாகிய 'நானை' யும் அதன் விளைவாகிய அறிவையும் அறுப்பதாகும். இதற்கு ஒரே ஒரு வழிதான் உண்டு. உணர்வு உலகத்தில் 'நானு'ம் இல்லை; அதன் விளைவாகிய அறிவுமில்லை. இவை இரண்டும் இன்மையால் சுட்டுதலாகிய செயலும் இல்லை. சுட்டறுத்தல் என்பதற்கு 'உணர்வு உலகில் மூழ்கி விடுதல்' என்று பொருள் கூறலாமோ என்று தோன்றுகிறது.

25. வெள்ளம் தாழ் விரி சடையாய் விடையாய் விண்ணோர்
பெருமானே எனக் கேட்டு வேட்ட நெஞ்சாய்ப்
பள்ளம் தாழ் உறு புனலில் கீழ் மேலாகப்
பதைத்து உருகும் அவர் நிற்க என்னை ஆண்டாய்க்கு
உள்ளந்தாள் நின்று உச்சி அளவும் நெஞ்சாய்
உருகாதால் உடம்பு எல்லாம் கண்ணாய் அண்ணா
வெள்ளம்தான் பாயாதால் நெஞ்சம் கல் ஆம்
கண் இணையும் மரம் ஆம் தீவினையினேற்கே 21

வெள்ளம்-கங்கைநீர். வேட்ட-விரும்பிய. பள்ளந்தாழ் உறுபுனல்-பள்ளத்தைநோக்கி ஓடுகின்ற நீர். உள்ளந்தாள்-உள்ளங்கால்

இப்பாடலின் முன் இரண்டு அடிகள் அடிகளாரின் குறிக்கோளையும், பின் இரண்டு அடிகள் அவரது விருப்பத்தினையும் குறிப்பதாக எடுத்துக்கொள்ளலாம்.

முதலிரண்டு அடிகளில் கூறப்பெற்றுள்ளவர்களைப் பற்றிச் சிந்திப்பது நலம். எல்லையற்ற இறையனுபவத்தில் மூழ்கித் திளைத்து, ஊனும் உயிரும் உள்ளமும் உருகும் நிலையை அடிகளார் பெற்றாரேனும் அதன் அடிப்படை வேறுவகையானது. திருப்பெருந்துறையில் குருவைக் காண்கிறார்; அவரிடம் செல்கிறார்; வீழ்ந்து வணங்குகிறார்; திருவடி தீட்சை பெறுகிறார். அமுத தாரைகள் அவர் எற்புத் துளைதொறும் ஏற்றப்பெற்றன. உருகுவதோர் உள்ளங்கொண்டு உருச்செய்தாங்கெனப் புதியதோர் பிறவி எடுக்கின்றார். இத்தனை நிகழ்ச்சிகளுக்குப் பிறகுதான் இந்த நிலை அடிகளாருக்கே வருகின்றதே தவிர அதற்கு முன்னர் இந்நிலை அவருக்குக் கிட்டவில்லை.

'வெள்ளந்தாழ் விரிசடையாய் விடையாய் விண்ணோர் பெருமானே' என்று கேட்ட அளவில் 'வேட்ட நெஞ்சோடு பள்ளந்தாழ் உறுபுனலில் தலைகீழாக' வீழும் இயல்பு அவருக்கு இதற்கு முன்னர் இல்லை. திருப்பெருந்துறைக்குப் பின்னரே அது நிகழ்ந்தது.

அப்படியானால் கேட்டவுடன் 'உருகும் அவர் நிற்க என்று பாடுவதன் நோக்கம் யாது? பொதுவாகவோ சிறப்பாகவோ 'அவர் நிற்க' என்ற சொற்கள் யாரையும் குறிப்பிடவில்லை.

அப்படியானால் இந்த இரண்டடிகள், அவருடைய குறிக்கோள் என்று கூறியமைக்குக் காரணம் என்ன என்று சிந்திப்பதில் தவறில்லை. கண்டு, சென்று, வணங்கி

அருள்பெற்ற நிலையில் உள்ள உருக்கமும் கண்ணீர்ப் பெருக்கமும் நிகழ்ந்ததென்னவோ உண்மை. இந்த அனுபவத்தைப் பெற்ற பிறகு, இந்தக் காட்சி, செயற்பாடு என்ற எதுவுமில்லாமல் அவன் பெயரைக் காதுகளால் கேட்ட அளவில், பதைத்து உருகுகின்ற நிலை வாராதா என்று அடிகளார் நினைத்திருத்தல் வேண்டும். காதால் கேட்ட அளவில், தமக்கு இந்த உருகும் அனுபவம் இல்லையென்று ஏன் நினைக்கின்றார் அடிகளார்? 'உருகுவது (ஆகிய) உள்ளங்கொண்டோர் உருச்செய்தாங்கு எனக்கு அள்ளூறு ஆக்கை அமைத்தனன்' (திருவாச-: 3-176) என்று பாடிய அடிகளார், இப்பொழுது அவர் பெயரைக் கேட்ட மாத்திரத்தில் உருகும் அனுபவம் தமக்கு இல்லையென்று கூறக் காரணம் என்ன? கேட்ட மாத்திரத்தில் உருகும் அனுபவம் கிடைத்திருந்தால் என்ன நிகழ்ந்திருக்கும் என்று அடிகளாரே சிந்திக்கின்றார். அந்த அனுபவம் கிடைத் திருந்தால் உள்ளந்தாள் நின்று உச்சியளவும் நெஞ்சாய் உருகியிருக்கும்; உடம்பெல்லாம் கண்ணாய் வெள்ளம் பாய்ந்திருக்கும். அப்படி நடைபெறவில்லையே! ஆதலால், தம் நெஞ்சைக் கல் என்றும் தம் கண்களைக் காய்ந்த மரம் என்றும் கூறிக் கொள்கிறார். முதலிரண்டு அடிகள் இத்தகைய நிலை தமக்கு வரவேண்டும்; அதுவே தம் குறிக்கோள் என்ற கருத்தில் சொல்லப்பெற்றவை ஆகும்..

26. வினையிலே கிடந்தேனைப் புகுந்து நின்று
போது, நான் வினைக்கேடன் என்பாய் போல
இனையன் நான் என்று உன்னை அறிவித்து என்னை
ஆட்கொண்டு எம்பிரான் ஆனாய்க்கு இரும்பின் பாவை
அனைய நான் பாடேன் நின்று ஆடேன் அந்தோ
அலறிடேன் உலறிடேன் ஆவி சோரேன்
முனைவனே முறையோ நான் ஆன ஆறு
முடிவு அறியேன் முதல் அந்தம்ஆயினானே 22

போது-வா. வினைக்கேடன்-வினையை நீக்குபவன். ஆவிசோரேன்-உயிர்த்தன்மையை வற்றச்செய்கிலேன். முனைவன்-வினையின்நீங்கி விளங்கிய அறிவன்.

*சராசரி மனிதர்கள் வினையில் கட்டுண்டு கிடப்பதைப்போல அமைச்சர் பதவியில் இருந்தபோது தாமும் வினையிலே கட்டுண்டு கிடந்ததாகக் கூறுகிறார் அடிகளார்.*

*எதிர்பாராத திருப்பெருந்துறை நிகழ்ச்சியில் மிகச் சிறப்புடைய இரண்டு செயல்கள் நடைபெற்றன. குருவாக இருந்தவர், வாய் திறக்கவில்லை என்றாலும் அவருடைய திருவடி சம்பந்தம் பெற்றவுடன் இரண்டு உண்மைகளை அடிகளார் உணர்கின்றார். ஒன்று — தாம் இதுவரை தாங்கியிருந்த வினைகளை, குருவடிவிலுள்ள அந்தப் பெருமான் ஒரே விநாடியில் போக்கக்கூடியவர் என்பதை அடிகளார் உணர்ந்தது. இரண்டு — உணரச் செய்த செயலின் மூலமே அந்தக் குரு தாம் யாரென்பதை அடிகளாருக்கு உணர்த்தியது.*

*இந்த இரண்டு நிகழ்ச்சிகளிலும் குருவோ, அடிகளாரோ வாய் திறந்து ஒரு வார்த்தையும் பேசவில்லை.*

*இக்கருத்தையே, வினையிலே கிடந்த எனக்கு நீ வினைக்கேடன் என்பதையும், நீ இன்னார் என்பதையும் என்னுள் புகுந்து நின்று அறிவித்தாய் என்று இப்பாடலில் அடிகளார் கூறுகின்றார்.*

*புகுந்து நின்று அறிவித்தார் என்றதால் இருவரிடையே உரையாடல் இன்மை அறிக.*

27. ஆய நான்மறையவனும் நீயே ஆதல்
அறிந்து யான் யாவரினும் கடையன் ஆய
நாயினேன் ஆதலையும் நோக்கிக் கண்டும்
நாதனே நான் உனக்கு ஓர் அன்பன் என்பேன்
ஆயினேன் ஆதலால் ஆண்டுகொண்டாய்
அடியார் தாம் இல்லையே அன்றி மற்று ஓர்
பேயனேன் இதுதான் நின் பெருமை அன்றே
எம்பெருமான் என் சொல்லிப் பேசுகேனே 23

*தம்மை ஆண்டுகொண்ட குருநாதர் யார் என்பதை அறிந்துகொண்ட பிறகு அடிகளார் மனத்தில் தோன்றிய வியப்பு, அச்சம் என்பவற்றின் அடிப்படையில் பிறந்த கழிவிரக்கம் காரணமாக வெளிப்பட்டதாகும் இப்பாடல்.*

*'நால்வேதத் தலைவனாகிய அவன், யாவரினும் கடையனாகிய என்னை, என் குறைகளை அறிந்தும் ஆண்டுகொண்டான் என்றால் ஏன் என்று புரியவில்லை. அடியார்கள் கிடைப்பது அரிதாகிவிட்டதா? அன்பன் என்று யான் சொல்லிக்கொண்டதால் என்னை ஏற்றுக் கொண்டானா?' என்ற முறையில் மனத்தில் பல மாறுபட்ட எண்ணங்கள் தோன்ற இறுதியாக ஒரு முடிவுக்கு வருகிறார். அவன் தம்மை ஆட்கொள்வதற்கு மேலே கூறிய காரணங்கள் எதுவும் பொருந்தவில்லை. எல்லையற்ற பெருமை உடையவனாகிய அவன், தம்பால் கொண்ட கருணையினாலேயே ஆண்டுகொண்டான் என்ற முடிவிற்கு வருகின்றார்.*

28. பேசின் தாம் ஈசனே எந்தாய் எந்தை
பெருமானே என்று என்றே பேசிப் பேசிப்
பூசின் தாம் திருநீறே நிறையப் பூசிப்
போற்றி எம்பெருமானே என்று பின்றா
நேசத்தால் பிறப்பு இறப்பைக் கடந்தார் தம்மை

ஆண்டானே அவா வெள்ளக் கள்வனேனை
மாசு அற்ற மணிக் குன்றே எந்தாய் அந்தோ
என்னை நீ ஆட்கொண்ட வண்ணம் தானே 24

பேசில் தாம்-தாம் பேசில் எனமாற்றுக. பின்றா-பின்னடையாத.

*'திருநீற்றை நிறையப் பூசி இறைவனுடைய திருநாமத்தைச் சொல்லிப் பிறவிக்கடலில் நீந்தும் அடியார்களை ஆட்கொண்டு அவர்கள் பிறப்பைப் போக்கும் பெருமானே! ஆசை என்னும் பெருவெள்ளத்தில் அமிழ்ந்து நிற்கும் என்னையும் ஆட்கொண்ட வண்ணம் எத்தகையது' என்று அவன் கருணையை வியந்தவாறு.*

29. வண்ணம்தான் சேயது அன்று வெளிதே அன்று
அநேகன் ஏகன் அணு அணுவில் இறந்தாய் என்று அங்கு
எண்ணம்தான் தடுமாறி இமையோர் கூட்டம்
எய்தும் ஆறு அறியாத எந்தாய் உன் தன்
வண்ணம்தான் அது காட்டி வடிவு காட்டி
மலர்க் கழல்கள் அவை காட்டி வழி அற்றேனைத்
திண்ணம்தான் பிறவாமல் காத்து ஆட்கொண்டாய்
எம்பெருமான் என் சொல்லிச் சிந்திக்கேனே 25

சேயதன்று-சிவந்ததன்று. இறந்தாய்-கடந்தாய். திண்ணம் தான் பிறவாமல்-உறுதியாக அடியேன் பிறவி எடுக்காமல்.

*மானிட குரு வடிவில் இருந்த ஒருவரைச் 'சிவன் என யானும் தேறினன்' என்று அடிகளார் குறித்ததை முன்னர்க் கண்டோம். இந்த முடிவிற்கு அவர் வரக் காரணமாய் இருந்தது குருவினிடம் இருந்து புறப்பட்ட தெய்விக அலைகள் என்றும் முன்னர்க் கூறியுள்ளோம்.*

*இப்பொழுது அடிகளார் அந்த முடிவிற்கு வர மற்றொன்றும் துணைபுரிந்தது என்றும் அறிய முடிகிறது.*

ஒரு மனிதரைத் தூரத்தில் காணுவோமேயானால் அவருடைய பருவடிவம் மட்டுமே முதலில் தோன்றும்; இன்னும் சற்று நெருங்கிச் சென்றால் அவருடைய உறுப்புக்கள் தோன்றும்; மேலும் சிறிது நெருங்கிச் சென்றால் அவருடைய நிறம் தோன்றும்; இது மனிதக் காட்சியின் இயல்பாகும்.

இதன் மறுதலையாக இறைக்காட்சியில் முதலில் தெரிவது நிறமே ஆகும். அதனை ஒளி என்று கூறுவர். அதன் பிறகே வடிவு தோன்றும். குருவை மனிதரென்று கருதியிருந்தால் வடிவுதான் முதலில் தெரிந்திருக்குமே தவிர வண்ணம் தெரிய நியாயமில்லை. ஒளி வடிவை முதலில் கண்டாராதலின் 'வண்ணந்தான் அது காட்டி, வடிவு காட்டி, மலர்க்கழல்கள் அவை காட்டி' என்று வரிசைப்படுத்திக் கூறுகிறார்.

மனிதக் காட்சிக்கும் இறைக் காட்சிக்கும் உள்ள வேறுபாட்டைப் பாடலின் மேலே கூறிய பகுதி நன்கு விளக்குகின்றது. இக்கருத்தை முதலில் கூறியவர் 'பெருஞ்சொல் விளக்கனார்' அ.மு. சரவண முதலியார் அவர்களாவார்.

**30.** சிந்தனை நின் தனக்கு ஆக்கி நாயினேன்தன்
கண் இணை நின் திருப்பாதப் போதுக்கு ஆக்கி
வந்தனையும் அம்மலர்க்கே ஆக்கி வாக்கு உன்
மணி வார்த்தைக்கு ஆக்கி ஐம் புலன்கள் ஆர
வந்து எனை ஆட்கொண்டு உள்ளே புகுந்த விச்சை
மால் அமுதப் பெரும் கடலே மலையே உன்னைத்
தந்தனை செம்தாமரைக் காடு அனைய மேனித்
தனிச்சுடரே இரண்டும் இல் இத் தனியனேற்கே **26**

வந்தனை-வழிபாடு. மணி வார்த்தை-அழகியவார்த்தை. வந்தனை-வந்தனையாய்; முற்றெச்சம். விச்சை-வித்தை. மாலமுதம்- தன்னையன்றி வேறொன்றையும் விரும்பச் செய்யாமை

யாகிய மயக்கத்தை அளிக்கும் அமுதம். இரண்டு மிலித் தனியேனேற்கு-இரண்டுங்கெட்டானாகிய எனக்கு (துன்ப இன்பங்களை அறியும் ஆற்றலில்லாத எனக்கு).

*திருப்பெருந்துறை நிகழ்ச்சியில் அடிகளார் பெற்ற வளர்ச்சியும் மாற்றங்களும் இப்பாடலில் பேசப் பெறுகின்றன. 'சிந்தனை' என்று தொடங்கி 'ஆர வந்து' என்பதுவரை ஒரு நிலை. 'உள்ளே புகுந்த விச்சை மால் அமுதப் பெருங்கடலே' என்பதுவரை இரண்டாவது நிலை. 'மலையே உன்னைத் தந்தனை' என்பது மூன்றாவது நிலை.*

*'தனியனாகி நின்ற எனக்கு, என் வசத்தில் நில்லாமல் தொழிற்படும் ஐம்பொறிகளையும் அவற்றின் செயலுக்குக் காரணமான உள்ளத்தையும் உன் பணியில் அவை தொடர்ந்து ஈடுபடக் குருவடிவாக வந்தனை' என்பது முதல் நிலையின் விளக்கம்.*

*குருவின் காட்சி, தம் பொறி, புலன்களை அடக்கி ஆண்டதைக் கண்டு வியப்புற்ற அடிகளாருக்கு, அடுத்து மிகப் பெரிய அனுபவம் வாய்க்கின்றது. இந்தக் குருவின் திருவருள் உள்ளே புகுந்தது. அவ்வாறு சொல்லிவிட்டால் அந்தத் திருவருள் ஏதோ ஒரு சிறிய பொருளென்றும், அது அடிகளாரின் உள்ளத்தில் புகுந்து ஒரு மூலையில் தங்கிவிட்டது என்றும் பொருள் கொண்டுவிடக் கூடாது என்று கருதிய அடிகளார் உள்ளே புகுந்த திருவருள் கடல்போன்று பெரியது என்றும், அது அமுதக் கடல் என்றும் பல்வேறு விச்சைகளை(வித்தைகளை) செய்யக்கூடிய ஆற்றல் பெற்றது என்றும் கூறினாராயிற்று. இது இரண்டாம் நிலையின் விளக்கம்.*

*கடல் என்று கூறினால் அதற்குள்ள சில இயல்புகளும் மனத்தில் தோன்றத்தான் செய்யும். ஓயாது ஒழியாது சலிப்பதும், ஏறி இறங்குவதும் கடலின் இயற்கை; ஆதலால் புகுந்த இத் திருவருளும் இயல்புகளைப் பெற்றிருக்குமோ*

என்ற அச்சத்தைப் போக்க, கடலின் மாறான இயல்புகளையுடைய மலையை அடுத்துக் கூறினார். சலித்தலோ, ஏறி இறங்கும் இயல்போ இல்லாதது மலை. புகுந்த திருவருள் விருந்தினர்போல வந்து, தங்கி, சென்றுவிடும் இயல்பை மறுப்பான் வேண்டி 'உன்னைத் தந்தனை' என்றார்.

பின்னரும் 'தந்தது உன் தன்னை, கொண்டது என் தன்னை' (திருவாச: 397) என்று பாடுவதால் தன்னை முழுவதுமாகத் தந்தான் என்ற கருத்தைப் பெற வைக்கிறார்.

செந்தாமரைக் 'காடு' என்று கூறியதால் வடிவு, உருவு ஆகியவற்றைக் கடந்து எங்கும் வியாபித்திருக்கும் இறை இயல்பைக் கூறினாராயிற்று '[illegible]ணி' என்ற சொல் இங்கே காணப்பெற்றாலும் சர்வ வியாபியாய் நிறைந்துள்ள இறைவனின் வடிவு என்ற பொருளையே தரும்.

**31.** தனியனேன் பெரும் பிறவிப் பௌவத்து எவ்வம்
தடம் திரையால் எற்றுண்டு பற்று ஒன்று இன்றிக்
கனியின் நேர் துவர் வாயார் என்னும் காலால்
கலக்குண்டு காம வான் சுறவின் வாய்ப்பட்டு
இனி என்னே உய்யும் ஆறு என்று என்று எண்ணி
அஞ்சு எழுத்தின் புணை பிடித்துக் கிடக்கின்றேனை
முனைவனே முதல் அந்தம் இல்லா மல்லல்
கரை காட்டி ஆட்கொண்டாய் மூர்க்கனேற்கே 27

கனி-கொவ்வைக் கனி. துவர்-சிவப்பு. கால்- காற்று; வான்சுறவு-சுறா மீன். புணை- தெப்பம். மல்லல்-வளப்பம்.

பௌவம்-கடல், எவ்வத் தடந்திரை - பிறவி என்னும் துன்பம் தருகின்ற தீராநோயான அலைகள். இப்பாடல் ஐந்தெழுத்தின் பெருமை கூறுகிறது.

32. கேட்டு ஆரும் அறியாதான் கேடு ஒன்று இல்லான்
கிளை இலான் கேளாதே எல்லாம் கேட்டான்
நாட்டார்கள் விழித்திருப்ப ஞாலத்துள்ளே
நாயினுக்குத் தவிசு இட்டு நாயினேற்கே
காட்டாதன எல்லாம் காட்டிப் பின்னும்
கேளாதன எல்லாம் கேட்பித்து என்னை
மீட்டேயும் பிறவாமல் காத்து ஆட்கொண்டான்
எம்பெருமான் செய்திட்ட விச்சை தானே 28

கேட்டு-வண்ணங்களைப் பிறர்சொல்லக் கேட்டு. அறியாதான்-முழுதும் உணரப்படாதவன். கிளை-சுற்றம். கேளாதே கேட்டான்- பொறிகளாலுணராது என்றும் எல்லாம் உணர்பவன். தவிசு- ஆசனம்.

*இத்திருப்பாடலிலும் திருப்பெருந்துறை நிகழ்ச்சியையே அடிகளார் நினைவுகூறுகின்றார். 'நாட்டார்கள் விழித் திருப்ப' என்றதால் தம்முடன் வந்தவர்களையும் திருப் பெருந்துறையில் கூடி நின்றவர்களையும் நினைக்கின்றார். அப்பெருங்கூட்டத்துள் தம்மைவிடப் பல்லாற்றானும் தகுதி உடையவர்கள் பலர் இருந்திருக்கலாமே? அவர்கள் அனைவரையும் விட்டுவிட்டுத் தம்மைமட்டும், அவர்கள் எதிரே ஆட்கொண்டார் என்று நினைந்தவுடன் குருவின் செயல், 'நாய்க்குத் தவிசிட்டது' என்ற பழமொழியை நினைவூட்டியது.*

*நாய் போன்ற தம்மை ஆட்கொண்டதோடு மட்டும் இன்றிப் புறக் கண்களாலும், அகக் கண்களாலும் காண முடியாதவற்றை யெல்லாம் (அதாவது ஜோதி தரிசனத்தை) ஒரே விநாடியில் காணுமாறு செய்தான். 'கேளாதன எல்லாம் கேட்பித்து' என்றதால் குருவானவர் வாய் திறந்து பேசாமல் மௌன சம்பாஷணையின் மூலமே இதுவரை தாம் கேட்டிராத நாத தரிசனம் கிடைக்குமாறு செய்தார் என்று பாடுகிறார்.*

33, விச்சை தான் இது ஒப்பது உண்டோ கேட்கின்
மிகு காதல் அடியார் தம் அடியன் ஆக்கி
அச்சம் தீர்த்து ஆட்கொண்டான் அமுதம் ஊறி
அகம் நெகவே புகுந்து ஆண்டான் அன்பு கூர
அச்சன் ஆண் பெண் அலி ஆகாசம் ஆகி
ஆர் அழல் ஆய் அந்தம் ஆய் அப்பால் நின்ற
செச்சை மா மலர் புரையும் மேனி எங்கள்
சிவபெருமான் எம்பெருமான் தேவர் கோவே 29

அச்சன்-தந்தை. செச்சை-வெட்சி. மலர்புரை-மலரை ஒத்த.

அமைச்சராக இருந்த அடிகளார் சாதாரண செப்பிடு வித்தைக்காரர்களையும், உயர்ந்த நிலையில் அட்டமா சித்திகள் கைவரப்பெற்ற பெரியோர்களையும் கண்டிருத்தல் கூடும். ஆனால், இவர்களுள் எவரும் செய்ய முடியாத ஒரு வித்தையைத் திருப்பெருந்துறைக் குரு ஒரு விநாடியில் செய்துவிட்டார் ஆதலால் 'விச்சைதான் (வித்தை) இது ஒப்பது உண்டோ' என்று பேசுகிறார். அப்படிச் செய்யப் பெற்ற வித்தை யாது?

ஒரு கனியை உண்ணவேண்டுமானால் கையில் கிடைத்த காய், கனியாக மாறும்வரை காத்திருந்து உண்ண வேண்டும். அதுபோலத் திருவாதவூரார் என்ற சராசரி மனிதரைப் பல்வேறு பிறப்புக்கள் எடுக்குமாறு செய்து அடியாராக மாற்றியிருத்தல் வேண்டும். காய் கனியா வதற்குக் காத்திருத்தல்போல், அது இயல்பான நிலை. ஆனால், திருப்பெருந்துறைக் குரு, மாபெரும் வித்தைக்காரர் ஆதலால் காய் கனியும்வரை காத்திராமல், ஒரே விநாடியில் காயைக் கனியாக்கிவிட்டார். அதனையே 'மிகுகாதல் அடியார்தம் அடியனாக்கி' என்கிறார் அடிகளார்.

அடியாராக ஆக்கியதோடு குரு நின்றுவிடவில்லை. எந்த நிலையிலும் உயிரைவிட்டு நீங்காத, 'உயிர் அச்சத்தை'

*ஒரு விநாடியில் போக்கினார்; போக்கி, ஆட்கொண்டார். இந்த அளவோடு நில்லாமல் குருநாதர் மற்றொன்றும் செய்தார். அன்பு கூர, அகம் நெக, அமுதம் ஊற உள்ளே புகுந்து ஆட்கொண்டார். அதாவது அன்புகூர்தல், அகம் நெகுதல், அமுதம் ஊறுதல் ஆகிய வினைகள் அனைத்தும் குருநாதர் உள்ளே புகுந்த அந்த விநாடியே ஒருசேர நிகழ்வதாயின.*

**34.** தேவர் கோ அறியாத தேவ தேவன்
செழும் பொழில்கள் பயந்து காத்து அழிக்கும் மற்றை
மூவர் கோனாய் நின்ற முதல்வன் மூர்த்தி
மூதாதை மாது ஆளும் பாகத்து எந்தை
யாவர் கோன் என்னையும் வந்து ஆண்டுகொண்டான்
யாம் ஆர்க்கும் குடி அல்லோம் யாதும் அஞ்சோம்
மேவினோம் அவன் அடியார் அடியாரோடு
மேன்மேலும் குடைந்து ஆடி ஆடுவோமே **30**

தேவர்கோ-இந்திரன். பொழில்-உலகம். மூவர்-பிரம விஷ்ணு ருத்திரர். பயந்து-பெற்று. மூவர்கோனாய் நிற்றல்-மூவர்க்குந் தலைவனாக நிற்றல். யாவர்கோன்-யாவர்க்கும் கோன் என முற்றும்மையும் குவ்வுருபும் விரிக்க.

*மூவர்க்கும் முதல்வனாக நின்ற இறைவன் தம்மைக் குருவாக வந்து ஆட்கொண்ட பின்னர் அடிகளார் பெற்ற பல்வேறு பேறுகளுள் தலையாய பேறு ஒன்று இங்கே பேசப்பெறுகிறது.*

*'யாமார்க்கும் குடியல்லோம்' என்று நெஞ்சை நிமிர்த்திப் பேசுகின்ற பெருமித நிலை இறையருள் பெற்ற அடியார்களுக்குமட்டுமே உரியதாகும். அந்த நிலை அடிகளாருக்கு வந்துவிட்டது என்பதை இப்பாடல் அறிவிக்கின்றது.*

சூலை நோயால் அவதியுற்று 'ஆற்றேன் அடியேன்' என்று திருவதிகையில் பாடிய நாவரசர் பெருமான் இறையருள் கிட்டிய பின்னர் அதே திருவதிகையில் பல்லவனின் பணியாளர்களைப் பார்த்து, நாமார்க்கும் குடியல்லோம்; நமனை அஞ்சோம் என்று அடிகளாருக்கு இரண்டு நூற்றாண்டுகளுக்கு முன்னர்ப் பாடியது நினைவு கூரத்தக்கது.

## ஆத்தும சுத்தி

இனி வரும் பத்துப் பாடல்களுக்கும் ஆத்தும சுத்தி என்று முன்னோர் தலைப்பிட்டுள்ளனர். இந்தப் பத்துப் பாடல்களையும் படிக்கும்போது இரண்டு கருத்துக்கள் இங்கு முக்கியமாகப் பேசப்பெறுதலைக் காணலாம்.

'ஆடுகின்றிலை' முதல் அடுத்துவரும் ஐந்து பாடல்களும் தம்முடைய மனத்தை நோக்கி, 'நீ இன்னின்னது செய்திருக்க வேண்டும்; அவற்றைச் செய்யாமல் இருக்கின்றாய்' என்று கண்டிப்பதுபோல அமைந்துள்ளன.

எஞ்சியுள்ள பாடல்களில், வழியோடு சென்ற தம்மைப் பிடித்து இழுத்து இன்னருள் புரிந்தவரைப் பற்றிக்கொண்டு அவர் பின் செல்லாமல் தங்கிவிட்டதற்கு வருந்தி, 'தீயில் வீழ்கிலேன், திண்வரை உருள்கிலேன், ஊனை யான் இன்னும் இருந்து ஓம்புகின்றேன்' என்று பாடியுள்ளார்.

இந்த நிலையில் இப்பகுதிக்கு ஆத்தும சுத்தி என்ற தலைப்பு எவ்வாறு பொருந்தும் என்பது விளங்கவில்லை.

**35.** ஆடுகின்றிலை கூத்துஉடையான் கழற்கு
அன்பு இலை என்பு உருகிப்
பாடுகின்றிலை பதைப்பதும் செய்கிலை
பணிகிலை பாத மலர்

சூடுகின்றிலை சூட்டுகின்றதும் இலை
துணை இலி பிண நெஞ்சே
தேடுகின்றிலை தெருவுதோறு அலறிலை
செய்வது ஒன்று அறியேனே 31

பாதமலர்-பாதமாகிய மலர், பாதத்தில் மலரை என விரித்து, சூடுகின்றிலை சூட்டுகின்றதுமிலை என்பனவற்றோடு இயைத்துப் பொருள்காண்க.

திருப்பெருந்துறையில் திருவடி சூட்டப்பெற்றபொழுது அடிகளார் பேரானந்தத்தில் மூழ்கினார். செயலிழந்து சமாதி நிலையில் இருந்தார். பின்னர் அந்த அனுபவம் குறையக் குறைய அதனையே நினைந்து இறைப்பிரேமை கொண்டு ஆடுதல், பாடுதல், பதைத்தல் முதலிய செயல்களில் ஈடுபட்டார். அதன்பிறகு பல இடங்களிலும் அன்பர்கள் மலர் கொண்டு இறைவனை வழிபடுதலைக் கண்ட அடிகளார், திருக்கோயில் பணிகளில் தாம் ஈடுபடாமல் இருப்பதை நினைந்து வருந்தினார்.

ஆடுதல், பாடுதல் முதலிய செயல்கள் இறைப்பிரேமையில் அழுந்தி வெளிவரும்போது நடைபெற்ற செயல்கள் அல்லவா? இப்பொழுது அந்தப் பிரேமையும் குறைந்துவிட, ஆடுதல் முதலிய செயல்கள் நின்றுவிட்டன. அதாவது முன்னர் நிகழ்ந்த ஆடுதல், பாடுதல் என்பவை இவருடைய முயற்சியின்றித் தாமாக நிகழ்ந்தனவாம். எனவே, அந்தப் பிரேமை குறைந்தவுடன் அவையும் நின்றுவிட்டன.

இந்த நிலையை நினைந்து அடிகளார் வருந்துவதை இப்பாடல் விளக்குகின்றது.

'உடையான் கழற்கு அன்பில்லை' அதனால் நீ கூத்து ஆடவில்லை. ஆடத்தான் இல்லை என்றாலும் பாடவாவது செய்திருக்கலாம். அதுவும் செய்யவில்லை. மெய், மொழி என்ற இரண்டினாலும் செய்யப்பெறுகின்ற கூத்து, பாடல் என்பவை செய்யப்பெறவில்லை என்றாலும் மனத்தில்

அன்பும் உள்ளத்தில் உருக்கமும் நிறைந்துள்ளதா என்றால், அதுவும் இல்லை.

'செயலற்றுப்போன பிணமாகிய நெஞ்சே மேலே கூறிய எதனையும் செய்யாமல் தனியே நிற்கின்ற உன்னை வைத்துக்கொண்டு நான் என்ன செய்ய முடியும்?' என்கிறார்.

இப்பாடலில் இறையனுபவத்தில் மூழ்கி நின்று வெளிப்பட்டவர்களின் மூன்று நிலைகள் குறிப்பாகவும் வெளிப்படையாகவும் கூறப்பெற்றுள்ளன.

முற்றிலும் அனுபவத்தில் மூழ்கிய நிலையில் மனம், மொழி, மெய் ஆகிய கருவி, கரணங்கள் அனைத்தும் செயல் இழந்துவிடுகின்றன என்று கூறியவுடன் ஆழ் மயக்க நிலை (coma state) என்று நினைத்துவிட வேண்டா. மேலே கூறிய அனைத்தும் தத்தமக்கு உரிய நிலையில் அனுபவம் வேறு, தாம் வேறாக இல்லாமல் ஒன்றியிருந்துவிடும் நிலை அதுவாகும். இந்த முற்றனுபவமே (சமாதிநிலை) முதல்நிலை எனப்படும்.

வெள்ளம் வடிவதுபோல் இந்த இறையனுபவம் வடியவடிய மேலே கூறிய கருவி, கரணம் முதலியவை கொஞ்சம் கொஞ்சமாக அனுபவத்திலிருந்து விடுபடு கின்றன. விடுபட்ட அவை தத்தமக்குரிய பணிகளைத் தொடங்குவதன் முன்னர், தம்மை மறந்தும் மறவாமலும் கூத்து ஆடுதல், பாடுதல், கண்ணீர் பெருக்குதல், வீழ்ந்து புரளுதல் முதலிய செயல்களில் ஈடுபடுகின்றன. இறைப் பிரேமையில் நடைபெறுகின்ற செயல்களாகும் இவை. இந்த இறைப்பிரேமையே இரண்டாவது நிலை எனப்படும்.

பின்னர் இந்த அனுபவ நிலையிலிருந்தும், இறைப் பிரேமை நிலையிலிருந்தும் விடுபட்டுக் கருவி கரணங்கள் தத்தமக்குரிய இயல்பான பணிகளில் ஈடுபடுகின்றன. அந்த நிலையில் மனம்மட்டும் இரண்டாம் நிலையில் 'குறிப்பிடப்

பெற்ற செயல்களைச் செய்யாமல் காலத்தை அவமே போக்குகின்றோமே' என்று நினைத்து வருந்துகிறது. அது இரண்டாம் நிலையில் நடைபெற்ற ஒவ்வொரு செயலையும் தனித்தனியே நினைத்து 'ஐயோ இது நடைபெற வில்லையே! இனி நாம் என்ன செய்யப் போகிறோம்?' என்று வருந்துகின்ற கழிவிரக்க நிலையே மூன்றாவது நிலை எனப்படும்.

இந்த மூன்றாவது நிலையிலெழுந்த பாடலாகும் மேலேயுள்ள பாடல்.

36. அறிவு இலாத எனைப் புகுந்து ஆண்டுகொண்டு
அறிவதை அருளி மேல்
நெறி எலாம் புலம் ஆக்கிய எந்தையைப்
பந்தனை அறுப்பானைப்
பிறிவு இலாத இன் அருள்கள் பெற்றிருந்தும்
மாறு ஆடுதி பிண நெஞ்சே
கிறி எலாம் மிகக் கீழ்ப்படுத்தாய் கெடுத்தாய்
என்னைக் கெடுமாறே 32

மேல்நெறி-வீட்டுநெறி. புலமாக்கிய-அறிவகத்தே விளங்கச் செய்த. கிறி-பொய். மாறாடு-மாறுகொண்டு நிற்றல்.

இப்பாடலின் முதலடி இறைவன் திருவடி தீட்சையின் பயனால் நிகழ்ந்த இரண்டாவது செயலைக் குறிக்கிறது. திருவடி தீட்சையால் நடந்த முதற்செயல் அறிவை அழுத்தி அனுபவம் மேம்பட்டு நின்ற நிலை. அந்தத் திருவடி தீட்சை தந்த இரண்டாவது பயன் உண்மை அறிவை அருளியதாகும். அறிவிலாத ஒரு பொருளிடத்து அறிவைட் புகுத்தினால், அது பொய்யறிவாகவும் போய்விடலாம் அல்லவா? அவ்வாறில்லாமல் மெய்யறிவைப் புகுத்தியவர் எவ்வாறு அதனைச் செய்தார்? அறிவிலாத ஒருவரிடம் புகுந்து ஆண்டுகொண்டு, பின்னர் அறிவைப் புகட்டினார் ஆதலின், அது மெய்யறிவு ஆயிற்றென்க. இங்கேயும் புகுந்து

ஆண்டு என்ற சொற்களை அடிகளார் பயன்படுத்தியதன் உட்கருத்தை அறிதல் வேண்டும்.

'அறிவதை அருளி நெறியெலாம் புலமாக்கிய எந்தை' என்பது அடுத்து நிற்கும் தொடராகும். மெய்யறிவை அருளியதோடு நின்றுவிட்டிருந்தால் அவர் குருவாக இருந்திருப்பாரேதவிரத் தந்தையின் பணியைச் செய்தவராக இருந்திருக்கமாட்டார். ஆனால், பெருந்துறைக் குரு மெய்யறிவை அருளியதோடு நின்றுவிடாமல், இனிச் செல்லவேண்டிய வழிகளையும் புலப்படுத்தினார் என்க. 'நெறியெலாம் புலமாக்கிய' என்ற தொடர் மெய்யறிவின் துணைகொண்டு இனிச் செல்லவேண்டிய நெறிகளை யெல்லாம் படிப்படியாக அறிவித்தார் என்று கூறுகின்றது. ஆதலின், அவ்வாறு செய்தவரை 'எந்தை' என்று கூறுகின்றார்.

'பந்தனை அறுப்பானை' முதல் 'நெஞ்சே' வரை ஒரு தொடராக எடுத்துக்கொண்டால், பின்வருமாறு பொருள் கொள்ளலாம். 'பந்தங்களை அறுக்கின்றவனைப் பிறிவிலாத இன்னருள்கள் பெற்றிருந்தும்' என்று கூறும் பகுதி கழிவிரக்கத்தின் உச்ச கட்டமாகும்.

யாருடைய இன்னருளைப் பெற்றிருந்ததாகக் கூறுகிறார்? அவரோ பந்தங்களை அறுப்பவர். பந்தங்கள் அறுபடாதவரையில் அவரை அணுகமுடியாது. பந்தங்கள் நம்மால் அறுக்கப்படக்கூடியவை அல்ல. அவர் ஒருவரே பந்தங்களை அறுக்கக்கூடியவர். அப்படிப்பட்ட ஒருவருடைய அருளைப் பெறுவது எளிதான காரியமன்று.

நல் ஊழ் வசத்தால் ஒரோவழி அந்த அருளைப் பெற்றுப் பின்னர் அது விட்டு நீங்கிற்று என்ற நிலை இல்லாமல் ஒரு கணமும் அவரை விட்டுப் பிரியாத நிலைமை தரப்பெற்றமையின் அந்த அருளை 'இன்னருள்கள்' என்றார்.

பந்தனை அறுபட்டமையின் பிறிவிலாத இன்னருள் கை கூடிற்று என்க. (பிறிவு-பிரிவு).

மிகமிக அரிதில் கிடைக்கக்கூடிய இன்னருளைப் பெற்றாகிவிட்டது; பந்தனை அறுபட்டுவிட்டது; புகுந்து ஆண்ட அவர் மெய்யறிவைத் தந்ததோடு அல்லாமல் மேல் செல்ல வேண்டிய நெறிகளையும் புலப்படுத்தி விட்டார். இத்தனை இருந்தும் அவற்றைப் பயன்படுத்திக் கொண்டு முன்னேறாமல் அவமே கிடத்தலின் 'பிண நெஞ்சே' என்றார்.

'செத்தவன் கையில் வெற்றிலை பாக்கு' என்பது இந்நாட்டுப் பழமொழி. இறந்தவன் கையிலுள்ள வெற்றிலை பாக்கு அவனுக்கு எப்பயனையும் தாராமல் பொருள் மாத்திரையாக நின்றுவிட்டதுபோல் குருநாதர் தந்த மெய்யறிவு, புலப்படுத்தப்பெற்ற நெறிகள், பந்தம் அறுபட்ட நிலை, அவருடைய இன்னருள் ஆகிய அனைத்தும் நெஞ்சைப் பொறுத்தவரையில் செத்தவன் கை வெற்றிலை பாக்காக அப்படியே இருந்துவிட்டமையின் பிண நெஞ்சே என்றார் அடிகளார்.

புகைவண்டியில் பின்னருள்ள பெட்டிகளை இழுத்துச் செல்லும் என்ஜின்போன்று உள்ளது நெஞ்சம். அடிகளாரின் மனம், மொழி, மெய் என்ற மூன்றையும் நன்னெறிக்கண் இழுத்துச்செல்லவேண்டிய கடப்பாடு உடையது நெஞ்சம்.

பழுதுபட்ட என்ஜினை நம்பிப் புறப்பட்ட பெட்டிகள், போகவேண்டிய இடம் செல்ல முடியாமல் நடுவழியில் நிற்பதுபோல், அடிகளாரை அழைத்துச் செல்லவேண்டிய நெஞ்சு பிணமாகிவிட்டமையின் 'கெடுத்தாய் என்னை' என்று தம் நெஞ்சைக் கூறுகிறார் அடிகளார்.

37. மாறி நின்று எனைக் கெடக் கிடந்தனையை
எம் மதி இலி மட நெஞ்சே
தேறுகின்றிலம் இனி உனை சிக்கெனச்
சிவன் அவன் திரள் தோள்மேல்
நீறு நின்றது கண்டனை ஆயினும்
நெக்கிலை இக்காயம்
கீறுகின்றிலை கெடுவது உன் பரிசு இது
கேட்கவும் கில்லேனே 33

காயம்-உடல். சிக்கென-உறுதியாக. கில்லேனே-ஆற்றாமையை உணர்த்தும் எதிர்மறை இடைச்சொல்.

*'இறைவனின் திருமேனியின்மேல் பூசப்பெற்ற திருநீறு அவன் திரண்ட தோளின்மேலும் இருக்கின்றதே. அத் திருநீறு என்றால் என்ன? சிந்தித்திருந்தால், ஊழிக் காலத்தில் அனைத்தையும் நீறாக்கினாலும், பின்னரும் அதனைத் தன் தோள்மேல் தாங்குகின்றான் என்பது தெரியும்.*

*அழித்தவர்களையும் நீறாக்கித் தன் தோளில் சுமக்கும் பரம கருணாமூர்த்தி அவன் என்பதை அறிந்தபின்னும் அவன்பால் நீ ஈடுபாடு கொண்டிலை. அறியாமை நிரம்பிய என் நெஞ்சமே! கெட்டுப்போவதென்று முடிவு செய்து விட்டாய். உன்னோடு இருக்கின்ற நான் இனி என்ன செய்வது என்று தெரியவில்லை.'*

38. கிற்ற வா மனமே கெடுவாய்
உடையான் அடி நாயேனை
விற்று எலாம் மிக ஆள்வதற்கு உரியவன்
விரை மலர்த் திருப்பாதம்
முற்று இலா இளம் தளிர் பிரிந்திருந்து
நீ உண்டன எல்லாம் முன்
அற்ற ஆறும் நின் அறிவும் நின் பெருமையும்
அளவு அறுக்கில்லேனே 34

கிற்றவாகெடுவாய்-முடிந்தவரை கெடுவாய்.

மனம் விரும்பும் எண்ணிலடங்கா இன்பங்களை ஒன்றுவிடாமல் அனுபவித்தாலும் இம்மனத்தில் தோன்றும் ஆசை அடங்குமாறில்லை. இதனைக் குறிக்கவே 'கிற்றவா (வல்லவாறு) கெடுவாய் மனமே' என்றார்.

திருப்பெருந்துறை அனுபவத்தின் பெரும்பகுதி மறைந்துவிட்ட நிலையில் அந்த அனுபவத்தைத் தந்தவரையும் அவரது சிறப்பையும் எண்ணிப்பார்க்கிறார் அடிகளார். அவரிடம் ஆட்படவேண்டுமானால் தம்மை முழுவதுமாக விற்க வேண்டும் என்ற நிலை வந்தாலும், அதற்கும் தகுதியுடையவர் குருநாதர் என்கிறார்.

தம்மை விற்றுக்கூட ஆட்படுவதற்கு உரியவரின் தளிர்போன்ற திருவடிகளை மறந்துவிட்டு, இந்தப் பாழும் மனம், விஷய சுகங்களில் ஈடுபட்டு நிலையில்லாத திருப்தியை அடைந்து மகிழ்கின்றது. இது என்ன வேடிக்கை!

39. அளவு அறுப்பதற்கு அரியவன் இமையவர்க்கு
அடியவர்க்கு எளியான் நம்
களவு அறுத்து நின்று ஆண்டமை கருத்தினுள்
கசிந்து உணர்ந்திருந்தேயும்
உள கறுத்து உனை நினைந்து உளம் பெரும்களன்
செய்ததும் இலை நெஞ்சே
பளகு அறுத்து உடையான் கழல் பணிந்திலை
பரகதி புகுவானே 35

களவு-வஞ்சம் முதலிய களவு ஒழுக்கங்கள். உள கறுத்து-உள்ளனவற்றை வெறுத்து; அதாவது பொறி நுகர்ச்சிகளாகிய போகங்களை வெறுத்து. பெருங்களன்-இறைவன் தங்குதற்குரிய பெரிய இடம். பளகு-குற்றம்.

சூக்கும சரீரத்துடன் வாழும் தேவர்களும்கூட இத்தகையவன் என்று அளவிடமுடியாத பெருமையன் ஆயினும் அடியவர்களுக்கு எளியவனாகவும் அருள்

செய்பவனாகவும் உள்ளான். தாங்கள் தேவர்கள் என்ற தன்முனைப்போடு அவனை ஆராய முற்பட்டதால் அவர்கட்கு அரியனாயினான். அடியவர் என்றாலே முனைப்பு அற்றவர் என்பது பொருளாதலின் அவர்கட்கு எளியனாயினான் என்க.

'மனமே உன்னை அவன் ஆட்கொள்கின்ற அந்த நேரத்தில் உன்பால் எத்தனையோ குற்றங்கள் மலிந்து இருந்தன. அவற்றை அறுத்து உன்னை மன்னித்து அவன் ஆட்கொண்டான் என்பதை நீ நினைக்க வில்லையா? நினைத்திருந்தால் உள்ளத்திலுள்ள அறுவகைக் குற்றங்கள் என்ற குப்பைகளையெல்லாம் போக்கி அந்த உள்ளத்தில் அவன் வந்து தங்குவதற்குரிய தூய்மையான சிறந்த இடமாக நீ செய்திருக்கவேண்டும். அங்ஙனம் செய்தாய் இல்லை' என்கிறார்.

இதே கருத்தைப் பட்டினத்துப்பிள்ளையார் திருக் கழுமலமும்மணிக்கோவையில் பின்வருமாறு பேசுவதைக் காணலாம்.

கீழ்மையில் தொடர்ந்து கிடந்த என்சிந்தைப்
பாழறை உனக்குப் பள்ளியறை ஆக்கிச்
சிந்தைத் தாமரைச் செழுமலர்ப் பூந் தவிசு
எந்தை நீ இருக்க இட்டனன்......

(திருக்கழுமல– கோவை: 4–10–13)

'பரகதி புக நீ விரும்பியிருப்பின் குற்றங்களை அறுத்துப் போக்குபவன் திருவடிகளை ஓயாது நினைத் திருக்க வேண்டும்' என்கிறார். (பளகு-குற்றம்).

40. புகுவது ஆவதும் போதரவு இல்லதும்
பொன் நகர் புகப் போதற்கு
உகுவது ஆவதும் எந்தை எம்பிரான்
என்னை ஆண்டவன் கழற்கு அன்பு
நெகுவது ஆவதும் நித்தலும் அமுதொடு

தேனொடு பால் கட்டி
மிகுவது ஆவதும் இன்று எனின் மற்று இதற்கு
என் செய்கேன் வினையேனே? 36

போதரவு-மீட்சி. பொன்னகர்-சிவபுரி. உகுவது-கழலுவது. நெகுதல்-உருகுதல்.

*பொன்னகர் என்று கூறப்பெறும் வீடுபேற்றில் புகுந்தவர்கள் அதிலிருந்து மீள்வதில்லை. அதில் புக வேண்டுமாயின் அவ்வுயிர் தன்னோடு ஒட்டிக்கொண்டு உள்ள அறுவகைக் குற்றங்களையும், ஆணவம் முதலிய மும்மலங்களையும் முற்றிலும் நீக்க(உகுக்க) வேண்டும்.*

*இக்குற்றங்களைப் போக்குதல் எதிர்மறை இயல்புகளே யாதலால், இவற்றோடு நின்றுவிடின் பொன்னகர் புகுதல் இயலாது என்பதைக் கூறவந்த அடிகளார், இவற்றை நீக்குவதோடு அல்லாமல் இறைவன் கழற்கு அன்பு 'நெகுவ'தாக இருத்தல் வேண்டும் என்கிறார்.*

*மேலே கூறிய பல்வகைக் குற்றங்களும் அவற்றில் ஈடுபட்டிருக்கும்போது நிலையற்ற சுவையையும், இன்பத்தையும், மகிழ்ச்சியையும் தருகின்றனவே. அவற்றைப் போக்கிவிட்டுக் கழற்கு அன்பு செய்தால் வீடுபேறு கிடைக்கலாம். ஆனால், இப்பொழுது சுவை ஏதேனும் கிடைக்குமோ என்று ஐயுறுவார்க்கு விடைகூறுவதுபோல அன்பு செலுத்தப்பெற்ற உடனேயே அமுது, தேன், பால், கட்டி என்பவற்றின் சுவை கிடைக்கும் என்கிறார்.*

*தேனும், பாலும், கட்டியும் உண்ணும்பொழுது பெருஞ்சுவை தருகின்றன. தேன் உண்ணும்பொழுது சுவை தருவதுடன் பின்னர் மருந்தாகி நோய் தீர்க்கவும் செய்யும். இறைவன் கழல் அன்பு செய்யும்போது சுவை தந்து பின்னர்ப் பிறவிப்பிணிக்கு மருந்தும் ஆதலின் தேன் என்றார்.*

மிகச் சிறந்ததான நெய், பாலில் மறைந்திருப்பதுபோல் அத்திருவடியினுள் வீடுபேறு என்ற நெய் மறைந்திருத்தலின் பால் என்றார்.

கரும்பை ஆலையுள் பெய்து சாறாக்கிப் பின்னர் அதனைத் தீயிலிட்டுக் காய்ச்சிய பிறகு கிடைப்பது கட்டியாகும். திருவடியை நினைத்து அன்பு செய்வார்க்கு எவ்விதத் துன்பமும் இல்லாமல் வீடுபேற்றை அருளுதலின் கட்டி என்றார். அதாவது கரும்பு ஆலையில் பிழிபடுவது போலவும், அதன் சாறு தீயிலிட்டுக் காய்ச்சப்படுவது போலவும் விரதம், பட்டினி, சடங்குகள் ஆகியவற்றால் இவ் உடம்பை வருத்தி, பின்னர் வீடுபேற்றை அடைவதற்குப் பதிலாகத் திருவடியில் அன்புசெய்வார் உடனே வீடு பேற்றை அடைதலின் அந்தத் திருவடியைக் கட்டி என்றார்.

**41.** வினைஎன் போல்உடையார் பிறர்ஆர்
உடையான்அடி நாயேனைத்
தினையின் பாகமும் பிறிவது திருக்குறிப்பு
அன்றுமற்று அதனாலே
முனைவன் பாத நல்மலர் பிரிந்து இருந்து நான்
முட்டிலேன் தலைகீறேன்
இனையன் பாவனை இரும்பு கல் மனம் செவி
இன்னது என்று அறியேனே 37

தினையின்பாகம்-தினையளவு இடமும் தினையளவுகாலமும். முட்டிலேன்-மோதிக்கொள்ளேன். தலைகீறேன்-தலையைப் பிளந்து கொள்ளேன். பாவனை-நினைவு.

ஒரு பொருளை மகிழ்ச்சியுடன் அனுபவித்துக் கொண்டு இருப்பவர்கள் திடீரென்று அப்பொருள் தம்மை விட்டு நீங்கியபோது 'என் விதி அதனை அனுபவிக்க விடாமல் நீக்கி விட்டது' என்று கூறுவர். இந்த உலக வழக்கை அனுசரித்துத் தம்முடைய அனுபவம் விட்டுப்

போனபொழுது 'என்னைப்போல வினையுடையார் யார்' என்று வருந்துகிறார் அடிகளார்.

ஒருவேளை அந்த அனுபவத்தைத் தந்தவனே அது வேண்டா என்று மீட்டும் எடுத்துக் கொண்டு விட்டானோ என்ற ஐயம் மனத்திடைத் தோன்றவே, மிக அழகாக அந்த ஐயம் தவறானது என்பதற்கு விளக்கம் கூறுகிறார் அடிகளார். 'உடையானை அடிநாயேன் ஒரு தினையளவு காலமும் பிரிந்திருக்கவேண்டும் என்று அவன் கருத வில்லை. கருதியிருப்பின் இதனைத் தந்தே இருக்க மாட்டான். எனவே, இப்பொழுது அனுபவம் என்னை விட்டு நீங்கிற்று என்றால், அதற்கு நானும் என் வினையுந்தான் காரணம். இப்படி ஒரு தீவினை உடையார் பிறர் யாரும் இல்லை' என்கிறார்.

பிரிந்தது அவன் திருக்குறிப்பன்று. தம்முடைய வினையே என்று தெரிந்தபின்னர், அந்த வினைக்குக் காரணமான இந்த உடம்பைக் கல்லில் மோதியிருக்க வேண்டும்; தலையைக் கீறிக்கொண்டிருக்க வேண்டும். இவற்றைச் செய்யாமைக்குக் காரணம் தம் உடல் இரும்பாலானது; மனம் கல்லால் ஆனது; தம்முடைய செவிகளை இன்னதென்றே தம்மால் சொல்ல முடிய வில்லை என்கிறார். (பிறிவது - பிரிவது).

42. ஏனை யாவரும் எய்திடல் உற்று மற்று
இன்னதுஎன்று அறியாத
தேனை ஆன் நெயை கரும்பின் இன் தேறலை
சிவனைஎன் சிவலோகக்
கோனை மான் அன நோக்கிதன் கூறனை
குறுகிலேன் நெடும் காலம்
ஊனை யான்இருந்து ஓம்புகின்றேன் கெடு
வேன் உயிர் ஓயாதே 38

திருப்பெருந்துறை நிகழ்ச்சி நடைபெற்றுச் சில காலம் கழிந்த பின்னரும் அடிகளார் மனத்தை விட்டு அது நீங்கவில்லை. அவன் விட்டுச் சென்றதற்கு உரிய காரணத்தைத் திருஅண்டப்பகுதியில் விளக்கினாரேனும், தம் ஒருவரைமட்டும் இங்கு ஒழித்துவிட்டுப் போன செயலுக்குத் தாமே காரணம் என்ற நினைவு அவரை விட்டு நீங்கவில்லை. முதலடியில் 'ஏனை யாவரும் எய்திடல் உற்று' என்று குறிப்பதற்குரிய காரணம் இதுவே யாகும். இன்னதென்று அறியாத தேனை, ஆன் நெய்யை, கரும்பின் தேறலை என்று கூறுவதன் அடிப்படை யாது? இன்னது என்று அறிய முடியவில்லை என்று கூறியபிறகு தேனென்றும், நெய்யென்றும், தேறலென்றும் கூறுவது எவ்வாறு பொருந்தும்?

ஒரு பொருளை இது தேன் என்றோ, நெய் என்றோ அறிவது வேறு, சுவைப்பது வேறு. அறியாத என்ற சொல்லைப் பயன்படுத்தினாரேனும் உடன் போயின வர்கள்தவிரத் தாம் உள்ளிட்ட பிறர் அனைவரும் முழுவதுமாய்ச் சுவைக்கமுடியாத தேனாய், நெய்யாய், கரும்பின் தேறலாய் அவன் உள்ளான் என்பதே பொருளாகும்.

ஒரே இன்சுவையைத் தரினும் அந்தச்சுவை தரும் பொருள் தேனாகவும், நெய்யாகவும், தேறலாகவும் இருப்பதுபோல இவனும் சிவனாகவும், சிவலோகத்தை ஆள்பவனாகவும், குவளைக்கண்ணி கூறனாகவும் உள்ளான் என்க.

பெருந்துறை நிகழ்ச்சி நடந்து சிறிது காலமே ஆயினும் உணர்ச்சிப் பெருக்கால் அது நெடுங்காலம்போலத் தோன்றுதலின் 'குறுகிலேன் நெடுங்காலம்' என்றார். பிரிந்திருப்பவர்க்கு, ஒரு கணமும், ஊழியாகத் தோன்றும் என்பது பலரும் கண்ட உண்மையாகும்.

இதே கருத்தை,

ஏழைத் தொழும்பனேன் எத்தனையோ காலமெல்லாம்
பாழுக்கு இறைத்தேன் பரம்பரனைப் பணியாதே
(திருவாச: 327)

என்று பின்னரும் பாடியுள்ளமை காண்க.

43. ஒய்வு இலாதன உவமனில் இறந்தன
ஒண்மலர்த் தாள்தந்து
நாயில் ஆகிய குலத்தினும் கடைப்படும்
என்னைத் நல் நெறி காட்டி
தாயில் ஆகிய இன் அருள் புரிந்தஎன்
தலைவனை நனிகாணேன்
தீயில் வீழ்கிலேன் திண்வரை உருள்கிலேன்
செழுங்கடல் புகுவேனே 39

ஒய்வு-அழிவு. உவமனிலிறந்தன-உவமான உவமேயங்களுள் உவமேயத்தைக் காட்டிலும் உவமானம் தன்மையால் விஞ்சியிருக்கும்; அங்ஙனமாகவும் திருவடியாகிய உவமேயம் உவமானங்களைக் காட்டிலும் சிறந்துள்ளதென்பதாம்.

பிரபஞ்சத்தில் படைக்கப்பெற்ற உயிர்கள் அனைத்தும் உய்கதியை நாடி அவன் திருவடிகளில் ஒயாது வந்து வீழ்கின்றன. அங்ஙனம் வீழும் உயிர்களை ஒய்வு ஒழிவின்றிக் காத்து அருள் செய்தலின் அத்திருவடிகளை 'ஒய்விலாதன' என்றார்.

'ஒண்மலர்த் தாள்' என்று கூறவந்த அடிகளார் அச்சொல்லுக்கு முன்னர் 'உவமனில் இறந்தன' என்று கூறுவதை நோக்க வேண்டும். தாளுக்கு ஒண்மலர் உவமையாக நின்றது. மலர் என்று கூறியவுடன் மொக்கு விரிதல், மலர்தல், கூம்புதல், வீழ்தல் ஆகிய இயல்புகள் நம் மனத்திடைத் தோன்றுமன்றே? அதனைப் போக்குவதற்காக 'உவமனில் இறந்தன' என்ற சொற்களை முன்னர்ப்பெய்கின்றார். அத்திருவடிகள் எப்பொருளோடும்

உவமிக்கப்பட முடியாதபடி தன்னேர் இல்லாமல் விளங்கு கின்றன. அப்படியிருப்பினும் அதன் இயல்பை வேறு வழியாகக் கூறமுடியாது ஆதலின் ஒண் மலர் என்ற உவமையைப் பெய்கின்றார்.

'நாயிலாகிய குலத்தினும் கடைப்படும் என்னை' என்றதால் பல்வேறு பண்புடைய நாய்களின் குலத்தில் மிகத் தாழ்ந்த நிலையிலுள்ள ஒரு நாயைத் தமக்கு உவமையாக்கிக் கூறுகிறார் அடிகளார். தம்மை நாய் என்று கூறிய பிறகுதான் ஒண்மலர்த் தாள் தந்து என்ற உவமையின் சிறப்பை அறிய முடிகிறது. எவ்வளவு சிறப்புடைய மலராயினும் நாய் அதன் அருமைப்பாட்டை அறிய முடியாதன்றோ!

அந்த முறையில் அந்தத் தாள் உயர்ந்ததுதான். என்றாலும் என்ன? நாய்போன்றவராகிய தாம் அந்த ஒளி பொருந்திய மலரை அறிந்து அனுபவிக்கும் ஆற்றல் பெறவில்லை என்ற குறிப்புப் பொருளும் இவ்விரு அடிகளிலும் புதைந்துள்ளது.

பொதுவாக நாய்களுக்குச் சில இயல்புகள் உண்டு. ஒரு முறை ஒரு புதிய இடத்திற்கு அழைத்துச் சென்றுவிட்டால் மறுமுறை பிறர் உதவியின்றி அந்த இடத்தைத் தேடிச் சென்று அடையும் இயல்புடையது நாய். ஒரு முறை உணவிட்டு, அதன் பசியைப் போக்கிவிட்டால் எத்தனை காலமாயினும் அவர்கள் மாட்டு நன்றி பாராட்டும் இயல்பும் உடையது நாய்.

'நாயிலாகிய குலத்தினும் கடைப்படும் என்னை' என்று அடிகளார் கூறியதில் நாய்க்குலத்திற்கு உரிய இவ்விரு இயல்புகளும் தம்பால் இல்லை என்று நொந்து கொள்கிறார்.

நன்னெறி காட்டினான் அவன். அவ்வழிச் செல்ல வில்லை என்பதால் நாயின் முதல் இயல்பு தம்பால்

இல்லை என்பதை அறிவுறுத்தினார். தாய்போன்று இன்னருள் சுரந்தான் அவன்; அதற்கு நன்றி பாராட்டும் இயல்பும் தம்பால் இல்லை என்றாராயிற்று.

இழிந்த பிறவியாகிய நாயிடம்கூடக் காணப்படும் நல் இயல்புகள் இல்லாத தாம் வாழ்ந்து பயனில்லை. தீயில் வீழ்ந்தோ, மலையில் உருண்டோ, கடலில் புகுந்தோ தம்மை மாய்த்துக்கொள்ளவும் இல்லை என்கிறார் அடிகளார்.

**44.** வேனில் வேள்கணை கிழித்திட மதிசுடும்
அதுதனை நினையாதே
மான் நிலாவிய நோக்கியர் படிறிடை
மத்துஇடு தயிர்ஆகித்
தேன் நிலாவிய திருஅருள் புரிந்தஎன்
சிவன்நகர் புகப்போகேன்
ஊனில் ஆவியை ஓம்புதல் பொருட்டுஇனும்
உண்டுஉடுத்து இருந்தேனே 40

வேனில்வேள்-மன்மதன். மதிசுடும்-குளிர்ந்த மதியும் வெய் தாய்ச் சுடும். படிறு-வஞ்சகம்.

திருப்பெருந்துறையில் குருவின் எதிரே அமர்ந்திருந்து, குரு மறைந்தபொழுது மறைந்துவிட்ட அடியார்களை நினையுந்தொறும் தாம் அவர்களைப்போல் இல்லையே என்ற வருத்தம் அடிகளார் மனத்தில் அடிக்கடி ஊசலாடுகிறது.

இந்நிகழ்ச்சி நடைபெற்றுச் சில காலம் சென்ற பின்னர், திருவாசகம் பாடப்பெறுவதற்காகவே குரு தம்மை இங்கு இருத்திச் சென்றார் என்பதை நன்கு அறிந்திருந்தும், அந்த அனுபவத்தை மறுபடியும் பெறாத ஒவ்வொரு விநாடியும் வீண் காலம் என்று வருந்துகிறார் அடிகளார். இடைக்காலத்தில் ஏனைய நாட்களைப் போல உண்டு

உடுத்தி இருக்கின்றார்; எனினும் இவை இரண்டும் தேவையற்ற செயல்கள் என்று கருதிப் பேசுகின்றார்.

முதல் இரண்டு அடிகளில் வரும் கருத்து, திருவருள் பெறுவதற்கு முன்னர் அமைச்சராக இருந்த காலத்தில் நிகழ்ந்தவைபற்றி இருக்கலாம்.

இங்குமட்டுமன்றி 'வெஞ்சேல் அனைய கண்ணார் தம்' (திருவாச: 427) என்று தொடங்கும் பாடலிலும் இதே கருத்துப் பேசப்பெறுதலின் அடிகளாரின் பழைய வாழ்க்கையைக் குறித்தது என்றோ, ஆன்மாக்களின் பொதுவான இயல்பை ஏறட்டுக் கொண்டு பாடியது என்றோ பொருள் கொள்வதில் தவறில்லை என்றே தோன்றுகிறது.

### கைம்மாறு கொடுத்தல்

45. இரு கை யானையை ஒத்து இருந்து என் உளக்
கருவை யான் கண்டிலேன் கண்டது எவ்வமே
வருக என்று பணித்தனை வான் உளோர்க்கு
ஒருவனே கிற்றிலேன் கிற்பன் உண்ணவே 41

இருகை யானை ஒத்திருந்தேன்-ஒருகையால் உண்டு போதாமையால் இருகையால் உண்ட யானையை ஒத்தேன். உள்ளம்-ஆன்மா. எவ்வம்-துன்பம். கிற்றிலேன்-ஆற்றலில்லேன். (உண்ணவே) கிற்பன்-வல்லேன்.

திருப்பெருந்துறையில் எழுந்தருளியிருந்த குருநாதர் வழியோடு சென்ற தம்மை வருக எனப் பணித்து ஆட்கொண்டார். அந்த நேரத்தில் குருவாக அமர்ந்து இருந்தவர் சிவன்தான் என்பதைத் தாமே தேறி அறிந்து கொண்டதாக அடிகளாரே முன்னர்க் கூறியுள்ளார்.

அப்படியிருக்க என் 'உள்ளக் கருவை யான் கண்டிலேன்' என்ற இத்தொடர் ஒரு புதிய சிந்தனையைத்

தூண்டுகிறது. குருவை இவர் கண்டது உண்மை. 'கண்ணால் யானும் கண்டேன் காண்க' (திருவாச:3-58) என்று முன்னரே கூறியுள்ளார். அப்படியிருக்க, 'என் உள்ளக் கருவை நான் கண்டிலேன்' என்று கூறுவது, உள்ளத்தின் ஆழத்தில் உயிர்க்குயிராய் மறைந்து நிற்கும் ஒருவனைக் கண்டிலேன் என்று கூறுவது, என்ன பொருளைக் கருதிக் கூறப்பெற்றது?

புறத்தே பருவடிவுடன் இருந்த குருவைப் புறக் கண்களால் கண்டது உண்மை. மானிட வடிவுடன் இருந்த அவர் உண்மையில் யார் என்பதை அடிகளாரின் உள்ளுணர்வு உணர்த்தியது. என்றால், கண்களால் கண்டது மானிட உடலை. கண்ணின் பார்வை எல்லைக்கு அப்பாற்பட்டுக் கருத்தளவில் இருக்கும் ஒருவனை உணரலாமே தவிர, அனுபவிக்கலாமே தவிர, கண்ணால் காண முடியாது என்பது உண்மை. 'உள்ளக் கருவை யான் கண்டிலேன்' என்று சொல்லும்பொழுது, 'புறத்தே பருவடிவுடன் இருந்த குருவைக் கண்டேன்; அவரே ஆழ்மனத்தின் அடியில் நுண்மையாய் நிற்கும்போது கண்ணால் அவரைக் காணமுடியவில்லை' என்பது பொருளாகும்.

புறத்தே இருந்த ஒருவர் 'வருக' எனக் கூஉய் ஆட்கொண்டு, திருவடி தீட்சை செய்து அமுத தாரைகளை என்புத் துளைதொறும் ஏற்றினார். 'அப்படி மாபெரும் உபகாரம் செய்த ஒருவருக்கு நான் என்ன கைம்மாறு செய்தேன்? இரு கை யானையை ஒத்திருந்தவனாகிய நான் பொறி, புல இன்பங்களை நுகர்வதையே பெரிதாகக் கருதி இருந்துவிட்டேன்' என்கிறார்.

இங்கு அடிகளார் தம்மை யானையோடு உவமித்தது ஒரு நுண்மையான உட்கருத்தைக் கொண்டதாகும். ஒரு கை யானைக்கே இரண்டு கெட்ட குணங்கள் உண்டு. ஒன்று — நன்றி மறப்பது; இரண்டு — குளித்துவிட்டுத்

தூய்மையாக வரும்பொழுதே மண்ணை வாரித் தன் தலையில் போட்டுக் கொள்வது.

மாபெரும் உபகாரம் செய்த குருவிற்குத் தாம் நன்றி பாராட்டவில்லை ஆதலால் நன்றி கொல்லும் யானை யோடு உவமம் செய்தார்.

வழியோடு சென்ற தம்மை வலிய அழைத்து இறை யனுபவத்தைக் குருநாதர் நெஞ்சில் நிறைவித்தார். பழைய, பசுகரணங்களைப் போக்கிப் பதிகரணங்களாக மாற்றி அருளினார். இது குளித்துவிட்டு வரும் யானைக்கு உவமை. இவ்வளவு பெரிய நலங்களை விட்டுவிட்டுப் பொறிகளின் இன்ப நுகர்ச்சியில் மறுபடியும் தம் மனம் செல்வது குளித்துவரும் யானை தன் தலையில் தானே மண்ணை வாரிப் போட்டுக்கொள்வது போலாகும். அதனாலேயே இருகை யானையை ஒத்திருந்து என்று பாடுகின்றார்.

**என்னால் அறியாப் பதந் தந்தாய்**
**யான் அது அறியாதே கெட்டேன்**
**உன்னால் ஒன்றும் குறைவில்லை**

**(திருவாச: 644)**

என்ற பாடலிலும் இதே கருத்துப் பேசப்பெற்றிருப்பதைக் காணலாம்.

**46.** **உண்டு ஓர் ஒள்பொருள் என்று உணர்வார்க்கு எலாம்**
**பெண்டிர் ஆண் அலி என்று அறி ஒண்கிலை**
**தொண்டனேற்கு உள்ளவா வந்து தோன்றினாய்**
**கண்டும் கண்டிலேன் என்ன கண் மாயமே** **42**

உணர்வார்-தன்முனைப்பால் உணரத் தொடங்குகின்ற பாச பசு ஞானிகள். தொண்டனேற்கு-சிவஞானத்தைத் திருவருள் வாய்ப்பால் பெற்ற அடியேனுக்கு. கண் மாயம் என்ன- கண்ணைப் பற்றியிருக்கும் மயக்கம்தான் என்ன.

நாம, ரூபம் கடந்து நிற்பது என்பதே இறைவனுக்குச் சொல்லப்படும் இலக்கணமாகும். அப்படி நாம, ரூபம் கடந்த பொருளைப் பொறி, புலன்களால் காண்பது இயலாத காரியம். அவ்வாறானால், கருத்தளவையின் மூலமாகவாவது காண முடியுமா என்றால், அது கருத்திற்கும் அப்பாற்பட்ட பொருளாகும் என்று கூறியுள்ளனர் பெரியோர். காட்சி அளவையின் மூலமோ கருத்து அளவையின் மூலமோ இறைவனை 'அறிதல்' இயலாத காரியம். எனவே, அடிகளார் 'உணர்வார்' என்ற சொல்லைப் பயன்படுத்துகிறார். அப்பொருள் உண்டு என்றால், காட்சியளவையிலும், கருத்தளவையிலும் பட்டுத் தானே தீரவேண்டும் என்ற எண்ணம் தோன்றுமன்றே? அதனைப் போக்குதற்கு, உண்டு என்று அறிவார் என்றோ கண்டார் என்றோ தெரிவார் என்றோ கூறாமல் 'உணர்வார்க்கு எலாம்' என்று கூறினார்.

உணரப்படும் பொருள் அனுபவிக்கப்படுமே தவிர அதனை அறிவு கொண்டு ஆராய்தல் கடினம். உண்டு என்று உணர்ந்தவர்கள் அதனை அனுபவிப்பதை விட்டுவிட்டு, 'அனுபவப்பொருளாக நிற்கும் இது, ஆணோ, பெண்ணோ, அலியோ' என்று ஆராயத் தொடங்கினால் அது பயனற்ற முயற்சியாகும்.

அனுபவிக்கும் பொருளை ஏன் ஆராயக்கூடாது என்று ஒரு வினாவை எழுப்பினால் இதன் விடையை எளிதில் புரிந்து கொள்ளலாம். அனுபவிப்பது என்பது அகமனம், ஆழ்மனம் ஆகியவற்றின் தொழிலாகும். அனுபவ நிலையின் தொடக்கத்தில், 'தான்' என்ற ஒரு பொருளும் அனுபவம் என்ற ஒரு பொருளும் நெருங்கி வந்து, இறுதியில் 'தான்' அனுபவத்துள் புகுந்துவிடும். அங்கே அனுபவிப்பவன், அனுபவிக்கப்படும் பொருள் என்ற இரண்டும் அனுபவத்தினுள் இணைந்துவிடும். அந்த அனுபவம் உணர்வின்பாற்பட்டதாகும்.

இதன் எதிராக, அறிதல் என்பது மூளையின் செயலாகும். அந்தத் தொழில் தொடங்கும்போதே 'நான்' முன்னர் நிற்கும். நான் ஆராய்கிறேன், நான் அறிய முற்படுகிறேன் என்று பேசும்பொழுது, அறிதல் ஆகிய செயல் 'நானு'ள் அடங்கி யிருக்கும் அறிவின் செயலாகும். இந்த ஆராய்ச்சியில் எத்தனை தூரம் சென்றாலும், எத்தனை ஆண்டுகள் கழித்தாலும் 'நான்' இருந்து கொண்டே யிருக்கும். எனவே, உணர்தல்போல் அல்லாமல் அறிதல் முற்றிலும் மாறுபட்ட செயலாகும்.

உணர்வில் 'நான்' அமிழ்ந்துவிடுகிறது; அறிதலில் 'நான்' தலைதூக்கி நிற்கின்றது. பெண், ஆண், அலி என்று ஒருவரைப் பிரித்துக் காணுதல் அறிவின் செயலாகும். அறிவிற்கு அப்பாற்பட்டவ னாகிய இறைவனை, வடிவு கடந்தவனாகிய இறைவனைப் பெண், ஆண், அலியென்று வடிவிற்கு உரிய அடையாளங்களோடு அறிய முற்படுவது பொருந்தாது. இதனைக் கூறவந்த அடிகளார் 'பெண்டிர் ஆண் அலி என்று அறி ஒண்கிலை' என்று கூறுகின்றார்.

நிர்க்குண, நிராமய, நிராலயம் ஆனது அப்பொருள் என்றால், அதனை அடைய முயல்வதோ, அதற்குரிய வழிகளை மேற்கொள்வதோ பயனற்ற காரியம் என்ற எண்ணம் தோன்றிவிடுமன்றே? அதனைப் போக்குவதற்கு அடுத்த அடியிலேயே 'இவ்வளவு பெரிய பொருளாக இருப்பினும் இறைவன் தொண்டர்களுக்கு உள்ளவாறு காட்சி தருவான்' என்ற அமைதி கிட்டுமாறு 'தொண்டனேற்கு உள்ளவா வந்து தோன்றினாய்' என்று கூறினார். உண்டு ஓர் ஒண்பொருள் என்று உணர்பவர் கட்குக்கூடப் பெண், ஆண், அலியென்று பிரித்துக் காண முடியாத நிலையில் காட்சி, கருத்து அளவைகட்கு அப்பாற்பட்டு நிற்கும் பொருள் இப்போது அடிகளார் தம் எதிரே தோன்றிற்று என்று கூறுகிறார். 'தோன்றினாய்' என்று முன்னிலை ஒருமை வாய்பாட்டாற் கூறியமையின்

அப்பொருள் அடிகளாரின் கட்புலனுக்கும் விருந்தாகத் தோற்றிற்று என்பது அறியப்படும். எனவே, குருவடிவாக வந்ததையே அடிகளார் இங்கும் பேசுகிறார்.

நான்காவது அடி நன்கு சிந்திக்கவேண்டிய ஒன்றாகும். முரண்பட்ட இரு கருத்துக்களை அடுத்தடுத்த சொற்களால் அடிகளார் பேசுகின்றார். கண்டும் கண்டிலேன் என்றால் என்ன பொருள்? இரண்டும் உண்மையானவை. மானிட வடிவுடன் இருந்தக் குருவை கண்டது உண்மை. தீட்சை பெற்ற பிறகு அனுபவத்தில் மூழ்கி எழுகின்ற நிலையில் மானுட வடிவுடன் இருந்த குரு, உண்மையில் யார் என்ற சிந்தனை தோன்றிற்று. மறுபடியும் கண்களால் அவரைக் கண்டு ஒரு முடிவிற்குவர விழைந்த அடிகளார், மூடியிருந்த கண்களைத் திறந்து காணும்போது அங்கே குரு இல்லை. எனவே, கண்டும் என்றும் கண்டிலேன் என்றும் சொல்வது உண்மையானவையாம்.

எங்கும், எப்பொழுதும் இடையீடின்றி நிற்கும் ஒரு பொருளை, மறைந்துவிட்டார் என்று சொல்ல விரும்பாத அடிகளார், இப்பொழுது அவரைக் காணமுடியாமைக்குக் காரணம் தம் குறையே என்ற கருத்தில் 'கண்டிலேன் என்ன கண் மாயமே' என்று பாடுகிறார். காணாமைக்குக் காரணம், அவர் எங்கும் போய்விடவில்லை என்றாலும் என்ன மாயத்தாலோ கண் அவரைக் காணும் ஆற்றலை இழந்துவிட்டது என்கிறார்.

காட்சிப் புலனுக்குக் கிடைக்கக்கூடிய எந்த வடிவும், அஃறிணையில், நிலையியல் பொருளாக இருந்தாலன்றி ஏனையவற்றை ஆண் பெண் என்று பிரித்துக் காண முடியும். இந்தப் பிரிவினைக் காட்சிக்கு அடிப்படையாக இருப்பது அறிவாகும். ஆகவே, அறிவின் துணை கொண்டு காணமுயன்றால் பெண், ஆண், அலி என்று பிரித்துக் கண்டுகொள்ள முடியாத பொருள் என்று கூறிவிட்ட பிறகு 'தொண்டனேற்கு உள்ளவா வந்து தோன்றினாய்' என்று

பாடியுள்ளாரே, 'உள்ளவா வந்து தோன்றினாய்' என்பதன் பொருளென்ன என்ற வினாவை எழுப்பினால், நம்முடைய சிந்தனைக்கு அப்பாற்பட்டது என்பதுதான் விடையாகும். 'உள்ளவா'று என்று அடிகளரர் குறிப்பிட்டுக் கூறுவதால் அவருக்குக் கிடைத்த காட்சியில் பெண், ஆண், அலி என்று இனம்பிரிக்க முடியாத ஒரு பொருளாக இறைவன் காட்சி தந்திருக்க வேண்டும்.

'வந்து தோன்றினாய்' என்று கூறுவதால், இது திருப்பெருந்துறை நிகழ்ச்சியையே சுட்டும் என்று நினைப்பதில் தவறில்லை. அங்கிருந்தது மானிட, ஆண் வடிவம்தானே? அந்த வடிவத்தைக் கண்டுவிட்டு உள்ளவா தோன்றினாய் என்று அவர் கூறிய சொற்களுக்கு, நாம் பொருள் கூறத் தொடங்கினால் சிக்கல் ஏற்பட்டுவிடும். கட்புலனுக்கு விருந்தாகவுள்ள குருவின் வடிவைப் பெண், ஆண், அலி அல்லன் என்று கூறுவது எவ்வாறு பொருந்தும் என்ற வினாவை எழுப்பினால் விடை கிடைத்துவிடும். குதிரையிலிருந்து இறங்குகின்றவரை, மானிட ஆண் வடிவில் இருந்த குருவை அடிகளார் கண்டது உண்மை. அவரிடம் சென்று தீட்சை பெற்றபிறகு அடிகளாருக்கு ஒரு காட்சி கிடைத்திருக்க வேண்டும். அக்காட்சியில் பெண், ஆண், அலி வடிவுகளையெல்லாம் கடந்த அப்பொருள் தன்னுடைய சிவ சொரூபத்தை அடிகளாருக்கு வழங்கியிருக்க வேண்டும். 'உள்ளவா வந்து தோன்றினாய்' எனபதன் பொருள் இதுவேயாகும்.

தோன்றிய அப்பரம்பொருள் கட்புலன் காணுமாறு தோன்றிற்றா அல்லது உள்ளத்து ஒளியாய் உள்ளே 'தோன்றிற்றா' என்ற வினாவை எழுப்பினால், விடை கூறுவது கடினம். தோன்றினாய் என்ற சொல் கட்புலனுக்கு விருந்தாகவா அன்றி உள்ளத்து ஒளியாகவா என்று நம் மனத்திடைத் தோன்றும் வினாவிற்கு விடை கூறுவதுபோல நான்காம் அடியின் முதற்சொல் நிற்கின்றது. 'கண்டும்'

என்று கூறியதால் புறத்தே அப்பொருள் காட்சியளித்தது என்பது தேற்றம். தன் உண்மையான 'வடிவை', அடிகளாரின் புறக்கண்களுக்கு விருந்தாகக் காட்டி உடன் மறைந்துவிட்டது. அதனாலேயே 'கண்டும் கண்டிலேன்' என்கிறார் அடிகளார்.

47. மேலை வானவரும் அறியாதது ஓர்
கோலமே எனை ஆட்கொண்ட கூத்தனே
ஞாலமே விசும்பே இவை வந்து போம்
காலமே உனை என்றுகொல் காண்பதே 43

கோலம்-திருவுருவம். வானவர்கள்-குருவாக வந்து மல நீக்கும் உபதேசம் பெற்றிலராதலின் வானவரறியாத கோல மென்றார்.

இப்பாடலின் பின் இரண்டு அடிகள் இன்றைய உலகம் ஏற்றுக்கொண்டுள்ள ஐன்ஸ்டினின் மிகச் சிறந்த கண்டுபிடிப்பாகிய ஒரு விஞ்ஞானக் கருத்தைக் கூறுவதாகும். இருபதாம் நூற்றாண்டு விஞ்ஞானியின் கருத்தை எட்டாம் நூற்றாண்டில் ஒரு மெய்ஞ்ஞானி உள்ளுணர்வால் கண்டு கூறியுள்ளார். இதன் விரிவை 'திருவாசகம் சில சிந்தனைகள் — முதற் பகுதி' என்ற நூலின் பின்னுரை என்ற தலைப்பில் கண்டுகொள்ளலாம்.

48. காணல் ஆம் பரமே கட்கு இறந்தது ஓர்
வாள் நிலாப் பொருளே இங்கு ஓர் பார்ப்பு எனப்
பாணனேன் படிற்று ஆக்கையை விட்டு உனைப்
பூணும் ஆறு அறியேன் புலன் போற்றியே 44

வாள் நிலா-மிக்கஒளி. பார்ப்பு-குஞ்சு. படிறு-பொய். பாணனேன்-பாழானவனாகிய நான்.

'ஞானக் கண்ணால்மட்டும் காணக்கூடிய பரம்பொருளே! ஒளி பொருந்திய நிலவைப்போல குளிர்ந்த ஒளிவடிவானவனே! முட்டையை உடைத்துக்கொண்

*வெளிவரும் குஞ்சைப்போலப் புலன்கள்மேல் பற்று வைத்திருக்கும் இவ்வுடம்பை விட்டு உன்னை அடைதல் எந்நாளோ?' என்க.*

**49.** போற்றி என்றும் புரண்டும் புகழ்ந்தும் நின்று
ஆற்றல் மிக்க அன்பால் அழைக்கின்றிலேன்
ஏற்று வந்து எதிர் தாமரைத் தாள் உறும்
கூற்றம் அன்னது ஓர் கொள்கை என் கொள்கையே 45

*உள்ளன்புடையார் இறைவனைப் போற்றிப் புகழ்ந்து நின்று, புரண்டு, அலறி, ஆற்றல்மிக்க அன்புசெய்து அவனது திருவடியைப் பெறுவர்.*

*இதன் எதிராக மார்க்கண்டனை வௌவ வேண்டி இறைவனையே எதிர்த்து நின்ற காலதேவன் இறைவனால் உதைக்கப்பெற்றமையின் அத்திருவடி சம்பந்தம் பெற்றான். ஆற்றல் மிக்க அன்பு தம்பால் இல்லையாதலால் காலனைத் தண்டித்ததுபோல் தம்மையும் தண்டிக்கும் பொழுதுதான் அவன் திருவடிப்பேறு கிட்டுமோ— என்கிறார்.*

**50.** கொள்ளும் கில் எனை அன்பரில் கூய்ப் பணி
கள்ளும் வண்டும் அறா மலர்க் கொன்றையான்
நள்ளும் கீழ் உளும் மேல் உளும் யா உளும்
எள்ளும் எண்ணெயும் போல் நின்ற எந்தையே 46

நள்-நடு. கொள்ளும் கில்லெனை-எனை ஏற்றுக் கொள்வானோ. கூய்-கூவி. நள்ளும்-நெருங்குதல்.

*'தேன் நிறைந்த கொன்றை மலர்களை அணிந்த பெருமான் ஏனைய அடியார்களைப்போல என்னையும் கூவி அழைத்துப் பணிகொள்ள வல்லவன்(கொள்ளுங் கில்).' 'கொள்ளும் கில்' என்ற பாடத்திற்கு மாறாகக் 'கொள்ளும் கொல்' எனப் பாடங்கொண்டு என்னையும்*

பணி செய்யுமாறு ஏற்றுக்கொள்வானோ என்று பொருள்கூறலும் ஒன்று. (உளும் - உள்ளும்).

51. எந்தை யாய் எம்பிரான் மற்றும் யாவர்க்கும்
தந்தை தாய் தம்பிரான் தனக்கு அஃது இலான்
முந்தி என்னுள் புகுந்தனன் யாவரும்
சிந்தையாலும் அறிவு அரும் செல்வனே 47

தோற்றம், ஈறு அற்றவனாகிய பெருமான்— ஏனையோர் யாவரும் சிந்தையாலும் சிந்திப்பதற்கரிய பெருமான், தானே வந்து தம்முடைய உள்ளம் புகுந்து அருள்செய்தான் என்கிறார்.

பின்னரும் 'நானேயோ தவஞ் செய்தேன்' (திருவாச: 555) என்று தொடங்கும் பாடலில் 'தானே வந்து எனது உள்ளம் புகுந்தருளி அடியேற்கு அருள் செய்தான்' என்று கூறுகிறார்.

52. செல்வம் நல்குரவு இன்றி விண்ணோர் புழுப்
புல்வரம்பு இன்றி யார்க்கும் அரும் பொருள்
எல்லை இல் கழல் கண்டும் பிரிந்தனன்
கல் வகை மனத்தேன் பட்ட கட்டமே 48

நல்குரவு-வறுமை. எல்லையில்கழல்-சொல்லெல்லையும் கருத்தெல்லையும் கடந்துநின்ற திருவடி. கட்டம்-துன்பம்.

அஃறிணைப் பொருள்களாகிய புல் முதல், உயர்திணை என்று கூறப்பெறும் தேவர்கள், செல்வர், வறியர் எனப் பிரிக்கப்பெறும் மக்கள் ஆகிய யார்க்கும் அறியொணாதவன்.

மேலே கூறப்பெற்ற அஃறிணை, உயர்திணை என்ற இரு வகுப்பிலும் காணப்பெறும் அனைத்திலும் அந்தர் யாமியாய் அவன் இருப்பினும் அவர்கள் யார்க்கும் இவன் அறியொணாதவன் என்றார். 'அத்தகைய பெருமான்

எல்லையில்லாத தன் திருவடிகளை எனக்குக் காட்டினான். அவற்றைக் கண்டபிறகும் அதனோடு இணைந்துவிடாது பிரிந்தனன். அதன் காரணம் என் மனம் அன்பால் உருகாமல், பல்வகைக் கற்களில் வலிதாய கருங்கல்போல், இருந்தமையினால் ஆகும். அதனால் யான்பட்ட துன்பம் சொல்லும் தரத்ததன்று.'

53. கட்டு அறுத்து எனை ஆண்டு கண் ஆர நீறு
இட்ட அன்பரொடு யாவரும் காணவே
பட்டிமண்டபம் ஏற்றினை ஏற்றினை
எட்டினோடு இரண்டும் அறியேனையே 49

பட்டிமண்டபம்-வாத சபை..

திருப்பெருந்துறையில் திருவருள் பெற்று அமர்ந்திருந்த அடியார்களிடையே, தம்மையும் ஒருவராக்கி அமர்த்தியமையை நினைக்கின்றார் அடிகளார். சிவ ஞானம்(பர ஞானம்) கைவரப்பெற்ற அவர்கள் எங்கே? உலக ஞானம்(அபர ஞானம்) கூடப் பெறாத தாம் எங்கே?

இந்த நினைவு வந்தவுடன் தம்முடைய அறியாமைக்கு ஓர் எல்லை வகுக்கும் முறையில் எட்டும், இரண்டும் எவ்வளவு என்று அறியாத தாம் என்கிறார்.

எட்டினோடு இரண்டும் என்ற தொடருக்கு அகர(8) உகரம்(2) என்றும், இவை இரண்டும் கூட்டிய பத்துக்கு யகரம் என்றும் பொருள் கூறுவாரும் உளர். இவ்வாறு எல்லாம் பொருள் கொள்ள இடந்தந்து நிற்பதுதான் அடிகளாரின் பாடற்சிறப்பு. (தமிழ் எண் வடிவில் அகரம் எட்டையும் உகரம் இரண்டையும் குறிக்கும். பத்து என்பதை யகரம் போன்ற எழுத்துக் குறிக்கும்).

54. அறிவனே அமுதே அடி நாயினேன்
அறிவன் ஆகக் கொண்டோ எனை ஆண்டது

அறிவு இலாமை அன்றே கண்டது ஆண்ட நாள்
அறிவனோ அல்லனோ அருள் ஈசனே 50

'அறிவு வடிவானவனே! நீ என்னை ஆட்கொண்ட பொழுது நான் பேரறிவு படைத்தவனென்றோ கருதினாய்? முற்றறிவினனாகிய நீ, நான் மெய்யறிவு இல்லாதவன் என்பதை அறிவாய் அல்லவா?'

'நீ ஆண்டுகொண்ட பிறகும் இப்பொழுதாவது நான் பேரறிவு படைத்தேன் என்றோ இல்லையென்றோ எனக்குத் தெரியவில்லை. என்னை நான் உணர்ந்து கொள்ளவும் நீதான் அருள் செய்ய வேண்டும்' என்கிறார்.

அநுபோக சுத்தி

55. ஈசனே என் எம்மானே
எந்தை பெருமான் என் பிறவி
நாசனே நான் யாதும் ஒன்று
அல்லாப் பொல்லா நாய் ஆன
நீசனேனை ஆண்டாய்க்கு
நினைக்கமாட்டேன் கண்டாயே
தேசனே அம்பலவனே
செய்வது ஒன்றும் அறியேனே 51

தேசன்-ஒளியையுடையவன்.

பொல்லா நாயான நீசனேனை ஆண்டாய் என்று கூறுவது ஓர் உட்பொருளைக் கொண்டதாகும். நாய் என்று தம்மைப் பல முறை அடிகளார் கூறிக்கொள்வது பல பாடல்களில் காணப்பெறும். இந்த இடத்தில் நாய்க்கு இரண்டு அடைமொழிகள் தரப்பெறுகின்றன. பொல்லா (நாய்) என்பது ஓர் அடை; நீசனான (நாய்) என்பது மற்றோர் அடை.

கக்கியதை மீட்டு உண்ணும் நாயின் செயலை வெறுத்த நம் முன்னோர், நாயை இழிபிறவி என்று கூறினர். எத்துணை இழிபிறவியானாலும் மனிதரிடம்கூட அதிகம் காணப்பெறாத நன்றியறிதல் நாயினம் முழுவதற்கும் உண்டு. ஆதலின் அந்த இயல்பை நீக்குவதற்குப் 'பொல்லா நாய்' என்றார்.

நீசனான நாய் என்று கூறுவது நாய் இனத்திற்குரிய காத்தல் தொழிலையும் செய்யாத நாய் எனப் பொருள் தந்துநிற்கிறது. இருக்கவேண்டிய இயல்பைப் பெற்றிராமல் இருப்பவர்களை நீசன் என்று கூறுவது மரபு. நீசனேனை என்றதால் மனிதர்க்குரிய பொதுப்பண்பும் தம்மிடம் இல்லை என்றவாறு.

இவ்வாறு இருந்தும் அதனைப் பொருட்படுத்தாமல் நீ என்னை ஆண்டாய். ஆண்ட பிறகாவது நீ செய்த பேருப காரத்தை நினைந்திருக்க வேண்டும். நினையாமல் இருந்து விட்ட நான் சராசரி மனிதரிலும் நீசனாகி விட்டேன்

'இந்த நிலையில் மேற்கொண்டு என்ன செய்ய வேண்டும் என்று தெரியாதவனாக இருக்கின்றேன்' என்கிறார்.

56. செய்வது அறியாச் சிறு நாயேன்
செம் பொன் பாத மலர் காணாப்
பொய்யர் பெறும் பேறு அத்தனையும்
பெறுதற்கு உரியேன் பொய் இலா
மெய்யர் வெறி ஆர் மலர்ப் பாதம்
மேவக் கண்டும் கேட்டிருந்தும்
பொய்யனேன் நான் உண்டு உடுத்து இங்கு
இருப்பது ஆனேன் போர் ஏறே 52

வெறி-மணம்.

'அற்ப நாய்போன்றவனாகிய நான் மாபெரும் பேறு பெற்றும் இப்பொழுது செய்வதறியாது திகைக்கின்றேன்.

காரணம், நான் மெய்யனாக இருந்திருப்பின் இப்பொழுது என்ன செய்ய வேண்டும் என்பது தெரிந்திருக்கும்.' எனவே, 'செய்வதறியாச் சிறு நாயேன்' என்றார்.

அப்படியானால், தம் உண்மைநிலை என்ன? தமக்குக் கிடைத்த பேறு தம் தகுதியால் வந்தது அன்று என்பார், 'பொய்யர் பெறும் அத்தனையும் பெறுதற்கு உரியேன்' என்றார்.

உலகியலில் சராசரி மனிதர்கூட, இன்றியமையாத ஒன்றைக் கண்டாலும் அல்லது கேட்டாலும் அதை மனத்திற் கொண்டு அதன்வழி நிற்க முயல்வர். மெய்யன்பு உடையவர்கள், மணம் பொருந்திய மலர்போன்ற திருவடிகளை அடைவதைக் கண்டும், கேட்டும் உள்ளேன். அப்படியானால், சராசரி மனிதனாக நான் இருந்தாற்கூட அம்மெய்யரின் முன்னேற்றத்திற்குக் காரணம் அவர்கள் மெய்யன்பே என்பதை அறிந்திருப்பேன். அதன் பயனாக என் பொய்யன்பை மாற்றிக்கொண்டு நானும் மெய்யனாக மாறியிருக்க வேண்டும். அதனைச் செய்யாமல் உண்டு உடுத்திப் பொறி, புலன்களுக்கு இடமான இந்த உடம்பினை ஓம்பி இங்கு வாழ்கின்றேன்' என்கிறார். ஏறு போன்ற பெருமானே! உடம்பினை ஓம்பும் இந் நிலையிலிருந்து மாறுவதற்கு நீயே அருள் செய்ய வேண்டும் என்பது குறிப்பெச்சம்.

57. போர் ஏறே நின் பொன் நகர்வாய்
நீ போந்தருளி இருள் நீக்கி
வார் ஏறு இள மென் முலையாளோடு
உடன் வந்தருள அருள் பெற்ற
சீர் ஏறு அடியார் நின் பாதம்
சேரக் கண்டும் கண் கெட்ட
ஊர் ஏறு ஆய் இங்கு உழல்வேனோ
கொடியேன் உயிர்தான் உலவாதே 53

ஊரேறு-ஆள்வாரில்லாத ஊர்க்காளை. உலவாதே-நீங்காதே.

திருப்பெருந்துறை நிகழ்ச்சியை அடிகளார் மீட்டும் இங்கு நினைக்கின்றார். குருவின் எதிரே இருந்த அடியார்கள் அனைவரும் இவர் எதிரேயே குருவோடு சென்று மறைந்தனர். சென்றவர்கள் பொன்னகர் புக்கு அவர் திருவடி நீழலை அடைந்தனர்.

இரண்டாவது அடியில் உமையம்மையோடு வந்தருள என்ற தொடர் வருகிறது. குருமட்டும் இருந்தாராதலின் இறைவியோடு என்ற தொடருக்கு இறைவனது மறைந்துநிற்கும் அருட்சக்தி என்று பொருள் கூறுவர். அது ஏற்புடையதாகத் தெரியவில்லை. திருப்பெருந்துறையில் வாதவூரர் கண்ணில் முதலிற் பட்டது குருவின் திருவுருவே ஆகும். திருவாதவூரரைக் குருவினிடம் இழுத்துச் சென்றது அவரிடம் இருந்து புறப்பட்ட அருள் அலைகளே என்று முன்னரும் குறிப்பிட்டுள்ளோம். அந்த அருள் அலைகளால் ஈர்க்கப்பட்ட வாதவூரர் இறைவனுடைய தீட்சை பெற்ற பின்னர் அங்கே குருவடிவம் மறைந்து உமையோடு உடனாய இறைவன் காட்சியளித்ததை ஊனக் கண்ணாலும் காண முடிந்தது. இதை முன்னருங் கூறியுள்ளார் (திருவா:3—64—86) இந்த நூல் வரிசையில் முதல் நூல் பக்: 189 காண்க. ஆதலின் இறைவன், இறைவியோடும் அடியார்களோடும் பொன்னகர் புகுந்தான் என்று கூறுகின்றார். எனவே, இங்குக் கூறியது மறைந்து நிற்கும் அருட்சக்தியை அன்று; உமையொரு பாகனாகக் காட்சி அளித்த பெருமானையே குறிப்பிடுகிறார்.

பொதுவாக ஊரிலுள்ள மாடுகள் யாரேனும் ஒருவரைச் சார்ந்தே இருக்கும். (மாடு என்ற சொல் செல்வத்தையும் குறிப்பது) உரிமையாளர் இல்லாத மாடுகள் எங்கும் இரா. மாடுகளைக் குறிக்கும்போது இன்னாருடைய

மாடுகள் என்று இன்றும் சொல்வதைக் கேட்கலாம். இதற்குப் புறனடை கோயில் மாடுகளே ஆகும். உரிமையாளருடைய மாடுகளைப்போலக் கோயில் மாடுகள் எங்கும் கட்டப்படுவது இல்லை. கோயில் மாடுகள் என்ற காரணத்தால் பலரும் உணவு தருவர். என்றாலும், கட்டுத்துறை இல்லாத காரணத்தால் கோயில் மாடுகள் ஊரைச் சுற்றி வரும். அதிலும் குருடாக இருக்கும் மாடு ஒதுங்கும் இடம் தெரியாமல் எங்கும் சுற்றிவரும். இதனையே கருத்துட் கொண்ட அடிகளார் 'கண்கெட்ட ஊரேறாய் இங்கு உழல்வேனோ' என்றார்.

**58.** உலவாக் காலம் தவம் எய்தி
உறுப்பும் வெறுத்து இங்கு உனைக் காண்பான்
பல மாமுனிவர் நனி வாட
பாவியேனைப் பணி கொண்டாய்
மல மாக் குரம்பை இது மாய்க்க
மாட்டேன் மணியே உனைக் காண்பான்
அலவாநிற்கும் அன்பு இலேன்
என் கொண்டு எழுகேன் எம்மானே **54**

உலவாக் காலம்-எல்லையற்ற காலம். அலவா-வருந்தி. குரம்பை-குடிசை.

'இறைவா உனைக் காணவேண்டிக் காலமெல்லாம் தவஞ்செய்து உடம்பை உருக்கிக்கொள்பவர்கள் அப்படியே நிற்கின்றார்கள்.

'இத்தகைய முயற்சியொன்றும் யான் செய்யவில்லை; உன்பால் அன்பும் இல்லை. அப்படியிருந்தும் எனைக் கூவிப் பணிகொண்டாய். உடனடியாக என் உடலை மாய்த்து உன்னோடு வந்திருக்க வேண்டும். அஃதொன்றும் செய்திலேன்' என்கிறார்.

**59.** மான் நேர் நோக்கி உமையாள்
பங்கா வந்து இங்கு ஆட்கொண்ட
தேனே அமுதே கரும்பின்
தெளிவே சிவனே தென் தில்லைக்
கோனே உன்தன் திருக்குறிப்புக்
கூடுவார் நின் கழல் கூட
ஊன்ஆர் புழுக்கூடு இது காத்து இங்கு
இருப்பது ஆனேன் உடையானே 55

இப்பாடலின் முதலடி திருப்பெருந்துறை நிகழ்ச்சியை நினைவு கூர்வதாகும். அந்த நிலையில் குருமட்டும் இருந்தாரே தவிரப் பிறர் காணும்படி வேறு யாரும் அங் கில்லை. அடிகளார் முதலில் குருவைப் பார்த்தாரேனும் சில விநாடிகளில் உமை ஒரு பாகனைக் கண்டுவிட்டார் என்று முன்னரே குறிப்பிட்டுள்ளோம். 'மானேர் நோக்கி உமையாள் பங்கா வந்து இங்கு ஆட்கொண்ட தேனே' என்ற அடி, மேலே கூறிய கருத்தை வலியுறுத்துவதாகும்.

**60.** உடையானே நின்தனை உள்கி
உள்ளம் உருகும் பெரும் காதல்
உடையார் உடையாய் நின் பாதம்
சேரக் கண்டு இங்கு ஊர் நாயின்
கடைஆனேன் நெஞ்சு உருகாதேன்
கல்லா மனத்தேன் கசியாதேன்
முடைஆர் புழுக்கூடு இது காத்து இங்கு
இருப்பதுஆக முடித்தாயே 56

முடை-நாற்றம்.

'உன்னை நினைத்த மாத்திரத்தில் ஊனும் உயிரும் உருகும் அடியார்கள் பலரை உன் அடிமைகளாகக் கொண்டுள்ளாய். புழுக்கள் நிறைந்த இவ்வுடலோடு கூடிய நான், நின்பால் அன்பு செய்யவில்லை; உருகவில்லை. அதனால்தான் போலும் இவ்வுலகிலேயே நான் இருக்கு மாறு செய்துவிட்டாய்' என்கிறார்.

கல்லா மனம் என்பது எத்தனை நன்னெறிகளைக் கேட்டாலும் அதனைக் கற்று அதன்படி நடவா மனம் என்ற பொருளைத் தரும். கல் ஆம் மனம் என்று பாடம் கொண்டால், கருங்கல் போன்று இறுகிய மனம் என்ற பொருளைத் தரும்.

**61.** முடித்த ஆறும் என்தனக்கே
தக்கதே முன் அடியாரைப்
பிடித்த ஆறும் சோராமல்
சோரனேன் இங்கு ஒருத்தி வாய்
துடித்த ஆறும் துகில் இறையே
சோர்ந்த ஆறும் முகம் குறு வேர்
பொடித்த ஆறும் இவை உணர்ந்து
கேடு என்தனக்கே சூழ்ந்தேனே **57**

சோராமல்-கைநழுவவிடாமல். குறுவேர்-சிறுவியர்வை. துகில்-ஆடை. இறை-சிறிது.

தெளிவாகப் பொருள் காண முடியாதபடி மிகச் சிக்கலாக அமைந்துள்ள பாடலாகும் இது. 'இங்கு ஒருத்தி வாய்' என்பது தொடங்கி 'இவை உணர்ந்து' என்பது வரையில் வரும் தொடர்களுக்கு, திருமணம் ஆனவர், மனைவியை விட்டு வந்தபோது இக்குறிப்புகள் அவர் மனைவிபால் தோன்றின என்று உரை கூறியுள்ளனர்.

அடிகளார் மண வாழ்க்கையில் ஈடுபட்டிருந்தவர் என்று, இவைபோன்ற பாடல்களை வைத்துக்கொண்டு பலரும் உரை கூறியுள்ளனர். வரலாற்று அடிப்படையில் திருவாதவூரரைப்பற்றி நாம் ஒன்றும் அறிய முடியவில்லை. இந்த நிலையில் தம்முடைய பழைய வாழ்க்கையை நினைந்து இங்குப் பேசுகிறார் என்று கொள்வதில் தவறில்லை. எந்த வயதிலும் எந்த நிலையிலும் இவ் வெண்ணங்கள் ஒரோவழி மனத்திடைத் தோன்றுவது இயல்பே ஆகும்.

முற்றத் துறந்த் நிலையிலும், இறையருள் பெற்ற நிலையிலும்கூட, மனக்குரங்கு முழுவதுமாக அடங்கி விடுவதில்லை. ஒரோவழித் தலைகாட்டும் அதனை நினைந்து வருந்தி, இறைவனிடமே இக்குறையைப் போக்க வேண்டும் என்று அழுது வேண்டி, நற்பயன் பெற்றவர்கள் பலர்.

ஒரோவழி இப்பழைய நினைவுகளில் செல்லுகின்ற மனம், உடனடியாக அடக்கப்படவில்லையானால் ஒருவனைப் படுகுழியில் தள்ளிவிடும் என்ற கருத்தை உணர்த்தவே 'கேடு என்றனக்கே சூழ்ந்தேனே' என்று பாடியுள்ளார்.

இப்பாடலும் இதுபோன்ற கருத்துடைய சில பாடல்களும் திருவாசகத்தில் இடம்பெற்றுள்ளன. இவை அடிகளாரின் மனத்தில் ஒரோவழித் தோன்றிய எண்ணங்களின் பிரதிபலிப்பாகவும் இருக்கலாம்.

இவ்வாறு கூறுவதால் அடிகளாரின் உயர்வுக்கு இழுக்கு நேர்ந்துவிடும் என்று பலர் கருதினர்போலும்! நம்மிடம் உள்ள குறைகளைச் சுட்டிக்காட்டுவதற்காகவே இக்குறைகள் தம்மாட்டு உள்ளதுபோல் அடிகளார் பாடியுள்ளார் என்று அவர்கள் கருதினர். இவற்றை ஏறட்டுக்கொண்டு பாடினாரே தவிர, இக்குறைகள் அவர்மாட்டு இருந்தன என்று நினைப்பதோ பேசுவதோ பெரும் தவறாகும் என்றே பலரும் கருதுகின்றனர்.

இவர்கள் நினைப்பதுபோல் எவ்விதக் குறைபாடும் இன்றிப் பண்பாட்டின் உறைவிடமாக இப்பெருமக்கள் இருந்திருப்பின் அவர்கள் வாழ்க்கையோ அன்றி அவர்கள் பாடல்களோ நமக்கு முன்மாதிரியாக அமைவது எளிதன்று. காரணம், அவற்றை ஓரளவு புரிந்துகொள்ளலாமே தவிர, பின்பற்றுவது மிகக் கடினம்.

இறைவனைப்போலக் குறைவிலா நிறைவாக இவர்கள் இருந்திருப்பின், இவர்கள் வாழ்க்கையை முன் உதாரணமாகக் கொண்டு நம் வாழ்க்கையைச் சீரமைத்துக் கொள்ள வாய்ப்பே இல்லை.

இதன் எதிராகச் சராசரி மனிதர்களாகக் குறைவு நிறைவுகளோடு இப்பெருமக்கள் வாழ்ந்தார்கள்; இப் பிறப்பிலேயே இறையருளை முழுவதுமாகப் பெற்றுவிட வேண்டும் என்ற குறிக்கோளை முன் வைத்துக் கொண்டார்கள். அதை அடைவதற்காகவே ஓயாமல் இறைவனை வேண்டினார்கள்; குறிப்பிட்ட நேரத்தில் பூசை செய்துவிட்டு மற்ற நேரங்களில் எல்லா வகைத் தவறு களையும் செய்பவர்கள்போல் அல்லாமல் இவர்கள் மாறுபட்டவர்கள்.

தம் குறைகளையும் மனக் கோட்டங்களையும் இறைவனிடம் முறையிடுவதன் மூலம் இப்பிறப்பிலேயே தம் குறைகளைப் போக்கிக்கொண்டு உய்கதி அடைந்தவர்கள்; ஆதலால் இவர்கள் பாடல்கள் நம் மனத்தைத் தொட்டு இழுக்கின்றன. இப்பெருமக்கள் என்றோ ஒருமுறை, ஒரு விநாடிநேரம் மனத்தில் தோன்றிய கோட்டங்களுக்கு வடிவு கொடுத்துப் பாடினர். ஆகவேதான், இப்பெருமக்களுடைய வாழ்வும் வாக்கும் இன்றும் நமக்கு வழிகாட்டியாக அமைகின்றன; என்றும் இப்பணியை இப்பாடல்கள் செய்யும்.

நம்முடைய வாழ்வில் நிறைவு என்பது ஒரு மிகச் சிறிய பகுதி; குறைவு என்பது மிகப் பெரிய பகுதி. அடிகளார் போன்ற பெரியோர்கள் வாழ்க்கையில் நிறைவு என்பது மிகப் பெரிய பகுதி; குறைவு மிக மிகச் சிறிய பகுதி. என்றாலும் என்ன? நம்மிடம் சிறிதாக இருப்பது அவர்களிடம் பெரிதாக இருப்பினும் இருவர்கள் வாழ்க்கை யிலும் இது பொதுத்தன்மை உடையதாகும். ஆதலால்

இவர்களை முன்மாதிரியாகவும் குறிக்கோளாகவும் வைத்துக்கொண்டு நாம் முன்னேற முடியும்.

இவர்களை முன்மாதிரியாக நாம் அமைத்துக் கொள்ளவேண்டும் என்பதற்காகவே, இறைவன் அடிகளார் போன்றவர்களைப் படைத்துள்ளான். பெரும் கல்வி யாளராக வளர்ச்சி பெற்று, மாபெரும் பதவியில் அமர்ந்து, உலகியல் அனுபவங்களை முற்றிலுமாகப் பெற்றிருந்த இவர், திடீரென்று மாறி அனைத்தையும் துறந்து இறை அனுபவத்தில் திளைத்துத் திருவாசகம் பாடும் நிலையை அடைந்தார்.

எனவே, பிறந்தது முதல் கல்வி கற்றுப் பெரும்பதவியில் அமர்கின்றவரை அடிகளார் போன்றவர்களுக்கும் நம் போன்றவர்களுக்கும் ஒரு பொதுத்தன்மை இருப்பதை எளிதில் அறியலாம். இந்தப் பொதுத்தன்மையில் பங்கு கொண்ட நாம் அடுத்தபடியாக அவர்கள் சென்ற வழியில் ஏன் செல்லக்கூடாது? இந்த எண்ணத்துடன் வாழத் தொடங்கினால் அடிகளார் அடைந்த அந்தத் தன்னேரில்லாத் தன்மையை இப்பிறப்பில் அடைய முடியா விட்டாலும் அவ்வழியில் பல படிகள் முன்னேறலாம் அல்லவா? அவர்கள் நம் முன்மாதிரியாக அமைகின்றார் கள் என்று கூறுவதில் தடையென்ன?

இன்று நம்மில் பலர் அடிகளார் போன்றவர்களை நம்மில் வேறுபடுத்தி எங்கேயோ உயர்த்தி வைத்துவிட்டு, அவர்கள் அடைந்த நிலையை நாம் அடைய முடியாது; அப்படி நினைப்பதுகூடப் பாவம் என்று பேசிவருகினறனர்.

இப்படிப் பேசும் இவர்கள், அடிகளார் மூலமாகத் திருவாசகத்தை உலகிற்கு இறைவன் ஏன் தந்தான் என்ற வினாவிற்கு விடை கூற முடியாமல் விழிக்க நேரிடும்.

திருவாசகம் தோன்றியது நம்பிக்கையூட்டி, நம்மை வளர்ப்பதற்காகவே; நம்மை நம்பிக்கை இழக்கச்

*செய்வதற்கு அல்ல. இதைத் தவறாமல் மனத்தில் பதித்துக் கொள்ள வேண்டும்.*

**62.** தேனைப் பாலைக் கன்னலின்
தெளியை ஒளியைத் தெளிந்தார்தம்
ஊனை உருக்கும் உடையானை
உம்பரானை வம்பனேன்
நான் நின் அடியேன் நீ என்னை
ஆண்டாய் என்றால் அடியேற்குத்
தானும் சிரித்தே அருளலாம்
தன்மை ஆம் என் தன்மையே 58

கன்னல்-கரும்பு. தெளிந்தார்-அநுபவஞானிகள். ஊன்-ஊனாகிய உடல்.

*'ஐயனே! புதிதாக வந்துசேர்ந்தவன் ஆகிய நான் உனக்கு அடியனாகிவிட்டேன். நீயே என்னை ஆட்கொண்டாய் என்று நான் கூறினால், அது உனக்குச் சிரிப்பை விளைவிக்கும். அந்தச் சிரிப்பின் காரணமே, நான் கூறுவது பொருந்தாக் கூற்று என்பதாலாகும். என்றாலும், மறுபடியும் என்னை மன்னித்து ஆட்கொள்வாய்' என்றவாறு.*

**63.** தன்மை பிறரால் அறியாத
தலைவா பொல்லா நாய் ஆன
புன்மையேனை ஆண்டு ஐயா
புறமே போக விடுவாயோ
என்னை நோக்குவார் யாரே
என் நான் செய்கேன் எம்பெருமான்
பொன்னே திகழும் திருமேனி
எந்தாய் எங்குப் புகுவேனே 59

பிறரால் அறியாத தலைவா-பலதிறப்பட்ட ஆன்மாக்களின் அறிவால் அறியப் பெறாத தன்மையையுடைய தலைவனே.

மாபெரும் சான்றோரும் அறிவாளியுமான அடிகளார் தம் நூலறிவு கொண்டு இறைவனை அடைய முயன்றிருத்தல் வேண்டும். எத்தனையோ பிறவிகளில் முயன்றும் கிட்டாத அது திருப்பெருந்துறையில் ஒரு விநாடியில் கிட்டிவிட்டது. அந்த அனுபவத்தில் மூழ்கித் திளைத்த பிறகு ஓர் உண்மையை அடிகளார் கண்டார். எத்தனை பிறப்புக்களில் எவ்வளவு முயன்றாலும், அறிவின் துணை கொண்டு அவனை அறியமுடியாது. ஆனால், அவன் அருள் கிட்டினால் ஒரே விநாடியில் அவனை உணர்ந்து அனுபவிக்க முடியும். அனுபவத்தில் இந்த உண்மையைக் கண்ட பிறகு 'தன்மை பிறரால் அறியாத தலைவா' என்று பாடுகிறார். அறியாத என்ற சொல்லைப் பயன்படுத்தியதன் மூலம் அறிவால் அறிய முடியாதவன் என்பது பெறப்பட்டது.

இந்த அனுபவம் மறைந்த நிலையில், மீட்டும் தம் முயற்சியால் அதனைப் பெறவேண்டும் என்று அவர் முயன்றிருக்க வேண்டும். அது இயலாமற்போகவே 'ஆண்டு ஐயா புறமே போக விடுவாயோ?' என்று பேசுகிறார். தம்மால் முடியாதபோது அவனும் தம்மை ஒதுக்கி விடுவானோ என்ற அச்சம் தோன்றவே 'போக விடுவாயோ' என்று அரற்றுகிறார்.

இப்பாடலில் முதன்முதலாகத் தோன்றிய இவ் வெண்ணம் நீத்தல் விண்ணப்பத்தில் விரிந்து செல்வதைக் காணலாம்.

**64.** புகுவேன் எனதே நின் பாதம்
போற்றும் அடியார் உள் நின்று
நகுவேன் பண்டு தோள் நோக்கி
நாணம் இல்லா நாயினேன்
நெகும் அன்பு இல்லை நினைக் காண
நீ ஆண்டு அருள அடியேனும்

தகுவனே என் தன்மையே
எந்தாய் அந்தோ தரியேனே 60

நகுவேன்-சிரிப்பேன். பண்டு-உடல் வனப்பிலும் இளமையிலும் ஆசைவைத்த அன்றைக்கு. புகுவேன்-சேர்வேன்.

*திருப்பெருந்துறையில் அடியார் கூட்டத்தினிடையே இருக்கும் வாய்ப்புக் கிடைத்தது. அக்கூட்டத்தில் இருந்துதான் குருவின் தோள்களைக் காணவும் அதனால் மகிழ்ச்சிப் பூரிப்பு ஏற்படவும் ஒரு சூழ்நிலை உருவாயிற்று.*

*இப்போது தோள்களைக் காணும் வாய்ப்பு இல்லை. அந்த அடியாரிடையே சொல்லலாம் என்றால் அவர்களும் இப்போது இல்லை.*

*அந்த அடியார் கூட்டம் இல்லாவிடினும் ஒருவேளை உள்ளம் உருகும் அன்பு (நெகும் அன்பு) இருந்திருப்பின் அவனைக் காண முடிந்திருக்கும். இரண்டும் இல்வழி இறைவனால் ஆளப்படும் தகுதி தம்பால் உண்டோ என்று ஐயுறுகின்றார்.*

காருணியத்து இரங்கல்

65. தரிக்கிலேன் காய வாழ்க்கை
சங்கரா போற்றி வான
விருத்தனே போற்றி எங்கள்
விடலையே போற்றி ஒப்பு இல்
ஒருத்தனே போற்றி உம்பர்
தம்பிரான் போற்றி தில்லை
நிருத்தனே போற்றி எங்கள்
நின்மலா போற்றி போற்றி 61

வானம்-பரவெளி. ஒப்பில் ஒருத்தன்-ஒப்பில்லாமையால் தான் ஒருவனேயானவன். விடலை-இளையோன்.

இதற்கு முந்திய பாடலில் 'நினைக் காண நெகும் அன்பில்லை' என்று வருந்தினார் அல்லவா? அன்பு என்பது, தானே பிறக்கவேண்டிய ஒன்றாகும். அந்த அன்புதானும் நெகும் அன்பாக, அதாவது மனத்தையும் உள்ளத்தையும் உருக்கும் அன்பாக இருத்தல்வேண்டும். எதுபற்றி இந்த அன்பு தோன்றவேண்டும்? 'நினைக்காண' என்று கூறினார். ஆதலின், அவரைக் காணவேண்டும் என்ற ஒரே கருத்தில் பொறி, புலன்கள், மனம், சித்தம் ஆகிய அனைத்தும் ஈடுபடவேண்டும். அவை ஈடுபட்டன என்பது எப்படித் தெரியும்? மனமும் உள்ளமும் உருகும் நிலை ஏற்பட்டால் அவை ஈடுபட்டன என்பது நன்கு தெரியும். அந்த நிலை வந்தவுடன் இறைவன் வெளிப்பட்டு நிற்பான்.

திருப்பெருந்துறை நிகழ்ச்சிக்குப் பிறகு அவரை மறுபடியும் காணவேண்டும் என்ற ஒரே எண்ணம், முழுவதுமாக அடிகளாரை ஆட்கொண்டிருக்கவேண்டும். அது சித்திக்காத நிலையில் தம் குறையை நினைந்து வருந்துதலும் என்ன செய்தால் அது கிட்டும் என்று ஏங்குதலும் சென்ற ஐம்பது பாடல்களில் பேசப் பெற்றுள்ளன.

அடிகளாரின் ஏக்கம்கண்ட இறைவன், நெகும் அன்பு அவர்பால் வந்துவிட்டமையின், குரு வடிவில் இல்லாமல் தன் சுய வடிவில் காட்சியளித்தான் போலும். அந்தக் காட்சியைக் கண்டு உருகிய அடிகளார் 'போற்றி, போற்றி' என்று அவனை வழுத்தத் தொடங்குகிறார்.

**66.** போற்றியோ நமச்சிவாய
புயங்கனே மயங்குகின்றேன்
போற்றியோ நமச்சிவாய
புகல் இடம் பிறிது ஒன்று இல்லை
போற்றியோ நமச்சிவாய

புறம் எனைப் போக்கல் கண்டாய்
போற்றியோ நமச்சிவாய
சய சய போற்றி போற்றி 62

போக்கல்-போக்காதே. புயங்கனே-பாம்பை அணிந்தவனே.

*சென்ற பாடலைப் போலவே இப்பாடலிலும் அவர் இறைவனைப் போற்றும் செய்தி தொடர்கின்றது.*

*சிவபுராணத்தின் முதலடியில் வரும் 'நமச்சிவாய' என்ற சொல்லுக்குப் பொருள் எழுதும்போது இது இறைசொரூபம் என்று விளக்கப்பெற்றது. ஒளி வடிவான அந்தச் சொரூபத்தை எழுத்துக்களின் அதிர்வு அலைகளாக மாற்றினால், நமச்சிவாய என்ற எழுத்துக்களில் அடங்கும் என்றும் கூறியுள்ளோம். இங்கும் 'போற்றியோ நமச்சிவாய புயங்கனே' என்று கூறப்பெற்றதால் அந்தச் சொரூபத்தை முன்நிறுத்திப் 'புயங்கனே' (பாம்பை அணிந்தவனே) என்று விளிக்கின்றார். போற்றி என்ற வழுத்துதற் சொல்லை முன்னே பெய்துள்ளமையின் இவருடைய அன்பின் ஆழம் வெளிப்படுகிறது.*

*'போற்றியோ' என்பதற்கு பதில் 'போற்றி ஓம்' எனப் பாடங்கொள்வாரும் உண்டு.*

*'மயங்குகின்றேன். புகலிடம் பிறிதொன்றில்லை' என்ற சொற்கள் முழுவதுமாகச் சரணாகதி அடைதலைக் குறிப்பனவாகும். பின்னரும்,*

அன்றே என்றன் ஆவியும்
உடலும் உடைமை எல்லாமும்
குன்றே அனையாய் என்னை
ஆட் கொண்டபோதே கொண்டிலையோ

(திருவாச: 502)

*என்று கூறியுள்ளமையின் இங்குக் கூறப்பெற்றது முழுச் சரணாகதி என்று கூறுவதில் தவறில்லை.*

67. போற்றி என் போலும் பொய்யர்
தம்மை ஆட்கொள்ளும் வள்ளல்
போற்றி நின் பாதம் போற்றி
நாதனே போற்றி போற்றி
போற்றி நின் கருணை வெள்ளப்
புது மதுப் புவனம் நீர் தீக்
காற்று இயமானன் வானம்
இரு சுடர்க் கடவுளானே 63

வள்ளல்-கைம்மாறு கருதாது உபகரிப்பவன். கருணை வெள்ளப் புதுமது-இதுவரையில் நுகர்ந்தறியாத கருணை வெள்ளமாகிய அமுதம்.

இப்பாடலில் இறைவனை வள்ளல் என்றும், அட்ட மூர்த்த வடிவாய் உள்ளான் என்றும் பேசுகிறார்.

திருஅண்டப் பகுதியின் 20 முதல் 26ஆம் அடிவரை உள்ள பகுதிக்கு விளக்கம் எழுதும்போது அட்ட மூர்த்தங்கள் இறைவடிவம் என்ற பழைய கருத்தை அடிகளார் ஏற்றுக்கொள்ளவில்லை என்றும், பஞ்சபூதங்கள், சூரியன், சந்திரன் என்பவற்றில் ஒவ்வொன்றுக்குமுள்ள தனித்தன்மையை எடுத்தோதி, அந்தத் தனித் தன்மையை அவற்றுக்குத் தந்தவனே சிவபெருமான்தான் என்று அடிகளார் கூறியுள்ளமையையும் விளக்கிக் காட்டியுள்ளோம்.

அங்கு 'அமைத்தோன், வைத்தோன், செய்தோன்' முதலிய சொற்கள் அமைத்தல் முதலிய தொழில்களைச் செய்விக்கும் ஏவுதற் கர்த்தாவாக இறைவன் உள்ளான் என்பதை விளக்கின. இறைவன் இச்சா மாத்திரத்தில் எதனையும் செய்விப்பவன் ஆதலின் ஏவுதற் கர்த்தாவாக ஆயினன். அமைத்தோன் என்பதால் அமைப்பை ஏற்றுக் கொள்ளும் பொருள், அமைத்தலாகிய செயல், அதனைச் செய்யும் கர்த்தா என மூன்றாக விரிந்து நிற்றலின் அவனே அட்ட மூர்த்த வடிவம் என்று சொல்வது பொருந்தாமை புலப்படுகிறது.

ஆனால், மேலோட்டமாகப் பார்க்கும்போது இப்பாடலின் பின் இரண்டு அடிகள் இக்கருத்துக்கு முரண் பட்டதுபோல் தோன்றுகின்றன. சற்று நின்று நிதானித்தால் முரணின்மை வெளிப்படும்.

'புவனம், நீர், தீ, காற்று, இயமானன், வானம், இருசுடர்க் கடவுளானே' என்ற தொடரில், கடவுளானே என்ற சொல் நுண்மையான பொருளோடு அமைக்கப் பெற்ற சொல்லாகும். 'புவனம், நீர், தீ, காற்று, இயமானன், வானம், இருசுடர் ஆகியவற்றைப் படைத்து, அவற்றின் உள்ளே ஊடுருவியும், புறத்தே அவற்றைக் கடந்தும் உள்ளவனே' என்பது பொருளாகும்.

கட+உளானே என்பதால், படைக்கப்பட்ட இவற்றின் உள்ளேயும், இவற்றைக் கடந்தும் உள்ளான் என்பது பொருளாகும். இப்பொருளை அறிந்துகொண்டால் முரணின்மை நன்கு வெளிப்படும்.

தகுதி பாராமல் அள்ளித் தருபவர்களை வள்ளல் என்று அழைப்பது உலக வழக்கு. தம் தகுதி பாராது திருவடிகளாகிய வீட்டையே தந்தார் ஆதலின் அவரையே வள்ளல் என்கிறார்.

**68.** கடவுளே போற்றி என்னைக்
கண்டுகொண்டு அருளு போற்றி
விட உளே உருக்கி என்னை
ஆண்டிட வேண்டும் போற்றி
உடல் இது களைந்திட்டு ஒல்லை
உம்பர் தந்து அருளு போற்றி
சடையுளே கங்கை வைத்த
சங்கரா போற்றி போற்றி **64**

கண்டுகொண்டருளு-எப்பொழுதும் திருவருணோக்கம் செய். விட-இருவகைப்பற்றுக்களும் அகல. உள்-மனம். உம்பர்-வீட்டுலகம். ஒல்லை-விரைவாக.

கிடைத்த இன்ப அனுபவம் தம்மைவிட்டு நீங்கிப் போனதற்கு இந்தப் பூதவுடலே காரணம் என்ற எண்ணம் வலுவாக அடிகளாரைப் பற்றியிருந்தது போலும்.

இப்பாடலின் முதலடியில் வரும் 'கண்டுகொண்டு அருளு போற்றி' என்ற தொடர் உலகியலில் அன்றும் இன்றும் வழங்கிவரும் ஒரு தொடராகும். கண்டு கொள்வாயாக என்ற தொடர், 'என் குறை தீர்ப்பாயாக' என்ற பொருளைத் தருவதாகும்.

'விடஉள்ளே உருக்கி' என்ற சொற்கள் இரண்டு தனிப்பட்ட பொருளைத் தருவன. உள்ளே உருகுமாறு செய்தல்வேண்டும் என்பது ஒரு பொருள். அவ்வாறு உருக்கம் நிகழ்ந்தால் உலகியற் பந்தம் விடுபடும். அதாவது உலக பந்தம் விடும்படியாக என் உள்ளத்தை உருக்கி ஆண்டுகொள்வாயாக என்பது மறுபொருள் ஆகும்.

**69.** சங்கரா போற்றி மற்று ஓர்
சரண் இலேன் போற்றி கோலப்
பொங்கு அரா அல்குல் செவ்வாய்
வெள் நகைக் கரிய வாள் கண்
மங்கை ஓர் பங்க போற்றி
மால் விடை ஊர்தி போற்றி
இங்கு இவ் வாழ்வு ஆற்றகில்லேன்
எம்பிரான் இழித்திட்டேனே 65

சரண்-பாதுகாப்பு. கோலம்-அழகு. பொங்கு அரா-சினத்தாற் சீறியெழும் பாம்பு.

இப்பாடலிலும் தமக்கு வேறு சரணில்லை என்றும் இவ்வுலகவாழ்வை வெறுத்துவிட்டதாகவும் (இழித்திட்டேன்) கூறுகிறார்.

**70.** இழித்தனன் என்னை யானே
எம்பிரான் போற்றி போற்றி

பழித்திலேன் உன்னை என்னை
ஆளுடைப் பாதம் போற்றி
பிழைத்தவை பொறுக்கை எல்லாம்
பெரியவர் கடமை போற்றி
ஒழித்திடு இவ்வாழ்வு போற்றி
உம்பர் நாட்டு எம்பிரானே 66

உம்பர்நாடு-வீட்டுலகம்.

*தம்முடைய இப்போதைய நிலையைக் கண்டு, தாமே தம்மை வெறுத்துக்கொள்வதாகக் கூறுகிறார் அடிகளார். இறையனுபவம் தம்மைவிட்டு நீங்கியமைக்குத் தாமே காரணம் என்ற குற்ற உணர்வு மேலிட, இப்பொழுது இறைவனை நோக்கிச் சாலப் பெரியவனாகிய அவன் சிறியவர்கள் செய்த பிழையைப் பொறுக்க வேண்டும் என்று வேண்டுகிறார். அவ்வாறு பொறுப்பது பெரியவன் ஆகிய அவனுக்குக் கடமை என்றும் நினைவூட்டுகிறார்.*

*இந்தக் குற்ற உணர்வு அவரிடம் ஆழப் படிந்திருந்தது என்பதைத் திருவாசகத்தின் பல இடங்களிலும் காணலாம். 'பொறுப்பர் அன்றே பெரியோர் சிறு நாய்கள்தம் பொய்யினையே' (திருவாச: 110) என்றும் 'வெறுப்பனவே செய்யும் என் சிறுமையை நின் பெருமையினாற் பொறுப்பவனே' (திருவாச: 409) என்றும் கூறியுள்ளமை இக்கருத்தை வலுப்படுத்தும்.*

**71.** எம்பிரான் போற்றி வானத்தவர்
அவர் ஏறு போற்றி
கொம்பர் ஆர் மருங்குல் மங்கை
கூறவெள் நீற போற்றி
செம் பிரான் போற்றி தில்லைத்
திருச்சிற்றம்பலவ போற்றி
உம்பராய் போற்றி என்னை
ஆளுடை ஒருவ போற்றி 67

கொம்பர் ஆர்-பூங்கொம்பை ஒத்த. மருங்குல்-இடை. கூற-இடப்பாகத்தில் உடையவனே. நீற-நீற்றினை உடையவனே.

*காருணியத்து இரங்கல் என்று தலைப்புத் தரப்பெற்றுள்ள இப்பகுதியின் இரண்டு பாடல்களில் (திருவாச: 69, 71) அன்னையை இடப்பாகத்து உடையவன் என்ற குறிப்பு வருகிறது. 69ஆம் பாடலில் 'இவ்வாழ்வு ஆற்றகில்லேன்' என்றும் 70ஆம் பாடலில் 'ஒழித்திடு இவ்வாழ்வு' என்றும் வேண்டுதலில் ஒரு குறிப்பு உள்ளது போலும்.*

*ஒருவன் தாயினிடம் சென்று 'இந்த வாழ்வை ஒழிக்க உதவி புரிவாயாக' என்று கூறினால் தாய் ஒரு நாளும் அதற்கு உடன்பட மாட்டாள். இவ்வாறு வாழ்வை வெறுத்து நொந்துபோனதற்குரிய காரணத்தை அறிந்து அக்காரணத்தைப் போக்க முயல்வதே தாயின் சிறப்பாகும்.*

*இந்த அடிப்படையிலேயே இந்த இரண்டு பாடல் களிலும் (திருவாச: 69, 71) அன்னையை நினைவுகூர்ந்து அடிகளார் பேசுகிறாரோ என்று நினைக்கத் தோன்றுகிறது.*

**72.** ஒருவனே போற்றி ஒப்பு இல்
அப்பனே போற்றி வானோர்
குருவனே போற்றி எங்கள்
கோமளக் கொழுந்து போற்றி
வருக என்று என்னை நின்பால்
வாங்கிட வேண்டும் போற்றி
தருக நின் பாதம் போற்றி
தமியனேன் தனிமை தீர்த்தே 68

வானோர் குருவன் - தேவர்களின் ஆசாரியன்.

*திருப்பெருந்துறை அனுபவத்திற்கு முன்னர், நூற்றுக் கணக்கானவர் இருபத்து நான்கு மணி நேரமும் அடிகளாரைச் சூழ்ந்து இருந்திருப்பர். அந்தக் களேபரத்தி*

லிருந்து விடுபட்ட பின்னர், அடியார் கூட்டமும் இறை யனுபவமும் கிடைத்தன. இப்பொழுது அடியார் கூட்டம் இல்லை. இவர் வாழ்வுமுறை மாறிவிட்டதை அறிந்த அதிகார வர்க்கமும் இவரைவிட்டு நீங்கிவிட்டது; புறத்தே தனிமை சூழ்ந்துவிட்டது. அனுபவம் மீட்டு வாராமையால் அகத்தேயும் தனிமை சூழ்ந்துவிட்டது. அந்த நிலையில் 'தமியனேன் தனிமை' தீர்த்து (மீட்டும்) தருக நின் பாதம் என்று வேண்டுகிறார்.

இறைவனின் பாதம்மட்டும் கிடைத்தால் அகத் தனிமை, புறத் தனிமை என்ற இரண்டும் நீங்கிவிடும் என்ற மிக நுண்மையான கருத்து, இப்பாடலிற் பொதிந்துள்ளமை நோக்கற்குரியது. அதாவது, இறைவன் திருவடியால் அகத் தனிமை போய்விடுகிறது. திருவடி சம்பந்தம் கிடைத்தவுடன் உலகிலுள்ள பொருள்கள் அனைத்தும் இறை சொரூப மாகவே காட்சி அளித்தலின் புறத் தனிமையும் இல்லை என்க.

73. தீர்ந்த அன்பாய அன்பர்க்கு
அவரினும் அன்ப போற்றி
பேர்ந்தும் என் பொய்ம்மை ஆட்கொண்டு
அருளிடும் பெருமை போற்றி
வார்ந்த நஞ்சு அயின்று வானோர்க்கு
அமுதம் ஈ வள்ளல் போற்றி
ஆர்ந்த நின் பாதம் நாயேற்கு
அருளிட வேண்டும் போற்றி 69

தீர்ந்த அன்பு-முறுகிவளர்ந்த தலையன்பு. வார்ந்த-ஒழுகிய.

இப்பாடலின் இரண்டாவது அடியில் வரும் 'பேர்ந்தும் என் பொய்ம்மை ஆட்கொண்டு அருளிட வேண்டும்' என்ற தொடர் ஆழ்ந்து சிந்திக்க வேண்டிய ஒரு பகுதியாகும். மெய்யான வாழ்க்கையை விட்டுப் பல காலம் பொய்யான உலக வாழ்க்கையில் ஈடுபட்டதையே

'பொய்ம்மை' என்ற சொல் குறிப்பதாகப் பலரும் உரை கூறியுள்ளனர்.

இவ்விடத்தில் பெருஞ்சொல் விளக்கனார் அ.மு. சரவண முதலியார் அவர்கள் கூறிய கருத்தைச் சுருக்கமாக அடியில் தந்துள்ளேன். எது சரியானது என்பதைப் படிப்போர் முடிவு செய்துகொள்ளலாம்.

திருவாசகத்திலுள்ள அறுநூற்று ஐம்பத்தெட்டுப் பாடல்களில், பொய்யன் என்றும், பொய்க்கு விதை என்றும் ஏறத்தாழ இருபத்தெட்டு இடங்களில் தம்மை அடிகளார் பாடியுள்ளார். இவ்வாறு குறிப்பிட வேண்டு மானால் அடிகளாரின் வாழ்க்கையில் அவருக்கு அதிர்ச்சி தரக்கூடிய நிகழ்ச்சியொன்று நிகழ்ந்திருக்க வேண்டும். அது என்ன என்பதை அறுதியிட்டுக் கூறுவதற்குரிய விளக்கமான சான்றுகள் இன்றேனும், நம்பியின் திருவிளையாடற் புராணத்தில் வரும் ஒரு பாடல் உலகியலுக்குப் பொருத்தமாக அமைகின்றது. தம்மையும் தமது பூர்வ வாழ்க்கையையும் மறந்து இறைபணியில் ஈடுபட்டிருந்த அடிகளாரைப் பாண்டிய மன்னனின் காவலர் வந்து, மன்னன் அவரை அழைப்பதாகக் கூறினர். அப்பொழுது தம்மை மறந்த நிலையிலிருந்த அடிகளார் இவ்வுலகியலுக்கு இறங்கி வந்தபோது அதிர்ச்சிக்கு உள்ளாகிறார். இப்பொழுது அவர் கூறியதாக நம்பியின் திருவிளையாடலில் பின்வரும் பாடல் இடம் பெற்றுள்ளது.

**தென்னவன் அமைச்சனே யான்**
**என்ன காரியம் செய்தேன் இவுளி கொள்வதற்கே வந்தேன்**
**பொன்னினை அளித்தேன் அந்தோ புகல ஓர்**
**மாற்றம் உண்டோ?**

என்ற முறையில் பேசிய அடிகளார், இறைவனை வேண்டிக்கொண்டு அரச ஆணையை விண்ணப்பித்திருக்க வேண்டும். அப்பொழுது அவர் மனத்திடை ஒரு குறிப்புத்

தோன்ற அதன்படியே அரசனிடம் வந்து 'ஆவணி மூலத்தில் குதிரைகள் வரும்' என்று கூறிவிட்டார். ஆனால், ஆவணி மூலத்தில் குதிரைகள் வரவில்லை. பின்னர் நிகழ்ந்த நிகழ்ச்சிகள் பலரும் அறிந்தவையே ஆகும்.

தம்முடைய மனத்தில் தோன்றிய குறிப்பு இறைவன் திருவுளப்படி வந்தது என்று அடிக்ளார் தவறாகக் கருதிவிட்டார். எனவே, ஆவணி மூலத்தில் குதிரை வரும் என்று கூறினார். தம்முடைய மனக்குறிப்பை இறைவன் மேல் ஏற்றிக்கூறியது சரியன்று என்பதைப் பின்னர் உணர்கின்றார். அதனாலேயே தம்மைப் பொய்யன் பொய்யன் என்று பல இடங்களிலும் குறிப்பிடுகின்றார். இதுவே சரவண முதலியார் அவர்களின் கருத்து.

இக்கருத்தை ஏற்றுக்கொள்வதாயின் 'போர்ந்தும் என் பொய்ம்மை ஆட்கொண்டு அருளிடும் பெருமை போற்றி' என்று பாடியதற்கு நேரான பொருள் கிடைத்து விடும்.

இக்கருத்து வலுவுடையது என்பதற்கு அடிகளாரின் 'விச்சுக்கேடு பொய்க்கு ஆகாதென்று இங்கு எனை வைத்தாய்'(திருவாச: 85) என்ற தொடர் பெரிதும் அரண் செய்வதாக உள்ளது.

**74.** போற்றி இப்புவனம் நீர் தீக்
காலொடு வானம் ஆனாய்
போற்றி எவ்வுயிர்க்கும் தோற்றம்
ஆகி நீ தோற்றம் இல்லாய்
போற்றி எல்லா உயிர்க்கும்
ஈறு ஆய் ஈறு இன்மை ஆனாய்
போற்றி ஐம் புலன்கள் நின்னைப்
புணர்கிலாப் புணர்க்கையானே **70**

புலன்கள் புணர்கிலாப் புணர்க்கையான்-மாயையின் காரியமாகிய விஷயங்கள் சென்று பற்றாத சேர்க்கையுடையவன்.

ஐம்பெரும் பூதங்களாக ஆனவன்; உயிர்கள் தோன்ற, தான் காரணமாக இருந்தும் தனக்கென ஒரு தோற்றம் இல்லாதவன்; எல்லா உயிர்கட்கும் ஈறாய் இருந்தும் தனக்கோர் ஈறில்லாதவன். ஐம்புலன்கள் தாமே விரும்பிச் சென்று அவனைப் புணர முடியாது என்க. ஆனால் கருணை காரணமாகப் பொறி, புலன்கள்மாட்டு இரக்கம் காட்டினால் — அதாவது அவற்றோடு புணர்ந்து நின்றால் அவை பதிகாரணங்களாக மாறும் வாய்ப்பு உண்டு.

•

## ஆனந்தத்து அழுந்தல்

75. புணர்ப்பது ஒக்க எந்தை என்னை
ஆண்டு பூண நோக்கினாய்
புணர்ப்பது அன்று இது என்ற போது
நின்னொடு என்னொடு என்இது ஆம்
புணர்ப்பது ஆக அன்று இது ஆக
அன்பு நின் கழல்கணே
புணர்ப்பது ஆக அம் கணாள
புங்கம் ஆன போகமே 71

புணர்ப்பது-சேர்த்துக்கொள்வது. புங்கம்-உயர்வு.

'ஐயனே! என்னை ஆண்டுகொண்டு என்னை உன்னிடம் முழுவதுமாகப் புணர்த்தினாய். அன்றியும் உன் அருள் பூரணமாகக் கிடைக்கும்படி உன் திருக்கண்களால் நோக்கினாய்.

'உன் அருள் என்னையும் நின்னையும் புணர்த்த வில்லை, நான் இங்கேயும் நீ அங்கேயும் ஆக ஆகிவிட்டோம். நின் அருள் உன்னை அடைவதற்குரிய உபாயம் என்றிருந்தேன். ஆனால் அந்த அருள்வழிச் சென்று புணர்ப்பு ஏற்படவில்லை. ஆதலால், அந்த அருளாகிய உபாயம் உனக்கும் எனக்கும் என்ன பயனைச் செய்தது?'

இவ்வாறு கூறியதால் அருளைக் குறை கூறுவதாக நினைத்துவிடக் கூடாது. அருள் ஈடிணையற்றதாக இருப்பினும் அதனைப் பெறுபவர் ஏற்றுக்கொள்ளும் பக்குவம் இல்லாதவராக இருந்துவிடின் அருளும் செய்யவேண்டியதைச் செய்யாமல் விட்டுவிடும். எனவே, இங்கு அடிகளார் இந்த அருளாகிய உபாயம் என்னிடையும் நின்னிடையும் என்ன பயனைத் தந்தது என்ற முறையில் சிந்திக்கின்றார். அந்த அருள் பயன்பட வேண்டுமேயானால் அருளைப் பெறுபவரிடம் உள்ளன்பு நிறைந்திருக்கவேண்டும் என்பதை உணர்ந்துவிட்டார். ஆதலின் மூன்றாம், , நான்காம் அடிகளில் அந்த அன்பு இறைவனுடைய திருவடியிடத்து வேண்டும் என்று பேசுகிறார்.

அன்பு, இறைவன் திருவடிக்கண் செலுத்தப்பட வேண்டுமேயானால் அதற்கும் அவன் அருள வேண்டும். ஆதலால் 'அன்பு நின் கழற்கணே புணர்ப்பதாக' என்று வேண்டுகிறார்.

**76.** **போகம் வேண்டி வேண்டிலேன்**
**புரந்தர ஆதி இன்பமும்**
**ஏக நின் கழல் இணை அலாது**
**இலேன் என் எம்பிரான்**
**ஆகம் விண்டு கம்பம் வந்து**
**குஞ்சி அஞ்சலிக்கணே**
**ஆக என் கை கண்கள் தாரை**
**ஆறு அது ஆக ஐயனே** **72**

**புரந்தரன்-இந்திரன். ஆகம்-உடல். குஞ்சி-முடி. தாரை ஆறதாக-கண்ணீரே இடைவிடாத நீர்ப்பெருக்குடைய ஆறாக. கம்பம்-நடுக்கம்.**

'ஐயனே! இந்திரர் முதலியோரின் பதங்கள் கிடைப்பினும் அந்த நுகர்ச்சியை நான் வேண்டவில்லை.

ஏகனே ! நின் கழலிணை அல்லாமல் வேறு பற்றுக்கோடு எதுவும் எனக்கில்லை.'

'இந்திர லோகத்தை விழைந்திலேன் என்றாலும் நான் விழைவது ஒன்றுண்டு. உள்ளம் உருகி உடம்பு நைந்து, கைகள் இரண்டும் தலைமேற் குவிய, கண்கள் ஆறாகப் பெருகவேண்டும். இதுவே என் வேண்டுகோள்' என்றவாறு.

77. ஐய நின்னது அல்லது இல்லை
மற்று ஓர் பற்று வஞ்சனேன்
பொய் கலந்தது அல்லது இல்லை
பொய்ம்மையேன் என் எம்பிரான்
மை கலந்த கண்ணி பங்க
வந்து நின் கழல்கணே
மெய் கலந்த அன்பர் அன்பு
எனக்கும் ஆக வேண்டுமே 73

'ஐயனே! நின் திருவடிக்கண் அன்றி மற்றோர் பற்று இல்லை என்பதை அறிந்திருந்தும் வஞ்சகனும், பொய்யனு மாகிய யான் நின்மாட்டு உண்மை அன்பு செலுத்த வில்லை. மெய் கலந்த அன்பருடைய அன்பு, எப்படி உன்னிடம் கொண்டுசேர்க்கும் உபாயமாக உள்ளதோ, அந்த அன்பை எனக்குத் தந்தருள வேண்டும்' என்கிறார்.

78. வேண்டும் நின் கழல்கண் அன்பு
பொய்ம்மை தீர்த்து மெய்ம்மையே
ஆண்டுகொண்டு நாயினேனை
ஆவ என்று அருளு நீ
பூண்டுகொண்டு அடியனேனும்
போற்றி போற்றி என்றும் என்றும்
மாண்டு மாண்டு வந்து வந்து,
மன்ன நின் வணங்கவே 74

'ஐயா! நின் கழற்கண் பொய்க்கலப்பு இல்லாத மெய்யன்பு பூண்டிருத்தல் வேண்டும்.

அத்தகைய மெய்யன்பு எனக்கு இப்பிறவியில் கிட்டாதாயினும் மாண்டு மாண்டு, பிறந்து பிறந்து நின்னை வணங்கவும் அவ்வாறு வணங்கும்போதெல்லாம் என் விருப்பம் நிறைவேறவும் வேண்டும்' என்று இறைஞ்சுகிறார்.

'மாண்டு மாண்டு வந்து வந்து மன்ன! நின் வணங்கவே நாயினேனை ஆண்டுகொண்டு ஆவ என்று அருளு நீ' என்று கொண்டுகூட்டுச் செய்தால் 'ஆவ' என்ற சொல்லின் சிறப்புப் பொருள் விளங்கும். பல பிறவிகள் எடுத்து மாண்டு மாண்டு வளர்ச்சி அடைந்து நின் கழற்கண் மெய்யன்பு செய்ய வேண்டும் என்று நான் வேண்டிக்கொள்ளும்பொழுது 'அது அங்ஙனமே ஆகட்டும்' (ஆவ என்று அருள) என்று என்பால் இரங்கி, இச்சொற்களைச் சொல்லி என் அச்சத்தைப் போக்கு வாயாக. இக்கருத்தையே 'ஆவ' என்ற சொல்லின் மூலம் பெறவைக்கிறார் என்றலுமாம்.

வடமொழியில் திருக்கோயிலில் வழிபாடு நடைபெற்ற பின்னர், தங்களுக்கு என்ன என்ன வேண்டும் என்று இறைவன்முன் விண்ணப்பம் செய்வது மரபு. இவ் விண்ணப்பத்தை ஒருவரோ அன்றி ஒரு சிலரோ சேர்ந்து சொல்லியதன் பின்னர், தனியொருவர் தம் குரலை உயர்த்தி 'ததாஸ்த் து' என்று கூறுவதை இன்றும் திருக்கோயில்களில் காணலாம். இதே கருத்தில்தான் அடிகளாரும் தம் விண்ணப்பத்தை இரண்டு அடிகளில் கூறிவிட்டு 'ஆவ என்று அருளு நீ' என்று பாடிச் செல்கிறார்.

**79.** வணங்கும் நின்னை மண்ணும் விண்ணும்
வேதம் நான்கும் ஓலம் இட்டு
உணங்கும் நின்னை எய்தல் உற்று
மற்று ஓர் உண்மை இன்மையின்
வணங்கி யாம் விடேங்கள் என்ன
வந்து நின்று அருளுதற்கு
இணங்கு கொங்கை மங்கை பங்க
என்கொலோ நினைப்பதே 75

உணங்கும்-நாவற்றும். விடேங்கள்-விடமாட்டோம். ஓலம்-அபயம்.

*'மண், விண் ஆகியவற்றில் வாழ்வோருடன் வேதங்களும் சேர்ந்து உன்னைத் துதித்து நிற்கின்றன. மெய்யடியார்கள் உன் திருவடிகளைப் பற்றிக்கொண்டு விடமாட்டோம் என்று உறுதியாக நிற்கின்றனர். இந்தக் காட்சிகளைக் கண்டும் எங்களுக்கு வந்து அருள் செய்யாமல் என்ன ஆராய்ந்து கொண்டிருக்கிறாய்' என்றவாறு.*

*இப்பாடலில் இறைவியை உடன் சேர்த்துக் கூறியதன் நோக்கம் நாங்கள் வணங்கும்போது கருணை வடிவான இறைவி உடனிருத்தலின், எங்கள்மாட்டுக் கருணை காட்டியே தீரவேண்டும் என்ற க்ருத்தை உட்கொண்டதாகும்.*

**80.** நினைப்பது ஆக சிந்தை செல்லும்
எல்லை ஏய வாக்கினால்
தினைத்தனையும் ஆவது இல்லை
சொல்லல் ஆவ கேட்பவே
அனைத்து உலகும் ஆய நின்னை
ஐம்புலன்கள் காண்கிலா
எனைத்து எனைத்து அது எப்புறத்தது
எந்தை பாதம் எய்தவே 76

'ஐயனே! சொல் செல்ல முடியாத அளவிற்கு மனம் செல்லுமேனும் அச்சொல்லாலோ அன்றி மனத்தாலோ நின்னைக் காண்பதும் எய்துவதும் அரிதாகும். உன்னைப் பற்றிச் சொல்லப்பெறுகின்ற சொற்கள்கூடப் பிறர் கூறு வதைக் கேட்டுக் சொல்லப்பட்டனவே தவிர, நேரடியாக அறிந்து சொல்லப்பட்டவை அல்ல. ஐம்பொறிகள் என்று எடுத்துக்கொண்டால், அவையும் அவற்றோடு ஒட்டிய புலன்களும் நின்னை என்றும் நெருங்கமாட்டா. ஐயனே நின் பாதம் எத்தன்மைத்து, எங்குளது, யான் அதனை அடையுமாறு எங்ஙனே? உன்னிடத்திலன்றி எனக்கு உய்தி இல்லை. வஞ்சமும் பாவமும் மிகுந்த என் துன்பத்தை அறிந்து, நீயாக மனம் இரங்கி என்னைப் பாதுகாப்பாயாக. அப்படிச் செய்யாவிடின் நான் உன்னோடு ஒன்ற வாய்ப்பே இருக்காது. ஆனால், திருவடியைக் காண வேண்டும் என்ற எண்ணம் ஓயாது மனத்திடை இருக்குமே யாயின் என்றாவது ஒரு நாள் அவ்வெண்ணம் கைகூடும்' என்கிறார்.

**81.** எய்தல் ஆவது என்று நின்னை
எம்பிரான் இவ் வஞ்சனேற்கு
உய்தல் ஆவது உன்கண் அன்றி
மற்று ஓர் உண்மை இன்மையின்
பைதல் ஆவது என்று பாது
காத்து இரங்கு பாவியேற்கு
ஈது அலாது நின் கண் ஒன்றும்
வண்ணம் இல்லை ஈசனே 77

உய்தல்-பிறவித் துன்பம் நீங்கித் திருவடிக்கண் இன்புறுதல். பைதல்-துன்பம். ஒன்றும் வண்ணம்-பொருந்தும் படியாக.

'ஐயனே! நான் உன்னை அடைவது எப்போது? ஏனென்றால் நான் உய்ய வேண்டுமானால் இது தவிர வேறு வழியே இல்லை. பாவியேனாகிய எனக்குத் துன்பம் மிகுந்துள்ளது என்பதை அறிந்து என்னைப் பாது

காப்பாயாக. பாவியாகிய நான் உய்ய வேண்டுமானால் இது தவிர வேறு வழியே இல்லை' என்கிறார்.

82. ஈசனே நீ அல்லது இல்லை
இங்கும் அங்கும் என்பதும்
பேசினேன் ஓர் பேதம் இன்மை
பேதையேன் என் எம்பிரான்
நீசனேனை ஆண்டுகொண்ட
நின்மலா ஓர் நின் அலால்
தேசனே ஓர் தேவர் உண்மை
சிந்தியாது சிந்தையே 78

பேதம்-வேறுபாடு. நீசன்-இழிந்தவன்.

'பெருமானே! வீட்டுலகிலும் அதனை அல்லாத பிற உலகங்களிலும் உன்னையன்றி வேறு எதுவுமில்லை. பேதையேனாகிய யான்கூட, எல்லாப் பொருள்களிலும் நீயே உள்ளாய் ஆதலால், அவற்றிடைப் பேதமில்லை என்று பேசியுள்ளேன். இச்சொற்களின் ஆழம் தெரியாமல் கிளிப் பிள்ளைபோல் இச்சொற்களைப் பேசும் இத்தகைய என்னையும் வலிதில் வந்து ஆண்டுகொண்ட நின்னை அல்லால் வேறு யாரையும் என் மனம் சிந்தியாது' என்றபடி.

83. சிந்தை செய்கை கேள்வி வாக்குச்
சீர் இல் ஐம் புலன்களால்
முந்தை ஆன காலம் நின்னை
எய்திடாத மூர்க்கனேன்
வெந்து ஐயா விழுந்திலேன் என்
உள்ளம் வெள்கி விண்டிலேன்
எந்தை ஆய நின்னை இன்னம்
எய்தல் உற்று இருப்பனே 79

'இறைவா! இப்பிறவி எடுத்தபொழுதே மனம், கன்மேந்திரியங்கள், கேள்வி, வாக்கு, ஐந்து பொறிகள் ஆகிய

இவற்றையெல்லாம் தந்தாய். இவற்றை வைத்துக்கொண்டு நன்முறையில் செயற்படுத்தி உன்னை அடைய முயன்று இருக்க வேண்டும். ஆனால், இம்முயற்சியில் ஈடுபடாமல், நீயாக வந்து என்னை ஆட்கொள்கின்றவரையில் நின்னை அடைதற்கு எவ்வித முயற்சியும் செய்யாத மூர்க்கனாகிய நான் தீயில் விழுந்திருக்க வேண்டும். நாணத்தால் உள்ளம் வெடித்திருக்க வேண்டும். அவற்றையும் செய்யவில்லை.

'திருப்பெருந்துறையில் நீ ஆட்கொண்ட பிறகுதான் அதுவரையில் நின்னை அடைய முயலாமல் என் வாழ்நாளில் பெரும்பகுதியை வீணே கழித்துவிட்டேன் என்று நினைத்துப் பார்க்க முடிகிறது.

'இப்பொழுது உன்னைவிட்டுப் பிரிந்து நின்றாலும், எந்தை! இன்றில்லாவிடினும் நாளை நின்னை எய்தலுற்று இருப்பேன் என்ற உறுதிப்பாடுடையேன்' என்கிறார்.

'எந்தை நின்னை எய்திடாத காலம்' என்று சொல்வது எய்திய நிலையில் நின்று இதுவரை வீணாகக் கழிந்த காலத்தைப் பின்னோக்கிப் பார்த்துச் சொல்லியதாம்.

திருப்பெருந்துறை நிகழ்ச்சி நடைபெறுகின்றவரையில் கழிந்த காலம், சராசரி மனிதர்கள் சாதாரணப் பணி களைச் செய்து பொழுதைப் போக்குகின்ற காலமாகும். அந்த நிலையில் அதனை வீணான காலம் என்று யாரும் சொல்வதில்லை. புதிய அனுபவம் கிடைத்த பொழுதுதான் இதனோடு ஒப்பிட்டுப் பார்த்து இந்த அனுபவத்தைப் பெறுவதற்கு முந்தைய காலத்தை வீணான காலம் என்ற முடிவிற்கு வருவதுண்டு. இக்கருத்தைப் பின்னரும்,

ஏழைத் தொழும்பனேன் எத்தனையோ காலமெல்லாம்
பாழுக்கு இறைத்தேன் பரம்பரனைப் பணியாதே
(திருவாச: 327)

என்று பாடுவதைக் காணலாம். எனவே, முந்தையான காலமென்பது திருப்பெருந்துறை நிகழ்ச்சிக்கு முந்தையான காலமென்றே பொருள்கொள்ள வேண்டும்.

முதலடியில் மனம், கர்மேந்திரியங்கள் என்பவற்றோடு கேள்வி, வாக்கு என்று கூறிவிட்டு மறுபடியும் ஐம்புலன்கள் என்று கூறுவதில் ஒரு சிறு குழப்பம் நேரலாம். இங்கே கூறப்பட்ட கேள்வி(செவி), வாக்கு(வாய்) என்பவை ஐம்பொறிகளில் காணப்படும் செவி, வாய் என்பவற்றி லிருந்து வேறுபட்டனவோ என்று நினைக்கத் தோன்றும். உண்மையில் 'கேள்வி' என்று கூறியது எல்லாவற்றையும் கேட்கும் செவியின் தொழிலில், இறைவன் புகழைமட்டும் கேட்கும் பணியைப் பிரித்துக் கூறியதாம். அதேபோல வாக்கும் பயனற்ற பேச்சுக்களைப் பேசுவதை விட்டு இறைவன் புகழைப் பேசுவதைமட்டும் குறிப்பதற்காக விதந்தோதினார் என்க.

அடிகளாருக்கு முன்னர் வாழ்ந்த நாவரசர் பெருமானும் 'செவிகாள் கேண்மின்களோ'(திருமுறை: 4-9-3) என்றும், 'வாயே வாழ்த்துகண்டாய்'(திருமுறை: 4-9-5) என்றும் கூறியமை இங்கு நோக்கத்தக்கது,

ஐம்பொறிகளிலும் மனத்தின் கட்டுப்பாட்டை மீறித் தொழிற்படும் இயல்பு செவிக்கும் வாய்க்கும் மட்டுமே உண்டு.

84. இருப்பு நெஞ்ச வஞ்சனேனை
ஆண்டுகொண்ட நின்ன தாள்
கருப்பு மட்டு வாய் மடுத்து
எனைக் கலந்து போகவும்
நெருப்பும் உண்டு யானும் உண்டிருந்தது
உண்டு அது ஆயினும்
விருப்பும் உண்டு நின்கண் என்கண்
என்பது என்ன விச்சையே 80

கருப்பு மட்டு-கருப்பஞ்சாறு.

'ஐயனே! நின் திருவடிப் பேறு எனக்குக் கிடைத்தது, அந்த நேரத்தில் கருப்பஞ் சாறுபோல இனிமையுடையதாய் இருந்தது. என் நெஞ்சம் பண்புடையதாக இருந்திருப்பின் அப்பொழுதே அதில் கரைந்திருக்க வேண்டும். அத் திருவடிகள் என்னை விட்டு நீங்கவும் அதனால் ஒரு சிறிதும் கலக்கமுறாமல் யான் இருக்கின்றேன் என்றால், வஞ்சகனாகிய என் நெஞ்சம் இரும்பால் ஆகியது' என்பது தெளிவு.

'நீ பிரிந்த பிறகும் இப்பரந்த உலகிடை நெருப்பும் இருந்துகொண்டுதான் இருக்கின்றது, நானும் இருந்து கொண்டுதான் இருக்கிறேன்; அதில் வீழ்ந்து மடியவில்லை. இப்படிப்பட்ட யான் உன்னை அடைய வேண்டுமென்ற விருப்பமுடையேன் என்று கூறிக்கொள்வது விந்தையாக இல்லையா?' என்கிறார்.

'என்ன விச்சையே' என்ற சொற்களை 'என் அவிச்சையே' என்று பிரித்து, என்னுடைய அஞ்ஞானம் (அவிச்சை) காரணமாகவே தீயில் விழுந்து இறவாமல் இருக்கின்றேன் என்றும் பொருள் கொள்ளலாம்.

ஆனந்த பரவசம்

85. விச்சுக் கேடு பொய்க்கு ஆகாது
என்று இங்கு எனை வைத்தாய்
இச்சைக்கு ஆனார் எல்லாரும்
வந்து உன் தாள்சேர்ந்தார்
அச்சத்தாலே ஆழ்ந்திடுகின்றேன்
ஆரூர் எம்
பிச்சைத் தேவா என் நான்
செய்கேன் பேசாயே 81

விச்சுக்கேடு-விதையினழிவு. இச்சைக் கானார்- கருணைக் கிலக்கானார்.

இப்பாடலுக்கு உரை காணுமுன் முன்னருள்ள 73வது பாடலுக்கு எழுதப்பட்ட குறிப்பைத் தயைகூர்ந்து நினைவில் கொள்ளவும். இல்லாவிட்டால் 'பொய்க்கு விச்சுக்கேடு ஆகாது என்று கருதி எனை இங்கு வைத்தாய்' என்ற அடிக்குப் பொருள் காண்பது கடினம். பொய் என்பதற்குப் பிறர் கூறும் முறையில் பிறவி முதலிய எந்தப் பொருளைக் கொண்டாலும், 'யானே பொய் என் நெஞ்சும் பொய்'(திருவாச: 94) 'பொய் கலந்தது அல்லது இல்லை பொய்ம்மையேன்'(திருவாச:77) என அடிகளார் கூறும் இடங்களில் அப்பொருள் பொருந்தாது என்பதை அறிதல் வேண்டும்.

மேலே கூறியவை எல்லாம் ஒருபுறம் நிற்க, இப்பாடலின் முதலடியில் அடிகளார் கூறியதை ஆழ்ந்து சிந்தித்தால் ஏதோ ஒரு பொய் அவர் வாழ்வில், உள்ளத்தின் அடித்தளத்தில், போக்க முடியாத பெருந் துயரத்தை உண்டாக்கியுள்ளது என்பதை அறிய முடிகிறது. அதன் தாக்கம் அடிக்கடி அவர் மனத்தை உறுத்திற்று என்பதையும் அறிய முடிகிறது.

குருவானவர், மணிவாசகரைவிட்டு நீங்குவதற்கு முன்னர், 'கோலம் ஆர்தரு பொதுவினில் வருக'(திருவாச: 2-128) என்று கூறிவிட்டுத்தானே சென்றார். அன்றியும் 'அருளொடு பரா அமுது ஆக்கினன்'(திருவாச: 3-181) என்று அடிகளாரே கூறியுள்ளாரே. அப்படியிருக்கக் குருவின் திருவடி தம்மை விட்டுநீங்கியதற்குத் தாமே காரணம் என்று அடிகளார் நினைக்கக் காரணமென்ன? அங்கேதான் மனத்தின் அடித்தளத்திலுள்ள பொய்யின் தாக்கம் வெளிப்படுகிறது.

பொய்யர் நெஞ்சில் நில்லான் ஈசன் என்பது முதுமொழி. ஒருவர் நெஞ்சில் ஈசன் நிற்கவில்லையானால் அவர் பொய்யுடையார் என்று தருக்க ரீதியாகச் சொல்ல முடியும். தாமே வந்து தண்ணளி செய்த குருவானவர்

*தாமே நீங்கிவிட்டார் என்றால், 'தாம்' பொய்யராக இருப்பதே காரணம் என்ற வருத்தம் அவர் மனத்தில் ஆழ்ந்து நிற்கின்றது. இந்த முன்னுரையோடு பாடலின் முதலிரண்டு அடிகட்குப் பொருள் காண வேண்டும்.*

*'ஐயனே! (உன்) இச்சைக்கு ஆனார் எல்லாரும் வந்து உன் தாள் சேர்ந்தார். ஒரு வேளை உன் இச்சைக்கு ஆனவர்களில் எனக்கு இடமில்லை என்று கருதுவதானால் அதுவும் சரியாகப் படவில்லை'.*

*இச்சைக்கு ஆனவர்களில் இவருக்கு இடம் இல்லையென்றால் திருப்பெருந்துறை நிகழ்ச்சி எதற்காக? அந்த நிகழ்ச்சி ஒன்றே இச்சைக்கு ஆனவர்களில் அடிகளாரும் ஒருவர் என்பதை நிரூபிக்கும். அப்படியென்றால் தாள் சேர்ந்தாரோடு இவரையும் அழைத்துச் செல்லாமல் ஏன் விட்டுவிட்டுப் போனார்? இந்த வினாவை எழுப்பிக் கொண்ட அடிகளார், தம் ஆழ் மனத்தில் புதைந்துகிடந்த எண்ணத்தை விடையாகத் தருகின்றார்.*

*பொய் என்ற ஒன்று உலகத்தில் இல்லாமல் போய்விடுமே என்று கருதிய இறைவன் அந்தப் பொய் புதிதாக முளைப்பதற்கு விதையாகத் தம்மை இங்கு விட்டுச் சென்றார்' என்று கூறுகிறார்.*

**86.** **பேசப்பட்டேன் நின் அடியாரில்**
**திருநீறே**
**பூசப்பட்டேன் பூதலரால் உன்**
**அடியான் என்று**
**ஏசப்பட்டேன் இனிப்படுகின்றது**
**அமையாதால்**
**ஆசைப்பட்டேன் ஆட்பட்டேன்**
**உன் அடியேனே** **82**

பூதலர்-பூமியிலுள்ள மக்கள். பேசப்பட்டேன்-புகழ்ந்து பேசப் பட்டேன்.

இப்பாடலில் அடிகளாரின் சுயசரிதத்தில் ஒரு பகுதி பேசப்பட்டுள்ளது. திருப்பெருந்துறை நிகழ்ச்சிக்குப் பிறகு பொதுமக்கள் தத்தம் வளர்ச்சிக்கேற்ப அடிகளாரைப் பற்றிப் பேசினார்கள்.

ஒரு சிலர் சொக்கநாதனின் உண்மையான அடியவர் என்று பேசினார்கள். ஒரு சிலர் அடிகளார் நிட்டையில் இருக்கும்போது அவர்மேல் திருநீற்றைப் பூசிச்சென்றனர் போலும். இன்னும் சில மந்தமதிகள் அமைச்சர் பதவியைத் துறந்து ஆண்டி வேடம் மேற்கொண்டதை ஏசினார்கள் என்றவாறு.

87. அடியேன் அல்லேன்கொல்லோ தான் எனை
ஆட்கொண்டிலைகொல்லோ
அடியார் ஆனார் எல்லாரும் வந்து உன்
தாள் சேர்ந்தார்
செடி சேர் உடலம் இது நீக்க மாட்டேன்
எங்கள் சிவலோகா
கடியேன் உன்னைக் கண் ஆரக் காணும்
ஆறு காணேனே 83

செடி-முடைநாற்றம் ; தும்பமுமாம். கடியேன்-கொடியவன்.

'பெருமானே! நான் உனக்கு அடியன் அல்லனோ? நீ என்னை ஆட்கொண்டிலையோ? அப்படியிருந்தும் நின்னைப் பிரிந்து வாழும் நான், குற்றங்கள் நிறைந்த இவ்வுடம்பைப் போக்கிக் கொள்ளாமல் இருக்கின்றேன்' என்கிறார்.

88. காணும் ஆறு காணேன் உன்னை
அந்நாள் கண்டேனும்
பாணே பேசி என்தன்னைப் படுத்தது
என்ன பரஞ்சோதி
ஆணே பெண்ணே ஆர் அமுதே அத்தா
செத்தே போயினேன்

ஏண் நாண் இல்லா நாயினேன் என் கொண்டு
எழுகேன் எம்மானே 84

பாண்-இச்சகம். ஏண்-ஆற்றல். நாண்-நாணம். என்தன்னைப் படுத்தது-என்னை ஆட்கொண்டது.

'திருப்பெருந்துறையில் உன்னை உள்ளவாறு கண்டேன். ஆனால் இப்பொழுது உன்னைக் காணும் வழியை அறிந்திலேன். அங்கு நின்னைக் கண்டபொழுது 'கோலம் ஆர்தரு பொதுவினில் வருக' (திருவாச: 2-128) என நீ இனிமையாகப் பேசவில்லையா? நெஞ்சு உரமும் வலிமையும் இல்லாத நாய்போன்ற நான் எதனைக் கொண்டு முன்னேற முடியும்?'

89. மான்நேர் நோக்கி உமையாள் பங்கா
மறை ஈறுஅறியா மறையோனே
தேனே அமுதே சிந்தைக்கு அரியாய்
சிறியேன் பிழை பொறுக்கும்
கோனே சிறிது என் கொடுமை பறைந்தேன்
சிவ மா நகர் குறுகப்
போனார் அடியார் யானும் பொய்யும்
புறமே போந்தோமே 85

மறையீறு-உபநிடதம். பறைந்தேன்-சொன்னேன்.

இந்தப் பாடலிலும் பொய்பற்றி அடிகளார் பேசுவதை ஆழ்ந்து சிந்தித்தல் வேண்டும். 'சிவ மாநகர் குறுக' அடியார்கள் அனைவரும் சென்றுவிட்டனர். இதனை நினைக்கும்போதே, இறைவன் குருவடிவில் வந்து தம்மை ஆட்கொண்டதை நினைக்கின்ற அடிகளார், 'சிறியேன் பிழை பொறுக்கும் கோனே' என்கிறார். ஆட்கொள்வதற்கு முன்னர் அவர் வாழ்க்கையில் நிகழ்ந்த பிழைகளை யெல்லாம் மன்னித்து அவரை ஆட்கொண்டார். அப்படிப் பட்டவர் அடியாரோடு இவரையும் ஏன் அழைத்துச் செல்லவில்லை? பிழைகள் பொறுக்கப்பட்டுவிட்டமையின்

அழைத்துச் செல்லப்பட அனைத்துத் தகுதியும் வந்துவிட்டதே! அப்படியிருந்தும் ஏன் விடப்பட்டார்? விடப்பட்ட அந்த நேரத்தில் அந்தத் துயரம் தாங்காமல் சில கடுமையான வார்த்தைகளைப் பேசியுள்ளார்போலும். அதனையே 'சிறிதே கொடுமை பறைந்தேன்' என்கிறார்.

மனவருத்தம் காரணமாகக் கொடுமை பறைந்த பின்னர், விடுபட்டதற்குரிய காரணத்தை அமைதியாகச் சிந்திக்கிறார். அப்பொழுதுதான் அடிமனத்தில் இருந்த நினைவு மேலே வருகின்றது. அவர் விடப்பட்டதற்குக் காரணத்தை இதோ பேசுகிறார். சிவ மாநகர் குறுக அடியார் எல்லாம் போனார்கள். ஆனால் நான்மட்டுமா புறம்போந்தேன்? இல்லை, என் மனத்தை அழுத்தி நிற்கின்ற பொய்யும் அல்லவா என்னுடன் வந்தது என்ற பொருள்பட 'யானும் பொய்யும் புறமே போந்தோமே' என்கிறார்.

**90.** புறமே போந்தோம் பொய்யும்
யானும் மெய் அன்பு
பெறவே வல்லேன் அல்லா
வண்ணம் பெற்றேன் யான்
அறவே நின்னைச் சேர்ந்த அடியார்
மற்று ஒன்று அறியாதார்
சிறவே செய்து வழி வந்து சிவனே
நின் தாள் சேர்ந்தாரே 86

சிறவு-சிறப்பு. மற்றொன்று-பொய்.

இப்பாடலும் 'புறமே போந்தோம் பொய்யும் யானும்' எனத் தொடங்குகிறது. திருச்சதகம் அந்தாதியாக அமைந்திருத்தலின் இதற்கு முன்பாடல் 'புறமே போந்தோமே' என்று முடிவதால் இப்பாடல் 'புறமே போந்தோம்' என்று தொடங்குகிறது என்று பொருள் கொண்டால் மிக இன்றியமையாத ஒரு கருத்தை இழந்து

விட்டவர் ஆவோம். அந்தாதிமட்டும் அடிகளார் கருத்தாக இருப்பின் புறமே போந்தோம் என்பதற்கு அடுத்தபடியாக 'பொய்யும் யானும்' என்று கூறியிருக்கமாட்டார். முதற் பாடலின் இறுதி அடியின் பெரும் பகுதியை இப்பாடலின் தொடக்கத்தில் பயன்படுத்துகிறார் என்றால், அதில் ஒரு கருத்து இருக்கவேண்டும். அவருடைய வாழ்க்கையில் குருவருள் பெற்ற பின்னர் ஒரே ஒரு முறை அவரோடு உறவுகொண்டாடிய பொய் எந்த அளவிற்கு அவரின் மனத்தை உறுத்துகிறது என்பதை அறிய இந்த அடி உதவுகிறது.

முதற்பாட்டின் இறுதி அடியில் 'யானும் பொய்யும்' என்று கூறியவர், இங்குப் 'பொய்யும் யானும்' என்று கூறுவது அந்தப் பொய் தனக்குச் செய்த பெருங்கேட்டை அவர் மறக்கவில்லை என்பதை அறிவிக்கவே. இவ்வாறு கருதுவதற்குக் காரணம், 'புறமே போந்தோம்' என்பதற்கு மோனையாக பொய்யை இங்கு முன்னுரிமைப் படுத்த வில்லை என்பதை உணர்த்தவே. சிவ மாநகருள் நுழைய விடாமல் செய்தது இந்தப் பொய்யே என்ற நினைவு மனம் முழுதும் நிறைந்திருந்தது. 'புறமே போந்தோம்' என்று கூறியவுடன் யானும் பொய்யும் என்று கூறாமல் 'பொய்யும் யானும்' என்று கூறியது இக்கருத்தை வலியுறுத்தும்.

**91.** தாராய் உடையாய் அடியேற்கு
உன் தாள் இணை அன்பு
போரா உலகம் புக்கார் அடியார்
புறமே போந்தேன் யான்
ஊர் ஆ மிலைக்கக் குருட்டு ஆ மிலைத்தாங்கு
உன் தாள் இணை அன்புக்கு
ஆரா அடியேன் அயலே
மயல் கொண்டு அழுகேனே **87**

மிலைக்க - கனைக்க. ஆரா - பொருந்தாத.

இப் பாடலில் வரும் 'ஊர் ஆ மிலைக்கக் குருட்டு ஆ மிலைத்தாங்கு' என்பதற்கும் பலர் பலவாறாகப் பொருள்கூறுவர். காளை மாட்டின் புணர்ச்சியை விரும்புகின்ற பசுமாடு, அந்த நேரங்களில் ஒரு குறிப்பிட்ட ஓசையை உண்டாக்குதலை, தென்பிராந்தியங்களில் 'மிலைத்தல்' என்ற சொல்லால் குறிப்பிடுவர். அதாவது காளை மாட்டை எதிரே கண்டவுடன், புணர்ச்சியை வேண்டி நிற்கும் பசு, தன் குறிப்பை அந்தக் காளைக்கு உணர்த்த மிலைத்தலைச் செய்யும். பசுமாடு மிலைத்தாலே எதிரே, எங்கோ ஒரு காளை இருக்கிறது என்பதைக் கிராமத்தில் உள்ளவர்கள் அறிந்து கொள்வர்.

காளை மாட்டைக் கண்டபோதுதான் ஊர்ப் பசு மிலைக்கின்றது. ஆனால், பாவம் குருட்டுப் பசு, எதிரே காளை இருக்கிறது என்பதை எப்படிக் கண்டுபிடிக்க முடியும். காளையைக் கண்ட பசுமாடு எங்கோ ஓர் இடத்தில் மிலைக்க, அந்தக் குரலைக் கேட்ட இந்தக் குருட்டுப் பசு, எதிரே காளை இல்லாதபோதும் மிலைக் கின்றது. இந்த அருங்கருத்தைத்தான் அடிகளார் இங்கு உவமையாகப் பயன்படுத்துகிறார்.

இறையருளை முழுமையாகப் பெற்ற அடியார்கள் அவனைக் குருவடிவிலோ வேறு வடிவிலோ கண்டவுடன் அருகில் கண்டதால் தோன்றும் எல்லை மீறிய மகிழ்ச்சி பொங்க அவன் புகழைப் பாடுகின்றனர். காளை இருக்கும் இடந்தெரியாத குருட்டுப் பசு மிலைத்தல்போலத் தாமும் அவன் புகழ் பாடுவதாக அடிகளார் பாடுகிறார்.

குருவானவர் இருக்குமிடம் தெரியாமல் மறைந்த பின்னர்ப் பாடப்பட்டது ஆதலின் 'குருட்டு ஆ மிலைத் தாங்கு' என்று சொல்லிய உவமை முற்றிலும் பொருத்த மாகின்றது.

*இறுதி அடியில் வரும் 'அயலே மயல்கொண்டு அழுகேனே' என வரும் தொடர், மேலே கூறிய கருத்தை வலியுறுத்துவதாகும்.*

**92.** அழுகேன் நின்பால் அன்புஆம்
மனம்ஆய் அழல் சேர்ந்த
மெழுகே அன்னார் மின்ஆர்
பொன்ஆர் கழல் கண்டு
தொழுதே உன்னைத் தொடர்ந்தா
ரோடும் தொடராதே
பழுதே பிறந்தேன் என் கொண்டு
உன்னைப் பணிகேனே **88**

பழுதே பிறந்தேன்-பயனின்றிப் பிறந்தேன்.

*அழல் சேர்ந்த மெழுகுபோன்று உருகுகின்ற அடியார்களைக் கண்டு, அவர்களோடு சேர்ந்து சிவ மாநகர் புகாமல் வீணே உழல்கின்றேன் என்றபடி.*

**93.** பணிவார் பிணி தீர்த்தருளி
பழைய அடியார்க்கு உன்
அணிஆர் பாதம் கொடுத்தி
அதுவும் அரிது என்றால்
திணிஆர் மூங்கில் அனையேன்
வினையைப் பொடி ஆக்கி
தணிஆர் பாதம் வந்து ஒல்லை தாராய்
பொய் தீர் மெய்யானே **89**

திணியார் மூங்கில் - கல் மூங்கில் (வலிய மூங்கில்) கல்மூங்கில் முட்களால் யாரும் அணுக ஒட்டாமல் தடுப்பதுபோல கடமை என்கிறார். கணி - குளிர்ந்த.

*பழைய அடியார் பணிவார் என்றதால், அந்த அடியார்களுடைய இயல்பு, தன்முனைப்போடு நிமிர்ந்து நில்லாமல், எப்போதும் பணிந்தே இருக்கும் என்பதைக்*

கூறினார். அப்படிப்பட்டவர்களுக்குக் காட்டப்படும் திருவடி 'திணியார் மூங்கிலைப்போல' நிமிர்ந்து நிற்கும் தமக்குக் கொடுப்பது இயலாதென்றால் அதற்கும் ஒரு வழி கூறுகின்றார் அடிகளார்.

மூங்கிலில் இருவகை உண்டு. ஒருவகை மூங்கில் உள்ளீடு இல்லாமல் புறப்பகுதி மட்டும் இருக்கும். அதனை எளிதாக வளைத்து விருப்பம்போல் பயன்படுத்தலாம். மற்றொருவகை மூங்கிலின் உள்ளே, திண்மை பெற்ற பொருள் நிறைந்திருக்கும். உதாரணமாகக் காவலர்கள் வைத்திருக்கும் தடிக்கம்பையும், குண்டாந்தடி என்று சொல்லப் பெறும் ஆறடி உயரமும் கனமுமுள்ள 'பத்தராசன்கழி'யையும் இங்குச் சிந்திக்கலாம். பத்தராசன் கழி என்பது வட்டார வழக்கு. இந்த மூங்கிலை என்ன செய்தாலும் ஒரு திணையளவுகூட வளைக்க முடியாது. சூடேற்றினால் வளைக்கலாம் என்று தவறாகக் கொள்ள வேண்டா. நெருப்பிலிட்டால் இம்மூங்கில் வெந்து பொடியாகுமே தவிர வளையுமாறில்லை.

இந்த அற்புதத்தைத் 'திணியார் மூங்கில் அனையேன்' என்றார். அடியார்களுக்குக் காட்டப்படும் திருவடி திணியார் மூங்கிலைப்போல நிமிர்ந்து நிற்கும் தமக்குக் கொடுப்பது இயலாதென்றால் அதற்கும் ஒரு வழி கூறுகிறார் அடிகளார். அது வளைந்தால்தானே திருவடி கிட்டும் என்பதை நினைந்து வளைக்க முடியாத ஒன்றை 'பொடியாக்கி' என்றார்.

**94.** யானே பொய் என் நெஞ்சும்
பொய் என் அன்பும் பொய்
ஆனால் வினையேன் அழுதால்
உன்னைப் பெறலாமே
தேனே அமுதே கரும்பின்
தெளிவே தித்திக்கும்

மானே அருளாய் அடியேன்
உனை வந்து உறுமாறே 90

உண்மையை உணர முயலாமல் பாண்டியனிடம் சென்று, ஆவணி மூலத்தில் குதிரை வரும் என்று கூறி விட்டார் அடிகளார். திருப்பெருந்துறையில் தம் மனத் திடைத் தோன்றிய இந்த எண்ணம் இறைவனுடைய கூற்று என்று தவறாக நினைந்து கூறிவிட்டாரே தவிரப் பொய் யுரைக்க வேண்டும் என்று கருத்திலன்று. ஆனால், அன்று குதிரை வாராமையின் அவர் உரைத்தது பொய் என்று அரசன் முதலியோர் கருதினர். அதற்குரிய தண்டனையும் வழங்கப்பட்டது. எனவே, ஏனை யோரைப்போல அடிகளாரும் தாம் உரைத்தது பொய் என்ற முடிவிற்கு வந்துவிட்டார். அந்த எண்ணம் வலுப்பெற வலுப்பெற இருபத்தெட்டு இடங்களில் தம்மைப் பொய்யனென்று அவர் கூறிக்கொள்ளும் நிலைமை ஏற்பட்டது. அந்த எண்ணத்தின் முதிர்ச்சியில் விளைந்தது இப்பாடல்.

பொய் என்று தெரிந்தும் அதைக் கூறுபவர்கள்கூடத் தம் பிழையை நினைந்து இறைவனிடம் மன்னிப்பு வேண்டின், அவன் மன்னிப்பான் என்ற கருத்தில் 'ஆனால் வினையேன் அழுதால் உன்னைப் பெறலாமே' என்று பாடுகிறார்.

இதே கருத்தை 'என் பிழைக்கே குழைந்து வேசறுவேனை விடுதி கண்டாய்' (திருவா:154) என்றும் பாடியுள்ளதைக் காணலாம்.

பெருந்தவறு செய்தவர்கள் பிராயச்சித்தம் என்ற பெயரில் சில சடங்குகளைச் செய்தால் தம் பாவங்களிலிருந்து விடுபடலாம் என்று கூறும் வடநாட்டுத் தரும சாத்திரங்களைத் தமிழ்நாட்டவர் பலரும் ஏற்றுக்கொண்டதேயில்லை.

தாம் செய்த பிழைக்கு உண்மையாக மனம் வருந்தாமல், அதனால் வரும் பாவம் தனக்கோ தன் குடும்பத்திற்கோ தீங்கு தரும் என்ற அச்சத்தால், அந்தப் பாவத்தைப் போக்கிக்கொள்ளச், செய்யப்படுவதே பிராயச்சித்தமாகும். மனுநீதி கண்ட புராணத்தில் அரசகுமாரன் பசுக்கன்றைக் கொன்ற பாவத்தைப் போக்கப் பிராயச்சித்தம் செய்தால் போதுமானது என்று அமைச்சர்கள் கூறுகிறார்கள். ஆகவே, இந்தத் தரும சாத்திரக் கருத்தும் தமிழகத்தில் வழங்கிவந்தது என்பதையும் அறிய முடிகிறது.

பிழைக்கு உண்மையாக வருந்தினால் மன்னித்து அருள்பாலிக்கக் கூடியவன் இறைவன் ஒருவனே என்ற கருத்தை வலியுறுத்திப் பேசியவர் மணிவாசகரே ஆவார்.

## ஆனந்தாதீதம்

95. மாறு இலாத மாக் கருணை வெள்ளமே
வந்து முந்தி நின் மலர்கொள் தாள் இணை
வேறு இலாப் பதப் பரிசு பெற்ற நின்
மெய்ம்மை அன்பர் உன் மெய்ம்மை மேவினார்
ஈறு இலாத நீ எளியை ஆகி வந்து
ஒளி செய் மானுடம் ஆக நோக்கியும்
கீறு இலாத நெஞ்சு உடைய நாயினேன்
கடையன் ஆயினேன் பட்ட கீழ்மையே 91

கீறிலாத-பதியாத.

பாடலின் முதலிரண்டு அடிகளில் உண்மை அடியவர் பெருமை கூறப்பெற்றுள்ளது. இதைக் கூறுவதன் காரணம் இதன் எதிராக எவ்விதச் சிறப்பும் இல்லாத தமக்கு எளியனாக மானிட வடிவம் தாங்கி அருள் செய்த குருவின் பெருமையைக் கூறுவதேயாகும்.

மானிட உடம்பிற்கு இயற்கை ஒளி இல்லை. குருவாக வந்தவரின் மேனி ஒளியுடன் இருந்தது. அதனைக் கூறுவதாக இருப்பின் ஒளி உமிழ் மானிடம் அல்லது ஒளி திகழ் மானிடம் என்று கூறியிருக்க வேண்டும். அவ்வாறின்றி 'ஒளி செய் மானிடம்' என்று அடிகளார் கூறியிருத்தலின் குருவின் பரு உடல், தான் மட்டுமன்றிச் சுற்று வட்டாரத்தையும் ஒளி திகழச் செய்தது என்பது பெறப்படுகிறது. இவ்வாறு பொருள்கொள்வதற்கு 'ஈறிலா நீ எளியை ஆகி, ஒளிசெய் மானிடம் ஆக வந்து' (என்னை) நோக்கியும் என்று கொண்டுகூட்டுச் செய்க.

**96.** மை இலங்கு நல் கண்ணி பங்கனே
வந்து எனைப் பணிகொண்ட பின் மழக்
கை இலங்கு பொன் கிண்ணம் என்று அலால்
அரியை என்று உனைக் கருதுகின்றிலேன்
மெய் இலங்கு வெள் நீற்று மேனியாய்
மெய்ம்மை அன்பர் உன் மெய்ம்மை மேவினார்
பொய்யில் இங்கு எனைப் புகுதவிட்டு நீ
போவதோ சொலாய் பொருத்தம் ஆவதே **92**

மழக்கை-குழந்தையின் கை. அரியை-அருமையை யுடையை.

இப்பாடலில் மிக அற்புதமான உலகியல் உவமை ஒன்றைக் கூறுகிறார். 'மழக்கை' என்றதால் மிக இளங் குழந்தை என்றபதாயிற்று. அத்தகைய குழந்தையின் கையில் பொற்கிண்ணத்தைத் தந்தால் அதன் பெருமையை ஒரு சிறிதும் அறியாது கீழே போட்டு விளையாடும். அது போலக் குருவடிவாக வந்த இறைவனின் பெருமையைத் தாம் அறிந்துகொள்ளாமல் எளிதாகக் கருதிவிட்டதாகக் கூறுகின்றார்.

இறுதி அடியில், தாம் பொய்யோடு பொருந்தியவராக இருப்பினும் தம்மை இவ்வுலகிடை விட்டுவிட்டுக் குருவானவர் மறைந்தது பொருத்தமாகுமோ என்று

*கேட்கின்றார். இங்குப் 'பொய் இலங்கு' என்ற பாடத்தைவிடப் 'பொய்யில் இங்கு' என்ற பாடமே சிறப்புடையதாக அமைகிறது.*

**97.** பொருத்தம் இன்மையேன் பொய்ம்மை உண்மையேன்
போத என்று எனைப் புரிந்து நோக்கவும்
வருத்தம் இன்மையேன் வஞ்சம் உண்மையேன்
மாண்டிலேன் மலர்க் கமல பாதனே
அரத்த மேனியாய் அருள் செய் அன்பரும்
நீயும் அங்கு எழுந்தருளி இங்கு எனை
இருத்தினாய் முறையோ என் எம்பிரான்
வம்பனேன் வினைக்கு இறுதி இல்லையே 93

பொருத்தம்-தகுதி. போத-வருக. அரத்தம்-சிவப்பு. வம்பனேன்-வீணன். பொய்ம்மை யுண்மையேன்-பொய்மை நிரம்ப உடையவன்.

*இப்பாடலிலும் உடனிருந்த அடியவர்களுடன் குரு மறைந்ததை நினைக்கின்றார். குரு புன்முறுவலோடு 'சென்று வருக' என்று பொருள்படும்படி 'புரிந்து நோக்கவும்' அதை மறுத்து உன்னுடன் வருவேன் என்று சொல்லாமலும் சிறிதும் வருத்தப்படாமல் இருந்து விட்டதையும் நினைக் கிறார். உண்மையில் பொய்ம்மையே உண்மைப் பொருளாகக் கொண்டிருந்ததாகவும், வஞ்சகத்தையே மனத்திடைக் கொண்டிருந்ததாகவும், அதனால்தான் அடியவர்களுடன் செல்ல முடியவில்லை என்றும் வருந்துகிறார்.*

*இறுதி அடியில் தாம் அப்படி இருந்தாலும் தம்மை விட்டுச் செல்வது முறையோ என்று குருவை நினைந்து அரற்றுகின்றார்.*

**98.** இல்லை நின் கழற்கு அன்பு அது என்கணே
ஏலம் ஏலும் நல் குழலி பங்கனே

கல்லை மென் கனி ஆக்கும் விச்சை கொண்டு
என்னை நின் கழற்கு அன்பன் ஆக்கினாய்
எல்லை இல்லை நின் கருணை எம்பிரான்
ஏது கொண்டு நான் ஏது செய்யினும்
வல்லையே எனக்கு இன்னும் உன் கழல்
காட்டி மீட்கவும் மறுஇல் வானனே 94

கல்லை மென்கனியாக்கும் விச்சை-சுவையற்ற வலிய தொன்றைச் சுவையுள்ள மெலியதாக்கும் வித்தை. மறுவில் வானன்-குற்றமில்லாத ஞானாகாய வடிவினன்.

*திருவாசகத்தில் பின்னரும் பல இடங்களில் கூறப்பெறும் ஒரு கருத்து இங்கு முதன்முதலில் இடம் பெறுகிறது. தம்முடைய மனம் கல் என்றும், அதனைக் குருவானவர் தம் பேராற்றலால் மென்மையான கனி போன்று மாற்றித் தம் திருவடிக்கண் ஈடுபடுமாறு செய்தார் என்றும் கூறுவதால் குருவின் பெருமையைக் கூறுனாராயிற்று.*

*தம் மனத்தைக் கனியாக மாற்றியமைக்குக் காரணம் குருவினுடைய எல்லையற்ற கருணையே என்று கூறிய அடிகளார், இப்பொழுது தாம் எதனைச் செய்தாலும் அதனைப் பொறுத்துக்கொண்டு மறுபடியும் திருவடியைத் தரவேண்டும் என்று இறைஞ்சுகிறார்.*

99. வான நாடரும் அறி ஒணாத நீ
மறையில் ஈறும் முன் தொடர் ஒணாத நீ
ஏனை நாடரும் தெரி ஒணாத நீ
என்னை இன்னிதாய் ஆண்டுகொண்டவா
ஊனை நாடகம் ஆடுவித்தவா
உருகி நான் உனைப் பருக வைத்தவா
ஞான நாடகம் ஆடுவித்தவா
நைய வையகத்துடைய விச்சையே 95

ஏனைநாடர்-வான்நாடு நீங்கிய ஏனைய நாட்டிலுள்ளவர்கள். இன்னிதாய்-இனிமையாய். ஊனை நாடகம் ஆடுவித்தவா-உடலைத் தந்து உலக அரங்கில் வினைக்கீடாக நடிக்கச்செய்த விதம். வையகத்துடைய இச்சை-உலக வித்தைகள். நையவே-அழிந்து இல்லையாம்படியே. மறையில் ஈறு-ஈறு இல் மறை முடிவில்லாத வேதம்.

*எந்த உலகத்தில் உள்ளவர்களும் அறிய முடியாதவனாகிய அவன், அடிகளாரின் ஊனினை உருக்கி உள்ளொளி பெருகுமாறு செய்தான். அம்மட்டோடு நில்லாமல் உலக பந்தங்களில் ஈடுபட்டிருந்த அவர் மனத்தை மாற்றி, அவன் திருவருளைப் பருகுமாறு செய்தான்.*

*'ஊனை நாடகம் ஆடுவித்தல்' ஊனினை உருக்குதல் ஆகும். 'ஞான நாடகம் ஆடுவித்தவா' என்பது உள்ளொளியைப் பெருகச் செய்து, அதனால் சிவஞானம் கைவரப் பெற்று, ஞான வடிவினனாகிய அவனை அறிந்து கொள்ளுமாறு செய்ததாகும்.*

**100.** விச்சுஅது இன்றியே விளைவு செய்குவாய்
விண்ணும் மண்ணகம் முழுதும் யாவையும்
வைச்சு வாங்குவாய் வஞ்சகப் பெரும்
புலையனேனை உன் கோயில் வாயிலில்
பிச்சன் ஆக்கினாய் பெரிய அன்பருக்கு
உரியன் ஆக்கினாய் தாம் வளர்த்தது ஓர்
நச்சு மா மரம் ஆயினும் கொலார்
நானும் அங்ஙனே உடைய நாதனே **96**

வைச்சு வாங்குவாய்-நிலைபெறுத்தி அழிப்பாய். கொலார்-கொல்ல மாட்டார்.

*இதுவரை திருவடியைப் பிரிந்து வாழும் கொடுமையான நிலை தமக்கு ஏற்பட்டதை உன்னி, மனம் வருந்தி,*

எவ்வாறாயினும் குருநாதர் தம்மை ஏற்றுக்கொள்ள வேண்டும் என்று பேசிவந்த அடிகளார், இப்பொழுது அடி நாதத்தையே மாற்றுகின்றார்.

'விதையில்லாமல் விளைவை உண்டாககக் கூடியவன் நீ. எல்லா உலகங்களையும் படைத்துக் காத்து அழிக் கின்றவன் நீ. உலக பந்தங்களிலும், அரசியல் வாழ்விலும் ஈடுபட்டு வஞ்சகம் பொய் முதலியவற்றை உறுதுணை யாகக் கொண்டு வாழ்ந்த கடையவனான என்னையும் உன் திருமுன்னர் எல்லாவற்றையும் துறக்குமாறு செய்தாய். அம்மட்டோடு நில்லாமல் உன்னால் ஏற்றுக்கொள்ளப் பட்ட அடியவர்களின் கூட்டத்தில் ஒரே விநாடியில் சம உரிமை பெற்றவனாகப் புகுத்தினாய். இவ்வளவையும் செய்துவிட்டு இப்பொழுது என்னைக் கைவிட்டு விட்டாயே, இது முறையா? பெருமானே! எங்களிடம் வழங்கும் ஒரு பழமொழி உனக்குத் தெரியுமா? தாமே வளர்த்த மரம், வளர்ந்த நிலையில் நச்சுத்தன்மை உடையதாக மாறிவிட்டாலும் மரத்தை வளர்த்தவர்கள் அதனை வெட்டமாட்டார்கள். சிந்தித்துப் பார்த்தால் நானும் உனக்கு அப்படித்தான்.' 'எனவே, என்னைக் கைவிடுதல் என்பது உனக்கு அழகன்று' என்பது குறிப்பெச்சம்.

101. உடைய நாதனே போற்றி நின் அலால்
பற்று மற்று எனக்கு ஆவது ஒன்று இனி
உடையனோ பணி போற்றி உம்பரார்
தம் பராபரா போற்றி யாரினும்
கடையன் ஆயினேன் போற்றி என் பெரும்
கருணையாளனே போற்றி என்னை நின்
அடியன் ஆக்கினாய் போற்றி ஆதியும்
அந்தம் ஆயினாய் போற்றி அப்பனே 97

பணி-கட்டளையிடு. உம்பரார்-தேவர்.

முந்தைய பாட்டில் கூறிய பழமொழி நினைவு வந்தவுடன் இறைவனுக்கு எச்சரிக்கை விடுவதுபோன்ற அக்கருத்தைச் சொல்லியிருக்கக் கூடாதோ என்று நினைக்கின்றார் அடிகளார். அவன் பெருமை எங்கே, யாரினும் கடையனான தம் நிலைமை எங்கே என்ற நினைவு வந்தவுடன் போற்றி போற்றி என்று கூறிச் சரணாகதி அடைகிறார்.

102. அப்பனே எனக்கு அமுதனே
ஆனந்தனே அகம் நெக அள்ளூறு தேன்
ஒப்பனே உனக்கு உரிய அன்பரில்
உரியனாய் உனைப் பருக நின்றது ஓர்
துப்பனே சுடர் முடியனே துணையாளனே
தொழும்பாளர் எய்ப்பினில்
வைப்பனே எனை வைப்பதோ சொலாய்
நைய வையகத்து எங்கள் மன்னனே 98

துப்பன்-உணவாயுள்ளவன். தொழும்பாளர்-அடியார். எய்ப்பினில் வைப்பு-இளைத்த காலத்தில் உதவும் சேமநிதி.

இப்பாடலிலும் இறைவன் பெருமைகளைப் புகழ்ந்து கூறிவிட்டு, 'இத்துணைப் பெருமை உடையவனாகிய நீ என்ன மனம் நையுமாறு இவ்வுலகிடை விட்டுச் சென்றது முறையோ' என்று அரற்றுகின்றார்.

103. மன்ன எம்பிரான் வருக என் எனை
மாலும் நான் முகத்து ஒருவன் யாரினும்
முன்ன எம்பிரான் வருக என் எனை
முழுதும் யாவையும் இறுதி உற்ற நாள்
பின்ன எம்பிரான் வருக என் எனைப்
பெய்கழற்கண் அன்பாய் என் நாவினால்
பன்ன எம்பிரான் வருக என் எனைப்
பாவநாச நின் சீர்கள் பாடவே 99

முன்ன-முன்னவனே. பின்ன-பின்னவனே. பன்ன-பலகாலும் சொல்ல.

*'உயிர்களின் பாவ நாசனே! மூவருக்கும் முதல்வனே! நின் சீர்கள் பாட நீ இருக்கும் இடத்திற்கு வருக என்று என்னை அழைப்பாயாக' என்றவாறு.*

104. பாடவேண்டும் நான் போற்றி நின்னையே
பாடி நைந்து நைந்து உருகி நெக்கு நெக்கு
ஆட வேண்டும் நான் போற்றி அம்பலத்து
ஆடும் நின் கழல் போது நாயினேன்
கூடவேண்டும் நான் போற்றி இப்புழுக்
கூடு நீக்கு எனைப் போற்றி பொய் எலாம்
வீட வேண்டும் நான் போற்றி வீடு தந்து
அருளு போற்றி நின் மெய்யர் மெய்யனே 100

வீட-அழிய. புழுக்கூடு-புழுக்களுக்கு உறைவிடமாகிய உடல்.

*'அன்பருக்கு அன்பனே நின் புகழைப் பாடவேண்டும் நான். வெறும் வாயில் இருந்துமட்டும் பாடல் வராமல் நெஞ்சு நெக்குநெக்கு உருகவேண்டும். அந்த உருக்கத்தின் பயனாக என்னை மறந்து ஆடவேண்டும். அம்பலத்தில் ஆடுகின்ற உன் மலர்போன்ற திருவடிக்கீழ் இணைய வேண்டும். உன் திருவடியில் இணையவேண்டுமாயின் அதற்கு இடையூறாக இருப்பது புழுக்கள் நிறைந்த இவ்வுடலே ஆகும். ஆகவே, இதனைப் போக்கி அருள்வாயாக. என்பாலுள்ள பொய்களை யெல்லாம் நான் களையவேண்டும். உன் திருவடியாகிய வீடுபேற்றைத் தந்து அருள்வாயாக' என்கிறார்.*

# 6. நீத்தல் விண்ணப்பம்

அந்தாதித் தொடையிலுள்ள நூறு பாடல்களைக் கொண்ட திருச்சதகத்தின் பின்னர், நீத்தல் விண்ணப்பம் என்ற இப்பகுதி வைக்கப்பெற்றுள்ளது. திருப்பெருந் துறையில் குரு வடிவில் இருந்தவர், அடிகளாருக்கு அருள்செய்த பின்னர் மறைந்துவிட்டார் என்பதை முன்னர்க் கண்டோம்.

குருநாதர் 'பொதுவினில் வருக' என ஆணையிட்டு மறைந்த பின்னர், அடிகளாரின் கலக்கம் மிகப் பெரிதாக வளர்ந்துவிட்டது. நாட்கள் செல்லச் செல்ல இறைவன் இங்குத் தம்மை விட்டுச் சென்றதற்கு ஒரு காரணம் உண்டு என்பதை உணர்ந்துகொண்டார். ஆதலின், 'ஏல என்னை இங்கொழித்து அருளி' (திருவாச: 2-129) என்று பாடினார். அப்படி ஒழித்தமைக்குக் காரணம் பராஅமுது ஆக்குவதற் காகவே என்பதையும் உணர்ந்துகொண்டார்.

விட்டுச் சென்றமைக்குக் காரணத்தை இவ்வளவு தெளிவாக அகவல்களில் கூறிய அடிகளார் பிரிந்திருப் பதற்கு மீட்டும் கவலை கொள்கிறார். இது ஏன்?

எல்லை மீறிய இன்ப அனுபவத்தைப் பெற்று அது தம்மைவிட்டு நீங்கியமையின் அது மறுபடியும் வேண்டும என்று நினைப்பது மனித இயல்பு. அன்றியும் 'மீட்டு இங்கு வாரா வினைப்பிறவி சாராமே' அருள்வானைக் (திருவாச: 1-87) குருவடிவில் நேரே கண்டு, திருவடி தீட்சையும் பெற்றபின்னரும் இந்த உடம்பும் அதனோடு தொடர் புடைய மனமும் இந்தப் பொறி, புலன்களும் தம்மைவிட்டு நீங்கவில்லை என்பதைப் புரிந்துகொள்கிறார்.

'மீண்டு வாரா வழி அருள் புரிபவ' (திருவா: 2-117) னாகிய அவனுடைய தொடர்பு கிடைத்தது; அவன் திருவடிகளை இறுகப் பற்றிக்கொண்டுடாகிவிட்டது.

திருப்பெருந்துறை நிகழ்ச்சி பூத உடலோடு, உடன் இருந்த அனைவரும் காண நேரிடையாக நிகழ்ந்தது. ஆதலின், அடிகளார் தம் பூத உடலில் உள்ள இரண்டு கைகளாலும் குருவின் திருவடிகளைப் பற்றிக்கொண்டார். இக்காட்சி மறைந்தவுடன் கைகளால் திருவடிகளைப் பற்றுகின்ற வாய்ப்பு இல்லை. ஆனால், உடலில் உறையும் நெஞ்சு அத்திருவடிகளை விடாது பற்றிக்கொண்டு அதனுடனேயே சென்றிருத்தல் வேண்டும். அவ்வாறு செய்யவில்லை; உடல்மேலுள்ள பற்றுக் காரணமாகத் திருவடிகளை விட்டுவிட்டு உடம்புடனேயே தங்கிவிட்டது. ஆதலின், கடமையை மறந்த அந்த நெஞ்சின்மேல் சினங் கொண்டார். அதனால் 'பிணநெஞ்சே' (திருவாச: 36)) என்றும், 'துணையிலி பிணநெஞ்சே' (திருவாச: 35) என்றும் சாடுகிறார்.

இத்துணை கூறியும் அந்த நெஞ்சு இந்த உடம்பை விட்டுவிட்டுத் திருவடியைப் பற்றுமாறில்லை. எவ்வளவு முயன்றாலும் உடம்போடு பிறந்ததாகிய இந்த நெஞ்சை நம்பிப் பயனில்லை என்றுணர்ந்த அடிகளார், இப்பொழுது இறைவனை நோக்கியே பாடுகிறார்.

நீத்தல் விண்ணப்பத்தில் வரும் ஐம்பது பாடல்களிலும் 'என்னை விட்டுவிடாதே' என்ற ஒரே கருத்து மீட்டும் மீட்டும் பேசப்படுகிறது.

நீத்தல் என்ற செயல் இப்பொழுது இறைவனைப் பற்றியதாகும். அடிகளாரை வேண்டாமென்று நீத்தல் செய்யும் ஆற்றலுடையவன், தலைவனாகிய அவன் ஒருவனே ஆவான். ஆதலின், தாம் எவ்வாறு இருப்பினும் தம்மைக் கைவிட்டு விடவேண்டா என்று விண்ணப்பம்

செய்கிறார். ஆதலின், இப்பகுதி நீத்தல் விண்ணப்பம் என்ற பெயரைப் பெற்றது.

105. கடையவனேனைக் கருணையினால்
கலந்து ஆண்டுகொண்ட
விடையவனே விட்டிடுதி கண்டாய்
விறல் வேங்கையின் தோல்
உடையவனே மன்னும் உத்தரகோச
மங்கைக்கு அரசே
சடையவனே தளர்ந்தேன் எம்பிரான்
என்னைத் தாங்கிக்கொள்ளே 1

கலந்து-உயிரோடு உள் கலந்து. விடையவன்- இடபவாகனம் உடையவன். விறல் வேங்கை-வலியபுலி. தளர்ந்தேன் -அடியேனை மலவாதனைதாக்கத் தளர்ந்தேன்.

இப்பாடலின் முதலிரண்டு அடிகள் ஆழமான பொருளுடையவை. பாடலின் இரண்டாவது அடி 'விட்டிடுதி கண்டாய்' என்று விண்ணப்பம் செய்கிறது. 'என்னை விட்டுவிடாதே' என்று இரண்டு வகையில் வேண்டலாம்.

தலைவன் யாரென்று தெரியாமலும் அவன் தமக்கு இது செய்வதற்குத், தம்பால் என்ன தகுதியுள்ளது என்று தெரியாமலும் விண்ணப்பம் செய்வது ஒருவகை. இந்த முதல்வகை விண்ணப்பத்தின் அடிப்படை, தம் துயரத்தைப் போக்கிக்கொள்ள வேண்டுமென்ற ஆசையில் தோன்றிய தாகும்.

இவ்வாறன்றி 'இன்ன இன்ன காரணங்களால் நீ என்னை ஏற்றுக்கொண்டே தீரவேண்டும். நடுவில் என்னை விடுவதற்கு உனக்கு உரிமையில்லை' என்பதைக் குறிப்பிட்டு விண்ணப்பிப்பது இரண்டாவது வகையாகும்.

அடிகளாரின் இந்த விண்ணப்பம் இரண்டாவது வகையைச் சேர்ந்தது.

'என்னை ஏற்றுக்கொள் என்று உன்னிடம் வந்து கேட்குமளவிற்கு நான் வளர்ச்சியடையவில்லை. நான் கடையவன். நீ யார்? நான் யார்? நம்மிடையே உள்ள உறவு என்ன? நீ என்னை ஏற்றுக்கொண்டாலன்றி எனக்கு நிம்மதியே இல்லை என்பவற்றையெல்லாம் அறிந்து நான் உன்னிடம் வந்து முறையிடவில்லை. இவற்றையெல்லாம் அறியமுடியாத கடையவன் ஆக உள்ளேன் நான். அப்படியிருக்க, நீயே வந்து ஆட்கொண்டாய். அம்மட்டோ! இல்லை. கலந்தல்லவா ஆட்கொண்டாய். நீ ஆண்டான்; நான்அடிமை என்பதை நீ தெரிவித்திருந்தாலே போதுமானது. அதன்மேலும் பல படிகள் சென்று என்னுள் கலந்தாய். இவற்றுக்கெல்லாம் காரணம் என்ன என்று சிந்தித்துப் பார்த்தேன். கடையவனாகிய என்னையும் ஒரு பொருட்டாகக் கருதி, திருப்பெருந்துறையில் மானிட உருவுடன் வந்து கலந்து ஆட்கொண்டாய்.'

'இதற்கு ஒரே ஒரு காரணந்தான் தென்படுகிறது. என்பால் தகுதியில்லை, எனவே, நீ என்னைக் கலந்து ஆண்டது உன் அளப்பருங் கருணை காரணமாகவே என்பதை நன்கு புரிந்துகொண்டேன்.'

'கருணை காரணமாக நீயே வந்து கலந்து ஆட்கொண்டுவிட்டு, இப்பொழுது திடீரென்று என்னை விடுவது முறையன்று.'

'எதிர்த்துவந்த புலியைக்கூட அழித்ததோடு நில்லாமல் அதன்மேல் கொண்ட கருணையால் அதன் தோலையே நீ உடுத்துக்கொண்டவன் ஆயிற்றே?'

'ஐயா! நீ ஆட்கொண்டபொழுது நின் 'பல் கணத்து எண்ணப்பட்டு இறுமாந்து' (திருமுறை: 4-9-11) இருந்த நான், இன்று தளர்ந்துவிட்டேன். கருணையினால்

*கலந்தாண்டுகொண்ட நீ, இன்று தளர்ந்து விழப்போகும் என்னைத் தாங்கிக்கொள்ள வேண்டும்' என்கிறார்.'*

**106.** கொள் ஏர் பிளவு அகலாத் தடம் கொங்கையர்
கொவ்வைச் செவ்வாய்
விள்ளேன் எனினும் விடுதி கண்டாய்
நின் விழுத் தொழும்பின்
உள்ளேன் புறம் அல்லேன் உத்தரகோச
மங்கைக்கு அரசே
கள்ளேன் ஒழியவும் கண்டுகொண்டு
ஆண்டது எக் காரணமே 2

கொள் ஏர் பிளவு அகலாத் தடங்கொங்கை-கொள்ளின் பிளவு அளவுகூட அகலாத கொங்கை. விள்ளேன்-விட்டு நீங்கேன். விழுத்தொழும்பு-பெருமைக்கு ஏதுவாகிய அடிமை. ஒழியவும்-பிரிந்திருக்கவும். விடுதி கண்டாய்-விட்டு விடாதே. கள்ளேன்-கள்ளத்தன்மை உடையவன்.

*'ஐயனே! மகளிர்பற்றிய நினைவு அகலாதவனாக இருந்தும் உன் அடியார் கூட்டத்தில் ஒருவனாக ஏற்றுக் கொள்ளப்பட்டேன். ஏற்றுக்கொள்ளப்பட்ட பிறகு புறத்தே உள்ளவன் என்று என்னைக் கூறக்கூடாது. எனவே, என்னை விட்டுவிடாதே' என்றவாறு.*

**107.** கார் உறு கண்ணியர் ஐம் புலன்
ஆற்றங்கரை மரமாய்
வேர் உறுவேனை விடுதி கண்டாய்
விளங்கும் திருவா
ரூர் உறைவாய் மன்னும் உத்தரகோச
மங்கைக்கு அரசே
வார் உறு பூண் முலையாள் பங்க
என்னை வளர்ப்பவனே 3

காருறு கண்ணியர் - கரிய கண்ணினை உடையர்.

என்ன காரணத்தாலோ இரண்டாவது முறையாக இப்பாடலிலும் மகளிர் மயக்கத்தில் தம் மனம் செல்வதை அடிகளார் குறிப்பிடுகின்றார். இந்த இடத்தில் சராசரி மனிதனின் மன நிலையை அடிகளார் ஏறட்டுக்கொண்டு பாடினார் என்று சொல்லமுடியவில்லை.

மிகுதியும் வளர்ச்சியடைந்த மனிதர்களின் மனங்கூட, பழைய பழக்க வசத்தால் ஒரோவழி இத்தகைய எண்ணங்களில் ஈடுபடுவதுண்டு என்று மனித மனத்தின் கூறுபாட்டை நன்கு அறிந்தவர்கள், கூறுகின்றனர். (திருக்குறளில் துறவு என்ற அதிகாரத்தை அடுத்து, பின்னர் அவா அறுத்தல் என்ற அதிகாரம் வருதலின், இவற்றிடையே காணும் பொருத்த மின்மையை அறிந்த பரிமேலழகர் அவா அறுத்தல் அதிகாரத்திற்கு எழுதிய முன்னுரையைக் காணவும்) இத்தகைய எண்ணங்கள் பெரியோர்களிடையே ஒரோவழி, ஒரு கணம் தோன்றினால்கூட, அதை மிகைப் படுத்தி அக்குறையிலிருந்து நீங்கவேண்டும் என்று பாடுவது சரியானதே ஆகும்.

பெருங்குடியில் பிறந்து, ஒரு பேரரசின் அமைச்சராகவும் இருந்த ஒருவர், திருப்பெருந்துறை நிகழ்ச்சிக்கு முன்னர் இப்படிப்பட்ட செயல்களில் ஈடுபட்டிருத்தல் இயல்பேயாகும்.

இவற்றையெல்லாம் துறக்குமாறு செய்தது திருவடி தீட்சை என்றாலும், ஒரோவழிப் புலன்கள் மேற் செல்லும் இப்பற்று 'தேகப் பிரக்ஞை' இருக்கின்றவரை இருக்கத்தான் செய்யும். என்றோ ஒருகணம் மனத்துள் தோன்றிய இவ்வெண்ணத்தைப் பெரிதாக்கி, மிகைப் படுத்திக் கூறியதால் அடிகளாரின் பெருமை வெளிப்படுகிறதே தவிர, இதனால் இழுக்கொன்றும் அவருக்கு நேரவில்லை என்பதை அறிதல் வேண்டும்.

**108.** வளர்கின்ற நின் கருணைக் கையில்
வாங்கவும் நீங்கி இப்பால்
மிளிர்கின்ற என்னை விடுதி கண்டாய்
வெண்மதிக் கொழுந்து ஒன்று
ஒளிர்கின்ற நீள் முடி உத்தரகோச
மங்கைக்கு அரசே
தெளிகின்ற பொன்னும் மின்னும் அன்ன
தோற்றச் செழும் சுடரே 4

வாங்கவும்-வளைத்துப் பிடிக்கவும். மிளிர்கின்ற-விளங்குகின்ற.

*'ஐயனே! உய்யவேண்டும் என்ற எண்ணம் ஒரு சிறிதும் இன்றி, உலக வாழ்க்கையில் முழுவதுமாக ஈடுபட்டு வழியோடு சென்றுகொண்டிருந்த என்னை, மேலும் மேலும் வளர்கின்ற கருணையாகிய நின் திருக்கரம் வளைத்துப் பிடித்தது.'*

*'கருணையாகிய நீண்ட கரம் வளைத்தும்கூட, தூண்டிலில் சிக்காத மீன்போல், நின் பிடியில் அகப்படாமல் சுற்றிவருகின்ற என்னைத் தயைகூர்ந்து விட்டுவிடாதே' என்றவாறாம்.*

**109.** செழிகின்ற தீப்புகு விட்டிலின்
சில் மொழியாரில் பல் நாள்
விழுகின்ற என்னை விடுதி கண்டாய்
வெறிவாய் அறுகால்
உழுகின்ற பூ முடி உத்தரகோச
மங்கைக்கு அரசே
வழி நின்று நின் அருள் ஆர்அமுது
ஊட்ட மறுத்தனனே 5

செழிகின்ற-வளர்கின்ற. சின்மொழியார்-சிலவாகிய சொற்களைப் பேசுகின்ற பெண்கள். வெறி-மணம். அறுகால்-வண்டு. ஊட்ட-உண்பிக்க.

இப்பாடலும் முன்னர்க் கூறப்பெற்ற மகளிர் தொடர்புபற்றியே பேசுகின்றது.

இறுதி அடியில் வழியில் நின்று ஆரமுது ஊட்ட குருநாதர் காத்துக்கொண்டு இருந்ததையும் அந்த வாய்ப்பை நழுவவிட்டதையும் பேசுகின்றார்.

'மறுத்தனன்' என்ற சொல்லை அடிகளார் சொல்லி யிருந்தாலும் உண்மையில் குருவின்பின்னே செல்ல இவர் மறுக்கவில்லை. திருவடியைப் பற்றிய கை நெகிழாமல் இந்த உடலை இங்கே துறந்துவிட்டு அவருடன் போயிருக்க வேண்டு மென்பதே அடிகளாரின் பேரவா ஆகும். உடலை விடமுடியாமையின் மறுத்தனன் என்ற சொல்லைப் பயன்படுத்துகிறார். அப்படி இருந்தாலும் தம்மைக் கைவிட வேண்டா என்று விண்ணப்பிக்கின்றார்.

110. மறுத்தனன் யான் உன் அருள்
அறியாமையின் என் மணியே
வெறுத்து எனை நீ விட்டிடுதி கண்டாய்
வினையின் தொகுதி
ஒறுத்து எனை ஆண்டுகொள் உத்தரகோச
மங்கைக்கு அரசே
பொறுப்பர் அன்றே பெரியோர் சிறு
நாய்கள் தம் பொய்யினையே 6

ஒறுத்து - அடக்கி

'பெருமானே! பெரியோர் என்பவர்கள் சிறியோர் பிழையைப் பொறுப்பதனால்தானே பெரியோர்கள் ஆயினர்'. 'சிறு நாய்கள்தம் பொய்யினையே' என்று பன்மையால் கூறியது ஒரு பழமொழி போல இதனைக் கூறுவதற்கேயாம்.

*நாய்கள் என்று பன்மையால் கூறினும், நாய் என்று ஒருமையால் கூறினும், நாய்க்கும் பொய்க்கும் எவ்விதத் தொடர்புமில்லை. நாயின் வாழ்க்கையில் பொய்க்கு வாய்ப்பே இல்லை. தம்மை நாயாக உருவகித்துக் கொண்ட பின்னருங்கூட, தாம் பொய்யர் என்ற எண்ணம் அடிகளாரைவிட்டு நீங்கவில்லை. எனவே தான், தம்மை ஆட்கொள்ள வந்த இறைவன், தாம் பொய்யர் என்ற காரணத்தால் விட்டுவிடக் கூடாது, ஏற்றுக்கொண்டே தீரவேண்டும் என்று விண்ணப்பிக்கிறார்.*

**111.** பொய்யவனேனைப் பொருள் என ஆண்டு
ஒன்று பொத்திக்கொண்ட
மெய்யவனே விட்டிடுதி கண்டாய்
விடம் உண் மிடற்று
மையவனே மன்னும் உத்தரகோச
மங்கைக்கு அரசே
செய்யவனே சிவனே சிறியேன்
பவம் தீர்ப்பவனே 7

பொத்திக்கொண்ட-மறைத்துக்கொண்ட. ஒன்று-முத்தி. பவம் -பிறவி.

*'யான் பொய்யன் என்பது அறிந்திருந்தும் என்னை ஆண்டுகொண்டாய். என்னைக் கைவிட்டுவிட வேண்டா' என்று விண்ணப்பிக்கின்றார்.*

*சென்ற பாடலிலும், இந்தப் பாடலிலும் அவர் உள்ளத்தைக் குடைந்துகொண்டிருந்த 'தாம் பொய்யன்' என்ற கருத்து ஊசலாடுவதைக் காணலாம்.*

**112.** தீர்க்கின்ற ஆறு என் பிழையை நின் சீர் அருள்
என் கொல் என்று

வேர்க்கின்ற என்னை விடுதி கண்டாய்
விரவார் வெருவ
ஆர்க்கின்ற தார் விடை உத்தரகோச
மங்கைக்கு அரசே
ஈர்க்கின்ற அஞ்சொடு அச்சம்
வினையேனை இருதலையே 8

வேர்க்கின்ற-மனம் புழுங்குகின்ற. விரவார்-பகைவர். தார் விடை-கிண்கிணிமாலை அணிந்த இடபம்.

*'ஐம்பொறிகளும் ஆசை காட்டித் தம் வழியே இழுக்க, அதில் செல்ல வேண்டுமென்று விரும்பினாலும் அதனால் என்ன விளையுமோ என்ற அச்சம் மறு பக்கம் இழுக்க, இப்படி இரு வகையிலும் இழுக்கப்பட்டு அலமருகின்ற என்னை ஏன் கூவி அழைக்கவில்லை. என் பிழைகளை எவ்வாறு பொறுத்து ஆட்கொள்ளப் போகிறாயோ என்று அஞ்சுகிறேன். எனினும், என்னைக் கைவிடவேண்டா' என்கிறார்.*

**113.** இருதலைக் கொள்ளியின்உள் எறும்பு ஒத்து
நினைப் பிரிந்த
விரிதலையேனை விடுதி கண்டாய்
வியன் மூஉலகுக்கு
ஒரு தலைவா மன்னும் உத்தரகோச
மங்கைக்கு அரசே
பொருது அலை மூஇலை வேல் வலன்
ஏந்திப் பொலிபவனே 9

*இருதலைக் கொள்ளி எறும்பு என்பதே முதுமொழி ஆகும். ஆனாலும் இதில் ஒரு குறை இருக்கிறது. ஒரு குச்சியின் இரண்டு பக்கங்களிலும் நெருப்புப் பற்றியிருப்பதால் (குச்சியின் மேலே உள்ள) எறும்பு இரண்டு பக்கங்களாலும் வெளியேற முடியாது. ஆனால்,*

இரு பக்கங்களிலும் நெருப்பு நெருங்கி வரவர வெப்பம் தாங்காத எறும்பு துடிப்பதால் கீழே விழுந்து தப்பித்துக் கொள்ள வாய்ப்பிருக்கிறது. பழமொழியில் உள்ள இக்குறையைப் போக்க, அடிகளார் 'இருதலைக் கொள்ளியின் உள்ளெறும்பு ஒத்து' என்கிறார்.

உள்ளீடு இல்லாமல் குழாய் போன்று இருக்கும் குச்சியில் இரண்டு பக்கமும் நெருப்புப் பற்றிக்கொண்டால் அந்நெருப்பு நெருங்கி வரவரக் குழாயின் உள்ளேயுள்ள எறும்பு சாவது தவிரத் தப்பிக்க வழியே இல்லை.

**114.** பொலிகின்ற நின் தாள் புகுதப் பெற்று ஆக்கையைப்
போக்கப் பெற்று
மெலிகின்ற என்னை விடுதி கண்டாய்
அளி தேர் விளரி
ஒலி நின்ற பூம்பொழில் உத்தரகோச
மங்கைக்கு அரசே
வலி நின்ற திண் சிலையால் எரித்தாய்
புரம் மாறுபட்டே 10

அளி-வண்டு. விளரி-ஏழு இசையில் ஒன்று. வலிநின்றதிண் சிலை-வளைக்கப்படாத வலிய வில்.

இப்பாடலின் முதலடியில் மிக அற்புதமான ஒரு தத்துவத்தை அடிகளார் பேசுகின்றார். 'பொலிகின்ற நின் தாள் புகுதப்பெற்று' என்பது திருப்பெருந்துறை நிகழ்ச்சியைக் குறிப்பதாகும். தாள் புகுதப் பெற்று என்பது சிந்திக்கவேண்டிய ஒன்றாகும். திருவடிகளில் தஞ்சமாகப் புகுந்து என்று பலரும் உரை கண்டுள்ளனர்.

புக்கு என்ற வினைக்கு ஒரு வினை முதல் வேண்டும். திருவடிகளில் ஒருவர் தலைவைத்து வணங்கலாமே தவிர, பருப்பொருளாகிய உடம்புடன் திருவடிகளில் புகுதல் என்பது இயலாத காரியம். ஒலிதரு நின்தாள் வணங்கப்

பெற்று என்றோ, இறைஞ்சப் பெற்று என்றோ கூறியிருக்கலாம். மாபெரும் கவிஞராகிய அடிகளார் சொற்பஞ்சம் உடையவரல்லர். அப்படியிருந்தும் அடிகள் பாடினார் என்றால், அதற்கு ஏதோ ஓர் உட்பொருள் இருத்தல் வேண்டும். சற்று நின்று நிதானித்தால் அந்த உட்பொருளையும் விளங்கிக்கொள்ள முடியும்.

இப்பொழுது குருவின் திருவடிகளை நம் மனத்தில் கொண்டு வரலாம். திருவடிகள் பருப்பொருளாக அமைந்துள்ளன. திருவாதவூரர் என்ற அமைச்சர் அந்தப் பதவிக்குரிய உடைகளுடன் அந்தத் திருவடிகளில் வீழ்ந்து வணங்குகிறார். இதையும் நம் மனத்தில் கொண்டுவரலாம். திருவடிகள் ஒரு பருப்பொருள்; திருவாதவூரர் உடல் ஒரு பருப்பொருள். எனவே, திருவடிகளுள் வாதவூரர் உடல் என்ற பருப்பொருள் நுழையுமாறில்லை. மேலும், திருவடிகளில் புகுதல் என்பது சற்றும் பொருத்தமில்லாத ஒன்றாகும்.

ஆனால் கவிஞர் மிகத் தெளிவாக, 'பொலிகின்ற நின் தாள் புகுதப் பெற்று' என்கிறாரே என்றால், புகுந்தது உண்மை. அடிகளாரின் பருவுடலையே நாம் மனத்தில் கொண்டிருப்பதால் எப்படிப் புகுத முடியும் என்ற ஐயம் மனத்தில் தோன்றுகிறது.

திருவடி என்பது வீடுபேறு என்பதன் பரியாய நாமம் ஆகும். அந்த வீடுபேற்றுக்குள் மணிவாசகர் என்பவருடைய ஆன்மா புகுந்தது உண்மை. அந்த ஆன்மாவுக்கு உரிய பருவுடல் வெளியேதான் கிடக்கிறது. திருவடிகள் என்ற பருப்பொருளும் வெளியேதான் உள்ளது. உள்ளே புகுந்த இவர் 'தேகப் பிரக்ஞை' இல்லாதவராக, 'எனை நான் என்பது அறியாத' வராக, சில நேரம் இருந்துவிட்டதும் உண்மை.

தேகப்பிரக்ஞை இல்லாதிருந்த அந்த நேரத்தைத்தான் 'நின்தாள் புகுதப் பெற்று' என்று பேசினார்.

இக்காட்சி முடிந்தவுடன் திருவடிகள் மறைந்தன. அதனுள் புகுந்து ஆனந்த லயத்தில் மூழ்கியிருந்த அடிகளாரின் ஆன்மா, மீட்டும் உடலுக்குள் புகுந்துவிட்டது. அதாவது, அடிகளாருக்குத் 'தேகப் பிரக்ஞை' வந்து விட்டது. அப்பொழுது இந்த உடல் தம்முடைய முன்னேற்றத்திற்குத் தடை என்று அடிகளார் நினைக்கின்றார். இந்த உடல் இருந்ததனால்தானே ஆனந்த லயத்திலிருந்த அந்த ஆன்மா மீட்டும் வந்து இதனுள் புகமுடிந்தது. இதனை நினைந்தவுடன் இந்த ஆக்கையைப் போக்கப்பெற்றால் எவ்வளவு நன்றாக இருக்கும் என்று நினைக்கின்றார். ஆனால், அவர் விருப்பப்படி ஆக்கை போவதாகத் தெரியவில்லை. அதனாலேயே 'மெலிகின்ற என்னை' என்று பாடினார்.

**115.** **மாறுபட்டு அஞ்சு என்னை வஞ்சிப்ப**
**யான் உன் மணி மலர்த் தாள்**
**வேறுபட்டேனை விடுதி கண்டாய்**
**வினையேன் மனத்தே**
**ஊறும் மட்டே மன்னும் உத்தரகோச**
**மங்கைக்கு அரசே**
**நீறுபட்டே ஒளி காட்டும் பொன் மேனி**
**நெடுந்தகையே** **11**

அஞ்சு-பஞ்சேந்திரியங்கள். மட்டே-தேனே. நீறுபட்டு-திருநீற்றிற்பொருந்தி. வேறுபட்டேனை-பிரிந்த என்னை.

சென்ற பாடலில் ஆக்கையைப் போக்கப்பெற்று என்று பாடினார் அல்லவா? இந்த ஆக்கை இருந்ததால்தானே திருப்பெருந்துறைக்கு வரவும், குருதரிசனம் கிடைக்கவும், திருவடி தீட்சை பெறவும் வாயப்புக் கிடைத்தது!

அப்படியிருக்க ஆக்கையைப் போக்கப்பெற்று என்று பாடியதன் நோக்கம் என்ன? அதனைப் போக்க இயலாமையின் மெலிகின்றேன் என்று பாடியதன் நோக்கம் என்ன?

இந்த வினாக்களுக்கு விடை இப்பாடலின் முதலடியில் தரப்பெறுகிறது.

'அஞ்சு என்று சொல்லப்பெறும் ஐம்பொறிகளும் எனக்கு உதவுவதுபோலக் காட்டி, உன் திருவடியிலிருந்து பிரியாமல் இருக்க வேண்டும் என்ற என் குறிக்கோளுக்கு மாறுபட்டு, வஞ்சனை செய்துவிட்டன. திருவடியில் வீழ்ந்து வணங்கிய அந்த நேரத்தில் இந்த ஐந்தும் அடங்கி ஒடுங்கி எனக்கு உதவிபுரிந்தன. ஆனால், இப்பொழுது மாறுபட்டு என்னை வஞ்சித்துவிட்டன.'

'ஐயா! இந்த ஐந்தின் துணை கொண்டுதான் உன் திருவடிகளில் வணங்கினேன். இவ்வுடம்பிலிருந்து என் ஆன்மா உன் திருவடிகளில் புகும்போது, தேகப் பிரக்ஞை இல்லாதிருந்தபோது இந்த ஐந்தும் வலியிழந்து செத்துக் கிடந்தன.'

'ஆனால் இப்பொழுது அவை வலுப்பெற்று என்னை அடக்கி ஆளத் தொடங்கிவிட்டன. உன் மணிமலர்த் தாளோடு இணைந்து சென்றிருக்க வேண்டிய என்னை அதனை விட்டுப் பிரியுமாறு செய்துவிட்டன.'

'ஐயா! திருவடிக் காட்சி தந்தும், தீட்சை கொடுத்தும், ஏற்றுக்கொண்டும் நீ உதவியிருக்க, நின்னோடு இணையாமல் இந்த ஆக்கையில் மறுபடியும் புகுந்து திரிகின்றேன் என்றால், தயைகூர்ந்து என்னைக் குறை கூறாதே. நீ கொடுத்த அஞ்சும் எனக்கு உதவுவதற்குப் பதிலாக நின் மலர்த்தாளில் இருந்து மாறுபட்டுச்

செல்லுமாறு செய்துவிட்டன. இந்த அஞ்சு வஞ்சகர்களின் வலையில் சிக்குண்ட என்னை விட்டுவிடாதே' என்கிறார்.

116. நெடுந்தகை நீ என்னை ஆட்கொள்ள
யான் ஐம்புலன்கள் கொண்டு
விடும் தகையேனை விடுதி கண்டாய்
விரவார் வெருவ
அடும்தகை வேல் வல்ல உத்தரகோச
மங்கைக்கு அரசே
கடும் தகையேன் உண்ணும் தெள் நீர்
அமுதப் பெரும் கடலே 12

விரவார்-பகைவர். அடுந்தகை-கொல்லுந்தன்மை. கடுந் தகையேன்-தீயகுணமுள்ள யான்.

'பெரியோனே! நீ என்னைத் தேடிவந்து இழுத்து அருள் செய்யவும் அதன் அருமைப்பாட்டை அறியாமல் அந்த இன்ப அனுபவத்தை விட்டுவிட்டேன். மழக் கை இலங்கு 'பொற் கிண்ணமாக' நீ இருந்தாய்; ஆனால், பொற் கிண்ணத்தின் அருமையறியாத மழக் கையாக (இளம் குழந்தையின் கையாக) நான் இருந்துவிட்டேன். என்னை விட்டுவிடாதே' என்பதாம்.

பாடலின் நான்காவது அடி ஒரு சிறப்பை உள்ளடக்கி யிருக்கின்றது. 'நீ தெண்ணீர் அமுதப் பெருங்கடலாக உள்ளாய். பெருங்கடலாக நீ இருத்தலின் திருப்பெருந்துறை, திருஉத்தரகோசமங்கை என்ற இரண்டு இறங்குதுறை மட்டும் அல்லாமல் வேறு எந்த இடத்தில் வேண்டு மானாலும் கடலுள் இறங்கி, தெண்ணீரைக் குடிக்கமுடியும். ஆனாலும், என்ன? நான் கடுந்தகையேனாக இருத்தலின் இறங்கிக் குடிக்கும் ஆற்றலை இழந்து நிற்கின்றேன். எனினும், என்னை விட்டுவிடாதே' என்கின்றார்.

117. கடலினுள் நாய் நக்கிஆங்கு உன் கருணைக்
கடலின் உள்ளம்
விடல் அரியேனை விடுதி கண்டாய்
விடல் இல் அடியார்
உடல் இலமே மன்னும் உத்தரகோச
மங்கைக்கு அரசே
மடலின் மட்டே மணியே அமுதே
என் மது வெள்ளமே 13

உடல் இலமே மன்னும்-உடலை வீடாகக்கொண்டு நிலை பெற்ற, மடலின் மட்டு-பூவிதழிலுள்ள தேன்; குடித்தலில்லாத தேன் எனினும் ஆம்.

'ஆறு நிறையத் தண்ணீர் போனாலும் நாய் நக்கித்தான் குடிக்கும்' என்பது இந்நாட்டு முதுமொழி. அதுபோலத் திருப்பெருந்துறையில் குருவின் கருணை வெள்ளம் கடல்போல் பரந்துநின்றபோதும், நாய் நக்கிக் குடிப்பது போல் ஒரு சிறுபொழுதே அதனை அனுபவித்தார். ஆற்றுத் தண்ணீரை நக்கிக் குடித்த நாய் ஆற்றைவிட்டு வெளியேறி வீட்டுக்கு வந்தபிறகும், சிறிதளவுதானே குடித்தோம்; இன்னும் கொஞ்சம் குடித்திருக்கலாமே என்று நினைப்பதுபோல் திருப்பெருந் துறையில் கருணைக் கடலில் ஒரு சிறுபொழுதே மூழ்கியிருந்த அடிகளார், அந்த அனுபவத்தில் நிலைக்கவும் முடியாமல், விட்டுவிடவும் முடியாமல் தவிக்கின்ற மனநிலையை இங்குப் பேசியுள்ளார்.

இறைவன் எங்கே தங்குகிறான் என்பதை இரண்டாவது அடி பேசுகிறது. 'விடலில் அடியார்' என்றதால் ஒரு கணநேரமும் அவன் நினைவினை விட்டுநீங்காத அடியார் என்பது பொருளாகும். அப்படிப்பட்டவர்கள் உள்ளக் கோயிலில் தங்கியிருப்பவன் என்பதே கருத்தாகும்.

118. வெள்ளத்துள் நா வற்றிஆங்கு உன் அருள் பெற்றுத்
துன்பத்தின் நின்றும்
விள்ளக்கிலேனை விடுதி கண்டாய்
விரும்பும் அடியார்
உள்ளத்து உள்ளாய் மன்னும் உத்தரகோச
மங்கைக்கு அரசே
கள்ளத்து உளேற்கு அருளாய் களியாத
களி எனக்கே 14

விள்ளக்கிலேன்-விலகும் ஆற்றலிலேன். நாவற்றி-நீர்மேல் மிதக்கும் ஒரு வகை பூச்சி. களியாத களி-இதுவரை அனுபவித்தறியாத ஆனந்தம்.

இப்பாடலின் முதலடி பலருக்கும் குழப்பத்தைத் தருவதாகும். நீர்ப்பெருக்குள்ள கிராமங்களில் பிறந்து வளர்ந்தவர்கள் மட்டுமே அறிந்திருக்கக்கூடிய ஒரு செய்தி இங்குப் பேசப்பெறுகிறது. 'நாவற்றி' என்பது நீரில் மிதந்து கொண்டே, இங்கும் அங்கும் திரியும் ஒரு பூச்சியின் (எட்டுக்கால் பூச்சி போன்றது) பெயராகும். நாள் முழுவதும் நீரின்மேல் மிதந்தாலும் இந்த நாவற்றிப் பூச்சி நீரினால் எப்பயனையும் அடைவதில்லை.

இந்த உவமையைக் கூறுவதன் மூலம், கருணைக் கடலுள் புகுமாறு வாய்ப்பளித்துங்கூடத் தாம் அதனை நன்கு பயன்படுத்திக் கொள்ளவில்லை என்பதை விளக்குகிறார்.

அருளை நன்கு பயன்படுத்திக் கொள்வதாவது உலகத் துன்பங்களிலிருந்து விடுபடுதலாகும்.

'நாவற்றி' என்பதைப் பூச்சியின் பெயராகக் கொண்டால் 'ஆங்கு' என்ற உவம உருபு பெயரோடு பொருந்தாமையின், நாவற்றி அலைந்தாங்கு என்று ஒரு சொல் வருவித்து பொருள் கொள்ள வேண்டும்.

இப்பாடலில் 'வெள்ளம்' என்பது அருளுக்கு உவமையாயிற்று. நாவற்றிப் பூச்சி அடிகளாருக்கு உவமையாயிற்று. நாவற்றிப் பூச்சி வெள்ளத்தில் மிதந்தும் அதன் பயன் கொள்ளாமை, அருள் வெள்ளத்தில் புகுந்தும் துன்பம் நீங்குதலாகிய பயன் கொள்ளாமைக்கு உவமையாயிற்று.

**119.** **களிவந்த சிந்தையொடு உன் கழல்**
**கண்டும் கலந்தருள**
**வெளி வந்திலேனை விடுதி கண்டாய்**
**மெய்ச்சுடருக்கு எல்லாம்**
**ஒளிவந்த பூம் கழல் உத்தரகோச**
**மங்கைக்கு அரசே**
**எளிவந்த எந்தை பிரான் என்னை**
**ஆளுடை என் அப்பனே** 15

**ஒளிவந்த-ஒளிமிகுந்த ; ஒளியைத் தந்த எனினுமாம்.**

'ஐயனே! உன் திருவடிகள் இரண்டையும் இரண்டு கண்களாலும் கண்டேன். அந்தக் கணமே என் சிந்தையில் இருந்த எண்ணங்களெல்லாம் மாறி, ஆனந்த பரவசம் (களி) நிரம்பிற்று. அப்படி நெஞ்சு முழுவதும் பரவசம் நிரம்பினாலும் அதனை முற்றிலுமாக அனுபவிக்க வேண்டுமானால் பொறிகளோடு கூடிய யாக்கையை விட்டிருக்க வேண்டும். காரணம், உடம்பு இருக்கின்ற வரையில் பொறி, புலன்கள், அந்தக்கரணங்கள் ஆகியவற்றின் சேட்டைகள் ஒரளவேனும் இருந்துகொண்டுதான் இருக்கும். அவை இருக்கின்ற வரை இன்ப அனுபவம் பூரணமாக நிரம்ப முடியாது'. என்றவாறு 'கலந்தருள வெளிவந்திலேன்' என்பதன் பொருள் இதுவாகும்.

இப்பொழுது ஒரு நியாயமான ஐயம் தோன்றினால் தவறில்லை. குருவினிடம் இருக்கும்போது அந்த இன்ப அனுபவம் உடல் முழுதும் நிரம்பி மயிர்க்கால்தோறும் நின்றது என்று அடிகளாரே முன்னர்க் கூறியுள்ளார். அம்மட்டோடு அல்லாமல் அமுத தாரைகள் ஏற்புத் துளைதொறும் ஏற்றப்பட்டன என்றும் அவரே கூறியுள்ளாரே! இவை இரண்டும் உடலுடன் இருக்கும் போதுதானே நடைபெற்றன?

அப்படியிருக்க, இப்பொழுது 'கலந்தருள வெளிவந்திலேன்' (உடம்பைவிட்டு நீங்கினேனில்லை) என்று கூறுவது சரியானதா என்ற ஐயம் நியாயமானதே ஆகும். ஆழ்ந்து சிந்தித்தால் உண்மை விளங்கிவிடும்.

உடம்போடு இருக்கும்பொழுதே இந்த அனுபவம் கிடைத்தது உண்மைதான். ஆனால், எப்பொழுது? அனைத்தையும் வைத்து வாங்கும் பரம்பொருள் குருவடிவில் எதிரேயுள்ளார். அவர் திருவடி பட்டதால் உடம்பு தன் பழைய நிலை மாறிப் புதுத் தன்மை பெற்றுவிட்டது. அனுபவத்தைத் தருகின்றவர், தம் திருவடி மூலம் நேரடியாக அனுபவத்தை உள்ளே செலுத்துகிறார். அந்தப் பேராற்றலின் எதிரே உடம்பின் இயல்புகள் முற்றிலுமாக மறைந்துவிட்டன. அன்றியும் அனுபவத்தை முற்றிலும் பெற்றபொழுது அடிகளாருக்குத் தேகப் பிரக்ஞை இல்லை எனவே, அப்பொழுது உடம்புடன் இருக்கும்போதே அனுபவம் கிடைத்தது.

இப்பொழுது நிலமை முற்றிலும் மாறிவிட்டது. குரு எதிரே இல்லை. அடிகளாரின் உடலும் தன் இயல்பான நிலைமைக்குத் திரும்பிவிட்டது. இந்த உடலுடன் அந்த அனுபவத்தைப் பெற முடியாது. ஆகவேதான், 'கலந்தருள வெளிவந்திலேன்' என்கிறார்.

120. என்னை அப்பா அஞ்சல் என்பவர் இன்றி
நின்று எய்த்து அலைந்தேன்
மின்னை ஒப்பாய் விட்டிடுதி கண்டாய்
உவமிக்கின் மெய்யே
உன்னை ஒப்பாய் மன்னும் உத்தரகோச
மங்கைக்கு அரசே
அன்னை ஒப்பாய் எனக்கு அத்தன் ஒப்பாய்
என் அரும் பொருளே 16

திருவடியில் சேர்த்துக்கொள்ள வேண்டும்.; திருப்பெருந்துறை அனுபவத்தைத் தந்தருள வேண்டும்;. அதற்குத் தடையாகவுள்ள இந்த உடலைப் போக்கியருள வேண்டும் என்றெல்லாம் இதுவரை அடிகளார் கூறிக் கொண்டிருந்தார். இவை ஒன்றும் நடைபெறாதபோது, தம் வாழ்க்கையே பயனற்றதாகிவிடுமோ என்ற மிகப்பெரிய அச்சம் அவரை ஆட்கொண்டது. அந்த மனநிலையில் இப்பாடல் தோன்றுகிறது.

தம்மை அஞ்சல் என்று சொல்லக்கூடியவர்கள் யார்? தாய், தந்தை முதலியவர்கள்தாமே. எனவே, 'எனக்கு அன்னையும் அத்தனும் நீதானே! நீ அஞ்சாதே என்று ஒரு வார்த்தைகூடச் சொல்லக்கூடாதா' என்ற கருத்தில் பேசுகிறார்.

'எய்த்து அலைந்தேன்' என்பது ஊர்ஊராகச் சென்றும் கோயில் கோயிலாகச் சென்று வழிபட்டும் 'அஞ்சேல்' என்ற சொல்லை அவன் சொல்லவில்லை என்பதாகும்.

இதே கருத்தை 'அருளா தொழிந்தால் அடியேனை அஞ்சேல் என்பார் யாரிங்கு' (திருவாச: 385) என்றும் 'அஞ்சேல் என்ன ஆசைப்பட்டேன் கண்டாய்'(திருவாச: 427) என்றும் பின்னரும் பாடியுள்ளமையைக் காணலாம்.

121. பொருளே தமியேன் புகல் இடமே
நின் புகழ் இகழ்வார்
வெருளே எனை விட்டிடுதி கண்டாய்
மெய்ம்மையார் விழுங்கும்
அருளே அணி பொழில்
உத்தரகோச மங்கைக்கு அரசே
இருளே வெளியே இக பரம்
ஆகி இருந்தவனே 17

வெருள்-அச்சம். மெய்ம்மையார்-ஞானிகள். இருள்-தன்னடி கூடாத வன்கணாளர்க்கு இருளாயிருப்பவன்.

*'அனைவர்க்கும் மெய்ப்பொருளாய் உள்ளவனே! துணையின்றித் தவிக்கும் உயிர்கட்குப் புகலிடமாய் உள்ளவனே! அன்பொடு அமுதூட்டும் தாயைக்கூட நீ என் தாயல்ல என்று கூறும் அறியாமை நிறைந்த குழந்தைகள் உண்டு. அனைத்திற்கும் தாயாக இருக்கும் உன் புகழை அக்குழந்தைகள்போல் இல்லையென்றோ, இகழ்ந்தோ பேசுபவர்களும் உண்டு. அத்தகையவர்கள் அச்சம் (வெருளே) அடைவதற்குக் காரணமாக உள்ளவனே! என்னை விட்டுவிடாதே' என்கிறார்.*

*முரண்பாட்டின் இடையே முழுமுதலைக் காண்பது தமிழர்களின் தனிச்சிறப்பு என்பது முன்னரும் குறிக்கப் பெற்றுள்ளது. 'இருளே, வெளியே' என்பதும் முரண்பட்ட இரு முனைகளாம். இருள்(அஞ்ஞானம்) உள்ள இடத்தில் வெளி(விளக்கம்) இராது; வெளி உள்ள இடத்தில் இருள் இராது என்றுதான் நாம் நினைக்கிறோம். அதனால் இவை ஒன்றுக்கொன்று முரண்பட்டவை என்றும் கருதுகிறோம். முரண்பாட்டைக் கடந்தவன் முழுமுதல் என்பதை 'இருளே வெளியே' என்றும் 'இக பரமாகி இருந்தவனே' என்றும் அடிகளார் கூறுகிறார்.*

122. இருந்து என்னை ஆண்டுகொள் விற்றுக்கொள்
ஒற்றி வை என்னின் அல்லால்
விருந்தினனேனை விடுதி கண்டாய்
மிக்க நஞ்சு அமுதா
அருந்தினனே மன்னும் உத்தரகோச
மங்கைக்கு அரசே
மருந்தினனே பிறவிப் பிணிப்பட்டு
மடங்கினர்க்கே 18

ஒற்றி-முதலுக்கு ஈடாக வைக்கப்பட்ட சொத்து மடங்கினார்க்கு-தாழ்ந்தவர்க்கு.

*'ஐயா! முன்பின் வாராமல் இப்பொழுது புதிதாக வந்த விருந்தினரைப்போல் உன்பால் அடைக்கலப் பட்டேன். நான் விரும்புவதெல்லாம் நீ என்னுள் தங்கி இருந்து, பிறகு, விருப்பத்தோடு என்னை ஆட் கொண்டாலும் சரி; நான் உனக்குப் பயன்படமாட்டேன் என்று விற்றுவிட்டாலும் சரி; ஆட்கொள்ள, இப்பொழுது எனக்குத் தகுதியில்லை, அந்தத் தகுதி வரும்போது பார்த்துக்கொள்ளலாம் என்று நீ கருதினால் அதுவரை ஆரிடமாவது என்னை ஒற்றியாக வைத்தாலும் சரி. இம் மூன்றில் எதை வேண்டுமானாலும் செய்துகொள். ஆனால் தயை கூர்ந்து என்னை விட்டுவிடவேண்டாம்' என்றவாறு.*

123. மடங்க என் வல் வினைக் காட்டை
நின் மன் அருள் தீக் கொளுவும்
விடங்க என்தன்னை விடுதி கண்டாய்
என் பிறவியைவே
ரொடும் களைந்து ஆண்டுகொள் உத்தரகோச
மங்கைக்கு அரசே
கொடும் கரிக்குன்று உரித்து அஞ்சுவித்தாய்
வஞ்சிக் கொம்பினையே 19

மடங்க-எல்லாம். விடங்க-சுயம்புமூர்த்தியே.

'ஐயனே! வலிவு பொருந்திய என் வினைகள் ஆகிய காட்டை மேலும் வளராதபடி மடக்கி வேரோடும் எரியூட்டும் ஆண்மை பொருந்தியவனே! தயைகூர்ந்து என்னை விட்டுவிடவேண்டா' என்றவாறு.

'கொடும் கரிக்குன்று உரித்து அஞ்சுவித்தாய் வஞ்சிக் கொம்பினையே' என்ற தொடர் இறைவன் கயாசுரனை அழித்த வரலாற்றை உட்கொண்டதாகும்.

காட்டைப் பல வகையில் அழிக்கலாம். வளரவிடாமல் நுனிப்பகுதியை வெட்டிக்கொண்டே இருக்கலாம். அடி மரத்தோடு வெட்டிச் சாய்க்கலாம். இந்த இரு முறையிலும் காடு அந்நேரத்திற்கு அழிக்கப்படும். ஆனால், வேர் வலுவாக இருக்கின்றவரை மறுபடியும் அம்மரம் துளிர்ப்பதைத் தடுக்கமுடியாது. அதேபோல வினையை அனுபவித்துத் தீர்த்துவிடலாம் என்றால், அது நடவாத காரியம். பிராரத்துவத்தை அனுபவிக்கும்பொழுதே அது ஆகாமியமாக மாறி, இறப்பு வரும்போது அதுவே சஞ்சிதமாக மாறிவிடும். இந்த வினைச் சுழற்சியிலிருந்து விடுபடுதல் இயலாத காரியம். எனவேதான், அடிகளார் வல்வினை ஆகிய காட்டை தீவைத்துக் கொளுத்தி அடியோடு அழிக்க வேண்டும் என்று விரும்புகிறார்.

பருப்பொருளாக உள்ள காட்டை அழிக்க, பருப்பொருளாகிய தீ தேவைப்படுவதுபோல, நுண்மையான வினைக்காட்டை அழிக்க மிக நுண்மையான இறைவன் அருள் என்ற தீ தேவைப்படுகிறது.

**124.** **கொம்பர் இல்லாக் கொடிபோல்**
**அலமந்தனன் கோமளமே**
**வெம்புகின்றேனை விடுதி கண்டாய்**
**விண்ணர் நண்ணுகில்லா**
**உம்பர் உள்ளாய் மன்னும் உத்தரகோச**
**மங்கைக்கு அரசே**

அம்பரமே நிலனே அனல் காலொடு
அப்பு ஆனவனே 20

அலமந்தனன்-கலங்கினேன். கோமளம்-அழகு. உம்பருள்ளாய் மேலான இடத்துள்ளவனே. விண்ணவர்-தேவர்கள்.

*இறைவன் ஐம்பெரும்பூதங்களாகவும் உள்ளான் என்பதை 'அம்பரமே (ஆகாயம்) நிலனே அனல் (நெருப்பு) காலொடு (காற்று) அப்பு(நீர்) ஆனவனே' என்கிறார்.*

*'கொழுகொம்பு ஒன்றைப் பற்றியே கொடி வளர முடியும். அதுபோல உன் திருவடியாகிய கொழுகொம்பைப் பற்றியே நான் வாழமுடியும். ஆதலால் என்னை விட்டுவிடாதே' என்கிறார்.*

125. ஆனை வெம் போரில் குறும் தூறு
எனப் புலனால் அலைப்புண்
டேனை எந்தாய் விட்டிடுதி கண்டாய்
வினையேன் மனத்துத்
தேனையும் பாலையும் கன்னலையும்
அமுதத்தையும் ஒத்து
ஊனையும் என்பினையும் உருக்காநின்ற
ஒண்மையனே 21

குறுந்தூறு-சிறு புதர். கன்னல்-கருப்பஞ்சாறு. ஒண்மையன்-ஒளியையுடையவன்.

*ஒவ்வொரு புலனும் மீதூர்ந்து பணிபுரிகையில், ஒரு யானை மற்ற யானைகளொடு போர்புரிவதையே அடிகளார் குறிக்கின்றார் என்று கொள்ளுதல் நலம். போர் புரிகின்ற யானை கீழேயுள்ள சிறு புதர்களை மிதிக்க வேண்டுமென்று விரும்பவோ கருதவோ இல்லை. யானை போர் புரிதலாகியத் தன் பணியைச் செய்ய, ஒரு பாவமும் அறியாத புதர் நசுக்கப்படுகிறது.*

அதேபோன்று ஆன்ம முன்னேற்றத்தைத் தடைசெய்ய வேண்டும் என்ற எண்ணம் எந்தப் பொறிக்கோ புலனுக்கோ இல்லை. அந்தப் பொறி, உலகியலில் ஈடுபட்டுச் செயற்படும்போது மூலமாகிய மனத்தையும் உடன் இழுத்துச் செல்கிறது. இப்பொறிகளின் சேட்டையால் மனம் மிதிபடுதலின் அதனோடு தொடர்புடைய ஆன்ம முன்னேற்றமும் தடைப்படுகிறது.

**126.** ஒண்மையனே திருநீற்றை உத்தூளித்து
ஒளி மிளிரும்
வெண்மையனே விட்டிடுதி கண்டாய்
மெய் அடியவர்கட்கு
அண்மையனே என்றும் சேயாய் பிறர்க்கு
அறிதற்கு அரிதுஆம்
பெண்மையனே தொன்மை ஆண்மையனே
அலிப் பெற்றியனே 22

உத்தூளித்து-பொடியாகப்பூசி.

இறைவன், அடியவர்கட்கு நெருக்கமானவனாகவும் அல்லாதவர்க்குச் சேயோனாகவும் உள்ளான் என்பதை மீட்டும் கூறுகிறார்.

'அலிப்பெற்றியன்' என்றதால் தன்மையைக் கூறுகின்றார் என்பதில் தவறில்லை. அதாவது பெண்தன்மை, ஆண்தன்மை, அலித்தன்மை என்றவாறாம். பெண்தன்மை மிகும்பொழுது உற்பத்தி நடை பெறுகிறது. ஆண்தன்மை மிகும்பொழுது அழிவு நடைபெறுகிறது. அலித்தன்மை மிகும்பொழுது உற்பத்தி, அழிவு என்ற இரண்டிலும் ஈடுபடாது இருத்தல் நடைபெறுகிறது. கூறப்பெற்ற மூன்றும் ஏகமாக இருக்கின்ற பரம்பொருள், சக்தியை வெளப்படுத்திப் பிரபஞ்சத்தைத் தோற்று விப்பதையும், அச்சக்தியையும் உள்ளடக்கி அழித்தல் தொழில் செய்வதையும் குறிப்பதாகும். பெண், ஆண், அலி

என்று கூறியவுடன் உலகத்தில் காணப்பெறும் பெண், ஆண், அலி என்று பொருள் செய்து கொள்ளவேண்டாம்.

அலித்தன்மை என்று சொல்லும்போது உலகியலில் காணப்படும் அலிகளை நினைந்து அவதிப்படத் தேவையில்லை. ஓர் உதாரணத்தின் மூலம் இதனைப் புரிந்து கொள்ளலாம். ஸ்ரீமந் நாராயணனின் அவதாரமே கிருஷ்ணன் என்று பாகவதம் பேசுகிறது. அந்தக் கிருஷ்ணன் பாண்டவர்களுக்குத் துணையாக இருந்த போதும் பாண்டவர்கள் பன்னிரண்டு ஆண்டுகள் வனவாசம் செய்ய நேரிட்டது ஏன்? இயற்கை, தன் செயலைச் செய்யும்போது கடவுளும் அதில் தலையிடுவதில்லை. ஆனால், தேவை ஏற்பட்டபோது இதே கிருஷ்ணன் அழித்தலையும் படைத்தலையும் செய்துள்ளான். ஆகவே, துவாரகையைப் படைக்கும்போது பெண்தன்மையும், அசுரர்களை வதைக்கும்போது ஆண்தன்மையும், ஒன்றிலும் தலையிடாமல் இருக்கும்போது அலித்தன்மையும் செயல்பட்டன.

பிரபஞ்சத்தைப் படைத்துவிட்ட இறைவன் அதற்குரிய சில சட்டதிட்டங்களை நியமித்தபிறகு, அப்பிரபஞ்சம் அந்தச் சட்டதிட்டங்களுக்கு உட்பட்டுத் தன்போக்கில் தொழிற்படுகையில் அதில் அவன் தலையிடுவதில்லை. இத்தன்மைகளே இங்குப் பேசப்பெற்றவை ஆகும்.

**127.** பெற்றது கொண்டு பிழையே பெருக்கி
சுருக்கும் அன்பின்
வெற்று அடியேனை விடுதி கண்டாய்
விடிலோ கெடுவேன்
மற்று அடியேன்தன்னைத் தாங்குநர் இல்லை
என் வாழ் முதலே
உற்று அடியேன் மிகத் தேறி நின்றேன்
எனக்கு உள்ளவனே 23

பெற்றது-பிராரப்த கன்மத்தை நுகரும்பொருட்டு அளிக்கப் பெற்ற உடல். பிழை-ஆகாமிய வினைகள். உற்று-திருவடியைப் பொருந்தி. எனக்குள்ளவன்- என்னை உரிமையாகவுடையவன்.

*இப்பாடலுக்கு வாலாயமாகப் பொருள் கூறுகின்றவர் கூற்றுச் சரியாகத் தோன்றவில்லை.*

*'உலகியலில் ஈடுபட்டுப் பிழையே பெருக்கினேன். இது பெருகப் பெருக, உன்மாட்டு உள்ள அன்பு சுருங்கி விட்டது.'*

*'இந்த நிலையில் அடியேன் திருப் பெருந்துறையில் உன்னை அடைந்ததால் (உற்று) மிகுதியும் மனத் திண்மையோடு வீடுபேற்றை நோக்கிச் செல்வதற்குச் சித்தமாக இருந்தேன்(தேறி நின்றேன்).'*

*'இப்பொழுது நீ என்னைவிட்டு நீங்கியமையின் என் மனம், சித்தம் முதலியவை மீட்டும் பிழையே பெருக்கத் தொடங்கியமையின் அன்பு சுருங்கலாயிற்று'.*

*'திருப்பெருந்துறையில் முற்றடியானாக இருந்த யான், இப்பொழுது வெற்றடியானாக ஆகிவிட்டேன். எங்குத் தேடினும் என்னைத் தாங்குநர் இல்லை என்பதைக் கண்டுகொண்டேன். எனது வாழ்விற்கும் முன்னேற்றத் திற்கும் மூலதனமாக உள்ளவனே! (வாழ் முதலே!) என்னை விட்டுவிடாதே' என்க.*

**128.** உள்ளனவே நிற்க இல்லன செய்யும்
மையல் துழனி
வெள்ளனலேனை விடுதி கண்டாய்
வியன் மாத் தடக் கைப்
பொள்ளல் நல் வேழத்து உரியாய்
புலன் நின்கண் போதல் ஒட்டா
மெள்ளெனவே மொய்க்கும் நெய்க்குடம்
தன்னை எறும்பு எனவே 24

மையல்-மயக்கம். துழனி வெள்ளன்-ஆரவார வெள்ள முடையவன். வியன்-பெரிய. பொள்ளல்-ஓட்டை.

எந்த ஒரு செயலைச் செய்தாலும் அதற்கொரு பயன் இருத்தல் வேண்டும். பயனில்லாத ஒரு சொல்லைக்கூடச் சொல்லாதே என்று அறநூல் (குறள்) சொல்கிறது. எனவே, பயனுள்ளவற்றைச் செய்யாமல் பயனில்லாத செயல்களை மிக்க ஆரவாரத்தோடு செய்யும் உள்ளீடற்றவராகிய தம்மை விட்டுவிடவேண்டா என்று வேண்டுகிறார்.

'நீ எனக்கு அளித்த ஐந்து பொறிகளும் என் ஆன்மா உன்னை வந்து அடையவொட்டாமல், நெய்க்குடத்தை எறும்புகள் சுற்றி வருவதுபோலச் சுற்றிவந்து அல்லல் விளைக்கின்றன.'

நெய்க் குடம் தன்னை மொய்க்கும் எறும்பு என, என் பொறி புலன்கள் சுற்றிவருகின்றன. என்பதே இந்த உவமையின் விரிவாகும். இதனோடு நிறுத்திவிட்டால் இந்த உவமையின் பயன் நன்கு விளங்குமாறு இல்லை.

எறும்புகள் நெய்க் குடத்திற்கு வெளியே தரையில் சுற்றிவருகின்றன. 'மொய்க்கும்' என்று கூறினமையின் தரையை அன்றிக் குடத்தின்மேலும் ஏறிப் புறப்பகுதியில் சுற்றுகின்றனவே தவிர அவை நெய்யை உண்ணுமாறில்லை என்பது பெற்றாம். அன்றியும் குடத்தைச் சுற்றியும் குடத்தின் புறத்தேயும் மொய்க்கின்ற எறும்புகள் அக்குடத்தைப் பிறர் எடுக்கவோ, அதிலுள்ள நெய்யை எடுத்துப் பயன்படுத்தவோ முடியாமல் செய்கின்றன. சுற்றிவருகின்ற எறும்புகள் தாமும் நெய்யை உண்ணவில்லை, பிறர் எடுத்து உண்ணவும் இடம் கொடுக்கவில்லை.

'நெய்க் குடம் தன்னை மொய்க்கும் எறும்பு' என்று கூறியதன் உட்பொருள் இதுவேயாகும்.

இவ்வாறு கூறியமையின் இந்த உவமையில் கூறப்பட்ட அனைத்தும் உவமேயத்திற்கு ஏற்றப்பட வேண்டும். நெய்க்குடமாக இருப்பது இறை அனுபவம்; அதனை எடுத்துப் பயன்படுத்த விரும்பியவர் அடிகளார். அதனை எடுக்கவும் பயன்படத்தவும் முடியாமல் செய்கின்ற எறும்புகளை ஒத்தவை பொறிபுலன்கள்.

குடத்திலுள்ள நெய்யை எறும்புகள் உண்ணப் புகுந்தால் உண்ண முடியாததோடு, தாமும் நெய்யுள் வீழ்ந்து அழிந்துவிடும். அந்த அச்சத்தினாலேயே எறும்புகள் குடத்தைச் சுற்றி மொய்க்கின்றனவே தவிர நெய்யின் அருகே செல்வதில்லை.

அடிகளாரின் ஆன்மா இறையனுபவம் என்ற நெய்க்குடத்தைப் பயன்படுத்தச் சித்தமாக உள்ளது. ஆனால், பொறிபுலன்கள் ஆகிய எறும்புகள் அக்குடத்தை எடுக்கவோ பயன்படுத்தவோ இடங்கொடுக்கவில்லை.

நெய்யை உண்ண விரும்பி, அதனுள் புகுந்த எறும்புகள் அதில் மூழ்கி அழியுமாப்போலே, இப்பொறி புலன்கள் இறையனுபவத்தில் மூழ்கினால் தம்மை முற்றிலுமாக இழக்க நேரிடும். இவை தம்மை இழக்கச் சித்தமாக இல்லை.

தாம் உண்ணாவிடினும் பயன்படுத்துபவர் நெய்க் குடத்தை எடுக்க விரும்பினால் அதற்கும் இடங்கொடாமல் குடத்தைச் சுற்றி மொய்க்கும் எறும்புகளைப்போல இப் பொறிபுலன்களும் செயல் புரிகின்றன.

அடிகளாரின் ஆன்மா, இறையுணர்வு ஆகிய நெய்க் குடத்தை எடுத்துப் பயன்படுத்த விரும்பினாலும், இப்

*பொறி புலன்கள் ஆன்மாவின் முயற்சிக்கு இடங் கொடாமல் எறும்புகளைப்போல் சுற்றி வந்து மொய்த்து இடர் விளைவிக்கின்றன என்பதாம்.*

**129.** எறும்பிடை நாங்கூழ் எனப் புலனால்
அரிப்புண்டு அலந்த
வெறும் தமியேனை விடுதி கண்டாய்
வெய்ய கூற்று ஒடுங்க
உறும் கடிப் போது அவையே உணர்வு
உற்றவர் உம்பர் உம்பர்
பெறும் பதமே அடியார் பெயராத
பெருமையனே 25

நாங்கூழ்-சிறு பூழு. அலந்த-வருந்திய. கடி-மணம். உம்பர் உம்பர்-தேவலோகத்தின் மேலுள்ள இடம். பெறும்பதமே-வீடுபேறு. அரிப்பு-அரிக்கப்பட்டு.

*கிராமங்களில் வாழ்பவர்கள் அடிக்கடி பார்க்கின்ற ஒரு காட்சி இங்கே பேசப்பெறுகிறது. நாங்கூழ் என்பது புழுக்களுக்குப் பொதுப்பெயர். மண்புழுவிலிருந்து பச்சை, சிவப்பு நிறங்களோடு, பெருத்த வடிவுடன் காணப்பெறும் புழுக்களுக்கும் இப்பெயர் பொருந்தும். இப்புழுக்கள் தம் வழியே செல்லும்போது எறும்புகள் கூட்டமாக வந்து இப்புழுக்களைச் சுற்றிநின்று தாக்கும். எறும்பின் கடி பொறுக்கமாட்டாமல் புழு எப்படித் துடித்தாலும் புரண்டு வீழ்ந்தாலும் அங்கிருக்கும் எறும்புக் கூட்டத்தை விட்டு வெளியேற வாய்ப்பே இல்லை. 'அரிப்புண்டு' எனக் கூறியதால் எறும்புகள் புழுவைக் கொஞ்சம் கொஞ்சமாகத் தமக்கு இரையாக்கிக் கொள்கின்றன என்பது பெற்றாம்.*

*இங்கே ஆன்மா புழுவாகவும், பொறி புலன்கள் எறும்பாகவும் உவமிக்கப்பெற்றன.*

'வெறுந்தமியேன்' என்று கூறியதால் ஐவரின் எதிரே வேறு துணையின்றி இருக்கும் தன்மையைக் கூறினாராயிற்று.

இவ்வாறு அரிப்புண்டு அலமருகின்ற தம்மை விட்டுவிடாதே என்கிறார்.

கூற்றை உதைத்ததாகிய மணம் நிறைந்த மலர்போன்ற அத்திருவடிப் பதம், இறையுணர்வுடையோர், தேவதேவர் ஆகியோர், சென்று அடையத்தக்க வீடு பேறாகும் என்க.

130. பெரு நீர் அற சிறு மீன் துவண்டாங்கு
நினைப் பிரிந்த
வெரு நீர்மையேனை விடுதி கண்டாய்
வியன் கங்கை பொங்கி
வரும் நீர் மடுவுள் மலைச் சிறு தோணி
வடிவின் வெள்ளைக்
குரு நீர் மதி பொதியும் சடை வானக்
கொழு மணியே 26

வெள்ளைக் குருநீர்-வெள்ளைநிறத் தன்மையுடைய கிறிதளவு நீர். துவண்டாங்கு-வாடினாற் போல.

'குளத்தில் நிறைந்திருந்த நீர் வற்றியபோது அதிலுள்ள மீன்கள் நீரின்மையால் துடிப்பதைக் கண்டுள்ளோம். அதேபோல் திருப்பெருந்துறையில் நிறைகுளத்து நீர் போன்று உன் அருள் நிறைந்திருந்தபொழுது என்னை மறந்து துளையமாடினேன். இப்பொழுது அந்த அருளாகிய நீர்ப்பெருக்கு இங்கு இல்லை. எனவே, மீன் துடிப்பதுபோல் உள்ளீடு அற்றவனாகிய நான் துடிக்கின்றேன். என்னை விட்டுவிடாதே' என்கிறார்.

131. கொழு மணி ஏர் நகையார் கொங்கைக்
குன்றிடைச் சென்று குன்றி

விழும் அடியேனை விடுதி கண்டாய்
மெய்ம் முழுதும் கம்பித்து
அழும் அடியாரிடை ஆர்த்து வைத்து
ஆட்கொண்டருளி என்னைக்
கழுமணியே இன்னும் காட்டு கண்டாய்
நின் புலன் கழலே 27

கொழுமணி-முத்து.. குன்றி-குறைந்து.. கம்பித்து-நடுங்கி. ஆர்த்து வைத்து-கட்டி வைத்து.. புலன் கழல்-ஞானமாகிய திருவடி. கழுமணி-கழுவப் பெற்ற மணி.

*'மகளிர் மோகத்தில் சிக்குண்டு மீள வழி தெரியாது இருக்கின்ற என்னை விட்டுவிடாதே'.*

*'பேரன்பு காரணமாக உடல் முழுவதும் நடுங்குகின்ற அடியார் கூட்டத்திடையே திருப்பெருந்துறையில் என்னை இருத்தித் திருவடி தரிசனம் தந்தாய். அத்தரிசனத்தை மீண்டும் பெற விழைகின்றேன்' என்றவாறு.*

132. புலன்கள் திகைப்பிக்க யானும் திகைத்து
இங்கு ஓர் பொய்ந் நெறிக்கே
விலங்குகின்றேனை விடுதி கண்டாய்
விண்ணும் மண்ணும் எல்லாம்
கலங்க முந்நீர் நஞ்சு அமுது செய்தாய்
கருணாகரனே
துலங்குகின்றேன் அடியேன் உடையாய்
என் தொழுகுலமே 28

திகைப்பிக்க-மயக்க. தொழுகுலம்-தொழத்தக்க இனம். முந்நீர்-கடல். துலங்குகின்றேன்-நடுங்குகின்றேன்.

*'திருப்பெருந்துறை அனுபவத்தில் இப்புலன்கள் அடங்கி ஒடுங்கிச் செயலிழந்து நின்றமையின் யான் அப்பொழுது உன் அருளார் அமுதத்தை வாரிக்கொண்டு விழுங்கினேன்'.*

*'என் வினை காரணமாக அது நீடிக்கவில்லை. அந்த நிலை மாறியவுடன் புலன்கள் பொங்கி எழுந்து என்னைக் கௌவிக்கொண்டமையின் போகும் வழியறியாமல் செந்நெறியிலிருந்து விலகிவிட்டேன். ஐயனே! என்னைக் கைவிட்டு விடாதே'.*

*'விண்ணும் மண்ணும் அஞ்சிய ஆலகாலத்தை ஏற்றுக்கொண்டவனே! பொறி புலன்கள் இவ்வளவு துன்பத்தைச் செய்தும், செந்நெறியிலிருந்து என்னை விலகுமாறு செய்தும்கூட, அன்று திருப்பெருந்துறையில் நீ வழங்கிய அருளார் அமுதம் என் உள்ளத்தில் எங்கோ ஒரு மூலையில் மறைந்து நிற்பதால், இப்பொழுதும் நடுங்கு கின்றேன்' என்றவாறு.*

**133.** குலம் களைந்தாய் களைந்தாய் என்னைக்
குற்றம் கொற்றச் சிலை ஆம்
விலங்கல் எந்தாய் விட்டிடுதி கண்டாய்
பொன்னின் மின்னு கொன்றை
அலங்கல் அம்தாமரை மேனி அப்பா
ஒப்பு இலாதவனே
மலங்கள் ஐந்தால் சுழல்வன் தயிரில்
பொரு மத்து உறவே 29

குலம்-குடிப்பிறப்பு; கூட்டம் என்பாரும் உளர். குற்றம்-அறியாமையால் யான் இயற்றும் குற்றங்கள். சிலை-வில். விலங்கல்-மலை. அலங்கள்-மாலை.

*'மானிடக் குலத்திற்கு இயல்பாக உள்ள குற்றங்கள் என்பாலும் இருந்துவந்தன. இக்குற்றங்கள் தோன்றுவதற் குரிய என் தலைமீது உன் திருவடி பட்டமையின், என் பிறப்பால் வரும் குற்றங்கள் அனைத்தையும் போக்கினாய். என்னை விட்டுவிடாதே' என்கிறார்.*

'ஆணவம், கன்மம், மாயை, மாயேயம்(வைந்தவம்), திரோதாயி என்ற ஐந்து குற்றங்களாலும் சூழப்பெற்று, தயிரின் இடைப்பட்ட மத்துப்போல் இங்கும் அங்குமாய்ச் சுழல்கின்றேன்' என்கிறார்.

மத்துறு தயிர் என்று கூறாமல் 'தயிரிற் பொரு மத்து' என்று அடிகளார் கூறியமையின் மத்தையே உவமையாக்குகின்றார். அதாவது, தூய்மையான மத்து தயிரைக் கடைய முற்பட்டதால் அத்தயிர் மத்து முழுவதிலும் ஒட்டிக்கொள்கிறது. அன்றியும் ஒரு முறை இடமிருந்து வலமும், மறுமுறை வலமிருந்து இடமும் சுழலும் இயல்புடையது தயிரிற் பொரு மத்து. இந்த உவமையின் மூலம் மற்றொன்றையும் பெறவைக்கின்றார். மத்தில் தயிர் ஒட்டிக்கொள்வதுபோலத் தூய்மையான ஆன்மாவில், மேலே கூறிய ஐந்து குற்றங்களும் (மலங்களும்) ஒட்டிக்கொள்கின்றன. அன்றியும் இடம், வலம் என்று மாறிமாறி மத்துச் சுற்றுவதுபோல் உலக பந்தங்களிலிருந்து விடுபட்டு முன்னேற முயலும் ஆன்மா ஓரளவு சென்றுவிட்டு மறுபடியும் இந்த ஐந்து குற்றங்களுக்கே திரும்பிவிடுகிறது.

முன்னேறுதல், தளர்ந்து வீழ்தல் என்ற இரண்டையும் நினைவூட்டவே தயிரில் பொரு மத்து என்றார்.

**134.** மத்து உறு தண் தயிரின் புலன் தீக்
கதுவக் கலங்கி
வித்து உறுவேனை விடுதி கண்டாய்
வெண்தலை மிலைச்சிக்
கொத்துஉறு போது மிலைந்து
குடர் நெடு மாலை சுற்றித்
தத்துஉறு நீறுடன் ஆரச் செம் சாந்து
அணி சச்சையனே 30

வித்துறுதல் - ஒளியடைதல் ; அதாவது தீப்பற்றுதல். மிலைச்சி-சூடி. தத்துறு-தவழுகின்ற. ஆரம்-சந்தனக்கட்டை; சச்சையன்-நுட்பமானவன்.

*'மத்து உறு தண்தயிர்' என்றதனால், கலக்கமில்லாமல் அமைதியாக இருந்த தயிர் மத்தின் தொடர்பு ஏற்பட்டவுடன் தானும் கலங்கி அம்மத்திலும் ஒட்டிக்கொண்டது போல், 'ஐம்புலன்கள் நான் கிடைத்தவுடன் தீப்போல் என்னைப் பற்றிக்கொண்டன. என்னைக் கைவிட்டு விடாதே' என்கிறார்.*

135. சச்சையனே மிக்க தண் புனல் விண்
கால் நிலம் நெருப்பு ஆம்
விச்சையனே விட்டிடுதி கண்டாய்
வெளியாய் கரியாய்
பச்சையனே செய்ய மேனியனே
ஒண் பட அரவக்
கச்சையனே கடந்தாய் தடம் தாள
அடல் கரியே 31

மிக்க-வெளிப்பட்ட. விச்சை-வித்தை. தடந்தாள் அடல் கரி-பருத்தகாலினையுடைய வலிய யானை.

*'வெட்சிப்பூப் போன்ற நிறத்தை உடையவனும், வெண்மை, கருமை, பச்சை, சிவப்பு ஆகிய நிறங்களைப் பெற்றுள்ளவனும், ஐம்பெரும் பூதங்களைத் தோற்றுவிக்கும் வித்தையை அறிந்தவனும் ஆகிய பெருமானே என்னைக் கைவிட்டுவிடாதே' என்கிறார்.*

136. அடல் கரிபோல் ஐம் புலன்களுக்கு
அஞ்சி அழிந்த என்னை
விடற்கு அரியாய் விட்டிடுதி கண்டாய்
விழுத் தொண்டர்க்கு அல்லால்

தொடற்கு அரியாய் சுடர் மா மணியே
சுடு தீச் சுழலக்
கடல் கரிதுஆய் எழு நஞ்சு அமுது ஆக்கும்
கறைக்கண்டனே 32

அடல்-வலிமை; கொல்லுந்தன்மையுமாம். கறை-விடம்.

*'போரிடுகின்ற யானைகளைப் போன்று பேராற்றல் படைத்த ஐம்புலன்களும், என்பால் போரிடுதலின், அவற்றுக்கு அஞ்சுகிறேன். ஐயா, விழுப்பம் பொருந்திய தொண்டர்களை அல்லால் பிறரால் தொடரப்பட முடியாதவனே! என்பால் இரங்கி, விட்டுவிடாமல் ஏற்றுக்கொள்' என்கிறார்.*

137. கண்டது செய்து கருணை மட்டுப்
பருகிக் களித்து
மிண்டுகின்றேனை விடுதி கண்டாய்
நின் விரை மலர்த் தாள்
பண்டு தந்தால்போல் பணித்துப்
பணி செயக் கூவித்து என்னைக்
கொண்டு என் எந்தாய் களையாய்
களை ஆய குதுகுதுப்பே 33

மட்டு-தேன். மிண்டுகின்றேனை-செருக்கால் துடிக்கின்ற என்னை. குதுகுதுப்பு-பரபரப்பு.

*திருப்பெருந்துறை நிகழ்ச்சிக்குப் பிறகு அந்த அனுபவம் தம்மை விட்டுநீங்கியமைக்குக் காரணம் தம் நல் ஊழ் இன்மையே என்றும், தம் நெஞ்சமே இது நடைபெறக் காரணமாயிருந்தது என்றும் இதுவரை பேசிக்கொண்டிருந்த அடிகளார் இப்பொழுது ஒரு புதிய திசையில் செல்கிறார்.*

*பாடலின் முதலடி நன்கு சிந்தித்துப் பொருள்கொள்ள வேண்டியதாகும். 'கண்டது செய்து' என்று வரும் இரண்டு*

சொற்களுக்கும் மனம்போன போக்கில் விருப்ப மானவற்றைச் செய்து என்று பொருள் கூறினால், அது பொருந்தாது. அடுத்து வருகின்ற 'கருணை மட்டுப் பருகிக் களித்து' என்ற தொடரின் பின்னர், 'கண்டது செய்து' என்ற சொற்களைச் சேர்த்துப்பார்த்தால் உண்மைப் பொருள் விளங்கும்.

கருணை மட்டுப் (தேன்) பருகியது எங்கே? பருகியதால் நெஞ்சம் களித்தது எங்கே? மிண்டுகின்ற நிலை வந்தது எங்கே? இவையெல்லாம் ஒரே நேரத்தில் திருப்பெருந்துறையில் குருவின் திருவடி தீட்சை பெற்றபிறகு கிடைத்த அனுபவங்கள் அல்லவா? எனவே, பாடலைப் பின்வருமாறு கொண்டுகூட்டுச் செய்து பொருள் காண்பது நலம்.

'கருணை மட்டுப் பருகிக் களித்து, கண்டது செய்து மிண்டுகின்றேனை' என்று இயைத்துக் கொள்க. இங்கே வரும் கண்டது செய்து என்ற தொடருக்கு, 'என்னுடைய எண்ணத்திற்கும் விருப்பத்திற்கும் அப்பாற்பட்டவற்றை, ஏன் செய்கிறோம் என்று தெரியாதவற்றைச் செய்து' என்று பொருள்கொள்ள வேண்டும். அதாவது தேகப்பிரக்ஞை அற்று, தற்போதம் இழந்த நிலையில் செய்த செயல்களையே இங்கே குறிப்பிடுகின்றார். கண்டது என்ற சொல்லின் முன்னர் இறையனுபவத்தில் என்றதைச் சேர்த்துக்கொண்டால் பொருள் எளிதாக விளங்கும்.

இந்தக் கருத்துப் பின்னரும்,

அன்றே என்றன் ஆவியும்
உடலும் உடைமை எல்லாமும்
குன்றே அனையாய் என்னைஆட்
கொண்ட போதே கொண்டிலையோ

(திருவாச: 502)

என்று பாடுவதால் வலிமை பெறுதலைக் காணலாம். கண்டது செய்த பின்னரும் மிண்டுகின்ற நிலை ஏற்பட்டது என்றால், கண்டது செய்தலுக்குக் காரணம் அவன் திருவருளே என்பது பெறப்பட்டது.

தேகப் பிரக்ஞை இல்லாமல் பணிகளைச் செய்து வந்தாலும் ஒரோவழிச் சுயநினைவும், பொறிகளின் வெறியாட்டமும் வந்து தொல்லை தருதலை நினைந்து வருந்திய அடிகளார், பழைய திருப்பெருந்துறை அனுபவத்தை மீட்டும் தரவேண்டும் என்று வேண்டிக் கொள்ளும் முறையில் ‘பண்டு தந்தாற்போல் பணிசெய்யப் பணித்து என்னை ஆட்கொள்வாய்’ என்று வேண்டுகிறார்.

திருப்பெருந்துறையில் குருநாதர் நேரே எழுந்தருளி இவற்றைச் செய்தார். அதனையே மறுபடியும் வேண்டு கின்ற அடிகளார், ‘ஐயனே! நேரே வந்து அருள்செய்ய வேண்டும் என்ற இன்றியமையாமை இல்லை. அதற்குப் பதிலாக நின் தொண்டர்கள் யாரேனும் ஒருவர் மூலம் என்னை அழைத்தாலும் போதுமானது’ என்பார்போலக் ‘கூவித்து’ என்றார்.

‘ஐயனே! என் மனத்தில் தோன்றியுள்ள குதுகுதுப்பு (குறுகுறுப்பு), அம்மனம் ஒருநிலைப்படாத காரணத்தால் என் முன்னேற்றத்திற்குத் தடையாக உள்ளது. அதனைக் களைந்தருள்க’ என்கிறார்.

138. குதுகுதுப்பு இன்றி நின்று என் குறிப்பே
செய்து நின் குறிப்பில்
விதுவிதுப்பேனை விடுதி கண்டாய்
விரை ஆர்ந்து இனிய
மது மதுப் போன்று என்னை வாழைப்
பழத்தின் மனம் கனிவித்து
எதிர்வது எப்போது பயில்விக்
கயிலைப் பரம்பரனே 34

விதுவிதுத்தல்-விரைந்து ஆசைப்படுதல்.

*'கயிலையில் உள்ள பரம்பரனே! தவறு செய்கிறோம், நின் குறிப்பின்வழி வாழவில்லை என்ற குறுகுறுப்பு நெஞ்சில் இல்லாமல், என் விருப்பம்போல் செயல்களைச் செய்துவிட்டு, உன் ஆணையின்படியே வாழ்கின்றேன் என்று நெஞ்சைச் சமாதானம் செய்துகொண்டு உன்னை அடைவதற்கு விழைகின்றேன்! இத்தகைய போலியான என்னை விட்டுவிடாதே'.*

*'அன்று திருப்பெருந்துறையில் மிக எளிமையாக வந்து காட்சியளித்து, தேன்போன்ற இனிமையைப் புகட்டினாய். அதன் பயனாகக் கல்லாய் இருந்த என் மனம் கனியாய்க் கனிந்தது'.*

*'இன்றோ நீ வரவுமில்லை; அனுபவமாகிய தேனைத் தரவும் இல்லை. அதனால் என் மனம் மறுபடியும் கல்லாயிற்று. இதனைப் போக்க ஒரே வழிதான் உண்டு. நீ மதுமதுப்போன்று அதாவது நீரில் இனிய சுவையுடைய தேள் கலந்தது போன்று. என் எதிரே வந்து, என் மனத்தை வாழைப்பழம் போலக் கனிவித்தல் வேண்டும்' என்கிறார்.*

*'நீரும் தேனும்போல வரவேண்டும் என்பது நுண்மையான கருத்தை உட்கொண்டதாகும். நீர் எங்கும் எப்பொழுதும் முயற்சியின்றிக் கிடைப்பதாகலின் நீர்போன்று என்றார். அதாவது நான் எங்கு, எப்பொழுது, எந்நிலையில் உன் அருளை வேண்டினாலும் அங்கு, அப்பொழுது, அந்நிலையில் நின் அருள் நீர்போன்று கிடைக்கவேண்டும். இதன் மறுதலையாகத் தேன் குறிப்பிட்ட இடத்தில்தான் கிடைக்கும். அது எங்கோ மரத்தின்மேல் ஒரு கிளையில் இருக்கும். யாரோ ஒருவர் பெரு முயற்சியை மேற்கொண்டு இத்தேனை எடுத்து உண்பவருக்கு வழங்கவேண்டும். அதேபோன்று கயிலைப்*

பரம்பரனாக உள்ள நீ, ஒருவர் முயற்சியால் எட்ட அரிதானவன். ஆதலால். நீயே அருள்கூர்ந்து என் எதிரே வரவேண்டும்'.

நீருக்கு ஒரே ஒரு சுவைதான் உண்டு. அன்றியும் குடிக்கின்ற நேரத்தில் தாகத்தைத் தணிப்பது தவிர அருமருந்து ஆவது இல்லை. ஆனால், உண்ணும்போதும் பெருஞ்சுவை தந்து பின்னர் அதுவே மருந்தாகி உடலுக்கு நலன் பயப்பது தேன். நீ எதிரே வந்தால் அந்த நேரத்தில் உண்டான ஆனந்தம் தவிரப் பிறவிப் பிணியைப் போக்கும் மருந்தாகவும் உள்ளாய் என்ற கருத்தில் தேன் என்றார்.

வாழைப் பழம்போன்று கனிவித்து என்று சொல்வதிலும் ஓர் அருமைப்பாடு உண்டு. வாழைப் பழங்கள் பலவகைப்படுமேனும், பொதுவாகப் பச்சை, மஞ்சள் என்ற இரண்டு நிறங்களை உடையன. நன்கு பழுத்த நிலையிலும் பழுக்காத நிலையிலும் தோல்பகுதி பச்சையாகவோ மஞ்சளாகவோ இருக்கும். நன்கு கனிந்த நிலையிலும் உள்ளே உள்ள சதைப்பகுதி மென்மைத் தன்மை பெற்றுச் சுவை கூடிவிடுமே தவிர, புறப்பகுதியின் நிறத்தில் மாறுபாடு தோன்றுவதில்லை.

இந்த உவமையைக் கூறியதால் திருப்பெருந்துறை நிகழ்ச்சிக்கு முன்னும், திருப்பெருந்துறை நிகழ்ச்சியின் போதும், அது நிகழ்ந்து சிலகாலம் கழிந்த இப்பொழுதும் திருவாதவூரர் என்ற மனிதரின் உடலமைப்பில் எவ்வித மாறுபாடும் தோன்றவில்லை. ஆனால், பழம் கனிந்தது போலத் திருப்பெருந்துறை நிகழ்ச்சியில் அவர் மனம் கனிந்து விட்டது. பின்னர் அந்நிலைமை மாறியதால் இப்பொழுது அந்நிலை மீட்டும் வேண்டும் என்ற கருத்தை 'வாழைப் பழத்தின் மனங்கனிவித்து' என்று பாடுகிறார்.

139. பரம்பரனே நின் பழ அடியாரொடும்
என் படிறு
விரும்பு அரனே விட்டிடுதி கண்டாய்
மென் முயல் கறையின்
அரும்பு அர நேர் வைத்து அணிந்தாய்
பிறவி ஐவாய் அரவம்
பொரும் பெருமான் வினையேன் மனம்
அஞ்சிப் பொதும்பு உறவே 35

பரம்பரன்-மேலானவற்றிற்கெல்லாம் மேலானவன் முயற்கறையின் அரும்பு-முயலாகிய களங்கத்தினையுடைய பிறைமதி. அர-பாம்பு. நேர் வைத்து அணிந்தாய் என்றது பகை நீங்கத் தரித்தாய் என்பது குறித்து. ஐவாயரவம்- ஐந்தலைப்பாம்பு. பொதும்பு-மரச்செறிபு.

*திருப்பெருந்துறை நிகழ்ச்சியில் மீட்டும் அடிகளாரின் மனம் தோய்கின்றது. தில்லைக் கூத்தனே குருவடிவுடன் அமர்ந்திருக்கும் அந்தச் சூழலில், எதிரே இருந்தவர்கள் அக்கூத்தனின் பழைய அடியார்கள் அல்லரோ! அக்கூத்தன் மானுட வடிவுடன் வந்ததுபோல இந்தப் பழைய அடியார்களும் அந்த நாடகத்திற்கு ஏற்ப மானுட வடிவுதாங்கி அடியார்களாக வந்திருந்தார்கள்.*

*தம்மை வந்து வணங்கிய அடிகளாரைக் குருவானவர் அந்த அடியார்களிடையே அமர்வித்தார் அல்லவா? அதை நினைந்து இங்கே பேசுகிறார் அடிகளார்.*

*எதிரே இருந்த அடியார்கள் தூய்மையே வடிவானவர்கள்; இறைவன் திருவடியை விட்டு நீங்காதவர்கள். அவர்களிடையே, பூத உடலுடன் அமைச்சராக இருந்து எத்தனையோ காரியங்களைச் செய்த ஒருவர் அமர்த்தப்படுகிறார். அந்த விநாடியில் இவர் அமைச்சர் வேடத்தில் இருந்தாரே தவிர அடியார் வேடம் கூட இல்லையே! அவற்றையெல்லாம் நினைந்து 'பழ*

அடியாரொடும் என் படிறு விரும்பு அரனே' என்றார். படிறு என்பது வஞ்சகம் பொய் முதலியவற்றைக் குறிப்பதாகும். இவற்றை உடைய தம்மையும், தம்மோடு இவற்றையும் சேர்த்து ஏற்றுக்கொண்டதால் 'என் படிறு விரும்பு அரனே' என்றார். விரும்பு என்ற சொல் ஏற்றுக்கொள்ளல் என்ற பொருளைமட்டும் இங்கே தந்து நிற்கிறது.

ஐந்து பொறிகளும் ஒரே மனத்தின் உதவி கொண்டு செயற்படுதலின் 'ஐவாய் அரவம்' என்றார்.

140. பொதும்பு உறு தீப்போல் புகைந்து எரிய
புலன் தீக் கதுவ
வெதும்புறுவேனை விடுதி கண்டாய்
விரைஆர் நறவம்
ததும்பும் மந்தாரத்தில் தாரம் பயின்று
மந்தம் முரல் வண்டு
அதும்பும் கொழுந்தேன் அவிர் சடை
வானத்து அடல் அரைசே 36

நறவம்-தேன். தாரம்-ஓர்வகைப் பண். மந்தம்- தாழ்த்திப் பாடும் ஓசை. அதும்பும்-அழுந்தும்.

'பொதும்புறு தீ' என்பது காட்டுத்தீயைக் குறிப்பதாகும். 'உள்ளத்தை ஐம்புலன்களும் காட்டுத்தீப் போல் பற்றிக் கொள்ள, அத்தீக் கொடுமை தாளாமல் யானும் என்னுள்ளமும் வெதும்புகின்றோம். என்னை விட்டு விடாதே' என்கிறார்.

வெறும் தீ என்று கூறாமல் பொதும்புறு தீ என்று கூறியதில் நுணுக்கம் ஒன்றுண்டு, காட்டுத் தீயைப்பற்றி அறிந்தவர்களே அடிகளாரின் இந்த உவமையை நன்கு அனுபவிக்க முடியும். காட்டுத் தீக்கு ஒரு தனி இயல்பு உண்டு. ஓர் இடத்தில் பற்றி எரிகின்ற தீ, திடீரென்று

அணைந்துவிடும். அணைந்துவிட்டதாகவும், இனி அதனால் தீங்கொன்றும் இல்லை என்பதாகவும் நாம் அமைதி அடைந்துள்ள நிலையில், திடீரென்று அதே இடத்தில் மறுபடியும் பற்றிக்கொண்டு எரியும். ஓரிடத்தில் பற்றி அது பரவாமல் இருக்க, சுற்றியுள்ள பகுதிகளில் உள்ள மரங்களை வெட்டிச் சாய்த்து இடைவெளியை உண்டாக்குவார்கள். அகன்ற இடைவெளி இருத்தலின் தீ தொடர்ந்து எரிந்து அப்பகுதி வந்தவுடன் பற்றுவதற்கு வேறு மரமின்மையின் அணைந்துவிடும் என்று நினைப்பர். ஆனால், இங்கிருந்த ஒரு தீப்பொறி யார் கண்ணுக்கும் படாமல் காற்றின் உதவி கொண்டு, நெடுந்தூரத்தில் சென்று வீழ்ந்து அந்தப் பகுதியும் பற்றி எரியுமாறு செய்யும்.

இந்த இயல்புகளையெல்லாம், சேட்டை செய்யும் பொறி புலன்களுக்கும் ஏற்றிக் காண முடியும். துன்பம் செய்யும் ஒரு பொறி அல்லது புலன் திடீரென்று செயலிழந்து நிற்கும். அது அடங்கிவிட்டது என்றும் அதனால் நமக்கினித் தொல்லையில்லை என்றும் நினைத்து அமைதி அடைகின்ற நேரத்தில், திடீரென்று மிக்க உக்கிரத்தோடு அப்பொறியோ, புலனோ பெரும் துன்பத்தை விளைக்கும்.

தொடர்புடைய பொருளைக் கண்டோ, கேட்டோ, தொட்டோ, முகர்ந்தோ, சுவைத்தோ அனுபவிக்கின்ற வேளையில்தான் இத்துன்பம் விளைகின்றது என்று நினைத்தால், அது தவறு. மிக நீண்ட தூரத்தில், அடைய முடியாத இடத்திலுள்ள ஒரு பொருளைப் பற்றிக்கொண்டு இப் பொறி, புலன்கள் துன்பம் தருவதும் உண்டு. இவற்றை எல்லாம் மனத்திற் கொண்டே அடிகளார் இந்த உவமையைப் பயன்படுத்தினார்.

*வண்டு பாடும்பொழுது தார ஸ்தாயையிலும் மந்தர ஸ்தாயையிலும் பாடும் இயல்புடையது. எனவே, 'தாரம் பயின்று மந்தம் முரல் வண்டு' என்றார்.*

141. அரைசே அறியாச் சிறியேன் பிழைக்கு
அஞ்சல் என்னின் அல்லால்
விரை சேர் முடியாய் விடுதி கண்டாய்
வெள் நகைக் கரும் கண்
திரை சேர் மடந்தை மணந்த
திருப் பொன் பதப் புயங்கா
வரை சேர்ந்து அடர்ந்து என்ன வல் வினை
தான் வந்து அடர்வனவே 37

திரைசேர்மடந்தை-அலையோடு கூடிய கங்கை. புயங்கம்-பாம்பு. மணந்த-வணங்கிப்பொருந்திய. அடர்ந்து-நெருக்கி.

*'அரைசே! அறியாச் சிறியேனாகிய என் பிழையை மன்னித்து நீயே அஞ்சேல் என்று சொல்லாவிட்டால் என்னைச் சுற்றியுள்ள அவ்வினைகள் தாமே என்னை வந்து அடர்ந்துவிடும். ஆதலால், என்னை விட்டுவிடாதே' என்றார்.*

142. அடர் புலனால் நின் பிரிந்து அஞ்சி
அம் சொல் நல்லார் அவர் தம்
விடர் விடலேனை விடுதி கண்டாய்
விரிந்தே எரியும்
சுடர் அனையாய் சுடுகாட்டு அரசே
தொழும்பர்க்கு அமுதே
தொடர்வு அரியாய் தமியேன் தனி நீக்கும்
தனித் துணையே 38

நல்லார்-மகளிர். விடர்-பிளவு.

'அடர்புலன்' என்பது வினைத்தொகை. இவ்வாறு கூறுவதன் நோக்கம் பிறவிகள்தோறும் அடர்த்த (நெருக்கிய) இப்புலன்கள், இப்பிறவியிலும் அடர்கின்றன என்பதைக் குறிப்பதற்கே ஆகும். இதே நிலையில் மறுபிறவி எடுத்தாலும் அப்பொழுதும் என்னை அடர்க்கும் என்ற கருத்தில் அடர்புலன் என்று வினைத்தொகையாகக் கூறினார்.

இனி 'நிற்பிரிந்து' என்பது அடர் புலனுக்கும் அச்சத்திற்கும் இடையே நிற்கின்றது. குருநாதரைப் பிரியாது இருக்கும்போது அடர்புலன்கள் செயலிழந்தன. எனவே, உயிரோடு கூடிய அச்சம் என்பதும் அங்கு இல்லை. இனி இவை இரண்டும் அற்றம் பாாத்திருக்கும் கள்வர்போல் குருநாதர் திருவடியை விட்டு இவர் எப்பொழுது வரப்போகிறார் என்று புறத்தே காத்து நின்றன.

திருவடி சம்பந்தம் நீங்கியவுடன் இவை இரண்டும் தம்மைப் பற்றிக்கொண்டன என்று அழகாக எடுத்துக் கூறுகிறார் அடிகளார்.

புலன்கள் ஐந்தாயினும் அவை அனைத்தும் ஒன்றுசேர்ந்து பணிபுரிகின்ற இடம் காமத்திலேயே ஆகும். எனவே, திருவடி சம்பந்தம் நீங்கியவுடன் இதுவரை காத்துநின்ற ஐம்புலன்களும் ஒன்றுகூடி அடிகளார் உள்ளத்தில் பெண்ணிச்சையைத் தோற்றுவித்தன. ஏனைய உணர்ச்சிகளைக் காட்டிலும் பாலுணர்ச்சி வலிமையானதும், தவிர்க்க முடியாததும் ஆகும். ஆதலால், அதனை விளக்கமாகவே அடிகளார் கூறுகிறார்.

'சார்ந்ததன் வண்ணம் உயிர்' என்பது இந்நாட்டுச் சமயவாதிகள் கொள்கையாகும். இதனால் உயிர் என்பது ஏதாவது ஒரு பொருளைச் சார்ந்து நிற்குமே தவிரத் தனித்து நிற்கும் இயல்புடைத்தன்று என்பது

அருத்தாபத்தியால் பெற்றாம். தனு, கரண, புவன, போகங்களை உண்டாக்கிய இறைவன், இவற்றைப் பயன் படுத்திகொண்டு ஆன்மா முன்னேற்றம் அடையவேண்டும் என்ற கருத்தில் மனம், பொறி, புலன்களோடு கூடிய உடம்பை அதற்குத் தந்தான். மனம், பொறி, புலன்கள் என்பவற்றை அடக்கித் தன் வசப்படுத்தித் தன்னுடைய முன்னேற்றத்திற்குப் பயன்படுத்திக்கொள்ள வேண்டிய உயிர், பெரும்பாலும் அவ்வாறு செய்வதில்லை. இது நடைபெற வேண்டுமானால் இறையருளின் துணை இருந்தாலொழிய இதனைச் செய்யமுடியாது. ஆதலின், தனித்து நிற்கும் தம்மைத் 'தமியேன்' என்றார்.

மனம், பொறி, புலன்கள் ஆகிய இத்தனையும் அந்த உயிரைச் சுற்றியிருப்பினும் உயிரின் முன்னேற்றத்திற்கு இவை உதவவில்லை; ஆதலால், இவை உடனிருந்தும் பயனில்லை என்ற கருத்தில் 'தமியேன்' என்றார்.

இறைவனைத் தனித்துணை என்று கூறியுள்ளது ஆழ்ந்த பொருளை உடையது. 'தனி' என்ற சொல்லுக்கு ஒப்பற்ற என்ற ஒரு பொருளும், வேறொரு துணையில்லாமல் ஒற்றையாக நிற்கும் என்ற ஒரு பொருளும் உண்டு. பொறி, புலன்களின் அலைப்புத் தாங்காமல் நிற்கும் ஒருவருக்குத் துணையாக வரும் ஒருவர், எவ்வித அலைப்புக்கும் உட்படாமல் தனியராக இருப்பது சாலச் சிறந்ததாகும். எனவேதான், 'தமியேன் தனித் துணையே' என்றார்.

பொறி, புலன்கள் என்ற பெரும் பகைகளுக்கு அஞ்சி, தமியராக நிற்கும் ஒருவர் இரண்டை வேண்டி நிற்பர். முதலாவது தம் தனிமையைப் போக்கிக்கொள்ள ஒரு துணைவேண்டும் என்பதாகும். இரண்டாவது அத் துணையின் உதவி கொண்டு தம் பகையை வெல்ல விரும்புவதாகும்.

அடிகளாரைப் பொறுத்தமட்டில் இறைவனின் திருவடி, தனிமையைப் போக்கும் துணையாகவும், அவரது பகைகளை வெல்ல உதவும் உறுதுணையாகவும் இருந்தமையின் 'தனி நீக்கும் தனித் துணையே' என்றார்.

**143.** **தனித் துணை நீ நிற்க யான் தருக்கித்**
**தலையால் நடந்த**
**வினைத் துணையேனை விடுதி கண்டாய்**
**வினையேனுடைய**
**மனத் துணையே என்தன் வாழ்முதலே**
**எனக்கு எய்ப்பில் வைப்பே**
**தினைத்துணையேனும் பொறேன்**
**துயர் ஆக்கையின் திண் வலையே** **39**

தருக்கி-செருக்குற்று. வினைத்துணையேன்-வினையைத் துணையாகக்கொண்ட யான்.

இப்பாடலின் முதலடிக்கு வாலாயமாகக் கூறும் பொருளை விட்டுவிட்டு வேறுவகையில் சிந்திக்கலாமோ என்று தோன்றுகிறது. ஆன்மாக்களுக்கு என்றுமே இறைவன் துணையாக உள்ளான் என்பது பொதுவாகப் பலரும் அறிந்த ஒன்றாகும். தோன்றாத் துணையாக உள்ள அந்த இறைவன் திருப்பெருந்துறையில் தோன்றும் துணையாக வந்து தோன்றினான்.

குருவாக நின்றவர் 'கோலம் ஆர்தரு பொதுவினில் வருக' என்று ஆணையிட்டு மறைந்தார். மறைந்தவர் எங்கே சென்றார்? புறத்தே காட்சி தந்த குரு மறைந்து, அடிகளாரின் அகத்தே தோன்றினார். தோன்றியவர், அடிகளாரின் உடல், பொருள், ஆவி அனைத்தையும் ஏற்றுக்கொண்டு தம் ஆணையின்படி நடக்குமாறு செய்தார்.

இப்படி இருந்துங்கூட, இதனை அடிகளார் அறிந்திருந்துங்கூட, சில நேரங்களில், சில விநாடிகள் இவை அனைத்தும் மறக்கப்பட்டுவிட்டன. உள்ளத்தில் ஏற்பட்ட நிறைவுகூடத் தம் கல்வியாலும் முயற்சியாலும் வந்தது என்ற நினைவு அடிகளார் உள்ளத்தில் தோன்றியிருக்க வேண்டும்.

இத்தனை விபரங்களையும் குறிக்கவே 'தனித்துணை நீ நிற்க (என்னுள் நிலையாக நீ நிற்கவும், அதனை மறந்து) யான் தருக்கித் தலையால் நடந்தேன்' என்று பேசுகிறார்.

'துணையாக நீ நிற்கின்றவரையில் வினைகள் என்னை நெருங்க அஞ்சி ஒளிந்துகொண்டன. இப்பொழுது உன் துணையை மறந்தவுடன் ஒளிந்துகொண்டிருந்த வினைகள் என்னை நெருங்கி எனக்குத் துணையாக அமைந்த விட்டன' என்பதை அறிவிக்கவே 'வினைத்துணையேன்' என்றார்.

வினைகளால் சூழப்பெற்று, இனி என்னே உய்யுமாறு என்று எண்ணி நொந்த நிலையில், தாம் தனியன் என்பதை உணர்ந்த அடிகளார், இந்த இக்கட்டிலிருந்து விடுபடக் குருவின் திருவடிகளைப் பற்றுக்கோடாகக் கொண்டார். அத்திருவடிகள் இவர் தனிமையைப் போக்கும் துணையாகவும், வினைகளை வெல்ல உதவும் தனித் துணையாகவும் நின்றன.

ஆனாலும் என்ன கொடுமை! மனித மனத்தின் அடித்தளத்தில் நிற்கும் ஆணவம், தமியன் என்று நினைத்து அஞ்சியபொழுது செயலிழந்து அடங்கிக் கிடந்தது. தனிமை போக்கத் துணை வந்தவுடன் தனிமை என்ற அச்சம் போய்விட்டது. அச்சம் போனபின் அந்த ஆணவம் லேசாகத் தலைதூக்கிற்று. அச்சம் போனதால், தான் மெள்ளத் தலைதூக்க முடிந்தது என்பதை இந்த ஆணவம் மறக்கலாயிற்று. அம்மட்டோடு இல்லை. அச்சம் போகத்

தனித்துணை செய்த உதவியையும் மறக்கலாயிற்று. எல்லாவற்றையும் மறந்து, தானே தலைவன் என்ற எண்ணம் ஆணவத்திற்கு வளர்ந்தது. அனைத்தையும் செய்யவல்லவன் தான் என்ற நினைவு வளர்ந்து உறுதிப்படலாயிற்று. ஆணவத்தின் இந்த வெளிப்பாட்டைத் 'தலையால் நடத்தல்' என்று இன்றும் உலக வழக்கில் கூறுவதுண்டு.

திருவாதவூரர் மணிவாசகராக மாறி இறைப் பிரேமையில் தம்மை மறந்து நிற்கும்பொழுதே இதற்குரிய காரணத்தை எளிதில் புரிந்துகொண்டார். குதிரை வாங்கச் சென்ற அமைச்சர், அதிகாரத்தின் உச்சிக் கொம்பிலிருந்த அமைச்சர், எல்லாவற்றையும் மறந்து திருவருள் பெற்றவுடன் தாம் தமியர் என்பதை உணர்ந்தார். இதுவரை அவருடன் இருந்த கல்வி, செல்வம், அதிகாரம், இவற்றால் ஏற்படும் ஆணவம் முதலியவை கரைந்து ஒழிந்தமையால், தாம் தமியர் என்பதை உணரமுடிந்தது. இது எவ்வாறு நடைபெற்றது என்பதை நினைக்கத் தொடங்கியவுடன் இவை அனைத்திற்கும் காரணம் தனித்துணை அவன் என்பதை உணர்ந்துகொண்டார் என்பதே. அந்த நிலையைத்தான் இதற்கு முந்திய பாடலின் இறுதி அடி விளக்கமாகக் கூறிற்று.

மனித மனத்தின் விந்தைதான் என்னே! வெகு விரைவில் எதனையும் மறந்துவிடும் ஆற்றல் அந்த மனத்திற்கு உண்டு. அதுவும், ஆணவம் அழிவதற்குக் காரணமாக உள்ளவற்றை மனம் வெகுவிரைவில் மறந்துவிடும். மனத்தின் இந்தத் திருவிளையாடலுக்கு ஆணவமும் உதவி புரிகிறது.

பழமை மறக்கப்பட்ட நிலையில் ஆணவம் தலைதூக்கி நடனம் புரிகின்றது. ஆன்மாவின் வளர்ச்சிக்கு உதவிய தனித்துணையை, பொறி, புலன்களை வெல்வதற்கு உதவிய தனித்துணையை; இந்த ஆணவம் அழிவதற்கு உதவிய தனித்துணையை, மறந்துவிட்டது.

தன்னை அடக்கி ஆண்டு நிலைகுலையச் செய்த தனித் துணையை ஆணவம் பழிவாங்க நினைத்ததுபோலும். அதனாலேயே தனித்துணையை மறக்க இந்த ஆணவமும் உதவிற்று.

இதனால் தனித்துணைக்கு எவ்விதக் கேடும் இல்லை. அது என்றும் தன் நிலை மாறாது. ஆதலின், 'தனித்துணை நீ நிற்க' என்றார். அது மறக்கப்பட்ட நிலையில் ஆணவம் விஸ்வரூபம் எடுத்தது; ஆதலின், 'யான் தருக்கித் தலையால் நடந்தேன்' என்றார்.

குருவருள் பெற்ற அடிகளாருக்கு, என்றோ ஒருநாள் ஒரு விநாடியின் ஆயிரத்தில் ஒருபகுதி நேரத்தில், இது நிகழ்ந்தது போலும். தனித்துணையை மறந்தவுடன் மனம் விழித்துக்கொண்டது. பொறி, புலன்கள் துள்ளி எழுந்தன. இவற்றின் துணை கிடைத்தவுடன் 'யான்' என்ற அகங்காரம் விஸ்வரூபம் எடுத்துத் தலையால் நடக்கலாயிற்று.

விநாடியின் ஆயிரத்தில் ஒரு பாகத்தில் நடைபெற்று முடிந்த இச் செயலைச் சென்ற பாடலின் கடைசி அடியிலும், இந்தப் பாடலின் முதலடியிலும் அடிகளார் பேசியுள்ளார்.

**144.** வலைத் தலை மான் அன்ன நோக்கியர்
நோக்கின் வலையில் பட்டு
மிலைத்து அலைந்தேனை விடுதி கண்டாய்
வெள் மதியின் ஒற்றைக்
கலைத் தலையாய் கருணாகரனே
கயிலாயம் என்னும்
மலைத் தலைவா மலையாள் மணவாள
என் வாழ் முதலே 40

மிலைத்து-மருண்டு ; கதறி எனவுமாம்.

இப்பாடலின் முதலடி சற்றுக் குழப்பத்தைத் தருவ தாகும். வலையின்கண் அகப்பட்ட மானைப்போன்ற நோக்கியர் என்று பலரும் பொருள் கண்டுள்ளனர். இவ்வாறு பொருள்கொள்வதில் ஒரு சிக்கல் எழுகின்றது. மானுக்குள்ள மருண்ட பார்வை நீங்கிவிட, வலையில் பட்ட மானின் பார்வை பரிதாபத்தையும், ஆற்றறாமை யையும் வெளிப்படுத்துகின்ற பார்வையாகும். இத்தகைய பார்வையுடைய பெண்கள் என்று பொருள் கூறினால், அது பொருந்தாமை எளிதில் விளங்கும். இச்சிக்கலைப் போக்கப் பின்வருமாறு சொற்களை அமைத்துக் கொள்வது பொருத்தமுடையது போலத் தோன்றுகிறது:

'மான் அன்ன நோக்கியர் நோக்கின் வலையிற்பட்டு, வலைத்தலை மான் அன்ன மிலைத்து அலைந்தேனை' என்று கொள்வதில் 'மான் அன்ன' என்ற சொற்கள் இருமுறை பயன்படுத்தப்பெறுகின்றன. முதல் 'மான் அன்ன' என்பது பெண்களுக்கும் இரண்டாவது 'மான்அன்ன' என்பது அடிகளாருக்கும் சென்று பொருந்துவதாகும்.

'நோக்கின் வலையிற்பட்டு' என்பதால் இப் பெண்களின் நோக்கம், நோக்கப்படுபவரைச் சுற்றி வலைபோல் பின்னி அவரைச் செயலிழந்து நிற்கச் செய்கிறது என்பதாம். அவ்வாறு செய்யப்பெற்றமையால் வலையிற்பட்ட மானாக அடிகளார் ஆகி, மீண்டுவரும் நெறி அறிய முடியாமல் பரிதாபமாக விழிக்கின்றார் என்பதாம்.

'வாழ்முதல்' என்பது வாழ்க்கையின் மூலதனம் என்ற கருத்தைக் குறிப்பதாகும்.

145. முதலைச் செவ் வாய்ச்சியர் வேட்கை
வெந்நீரில் கடிப்ப மூழ்கி
விதலைச் செய்வேனை விடுதி கண்டாய்
விடக்கு ஊன் மிடைந்த
சிதலைச் செய் காயம் பொறேன் சிவனே
முறையோ முறையோ
திதலைச் செய் பூண் முலை மங்கை பங்கா
என் சிவ கதியே 41

முதலைச் செவ்வாய்ச்சியர்-முதலைபோல கொண்டதை விடாது பற்றிநிற்கும் மகளிர். வேட்கை வெந்நீர்-காமநீர். வெம்-விருப்பம்; கொடுமை. கடிப்ப-இதுவும் அங்ஙனமே மணப்ப வெறுக்க என இருபொருள் தருதல் காண்க. விதலை-நடுக்கம். விடக்கு ஊன்-தசைத்திரள். சிதலை-நோய். காயம்-உடல். திதலை -தேமல்.

*'சிவந்த வாயினையுடைய மகளிராகிய முதலை கடிக்க, அவர்கள்மேல் கொண்ட வேட்கை என்னும் நீர்ச்சுழலில் அகப்பட்டு நடுங்குகின்றவனாகிய என்னை விட்டுவிடாதே' என்கிறார்.*

146. கதி அடியேற்கு உன் கழல் தந்தருளவும்
ஊன் கழியா
விதி அடியேனை விடுதி கண்டாய்
வெள் தலை முழையில்
பதி உடை வாள் அரப் பார்த்து இறை
பைத்துச் சுருங்க அஞ்சி
மதி நெடு நீரில் குளித்து ஒளிக்கும்
சடை மன்னவனே 42

ஊன்-உடல். வெண்டலை முழை-கபாலத்திலுள்ள ஓட்டைகள். பதியுடை வாளரா-மறைந்திருக்கின்ற பெரும்பாம்பு. இறை பைத்து-படமெடுத்து.

*'என் உயிருக்குக் கதியாகவுள்ள உன் திருவடிகளைத் திருப்பெருந்துறையில் நீ எனக்கு அருள் செய்தபொழுதே, இந்த ஊன் உடம்பை நான் அழித்திருக்க வேண்டும். அவ்வாறு செய்யவில்லை எனினும் இப்பொழுது என்னை விட்டுவிடாதே' என்றவாறு.*

**147.** மன்னவனே ஒன்றும் ஆறு அறியாச்
சிறியேன் மகிழ்ச்சி
மின்னவனே விட்டிடுதி கண்டாய்
மிக்க வேத மெய்ந் நூல்
சொன்னவனே சொல் கழிந்தவனே
கழியாத் தொழும்பர்
முன்னவனே பின்னும் ஆனவனே
இம் முழுதையுமே 43

ஒன்றுமாறுறியா-பொருந்துதலை அறியாத. ஒன்றும் மாறு அறியா-ஒன்றும் மாறுபடுதலை அறியாத எனினுமாம். சொல்-சொல்லின் எல்லையை. கழியாத் தொழும்பர்-விட்டு நீங்காத அடியார்கள்.

*'மன்னவனே! திருப்பெருந்துறையில் உன்னைக் கண்டும், அடியார்கள் உன் திருவடியோடு ஒன்றியிருத்தலைக் கண்டும்கூட உன் திருவடிகளில் ஒன்றிவிடும் வழியை அறியாமல், இவ்வுலகிலேயே இந்தப் பூத உடலுடன் தங்கிவிட்ட எனக்கும், ஒரு சிலநேரம் மின்னல்போல் தோன்றி மகிழ்ச்சியைத் தந்தவனே, என்னை விட்டுவிடாதே'.*

*'வேதத்தைச் சொற்களால் அருளியவனே! எனினும், அச்சொற்களுக்கும் அவை குறிக்கும் பொருள்களுக்கும் அப்பாற்பட்டு நிற்பவனே! உன் திருவடியை விட்டுப் பிரியா அடியார்களுக்கு முன் நின்று அவர்களை வழிநடத்துபவனே! அஞ்ஞான இருள் சூழ்ந்த மந்த*

மதிகளுக்கும் பின்னே நின்று அவர்களைத் தாங்குபவனே! அனைத்துமாகி இருப்பவனே! என்னைக் கை விட்டுவிடாதே' என்கிறார்.

148. முழுது அயில் வேல் கண்ணியர் என்னும்
மூரித் தழல் முழுகும்
விழுது அனையேனை விடுதி கண்டாய்
நின் வெறி மலர்த் தாள்
தொழுது செல் வானத் தொழும்பரில் கூட்டிடு
சோத்தெம் பிரான்
பழுது செய்வேனை விடேல் உடையாய்
உன்னைப் பாடுவனே 44

விழுது-நெய். சோத்து-வணக்கம். தோத்திரம் சோத்திரமாகி, சோத்தமாகி, அம்கெட்டு, சோத்து என நின்றது.

'வேல்போன்ற கண்ணினை உடைய மகளிர்மேல் கொண்ட ஆசையென்னும் நெருப்பு என்னை முழுவதுமாக அமிழ்த்திவிட அந்நெருப்பில் வெண்ணெய்போன்று உருகுகின்றேன். என்னை விட்டுவிடாதே'.

'அடியேன் உன்னைப் பாடுகின்ற காரணத்தால், பல குற்றங்களைச் செய்பவன் ஆயினும், விட்டுவிடாதே' என்கிறார்.

இப்பாடலில் மூன்றாவது அடியில் வரும் 'சோத்தெம் பிரான்' என்ற சொற்கள் ஒரு குறிப்பிட்ட பொருளை உடையன. ஈ, தா, கொடு என்ற சொற்கள் கொள்வோர் கொடுப்போர் வேற்றுமையை உணர்த்துகின்றன. அதுபோல, வணக்கம் என்ற பொருளையுடைய 'சோத்து' என்ற சொல் இழிந்தோர், தம் தலைவனுக்குச் செய்யும் வணக்கத்தைக் குறிப்பதாகும்.

149. பாடிற்றிலேன் பணியேன் மணி நீ
ஒளித்தாய்க்குப் பச்சூன்
வீடிற்றிலேனை விடுதி கண்டாய்
வியந்து ஆங்கு அலறித்
தேடிற்றிலேன் சிவன் எவ் இடத்தான்
எவர் கண்டனர் என்று
ஓடிற்றிலேன் கிடந்து உள் உருகேன்
நின்று உழைத்தனனே 45

பச்சூன்-பசிய ஊனாகிய உடல். உழைத்தனன்-வருந்தினேன்.

*'ஐயனே! ஒளி பொருந்திய மணிபோன்று குருவாகி நின்ற நீ மறைந்தபொழுது இந்த உடம்பை விட்டேனில்லை' என்கிறார்.*

150. உழைதரு நோக்கியர் கொங்கைப்
பலாப்பழத்து ஈயின் ஒப்பாய்
விழைதருவேனை விடுதி கண்டாய்
விடின் வேலை நஞ்சு உண்
மழை தரு கண்டன் குணம் இலி
மானிடன் தேய் மதியன்
பழைதரு மா பரன் என்று என்று
அறைவன் பழிப்பினையே 46

உழை-மான். மழைதரு கண்டன்-மழைபோலக் கரியகண்டன். மானிடன்-மானை இடப்பக்கமுடையவன். தேய்மதி-பிறைமதி. பழைதரு மாபரன்-பழைமையைத் தருகின்ற பெரிய ஆண்டி.

*பலாவின் பெரிய சுளையில் சிக்கிக்கொண்ட ஈ, உண்ணுமளவு உண்டபிறகு வெளியே புறப்பட நினைத்தாலும் புறப்பட முடியாதபடி அதன் கால்கள் பழத்தின் பசைத்தன்மையில் ஒட்டிக்கொள்கின்றன. மகளிரிடம் ஈடுபாடு கொண்டவர்கள், அனுபவித்த பிறகும் அந்த எண்ணத்திலிருந்து விடுபடாமல் அதிலேயே சிக்கித்*

தவிப்பர். அத்தகைய தம்மை விட்டுவிடவேண்டாம் என்கிறார் அடிகளார்.

சென்ற நாற்பத்தைந்து பாடல்களில் தம் சிறுமையைக் கூறி எந்த நிலையிலும் தம்மைக் கைவிட்டுவிடவேண்டாம் என்று அடிகளார் வேண்டிக்கொண்டதைக் கண்டோம்.

பலமுறை வேண்டியும் ஒருவர் இரங்கவில்லையானால் மனத்தில் ஓரளவு சலிப்புத்தட்டுதலும், அவரைக் குறை கூறுதலும் மனித இயற்கை.

அடிகளார் சராசரி மனித மனோநிலையிலிருந்து பலப்பல படிகள் மேலே சென்றுவிட்டவர். ஆதலின், தமக்கு இரங்காத இறைவனைக் குறை கூற அவரால் முடியாது. அதே நேரத்தில் குறை கூறவும் வேண்டும் என்ற எண்ணமும் மனத்தில் எங்கோ ஒரு மூலையில் ஒளித்திருக்க வேண்டும். இத்தகைய நிலையில் இரட்டுற மொழிதல் என்னும் உத்தியைக் கையாண்டு மிக அற்புதமாகப் பாடலின் பின்னிரண்டு அடிகளை அமைக்கின்றார்.

மேலோட்டமாகப் பார்ப்பதற்கு இறைவனைப் பழித்துப் பேசுவதுபோலக் காணப்பெற்றாலும் சற்று நின்று நிதானித்தால் குறைகூறுவதாகக் காணப்பெறும் இச்சொற்கள் உண்மையில் அவனுடைய பெருமையைக் கூறுவனவாகவே அமைந்துள்ளதை அறியமுடியும்.

'வேலை நஞ்சு உண்(பவன்)' என்பது நஞ்சையுண்ணும் பயித்தியக்காரன் என்ற பொருளைத் தருகிறது. அதன் உண்மைப் பொருள் ஆலகாலத்தை உண்டு பிரபஞ்சத்தைக் காத்தவன் என்பதாகும்.

'மழைதரு கண்டன்' என்பது சிவந்த மேனியில் கரிய நிறமாகிய அழுக்கை வைத்திருப்பவன் என்பது முதலாவதுபொருள். 'நீலகண்டாய' என்று வேதமே கூறும் நீலகண்டன் என்பது இரண்டாவது பொருள்.

'குணமிலி' என்பதற்கு எந்த நற்குணமும் இல்லாதவன் என்பது முதலாவதுபொருள். தாமச, இராஜச, சத்துவ என்ற முக்குணங்களையும் கடந்து நிற்பவன் என்பது உண்மைப்பொருள்.

'மானிடன்' என்பதற்கு குணங்குறி கடந்த மூலப் பொருளைத் தாழ்ந்த மானிடன் என்று குறிப்பது முதலாவது பொருள். இறப்ப உயர்ந்தவர் கருணை காரணமாக மானிட குருவாக வந்தார் என்பது ஒரு பொருள்; மான்போன்ற உமாதேவியை உடையான் என்பது ஒருபொருள்; மானை இடக்கையில் உடையானை என்பதும் ஒரு பொருள். இவை மூன்றும் அவன் பெருமையைக் கூறியவாறாயிற்று.

'தேய்மதியன்' என்பதற்கு புத்தி குறைந்தவன் என்பது முதலாவது பொருள். மூன்றாம் பிறைச்சந்திரன் தன்பால் சரணமடைய, அவனை ஏற்றுத் தலையில் சூடிக் கொண்டான் என்று, சரணாகதன் என அவன் பெருமை கூறியது இரண்டாவது பொருளாகும்.

'பழை தரு மாபரன்' என்பதற்கு மா அபரன் என்று பிரித்துப் பொருள் கொண்டால் பழமையான, மிகக் கீழானவன் என்பது முதலாவதுபொருள். முன்னைப் பழம்பொருட்கும் முன்னைப் பழம்பொருளாய், மிக உயர்ந்த பரத்தின் தலைவன் ஆகவும் உள்ளான் என்பது உண்மைப் பொருளாகும்.

151. பழிப்பு இல் நின் பாதப் பழம் தொழும்பு
எய்தி விழ பழித்து
விழித்திருந்தேனை விடுதி கண்டாய்
வெண் மணிப் பணிலம்
கொழித்து மந்தார மந்தாகினி
நுந்தும் பந்தப் பெருமை

தழிச் சிறை நீரில் பிறைக் கலம்
சேர்தரு தாரவனே 47

பணிலம்-சங்கு. வெண்மணி-முத்து.. மந்தாகினி-கங்கை. நுந்தும்-செலுத்தும். தழிச்சிறைநீரில்-தழுவிய பக்கங்களையுடைய தேவகங்கையில். பிறைக்கலம்-பிறையாகிய தோணி. பழிப்பு இல் நின் பாதப் பழந் தொழும்பு-புகழப்படுகின்ற நின் திருவடிக்கு அடிமை. மந்தாரம்-மந்தார மலர்

*திருவடிப்பேறு எய்த முடியாதவர்கள்கூட, தம் வினையை நொந்துகொள்வார்களே அன்றி, அத் திருவடியைப் பழிப்பதில்லை. ஆதலின் 'பழிப்பு இல் நின் பாதம்' என்றார்.*

*'பழம்தொழும்பு' என்ற தொடரால் குருநாதருடன் இருந்த பழைய அடியார்களைக் குறிப்பிடுகின்றார்.*

*'தொழும்பு எய்தி' என்றதால் அந்த அடியார் கூட்டத்தினிடையே சில நேரம் இருக்கச்செய்த சிறப்பைக் கூறினாராயிற்று.*

*'விழப் பழித்து விழித்து இருந்தேனை' என்றதில் உள்ள 'விழ' என்ற சொல் அந்த அடியார் கூட்டத்தின் உடன் செல்லாமல் தாம் தனியே விடப்பட்டமையைக் குறிப்பதாகும்.*

*விடுபட்டுப்போனதற்குத் தாமும், தம் பொய்யுமே காரணம் என்று நினைந்து பாடியுள்ளமை காண்க. எனவே, தம்மைத் தாமே பழித்துக்கொண்டமையைப் 'பழித்து' என்ற சொல்லால் கூறினார்.*

*'விழித்திருந்தேனை' என்பதற்குச் செய்வதறியாது விழித்துக்கொண்டிருந்தேன் என்பது ஒரு பொருள். அன்றியும் விழித்துக்கொண்டே இருந்தும்கூடத் தம் கவனக் குறைவால் விழ நேரிட்டது என்றதால், தம்மைத் தாமே பழித்தல் இயல்பாயிற்று என்பது மற்றொரு பொருளாகிறது.*

152. தாரகை போலும் தலைத் தலை மாலை
தழல் அரப் பூண்
வீர என்தன்னை விடுதி கண்டாய்
விடின் என்னை மிக்கார்
ஆர் அடியான் என்னின் உத்தரகோச
மங்கைக்கு அரசின்
சீர் அடியார் அடியான் என்று
நின்னைச் சிரிப்பிப்பனே 48

தாரகை-நக்ஷத்திரம். சிரிப்பிப்பன்-நகைக்கும்படி செய்வேன்.

*'விண்மீன்களைப்போன்ற கபாலங்களையும், தழல் போன்ற கொடிய பாம்புகளையும் அணிந்த வீரனே' பயித்தியக்காரன்போல் திரியும் என்னைப் பார்த்து, நீ யாருடைய அடியவர் என்று பெரியோர்கள் 'மிக்கார்' கேட்டால், திருஉத்தரகோசமங்கையில் உள்ள சிவபெருமானின் அடியவர்கட்கு அடியவன் என்று நான் சொன்னவுடன் அவர்கள் சிரிப்பார்கள்'.*

*'உன் அடியவனாகிய நான் இந்த நிலையில் இருப்பது உனக்குத்தான் அவமானம். ஆகவே, அவர்கள் சிரிப்பதற்கு நான் காரணமாக இருப்பேன்' என்றவாறு.*

153. சிரிப்பிப்பன் சீறும் பிழைப்பை
தொழும்பையும் ஈசற்கு என்று
விரிப்பிப்பன் என்னை விடுதி கண்டாய்
விடின் வெம் கரியின்
உரிப் பிச்சன் தோல் உடைப் பிச்சன் நஞ்சு
ஊண் பிச்சன் ஊர்ச் சுடுகாட்டு
எரிப் பிச்சன் என்னையும் ஆளுடைப்
பிச்சன் என்று ஏசுவனே 49

கரியின் உரிப்பிச்சன்-யானைத்தோலைப் போர்த்திய பித்தன். தோலுடைப் பிச்சன்-புலித்தோலை உடுத்த பித்தன். நஞ்சு ஊண் -நஞ்சாகிய உணவு.

முந்தைய பாட்டில் 'சிரிப்பிப்பன்' என்று கூறியவர் அதைக் கேட்டு நாணித் தனக்கு அருள்செய்வான் என்று கருதினார். அது நடைபெறவில்லை ஆதலின் உன்னை நேரடியாக ஏசுவேன் என்று மனக்குமுறலை வெளியிடுகின்றார்.

'ஐயனே! என்னை விட்டுவிடுவாயேயானால் நான் என்ன செய்வேன் தெரியுமா? திருப்பெருந்துறையில் பலருங் காண என்னை ஏற்றுக்கொண்டு, பின்னர் வெறுத்து ஒதுக்கினாய். இப்பிழையைப் பலருக் கேட்கச் சொல்லிச் சிரிப்பிப்பேன்'.

'என்னுடைய அடிமைத்திறம் முழுவதும், என் பணி முழுவதும் ஈசனுக்குத்தான் என்று சொல்வேனேயானால், அதைக் கேட்பவர்கள் அப்படியிருந்தும் "உன் நிலை இப்படி உள்ளதே" என்று சொல்லி, என்னைப் பணிகொண்ட உன்னைத்தான் எள்ளிச் சிரிப்பார்கள்'.

'இத்தோடு நில்லாமல் யானைத் தோலைப் போர்வையாகப் போர்த்த பயித்தியக்காரன்; புலித்தோலை அணியும் பயித்தியக்காரன்; நஞ்சையே உணவாகக் கொள்ளும் பயித்தியக்காரன்; ஊர்ச் சுடுகாட்டில் எரியின் இடைநின்று ஆடும் பயித்தியக்காரனாகிய இவன்தான் என்னையும் ஆண்டுகொண்டான் என்று ஊரறிய உன்னை ஏசுவேன்' என்கிறார்.

**154.** ஏசினும் யான் உன்னை ஏத்தினும்
என் பிழைக்கே குழைந்து
வேசறுவேனை விடுதி கண்டாய்
செம் பவள வெற்பின்
தேசு உடையாய் என்னை ஆளுடையாய்
சிற்றுயிர்க்கு இரங்கிக்
காய் சின ஆலம் உண்டாய் அமுது
உண்ணக் கடையவனே 50

குழைந்து-இளகி. வேசறுவேன்-வருந்துவேன். தேசு-ஒளி. காய்சின ஆலம்-எல்லாரையும் வருத்திய கோபத்தையுடைய விஷம். கடையவன்-எல்லார்க்கும் இறுதியாக அழியாது கடைசியாக இருப்பவன்.

*'ஐயனே! உன்னை ஏத்தியபோதும், இடையில் சில பாடல்களில் ஏசியபோதும் என் மனத்தின் அடித்தளத்தில் நின்மாட்டு நிறைந்த அன்பிருந்ததே தவிர வேறில்லை. அன்பின் அடிப்படையில் சொல்லளவில் ஏசினாலும் ஏத்தினாலும் எவ்விதத் தவறுமில்லை.'*

*'நின் அடியார் கூட்டத்தோடு செல்லாமல் இவ்வுலகிடை உடலோடு தங்கிவிட்ட என் தவற்றை நினைந்து மனங்குழைந்து வேசறுகின்றேன் (பெருந்துயரம் அடைகின்றேன்)' என்கிறார்.*

*'தம் பிழையை நினைந்து வருந்தும் ஒருவரை மன்னித்து ஏற்றுக்கொள்ளுதல் பெரியோனாகிய நினது கடமையல்லவோ' எனவே, என்னை விட்டுவிட வேண்டா.*

*'ஐயனே! எப்பிழை செய்தாலும் மன்னிப்பதுதான் உன் இயல்பு என்பதை நீ நஞ்சுண்டதால் அறிகின்றேன். நின்னை மதியாது அமுதைக் கடைய முற்பட்ட தேவர்கள் (சிற்றுயிர்), நஞ்சைக் கண்டு அலறி அடித்துக்கொண்டு நின்னைச் சரணமடைய, அவர்கள் செய்த பெரும்பிழையை மன்னித்தாய். அவர்கள் அமுது உண்பதற்காக, நீ அந்த நஞ்சை உண்டாய். அத்தகைய கருணைக் கடலான நீ, யான் செய்த சிறு பிழைகளைக் கண்டு வெகுள மாட்டாய் என்றே நம்புகிறேன். அன்றியும் என் பழைய பிழைகளை நினைந்து வருந்தி மனங்குழைந்து அழுகின்றவனாகிய என்னை மன்னித்து ஏற்றுக்கொள்வது உனது கடமை யன்றோ!' என்று முடிக்கின்றார்.*

# 7. திருவெம்பாவை

சங்க காலம் முதலே தைந்நீராடல் முதலிய பெயர்களில் இடம்பெற்றுவந்துள்ள ஒருவகைப் பாடலே பிற்காலத்தில் பாவைப் பாட்டாக மலர்ந்தது என்று கூறுவதில் தவறில்லை. திருப்பாவை, திருவெம்பாவை என்ற இரண்டிலும் கன்னிப் பெண்கள் மார்கழி மாதத்தில் விடியற்காலை நேரத்தில் ஒருவரை ஒருவர் எழுப்பிக் கொண்டு சென்று, குளத்தில் நீராடி, இறைவனை வழிபடுவது பேசப்பெறுகிறது. இப்பாடல்களில் வரும் பாவை என்பதற்குப் பலரும் பல விதமாகப் பொருள் கூறுவர். எது எவ்வாறாயினும் கன்னிப் பெண்கள் எதிர்காலத்தில் தங்கள் மனத்திற்கேற்ற கணவனை அடையவேண்டும் என்று விரும்புவது இயற்கை. அன்றியும் நாடு முழுவதிலும் மழை பெய்து நாடு செழிக்க வேண்டும் என்று வேண்டுவதும் பொருத்தமானதே ஆகும்.

தங்களுக்கு நல்ல கணவன் வேண்டும் என்று விரும்புவது தன்னலமாகும். நாட்டில் மழை பெய்ய வேண்டும் என்று வேண்டுவது பொது நலன் பேணுவதாகும். அந்த இளமைப் பருவத்திலேயே தன்னலத்தோடு பொது நலத்தையும் பேணும் இயல்பு அவர்களுள் வளர்வது சிறப்புடையதாகும்.

மனத்திற்கேற்ற கணவன்மார் வேண்டுமென்று இறைவனை வழிபடும்போதுகூட 'எம் கொங்கை நின் அன்பர் அல்லார் தோள் சேரற்க' (திருவாச:173) என்று வேண்டுவது ஆழ்ந்த சிந்தனைக்குரியதாகும். இறைவன் மாட்டு அன்பு செய்பவர்கள் தம் கணவராக அமையவேண்டும் என்றால், அதன் பொருள் என்ன? இறைவன்மாட்டு முழு அன்பு செய்யும் அடியார்கள்

தன்னலத்தை அறவே துறந்து எல்லா உயிர்களிலும் இறைவனைக் காண்பவர்களாகவும் எல்லா உயிர்கட்கும் அன்பு செய்பவர்களாகவும் இருத்தல் ஒருதலை. எனவே அத்தகையவர்களே தமக்குக் கணவராக அமையவேண்டும் என்று அவர்கள் விரும்புவதிலேயே அவர்கள் மனப்பாங்கை அறிந்துகொள்ள முடிகிறது. இத்தகைய கணவன்மார்கள் தங்களுக்கு வேண்டும் என்று கேட்பது தன்னலமாக இருக்கலாம். அத்தகையவர்களை அடைந்த பிறகு இப்பெண்களும் அனைத்து உயிர்களுக்கும் அன்பு செய்பவர்களாக மலர்வது உறுதியாகும்.

வையை ஆற்றில் தைந் நீராடும் பகுதி பரிபாடலில் பேசப்பெறுகிறது. அப்பகுதியில் சிற்றின்பக் கலப்பு இருப்பதை மறுத்தற்கு இல்லை. அப்படித் தொடங்கிய இந்நீராடற்பாடல் முழு வளர்ச்சி அடைந்து மணிவாசகர் காலத்தில் வேற்றுருவை அடைகின்றது.

'பைங்குவளைக் கார் மலரால்' (திருவாச:167) என்று தொடங்கும் பாடல், அதுவரை அவர்கள் அன்றாடம் நீராடும் குளம், இப்பொழுது, இறைவன்-இறைவி வடிவாகக் காட்சியளிக்கத் தொடங்கிவிட்டது என்பதைத் தெளிவாக எடுத்துக் காட்டுகிறது.

அம்மானை, ஊசல் போன்று பாவைப் பாடலும் இளஞ்சிறுமியரின் விளையாட்டுப் பாடலாகத்தான் தோன்றியிருக்க வேண்டும். சிறுமியரைப் பொறுத்தமட்டில் அவர்கள் பருவமடைந்த பிறகு வெகுவிரைவில் அறிவு முதிர்ச்சி பெற்றுவிடுகின்றனர் என்பது நாமறிந்த உண்மை. இந்த வளர்ந்த வயதுடையவர்களையே பாவைப்பாட்டு குறிப்பிடுகின்றது என்று நினைப்பதில் தவறில்லை. அதனால்தான் தங்களுக்கு நல்ல கணவர் வேண்டுமென்று தொடங்குகின்ற அவர்களது வேண்டுகின்ற மனநிலை, இறுதியில் எங்கும் எவ்விடத்திலும் உமையொருபாகனைக் காணுகின்ற காட்சியாக மலர்வதைக் காண்கிறோம்.

*ஆற்றிலோ குளத்திலோ குளிக்கச்சென்ற இவர்கள் மணலில் ஒரு பாவை வடிவம் அமைத்து அதை வழிபட்ட பின்னர் நீராடலைச் செய்திருக்க வேண்டும். நாளாவட்டத்தில் இந்தப் பழக்கம் விரிவடைந்து சைவம், வைணவம் இரண்டிலும் இரண்டு வேறுபட்ட முறைகளில் வளர்ந்தது போலும். 'நாமும் நம் பாவைக்குச் செய்யும் கிரிசைகள் கேளீரோ' என்று வரும் திருப்பாவைப் பாடலும் 'நெய்உண்ணோம் பால் உண்ணோம் மலரிட்டு நாம் முடியோம்' (நாலாயிர: 475) என வரும் அப்பாடல் பகுதியும் வைணவ சமயத்தில் இப்பாவை வழிபாடு வளர்ந்த முறையைத் தெரிவிக்கின்றன.*

*சைவத்தைப் பொறுத்தமட்டில் பாவை வழிபாடு வெறும் பெயரளவில் நின்றுவிட்டதை அறிகின்றோம்.*

**155.** **ஆதியும் அந்தமும் இல்லா அரும் பெரும்**
**சோதியை யாம் பாடக் கேட்டேயும் வாள் தடம் கண்**
**மாதே வளருதியோ வன் செவியோ நின் செவி தான்**
**மா தேவன் வார் கழல்கள் வாழ்த்திய வாழ்த்து ஒலி போய்**
**வீதிவாய்க் கேட்டலுமே விம்மி விம்மி மெய்ம்மறந்து**
**போது ஆர் அமளியின்மேல் நின்றும் புரண்டு இங்ஙன்**
**ஏதேனும் ஆகாள் கிடந்தாள் என்னே என்னே**
**ஈதே எம் தோழி பரிசு ஏல் ஓர் எம்பாவாய்** **1**

போதார் அமளி-பூப்படுக்கை. ஏதேனும் ஆகாள்-பயன்படாது கிடந்தாள். ஏல் ஓர் எம்பாவாய்-எம்முடைய பாவைபோல்பவளே இதனை ஏற்றுக்கொள் ஆராய்ந்துபார்.

*எவ்வளவு ஆழ்ந்த உறக்கமாயினும் பக்கத்தில் சத்தம் கேட்டால் உடனே எழுந்துகொள்வதுதான் மனித இயற்கை. தூக்கக் கலக்கத்தில் ஓசை வந்த திசையையோ அந்த ஓசையை உண்டாக்கியவர்கள் யார் என்பதையோ அறியமுடியாது. கண்ணாகிய பொறிக்கு இல்லாத சில இயல்புகள் செவிப்பொறிக்கு உண்டு.*

சென்று பற்றும் பொறியாகிய கண் சிறப்புடையதே ஆயினும், மூடியிருக்கும் கண் அதனை உடையவன் விரும்பினாலன்றித் திறந்துகொள்வதில்லை. ஆனால், நின்று பற்றும் பொறியாகிய செவி தன் பணியைப் புரிவதற்குக்கு, அதனை உடையவன் ஆணை தேவையில்லை.

புறத்தே தோன்றும் ஒலி செவிப்பறையில் வந்து தாக்கும்போது, அச்செவியை உடையவன் அதனைத் தடுத்து நிறுத்த இயலாது. இந்த நுணுக்கத்தை அடிகளார் இங்குப் பேசுகிறார்.

'கேட்டேயும்' என்பதிலுள்ள உம்மை, நீ விரும்பினாலும் விரும்பாவிட்டாலும் எங்கள் பாட்டின் ஒலி உன் செவிப்பறை வழிப்புகுந்து உன்னை எழுப்பி யிருக்க வேண்டுமே. அப்படியிருந்துமா எழவில்லை என்ற பொருளைத் தருகிறது. பார்த்தலுக்கும் கேட்டலுக்கும் உள்ள வேறுபாடு இது என்க.

இவ்வாறு பேசத் தொடங்கிய பெண்கள் உள்ளே உறங்குபவளின் செவிகள் பழுதடைந்துவிட்டனவோ என்று ஐயுற்று, 'வன்செவியோ நின்செவிதான்' என்கின்றனர்.

நேற்றுவரை மெல்லிதாக இருந்து புறத்தே எழும் ஓசையை உன்னுள் வாங்கித்தந்த அதே செவிப்பறைகள் இன்று வன்செவியாக மாறிவிட்டதோ என்றும் பேசுகின்றனர்.

உறங்குபவளைப் பார்த்து 'வ்ாள் தடங்கண் மாதே' என்று விளிப்பது சற்று வியப்பைத் தருவதாகும். மூடிய கண்களை வாளுக்கு உவமையாகக் கூறுவதோ அல்லது ஒளி பொருந்தியது என்று கூறுவதோ பொருத்தமற்றதாகும். பலரும் இதனைக் கேலியாகக் கூறியது என்று பொருள் கூறியுள்ளனர். அவ்வாறு கொள்வது பொருத்தமாகத் தெரியவில்லை. அவளுடைய கண்ணுக்குள்ள இயல்பான

இந்த இரண்டு சிறப்புக்களையும் நினைவூட்டுவதன் நோக்கம், அவள் கண்களைத் திறந்து வாள்போன்ற கூர்மையையும், ஒளி பொருந்திய தன்மையையும் பயன் படுத்த வேண்டும் என்று அறிவுறுத்தவே ஆகும்.

முதலடி ஆழ்ந்து சிந்திப்பதற்குரியதாகும். மணிவாசகப் பெருமான் மிக ஆழ்ந்த விஞ்ஞான அறிவும். வானியல் புலமையும் கொண்டவர் என்பதைத் திருஅண்டப் பகுதியில் விளக்கியுள்ளோம்.

உலகத்தைப் பொறுத்தமட்டில் அனைத்திற்கும் காரணமாக இருப்பவன் கதிரவனே ஆவான் என்பது இன்று பலரும் பேசும் விஞ்ஞானக் கருத்தாகும். ஆனால், இப்பிரபஞ்சத்தைப் பொறுத்தவரை இக்கதிரவன் உண்டாகாத காலமும் உண்டு; அதேபோல இவன் அழியப் போகும் காலமும் ஒன்று உண்டு. தன்னுடைய மாபெரும் ஒளியை இழந்து, ஒரு ஒளியிழந்த கோளாக, இக்கதிரவன் சுற்றப்போகும் காலமும் ஒன்றுண்டு. ஆக, இம்மாபெரும் கதிரவனுக்கும் ஒரு தோற்றமும் முடிவும் உண்டு என்பது இன்றைய நாள் வானியலாரும் கூறும் செய்தியாகும்.

பூமியிலிருக்கும் நமக்குக் கதிரவன் ஒளி மிகப் பெரியதாகவும் சிறப்புடையதாகவும் காணப்படுகிறதே தவிரப் பல கோடி கிலோ மீட்டருக்கு அப்பால் சென்றுவிட்டால் கதிரவன் ஒளி மழுங்கி விண்மீன் போலக் காட்சியளிப்பான் என்றும் வானியலார் கூறுகின்றனர். சுருங்கச் சொல்லுமிடத்து ஒளிப்பிழம்பு என்று நாம் சொல்லும் கதிரவனுக்குத் தோற்றம் உண்டு; முடிவும் உண்டு; தூரம் செல்லச்செல்ல ஒளியின் தீட்சண்யக் குறைவும் உண்டு என்பதை அறிகிறோம்.

பேரொளி வடிவான இறைவனுக்கு இக்குறைகள் எதுவும் இல்லை. இதனை வலியுறுத்தவே அடிகளார் 'ஆதியும் அந்தமும் இல்லாச் சோதி' என்றும்

'பெருஞ்சோதி' என்றும் 'அரும்பெரும் சோதி' என்றும் கூறுகின்றார்.

வேத கால நாகரிகத்தில் கதிரவனுடைய ஒளியைப் பெரிதாக மதித்து, கதிரவனையே முழுமுதல் பொருள் என்று கருதி வழிபட்டனர். பிற்காலத்தில் இக்கருத்து வலுவடைந்து அறுவகைச் சமயங்களுள் ஒன்றாகச் 'சௌரம்' என்று பெயரில் சூரிய வழிபாடு தனியொரு சமயமாக இடம்பெற்றது.

அதனை அடுத்த காலத்தில் ஐம்பெரும் பூதங்களையும் சந்திரன், சூரியன், இயமானன்(ஆன்மா) ஆகிய மூன்றையும் ஒன்றாக இணைத்து இவை அனைத்தும் இறை வடிவங்கள் என்ற கருத்தில் 'அட்ட மூர்த்தங்கள்' (எட்டு வடிவங்கள்) என்று பெயரிட்டனர்.

திருஞானசம்பந்தர், நாவரசர், சுந்தரர் ஆகிய மூவர் காலத்திலும் (ஆறு முதல் எட்டாம் நூற்றாண்டின் தொடக்கம்வரை) இக்கருத்தே வலுப்பெற்றிருந்தது. எட்டாம் நூற்றாண்டின் பிற்பகுதியில் தோன்றிய அடிகளார் இந்த அட்டமூர்த்தக் கருத்தை அடியோடு மறுத்துவிடுகிறார்.

ஐம்பெரும் பூதங்களும் சூரிய சந்திரர்களும் அவற்றின் இயல்புகளும் இறைவனால் படைக்கப்பட்டனவே தவிர அவை அவனன்று என்ற கருத்தில்

. . . . . . . . . நாடொறும்
அருக்கனில் சோதி அமைத்தோன் திருத்தகு
மதியில் தண்மை வைத்தோன் திண்திறல்
தீயில் வெம்மை செய்தோன் பொய்தீர்
வானில் கலப்பு வைத்தோன் மேதகு
காலில் ஊக்கம் கண்டோன் நிழல்திகழ்
நீரில் இன்சுவை நிகழ்ந்தோன் வெளிப்பட
மண்ணில் திண்மை வைத்தோன் என்றென்று

எணைப்பல கோடி எணைப்பல பிறவும்
அணைத்து அணைத்து அவ்வயின் அடைத்தோன்
(திருவாச. 3:19–28)

என்று பாடியுள்ளார்.

கதிரவன் தன்பாலுள்ள ஹைட்ரஜன் முதலிய வாயுக்களை எரிப்பதன் மூலம், தன்னைத் தானே எரித்துக்கொண்டு இந்த ஒளியையும் வெப்பத்தையும் தருகிறான் என்பது இன்றைய வானியலார் கருத்து. வேதகாலக் கருத்துக்கு மாறுபட்ட இக்கருத்தை எட்டாம் நூற்றாண்டு விஞ்ஞானியாகிய அடிகளார் கூறுகிறார். சூரியன் கடவுள் அல்லன், அவனுக்கென்று தனித்தன்மை எதுவுமில்லை, அவனுக்குத் தோற்றம் மறைவு உண்டு என்ற கருத்துக்களையெல்லாம் உள்ளடக்கி 'அருக்கனில் சோதி அமைத்தோன்' (திருவாச: 3-20) என்று பாடுகிறார்.

இறைவனுக்குரிய அட்ட மூர்த்தங்களில் கதிரவனும் ஒரு மூர்த்தம் என்று கூறும் கருத்தை மிக அழகாக மறுத்து, 'சோதி அமைத்தோன்' என்று கூறுவதன்மூலம் அமைக்கப்பட்டவனாகிய கதிரவன் ஒரு கோள்தான் என்றும் அவனிடம் சோதி அமைத்தவனாகிய இறைவனே தலைவன் என்றும் கூறினாராயிற்று.

இத்தனை கருத்துக்களையும் உள்ளடக்கித்தான் 'ஆதியும் அந்தமும் இல்லா அரும்பெருஞ் சோதி' என்றார்.

பறவை இனங்களில் சில, பாடும் இயல்புடையன. மிக உயர்ந்தவனாகிய மனிதனும் சில சமயங்களில் பாடுகிறான். எப்பொழுது பாட்டு வருகிறது? மகிழ்ச்சி காரணமாகவோ துயரம் காரணமாகவோ மனத்தில் கனிவு ஏற்பட்டு, அக்கனிவு உள்ளத்தைச் சென்று தாக்கும்போது, தன்னையும் அறியாமல் மனிதன் பாடுகின்றான். பாடும் இயல்புடைய பறவைகளும் அவ்வாறே. இதனையே ஞான

சம்பந்தப் பெருமான் 'உளங் குளிர்ந்த போதெலாம் உகந்து உகந்து உரைப்பனே' (திருமுறை. 2:98.9) என்று கூறிச்செல்கிறார். இந்தக் கருத்தை மனத்துட்கொண்டு இப்பாடலின் முதலடியை மறுபடியும் சிந்திக்க வேண்டும். 'யாம் பாட' என்று அப்பெண்கள் கூறுவதன் நோக்கமென்ன? உளங்குளிர்ந்த போதுதானே பாடல்வரும்? எனவே, இவர்கள் பாடினார்கள் என்றால் உளங்குளிர்ந்து, உகப்புத் தோன்றிப் பாடினார்கள் என்பது பெற்றாம். இந்தக் குளிர்வும், உகப்பும் எங்கிருந்து வந்தன? இருபத்து நான்கு மணி நேரமும் நிலையாக நிற்கும் உணர்வுகள் அல்ல இவை. இப்பொழுது உள்ளத்தில் குளிர்வும் உகப்பும் தோன்றினமையின் அது பாட்டாக வெளிப்பட்டது. இந்தக் குளிர்வும் உகப்பும் தோன்றக் காரணமாயிருந்தது ஆதியும் அந்தமும் இல்லா அரும்பெரும் சோதியாகும். அந்தச் சோதி எப்பொழுதும் உள்ளதுதானே? அப்படியிருக்க இப்பொழுது திடீரென்று இவர்கள் உள்ளத்தில் குளிர்வையும் உகப்பையும் ஏற்படுத்த என்ன நிகழ்ந்தது? அந்த நுணுக்கத்தைத்தான் இங்கு அடிகளார் கூறுகின்றார்.

'சோதியை யாம் பாட' என்றதால் அந்தச் சோதி இப்பொழுதுதான் இவர்கள் உள்ளத்தைக் குளிர்வித்து உகப்பை உண்டாக்கிற்று. அதாவது அவனருளாலே அவன்தாள் வணங்குவதுபோல, அந்தச் சோதியின் அருளை இப்பொழுது பெற்றார்கள். அந்த அருள் இவர்களுக்குக் கிடைத்ததும் அவன் கருணையினாலேயே ஆகும். 'சோதியை யாம்பாட' என்று கூறுவதன் அடிப்படை இதுதான். அதாவது, சோதியைப் பாடுவதால் உள்ளம் நிறைந்தது, குளிர்ச்சியும் உகப்பும் தோன்றின. இவை இரண்டும் தோன்றியதால் மறுபடியும் பாடல் பிறந்தது.

இவ்வாறு கூறியதால் இப்பொழுது இந்தப் பெண்கள் பாடும் பாடல் வாலாயமாக இதுவரை இவர்கள் பாடி வந்த பாடல்போல் அல்லாமல், உள்ளக் குளிர்ச்சியும் உகப்பும் வெளிப்படப் பாடுகிறார்கள் என்பது தெளிவாகிறது. எனவே, இப்படி உள்ளக் கனிவிலிருந்து தோன்றும் பாடலைக் கேட்டும்கூட, கண்விழிக்காமல் படுத்திருப்பது, உறங்குகின்றவள் உள்ளத்தில் மலரவேண்டிய குளிர்ச்சியும் உகப்பும் இன்னும் தோன்றவில்லையோ என்ற ஐயத்தைத் தோற்றுவிக்கின்றது.

'வளருதியோ' என்ற சொல்லுக்குக் கண்ணையும் உடன்சேர்த்துக் கண்வளர்தல் அல்லது உறங்குதல் என்று பொருள் கூறியுள்ளனர். அவ்வாறு கொள்ளாமல் எம் பாடலைக் கேட்டுங்கூட வாள் தடங்கண் விழிக்காமல், மென்செவி வன்செவியாக மாற்றப்பெற்று, அகவளர்ச்சி குன்றி, உறக்கத்தின் மூலம் உடம்பை வளர்க்கின்றாய் என்ற பொருளும் பட 'மாதே வளருதியோ' என்றார்.

படுக்கையில் கிடந்தபடியே உடம்பை வளர்க்கிறாள் இவள். ஆனால் புறத்தே, தெருவில் மற்றொரு வளர்ச்சி நடைபெறுகின்றது. மாதேவனுடைய வார்கழல்களை ஏனையோர் வாழ்த்துகின்றனர். உளங்கனிந்து உவந்து பாடும் அப்பாடலின் ஒலி வீதிவாய்ச் சென்று வளர்கின்றது. இந்த வளர்ச்சி அவளை ஒன்றும் செய்யவில்லையோ என்று ஐயுற்ற பெண்கள் வீதிவாய்க் கேட்டலுமே இவ்வளர்ச்சியில் ஈடுபடாமல் உறங்கித் தன் உடம்பை வளர்க்கிறாளே என்று ஒரு கணம் வருந்தினர்.

என்றாலும், பழைய தோழி ஆதலானும் இதுவரை இறையன்பில் உள்ளங் குழைந்தவள் ஆதலாலும் இப்பொழுது அவள் உறங்குகிறாள் என்று கருதாமல், அவள் எழுந்து வாராமைக்குக் காரணம் வேறு ஏதேனும் இருக்குமோ என்று தம்முள் பேசிக்கொள்ளுகின்றனர்.

வீதிவாய்க் கேட்டலும் விம்மினாள்; மேலும் மேலும் விம்மினாள்; அதன் முடிவில் மெய்ம்மறந்தாள். அதன் பயனாக அவளுடைய உடம்பு அநிச்சைச் செயலாக அமளியின்மேல் இங்கும் அங்குமாகப் புரள்கின்றது. இறையனுபவத்தில் ஆழ்ந்து 'மெய்ம்மறந்து ஏதேனும் ஆகாள் கிடந்தாள்' என்பதனால் சமாதி நிலையை அடைந்துவிட்டாளோ என்று பொருள்கொள்ளவும் இது இடந்தருகிறது. இந்தக் கோணத்தில் நின்று, திருவெம்பாவை முழுவதற்கும் புதிய முறையில் எழுந்த சிந்தனையை இந்நூலின் பின்னுரையில் காணலாம்.

**156.** பாசம் பரஞ்சோதிக்கு என்பாய் இராப் பகல் நாம்
பேசும்போது எப்போது இப் போது ஆர் அமளிக்கே
நேசமும் வைத்தனையோ நேரிழையாய் நேரிழையீர்
சீ சீ இவையும் சிலவோ விளையாடி
ஏசும் இடம் ஈதோ விண்ணோர்கள் ஏத்துதற்குக்
கூசும் மலர்ப் பாதம் தந்தருள வந்தருளும்
தேசன் சிவலோகன் தில்லைச் சிற்றம்பலத்துள்
ஈசனார்க்கு அன்பு ஆர் யாம் ஆர் ஏல் ஓர் எம்பாவாய் 2

பாசம்-அன்பு.

சராசரி மனிதர்கட்கும், ஆன்மீகத் துறையில் முன்னேற வேண்டுமென்று விரும்பி அதற்குரிய முயற்சியில் ஈடுபடுபவர்கட்கும், திருக்கோயில் முதலியவற்றிற்குச் செல்வதன் மூலம் தமது பக்தியை வளர்த்துக்கொள்ள முடியுமென்று நம்புபவர்கட்கும் பொதுவான சில இயல்புகள் உண்டு. இரண்டாம் வகையினர் பிறரிடம் பேசும்போது தம்முடைய முயற்சியை வெளிப்படையாகக் கூறவே மாட்டார்கள். மூன்றாம் வகையினர் எப்பொழுது யாரிடம் பேசினாலும், தம்முடைய மனம் முழுவதும் இறைவன் திருவடிகளிலேயே பதிந்துள்ளது என்றும்,

அவனையே சரணமென்று கருதியிருப்பதாகவும் வெளிப்படையாக கூறிக்கொள்வர். ஆனால், தனியே இருக்கும்பொழுது, அல்லது சுகபோகங்களை அனுபவிக்கும்போது, இவர்கள் மனம் இறைநாட்டம் கொள்ளாமல் சுகபோகங்களில் மூழ்கி விடுதல் இன்றும் நாம் காணும் இயல்பாகும்.

தங்களுடைய இந்த மனநிலையை மறைக்க, எப்பொழுதும் யாரைப் பார்த்தாலும் தங்கள் மனம் இறைவன்பால் உள்ளது என்றே கூறிக்கொண்டிருப்பர்.

இந்த ஒன்று, மூன்றாம் வகையினரின் மனோநிலை தான் இப்பாடலின் முதலிரண்டு அடிகளில் பேசப் பெறுகின்றது. உறங்குபவளை எழுப்பக் கூட்டமாக வந்து வீட்டின்வெளியே நின்று கொண்டு, உள்ளே இருப்பவள் இன்னும் உறங்குவதைக் கண்டு இவ்வாறு பேசுகின்றனர்.

'நேரிழையாய்' என்று விளித்ததால் இரவில் அணிந்திருந்த ஆபரணங்களைக் கழற்றக்கூட மனம் இல்லாமல் அவற்றுடனேயே உறங்குகிறாள் என்பது பெறப் பட்டது. உறங்கும்பொழுதுகூடப் பொன் ஆபரணங்களை விட்டுவிட மனமில்லாதவள் எங்ஙனம் ஈசன்பால் பற்று வைக்கமுடியும் என்பது குறிப்பெச்சம்.

'பெண்ணே! பகல், இரவு எந்த நேரத்திலும் நாம் பேசிக்கொண்டிருக்கும் பொழுதெல்லாம் உன்னுடைய பற்று முழுவதும் பரஞ்சோதிக்கே என்று வாய் ஓயாமல் பேசும் நீயா, இப்பொழுது இந்தப் போதார் அமளியை விட்டு எழாமல் இருக்கின்றாய்.' 'போதார் அமளிக்கே நேசமும் வைத்தனையோ' என்று அவர்கள் கூறியதால் முன்னர்ப் பரஞ்சோதிக்கே தன் பாசம் என்று கூறியது எவ்வளவு பொருத்தமற்றது என்பது இப்பொழுது விளங்குகின்றது.

புறத்தே நின்றவர்கள் இவ்வாறு பேச, உறக்கத்திலிருந்து விழித்தவள் இதோ பேசுகிறாள்: 'தோழிகளே! பகலிலும் இரவிலும் நாம் கூடியிருக்கும்போது இவ்வாறு விளையாட்டாக ஒருவரை ஒருவர் ஏசிக் கொள்ளுதல் முறையாகும். இந்த விடியற்காலை நேரத்தில், இறைவனை உன்னி வழிபடவேண்டிய நேரத்தில் இப்படி விளையாட்டுப் பேச்சுப் பேசலாமா? அதுவும் வீட்டின் முகப்பில் நின்றுகொண்டு இவ்வாறு விளையாடுவது முறையன்று' என்கிறாள்.

'ஏசும் இடம் ஈதோ' என்பதில் ஒரு குறிப்புப் பொருளும் உண்டு. நம் முன்னோர் வீட்டை அகம் என்றும் வீட்டிற்கு வெளியேயுள்ள பகுதியைப் புறம் என்றும் கூறினர். புறப்பகுதியிலிருந்து அகப்பகுதிக்கு நுழையும்போது வாயிற்படியைக் கடக்க நேரிடுகின்றது. புறத்தேயுள்ள பல்வேறு தொல்லைகளைத் தாங்கிநிற்கும் மனம், அகத்தே சென்றவுடன் அமைதி அடைகின்றது. எனவே, வாயிற்படி இரண்டு உலகங்களைப் பிரிக்கினற ஓர் இடமாகும். இன்றும்கூட வாயிற்படியில் அமர்ந்துகொண்டு வெட்டிப் பேச்சு அல்லது வேடிக்கைப் பேச்சு பேசுபவர்களை வீட்டிலுள்ள முதியோர் ஏசுவர். 'வாயிற்படியில் அமர்ந்துகொண்டு விளையாடாதே; வீண்பேச்சுப் பேசாதே' என்று கூறுவர். இவற்றையெல்லாம் உள்ளடக்கித்தான் வாயிற்படியில் நிற்கும் பெண்களைப் பார்த்து 'விளையாடி ஏசும் இடம் ஈதோ' என்று கேட்கிறாள்.

புறத்தே நின்றவர்கள் தாங்கள்தாம் பக்தி மார்க்கத்தில் செல்பவர்கள் என்றும், உறங்குபவள் அவ்வழி வாராதவள் என்றும் பொருள்படப் பேசினர். உள்ளே இருப்பவள் இவர்களுக்குச் சற்றும் குறைந்தவள் அல்லள் என்பதை அவள் பேசும் பேச்சு வெளிப்படுத்துகின்றது.

'தோழிகளே! நாம் அனைவரும் ஈசனுக்கு அன்பர்கள் என்பதை நான் உணர்கின்றேன். நம்மால் வழிபடப்படும் ஈசன் எத்தகையவன் என்பதை அறியாதவள் அல்லள் நான். அவனுடைய பாதங்களை எளிதாக நாம் பற்றிக்கொண்டதால் அவனுடைய சிறப்புக்களையும், பெருமைகளையும் நாம் மறந்துவிடவில்லை. அத்திருவடிகள் விண்ணோர்களும் ஏத்துதற்கு எளிதில் கிடைக்காத திருவடிகளாம். என்ன அதிசயம்! அத்தகைய திருவடிகள் நம்மைப்போன்ற சாதாரணப் பெண்களும் வழுத்துதற்கு எளிதாய் இதோ நம் முன்னர் உள்ளன. இது எவ்வாறு முடிந்தது? விண்ணோர்களுக்கே கிடைக்காத ஒன்று நமக்குக் கிடைத்துவிட்டது என்பதை நினைத்துப் பார்த்தேன்; உண்மை விளங்கிவிட்டது. நம் தகுதி நோக்கி இத் திருவடிகள் கிட்டவில்லை. அன்பில் ஏழைகளாகிய நம்மாட்டுக் கொண்ட பரம கருணையால் அத்திருவடிகளை நமக்குத் தந்து அருள, தேஜோமயமான அவ்விறைவன் நம்மாட்டு வந்தருளினன்' என்கிறாள். அருள என்ற சொல் ஒரே தொடரில் 'தந்தருள வந்தருளும்' என இருமுறை பயன்படுத்தப்பெற்றதன் நோக்கம் இதுவேயாகும்.

'அருள்செய்ய வேண்டும் என்று கருதியவன், நாம் அவனிடம் செல்லமுடியாது என்பதை அறிந்து கொண்டான்; எனவே வந்தருளினான். அத்திருவடிகளைப் பெறுவதற்குரிய எவ்விதத் தகுதியும், உரிமையும் நம்மாட்டு இல்லை என்பதைப் புரிந்துகொண்ட அவன், கருணை காரணமாக நாம் இருக்குமிடம் தேடிவந்து தந்து அருளினான்' என்றும் கூறினாள்.

'ஏத்துதற்குக் கூசும் மலர்ப்பாதம்' என்ற தொடரில் 'கூசும்' என்ற சொல் இடைநிலைத் தீவகமாக அமைந்து உள்ளது. தேவர்கள் தம் தகுதியின்மையை அறிந்த காரணத்தால் அத்திருவடிகளை ஏத்தக் கூசுகிறார்கள்.

அன்றியும் தேவர்கள் தன்னலமே வடிவானவர்கள் ஆதலால், மலர்ப்பாதம் அவர்களுக்குக் காட்சி தரக் கூசுகின்றது.

157. முத்து அன்ன வெள் நகையாய் முன் வந்து எதிர் எழுந்து என்
அத்தன் ஆனந்தன் அமுதன் என்று அள்ளூறித்
தித்திக்கப் பேசுவாய் வந்து உன் கடை திறவாய்
பத்து உடையீர் ஈசன் பழ அடியீர் பாங்கு உடையீர்
புத்து அடியோம் புன்மை தீர்த்து ஆட்கொண்டால் பொல்லாதோ
எத்தோ நின் அன்புடைமை எல்லோம் அறியோமோ
சித்தம் அழகியார் பாடாரோ நம் சிவனை
இத்தனையும் வேண்டும் எமக்கு ஏல் ஓர் எம்பாவாய் 3

அள்ளூறி-வாயூறி. கடை-வாயில். பத்துடையீர்-பற்று என்பது எதுகைநோக்கிப் பத்து என ஆயிற்று. பாங்கு-மேன்மை.

சென்ற பாடலைப் போலவே இப்பாடலிலும் எழுப்ப வந்து புறத்தே நிற்பவர்களுக்கும் உள்ளே படுத்துக் கிடப்பவளுக்கும் இடையே நடைபெறுகின்ற உரையாடல் பேசப்பெறுகின்றது.

புறத்தே நிற்பவர்கள் முன்னரே எழுந்து இறைவன் புகழைப் பாடிக்கொண்டு வீதியில் வந்தவர்கள்; ஆதலின், உள்ளே இருப்பவளைவிடத் தாங்கள் ஒருபடி முன்னேறியவர்கள் என்ற எண்ணம் உடையவர்கள் ஆகின்றனர். அதன் பயனாகவும், விளையாட்டாகவும் அவர்கள் ஏச்சில் ஓர் அழுத்தம் காணப்படுகிறது.

'முத்துப்போன்ற பற்களை உடையவளே! நேற்று நீ என்ன பேசினாய் என்பது நினைவிலுள்ளதா? எங்களுக்கு முன்னே எழுந்து எதிரே நின்றுகொண்டு நாங்கள் வரும்போது இறைவனை அத்தன் ஆனந்தன் அமுதன் என்று சொல்லி உங்களை வரவேற்பேன் என்று கூறினாயே, அது மறந்துவிட்டதா? ஆனாலும் நேற்று நீ பேசும்போது,

அத்தன் ஆனந்தன் அமுதன் என்று அவன் பெயரைச் சொல்லும்பொழுது உன் உள்ளத்தில் நிறைந்திருந்த அன்பு காரணமாக வாயில் எச்சில் ஊறிற்று. எனவே, நேற்று நீ பேசியது உள்ளன்போடு பேசியதுதான் என்பதை உன் வாயில் அள்ளூறியதால் அறிகின்றோம். ஆகவே, உன்னைக் குறைத்து மதிப்பிட நாங்கள் தயாராக இல்லை. இப்பொழுது வந்து உன் வாயிலைத் திறப்பாயாக' என்றார்கள்.

'முத்து அன்ன வெண் நகை' என்று கூறியதால் உள்ளிருப்பவளின் அகமும் புறமும் தூய்மையாக உள்ளன என்பதை அவர்கள் குறிப்பால் சுட்டினாராயிற்று. ஆழ்ந்து சிந்திக்கும்போது இப்பொருள் தென்படுமேனும் மேலோட்டமாகப் பார்க்கும்போது அவர்கள் எள்ளி நகையாடியதாகவே இந்தத் தொடருக்குப் பொருள் கொள்ளமுடியும். 'முத்தன்ன வெண்ணகை' என்பது உன் உள்ளத்திலும் தூய்மையில்லை; நீராடாமையால் உடம்பிலும் தூய்மையில்லை; பல் மட்டும்தான் வெண்மை உடையதாக உள்ளது என்ற எள்ளற்பொருளையும் தந்து நிற்கும்.

புறத்தே நின்றவர்கள் பேசியதைக் கேட்டு, உள்ளே இருந்தவள், அவர்கள் சொற்களுக்கு மேலோட்டமாகப் பொருள் செய்துகொண்டு, தன்னை அவர்கள் எள்ளி நகையாடியதாகக் கருதி, சற்று மனம் வருந்தினாள் என்றும் தெரிகிறது. அதனால் 'இறைவன்மாட்டுப் பற்று மிகுதியாக உடையவர்களே! பரம்பரையாகப் பழமையாக அடியார் களாக உள்ளவர்களே! உங்களைப் போல ஆழமான அன்பு என்மாட்டு இல்லையாயினும் என்னை ஏற்றுக் கொள்ளுங்கள். புது அடியாராக வந்துள்ள என் குற்றங் குறைகளைப் போக்கி உங்கள் பழ அடியார் கூட்டத்தில் சேர்த்துக்கொண்டால் என்ன இழுக்கு நேர்ந்துவிடப் போகிறது' என்ற கருத்தில் அவள் பேசினாள்.

*புறத்தே நின்று இப்பேச்சைக் கேட்டவர்கள் அவள் மனம் வாடிவிட்டதைப் புரிந்துகொண்டு, அவள் மனம் தேறும்படியாக இதோ பேசுகின்றனர்: 'தோழி! நின் அன்புடைமை எத்தகையது என்பதை நாங்கள் எல்லோரும் நன்றாக அறிவோம். தூய்மையான சித்தமுடைய நீயும் நாங்களும் செய்யவேண்டியது ஒன்றுண்டு. சிவனைப் பாடுவதுதான் அச்செயலாகும். இது தவிர வேறெதுவும் தேவையில்லையாதலால் இத்துணையே வேண்டும்' (அவனைப் பாடுதலாகிய தொழில்மட்டும் எமக்குப் போதுமானது) என்று கூறி முடிக்கலாயினர்.*

**158.** ஒள் நித்தில நகையாய் இன்னம் புலர்ந்தின்றோ
வண்ணக்கிளி மொழியார் எல்லாரும் வந்தாரோ
எண்ணிக்கொடு உள்ளவா சொல்லுகோம் அவ்வளவும்
கண்ணைத் துயின்று அவமே காலத்தைப் போக்காதே
விண்ணுக்கு ஒரு மருந்தை வேத விழுப் பொருளைக்
கண்ணுக்கு இனியானைப் பாடிக் கசிந்து உள்ளம்
உள் நெக்கு நின்று உருக யாம் மாட்டோம் நீயே வந்து
எண்ணிக் குறையில் துயில் ஏல் ஓர் எம்பாவாய் 4

நித்திலம் - முத்து. மருந்து - அமுதம். அவம் - வீண்.

*இப்பாடல் முன்னைய பாடல்களைப் போலவே புறத்தே நிற்பவர்களுக்கும், உள்ளே இருப்பவளுக்கும் இடையே நடைபெறும் உரையாடலாக அமைந்துள்ளது.*

*'ஒள் நித்தில நகையாய்! இன்னம் புலர்ந்தின்றோ?' என்பது எழுப்பவந்தவர்கள் கூற்றாகும். இதன் மறுதலையாக 'வண்ணக் கிளிமொழியார் எல்லாரும் வந்தாரோ?' என்று வினவுகிறாள். அவ்வினாவிற்கு விடை கூறத் தொடங்கிய புறத்தே நிற்கும் பெண்கள் 'சற்றுப் பொறு, வந்தவர்களை எண்ணி இத்தனை பேர் என்று விடை கூறுகின்றோம்' என்ற கருத்தில் 'எண்ணிக்கொடு உள்ளவா சொல்லுகோம்' என்றனர். இச்சொற்களைக்*

கூறிய உடனேயே அவர்கள் மனத்தில் ஓர் ஐயம் பிறந்தது. தாங்கள் எண்ணி விடை கூறுகின்றவரை, அந்த இடைநேரத்தில் ஒரு சிறு தூக்கம் போட்டுவிடுவாளோ என்று அஞ்சியவர்களாய்த் 'தோழி நாங்கள் இங்குள்ளவர்களை எண்ணி இத்தனை பேர் என்று சொல்வதற்குச் சிறிது காலதாமதம் ஆகும். அந்த இடைநேரத்தில் நீ சிறு தூக்கம் போட்டுக் காலத்தை வீணடித்துவிடுவாய். அதுமட்டும் அன்று, நாங்களும் விண்ணுக்கு ஒரு மருந்தை, வேத விழுப்பொருளை, கண்ணுக்கு இனியானைப் பாடிக் கசிந்து உள்ளம் உருகவேண்டிய நேரம் இது. இந்த நேரத்தை ஆள் எண்ணும் பணியில் செலவிடமாட்டோம். நீயே வந்து எண்ணிக்கொண்டு யாரேனும் வாராதிருப்பின் மறுபடியும் சென்று உறங்குவாயாக' என்று முடித்தனர்.

'எண்ணிக்கொடு உள்ளவா சொல்லுகோம்' என்று கூறியவர்கள், அச்சொற்களைக் கூறிய பிறகு எண்ணும் தொழிலைத் தொடங்கினால் அதனால் விளையப்போகும் இரண்டு பயன்களைச் சிந்திக்கலாயினர். ஒன்று, உறங்கியவள், எண்ணி முடிகின்றவரை மறுபடி உறங்கச் சென்றுவிடுவாள். இரண்டு, தங்களைப் பொறுத்தவரை விண்ணுக்கொருமருந்தை... எண்ணிக் கசிந்து உருக வேண்டிய நேரத்தை ஆள் எண்ணும் பணியில் செலவழிக்க விரும்பவில்லை. ஆதலால், 'எண்ணிக்கொடு உள்ளவா சொல்லுகோம்' என்று தொடங்கியவர்கள் 'யாம் மாட்டோம் நீயே வந்து எண்ணிக் குறையில் துயில்' என்று கூறிமுடித்தனர்.

சென்ற பாடலிலும் இப்பாடலிலும் புறத்தே நிற்பவர்கள் உள்ளே இருப்பவளை விளிக்கும்பொழுது 'வெண்ணகையாய்' என்றும் 'நித்தில நகையாய்' என்றும் கூறுவது உள்ளே இருப்பவளின் பண்பாட்டைக் குறிப்பதற்குரிய விளியாகும். எப்பொழுதும் பற்கள் தெரிய

வாய்விட்டுச் சிரித்துக்கொண்டே இருப்பவர்கள் உள்ளத்தில் கள்ளமில்லாதவர்கள் என்று மனவியலார் கூறுவர். ஏனையோர் விளித்துக்கொண்டு வெளியே நிற்கும்போதும், உள்ளே இருப்பவள் அரை உறக்கத்தில் இருந்தாலும் அவள் சோம்பேறி அல்லள், இறையன்பில் குறையாதவள், தூய்மையான உள்ளம் படைத்தவள், எப்பொழுதும் சிரித்துக்கொண்டே இருப்பவள், உள்ளத்தில் கள்ளமில்லாதவள் என்பவற்றையெல்லாம் உள்ளடக்கி 'நகையாய்' என்றே விளித்தனர்.

**159.** மால் அறியா நான்முகனும் காணா மலையினை நாம்
போல் அறிவோம் என்று உள்ள பொக்கங்களே பேசும்
பால் ஊறு தேன் வாய்ப் படிறீ கடை திறவாய்
ஞாலமே விண்ணே பிறவே அறிவு அரியான்
கோலமும் நம்மை ஆட்கொண்டருளிக் கோதாட்டும்
சீலமும் பாடிச் சிவனே சிவனே என்று
ஓலம் இடினும் உணராய் உணராய் காண்
ஏலக்குழலி பரிசு ஏல் ஓர் எம்பாவாய் 5

நாம் அறிவோம் போல் என்று-நாம் அறிந்துவிடுவோம் போல என்று. பொக்கம்-பொய். படிறீ-வஞ்சகீ. ஏலம்-மயிர்ச்சாந்து. கோதாட்டும்-குற்றங்களிலிருந்து நீக்கும்.

முதல் நான்கு பாடல்களில் உள்ளே உறங்குபவளின் உள்ளத் தூய்மையை நினைந்து நன்முறையில் விளித்தவர்கள், இவ்வளவு கூறியும் அவள் எழுந்து வராமையால் ஓரளவு சினந்து பேசத் தொடங்குகின்றனர். 'பால் ஊறு தேன் வாய்ப் படிறீ' என்பது முரண்பட்ட சொற்களையுடைய தொடராகும். பாலூறு தேன்வாய் என்றதால் உள்ளே இருப்பவள் விழித்திருக்கும் நிலையில் பேசும் பேச்சு, பாலும் தேனும் கலந்ததுபோல இனிமையுடையதாக இருந்தது என்பது பெறப்பட்டது. ஆனால், இப்பொழுது அவள் செயல், அந்த இனிய

சொற்களுக்கு முரணாக இருத்தலின், புறத்தே இனிமையாகப் பேசி உள்ளத்தில் வஞ்சகம் உடையவள் என்று கருத்துத் தொனிக்கப் 'படிறீ' என்ற அவளை விளித்தனர். அம்மட்டோடு இல்லாமல் தோழியருடன் சேர்ந்து உரையாடிக்கொண்டிருக்கும்போது நேற்று இவ்வாறு கூறினாள். 'மலைஇலக்குப்போல் உயர்ந்து நிற்கும் சிவபெருமானை, நான்முகனும் திருமாலும் காணாமல் போனது விந்தைதான். என்போன்றவர்கள் அவனை நன்கு அறிவோம்' என்று இப்போது துயில்பவள் பலமுறை பேசியுள்ளாள். அப்பொழுது அவளுடைய பேச்சு, பாலும் தேனும் கலந்ததுபோல இனிமை உடையதாக இருந்தது. ஆதலின், தோழிமார்கள் அவளை முற்றிலும் நம்பினர். அவள் பேசிய சொற்களுக்கும் இப்பொழுது அவள் செயலுக்கும் எவ்விதத் தொடர்பும் இல்லாமையால் 'உலகிலுள்ள பொய்களை யெல்லாம் ஒருங்கிணைத்துப் பேசும் படிறீ வந்து கதவைத் திறப்பாயாக' என்று கூறினர்.

ஞாலம், விண் என்பவை அவ்வவற்றிற்குரிய உலகங்களைக் குறித்து நின்றன. அண்டத்தைப் பொறுத்த வரை இந்த மண்ணுலகம், விண்ணுலகம்போன்ற பல உலகங்கள் இருத்தலின் அவற்றையும் உள்ளடக்கிப் 'பிறவே' என்றார். இந்தப் பிரபஞ்சம் முழுவதும் தன்னைப் படைத்த தலைவனை அறிய முயன்றாலும் அறிய முடியாதவன் என்றார்.

'அப்படி அறிவரியானாக இருந்தாலும் சிற்றுயிர்கள் ஆகிய நம்மாட்டுக் கருணை கொண்டவன்; இயல்பாகவே நம்மிடமுள்ள குற்றங்களைக் களைந்து, ஆட்கொள்ளும் தன்மையுடையவன் என்று அவன் பெருமையைத் தெருவுதோறும் ஓலமிட்டுக்கொண்டே வருகின்றோம். நாம் அறிவோம் என்று நேற்றுப் பேசிய நீ, எங்கள் ஓலங்களைக் கேட்டும் எழுந்து வரவில்லை என்றால் தோழி! நின் பரிசு இருந்தவாறு என்னே!' என்றார்கள்.

ஓலமிடும் சத்தங் கேட்டதால் காதின்வழி புகும் அந்த ஓசை, ஒய்வெடுத்துக்கொள்ளும் மனத்தைத் தட்டி எழுப்புகிறது. விழித்து எழும் மனம் அது என்ன ஓலம் என்று அறிய அறிவின் உதவியை நாடுகின்றது. அறிவு தொழிற்படவே ஓலத்தின் சொல்லையும் பொருளையும் ஆய்கின்றது. இறைவன் புகழைப் பாடும் ஓலம் என்பதை அறிந்துகொண்ட அறிவு, அச்சொல்லையும் பொருளையும் கிரகித்து, அவற்றை மெல்ல உணர்வினிடம் செலுத்து கின்றது. இறையருளை அனுபவிக்க மனத்திற்கோ அறிவிற்கோ, தகுதியோ வாய்ப்போ இல்லை. ஓலத்தில் தோன்றும் சொற்களும் அவற்றின் பொருளும் உணர்விற்கு விருந்தாக அமைந்திருத்தலின், இச்சொற்களைக் கேட்ட வுடன் உணர்வு இறையனுபவத்தில் மூழ்கியிருத்தல் வேண்டும். அவ்வாறு அவள் மூழ்கவில்லை; ஆதலால், 'ஓலமிடினும் உணராய் உணராய் காண்' என்று கூறினர்.

160. மானே நீ நென்னலை நாளை வந்து உங்களை
நானே எழுப்புவன் என்றலும் நாணாமே
போன திசை பகராய் இன்னம் புலர்ந்தின்றோ
வானே நிலனே பிறவே அறிவு அரியான்
தானே வந்து எம்மைத் தலையளித்து ஆட்கொண்டருளும்
வான் வார் கழல் பாடி வந்தோர்க்கு உன் வாய் திறவாய்
ஊனே உருகாய் உனக்கே உறும் எமக்கும்
ஏனோர்க்கும் தம் கோனைப் பாடு ஏல் ஓர் எம்பாவாய் 6

நென்னல்-நேற்று. தலையளித்து-கருணைசெய்து.. வான் வார் கழல்-ஆகாயத்து விளங்கும் அழகிய திருவடி.

மேலைப் பாடல்கள்போல் அல்லாமல் இப்பாடல் முழுதும் புறத்தே நின்றவர்கள் கூற்றாகவே முடிகின்றது. சராசரி மனிதர்களின் உரையாடலில் யாரோ ஒருவர் திடீரென்று முனைத்தெழுந்து 'போனது போகட்டும்

நாளைக்கு நான் என்ன செய்யப் போகிறேன் பார்' என்று கூறுவது மரபு.

இந்த அடிப்படையிலேயே இங்கு உள்ளே உறங்குபவள் முதல் நாள் இரவு பேசிய பேச்சை இப்பொழுது அவளுக்கு நினைவூட்டுகின்றனர். 'மான்போன்றவளே! நேற்று நீ என்ன சொன்னாய் தெரியுமா? நாளைக் காலையில் நான் ஒருத்தியாகவே வந்து உங்களை எழுப்பப்போகிறேன் பாருங்கள் என்று சொன்னாயே, அப்படி நீ கூறிய சொற்கள் எந்தத் திசையில் காற்றோடு போயின என்று சொல்ல முடியுமா? சொல்லிய சொல்லைக் காவாது விட்டால் அதற்கு வெட்கப்பட வேண்டும். நீயோ நாணத்தையும் விட்டுவிட்டாய். இன்னும் பொழுது விடியவில்லையா?' என்றனர்.

'பெண்ணே! நாங்கள் வெறும் பேச்சுப் பேசிக் கொண்டு இங்கு வந்து நிற்கவில்லை. விண்ணும் மண்ணும் பிறவும் அறிய முடியாதவன், அற்ப மனிதர்களாகிய நம்மாட்டுக் கொண்ட கருணையால், தானே இறங்கி வந்து நம்மை ஆட்கொண்டருளித் தன் திருவடிகளை நமக்குத் தந்துள்ளான். அப்படிப்பட்ட திருவடிகளை அல்லவா நாங்கள் புகழ்ந்துகொண்டு நிற்கின்றோம். நீ எழுந்து வந்து வாயிலைத்தான் திறக்கவில்லை என்றாலும், படுக்கையில் கிடந்தபடியே வாய்திறந்து ஒரு வார்த்தையேனும் பேசாமல் இருக்கின்றாய்' என்றும் கூறுகின்றனர். இவ்விடத்தில் 'மாற்றமும் தாராரோ வாசல் திறவாதார்' (திருப்பாவை:10) என்ற ஆண்டாளின் சொற்கள் நினைவு கூரத் தக்கவை.

'நீ வாய் திறவாவிட்டாலும் வாசல் திறவாவிட்டாலும் உனக்கும், அவன் புகழைப் பாடும் எமக்கும், இப்பிரபஞ்சத் திலுள்ள அனைத்திற்கும் தலைவனாக உள்ளவனைப் பாடுவோமாக' என்கின்றனர்.

**161.** அன்னே இவையும் சிலவோ பல அமரர்
உன்னற்கு அரியான் ஒருவன் இரும் சீரான்
சின்னங்கள் கேட்பச் சிவன் என்றே வாய் திறப்பாய்
தென்னா என்னா முன்னம் தீ சேர் மெழுகு ஒப்பாய்
என்னானை என் அரையன் இன் அமுது என்று எல்லோமும்
சொன்னோம் கேள் வெவ்வேறாய் இன்னம் துயிலுதியோ
வன் நெஞ்சப் பேதையர்போல் வாளா கிடத்தியால்
என்னே துயிலின் பரிசு ஏல் ஓர் எம்பாவாய் 7

சின்னங்கள்-சங்கு தாரை முதலிய விடியற்கால இசைக் கருவிகள். ஆனை-எனக்கு ஆனை போன்றவன்.

*இப்பாடல் முழுவதும், எழுப்ப வந்தவர்கள் கூற்றாகவே அமைந்துள்ளது. 'தாயே! அமரர் பலரும் நினைக்கவும் முடியாதவன், ஒப்பற்றவன், மாபெருஞ் சிறப்பை உடையவனாகிய அத்தகையவனை நினைந்து, விடியற்காலை நேரத்தில் திருச்சின்னங்கள் ஒலிக்கத் தொடங்கியவுடன், அந்த விநாடியே சிவசிவ என்று கூறுவாயே! தென்னாட்டுக்கு உரியவனே என்று யாரேனும் கூறினால், அவர்கள் கூறி முடிப்பதற்குள் தீயிற்பட்ட மெழுகுபோல் மனம் உருகுவாயே! நேற்றுவரை இவ்வாறிருந்த உனக்கு இன்று என்ன நிகழ்ந்துவிட்டது? இதோ நாங்கள் அனைவரும் உன் வீட்டு வாயிலில் நின்று எங்கள் அன்பிற்குரியவனே! எங்கள் தலைவனே! என்று ஒன்றுசேர்ந்தும் தனித்தனியாகவும் அவன் புகழைப் பாடுகின்றோமே! இத்தனையிலும் உறக்கத்திலிருந்து விழிக்காமல் அதிலேயே ஆழ்ந்துள்ளாயே! துயிலின் பெருமை இத்தகையது என்று அறிந்துகொண்டோம்' என்கின்றனர்.*

*திருச்சின்னங்களைத் தெருவூடே வாசித்துக்கொண்டு செல்வார்கள். தனிப்பட்ட முறையில் யார் வீட்டின் எதிரேயும் நின்று ஊதமாட்டார்கள். அப்படி இருந்தும்*

தூரத்தே கேட்கும் அவ்வொலி காதில் பட்டவுடன் எழுந்து சிவசிவ என்று கூறுவாய் என்கின்றார்கள்.

'தென்னா' என்ற சொல் தென்னாட்டவன் என்ற பொதுப் பொருளையும், தென்னாடுடைய சிவன் என்ற சிறப்புப் பொருளையும் தந்துநிற்கும் சொல்லாகும். இதில் தென்னா என்று கூறுபவர்கள் எந்தப் பொருளில் கூறினார் கள் என்று சொல்வதற்கில்லை. அப்படி இருந்தும் அந்தச் சொல்லைக் கூறி முடிப்பதற்குள் உருகுவாய் என்கின்றனர்.

தூரத்தே சின்னங்கள் கேட்கும்போது உருகுவதும் தென்னா என்ற பொதுச் சொல்லைக் கேட்டவுடன் உருகுவதும் இறையன்பில் மிக முதிர்ந்த நிலையில் உள்ளவர்களின் செயலாகும். இவ்விரண்டு பண்புகளையும் உள்ளே உறங்குபவளுக்கு ஏற்றிக் கூறுவதால், இப்பொழுது உறங்கிக்கொண்டிருந்தாலும் அப்பெண்ணரசி இறையன்பில் மிக உயர்ந்த நிலையில் உள்ளவள் என்பதைக் கூறிவிட்டனர்.

திருக்குறிப்புத் தொண்டர் புராணத்தில் சேக்கிழார் பெருமான் இக்கருத்தை அற்புதமாக எடுத்து ஆளுகிறார். 'தேர் ஒலிக்க மா ஒலிக்க' என்று தொடங்கும் திருக் குறிப்புத் தொண்டர் புராணப் பாடலில் அடியார்களின் இலக்கணத்தைக் கூறவந்த காப்பிய ஆசிரியர்,

> நீர் ஒலிக்க அரா இரைக்க நிலா முகிழ்க்கும் திருமுடியார்
> பேர் ஒலிக்க உருகும் அவர்........
>
> (பெ. பு. திருக்குறிப்பு தொ.பு–113)

என்று பாடுகிறார். இறைவன் பேர் ஒலித்த உடனேயே உருகுகின்றவர்கள் சிறந்த அடியார்கள் என்று இங்குப் பேசப்பெறுகிறது. ஒலிக்க என்று கூறியதால், இதனைச் சொல்பவர்கள் இறைச்சிந்தனையோடு இறைவன் பெயர் களைக் கூறினார்கள் என்று சொல்வதற்கில்லை. ஒலித்தல்

என்ற சொல்லுக்கு, பொருள் கருதாது ஒலியளவில் பேசப்பெறும் சொற்கள் என்றே பொருள் கொள்ள வேண்டும். சேக்கிழார் இங்ஙனம் கூறியதற்குத் 'தென்னா என்னா முன்னம் தீசேர் மெழுகொப்பாய்' என்ற திருவாசக அடியே வழிகாட்டியது போலும்.

திருச்சின்னங்களிலிருந்து எழுகின்ற ஓசையும் ஒலியே ஆகும். தென்னா என்று கூறுபவர்களும் ஒலியளவில் கூறினார்களே அன்றிக் குறிப்பாக இறைவன் பெயரைக் கூறினார்கள் என்பதற்கில்லை. அப்படி இருந்தும் சின்னங்களின் ஒலியும் தென்னா என்ற சொல் ஒலியும் காதில் பட்டவுடன் உருகுதல் இப்பெண்ணின் இயல்பு என்பது தெரிவிக்கப்படுகிறது.

அத்தகைய ஒருத்தியின் வீட்டு வாயிலில் பலர் நின்று ஒலியளவில் இல்லாமல், இறையன்பின் வெளிப்பாடாகப் பொருள் பொதிந்த சொற்களான 'என்னானை' 'என் அரையன்' 'இன்னமுதன்' என்பவற்றைத் தனித்தும், கூடியும் கூறியபோதும் அப்பெருமாட்டி எழவில்லை. ஆதலால், 'இதுவோ துயிலின் பரிசு' என்று வியக்கின்றார்கள். 'இத்தகைய மனப்பான்மை உடைய உன்னை எங்கள் சொற்கள் எழுப்பவில்லை என்றால், உன்னை ஆட்கொண்ட துயிலின் பரிசை எங்களால் ஊகிக்க முடிகிறது' என்பதாம்.

162. கோழி சிலம்பச் சிலம்பும் குருகு எங்கும்
ஏழில் இயம்ப இயம்பும் வெண் சங்கு எங்கும்
கேழ் இல் பரஞ்சோதி கேழ் இல் பரங்கருணை
கேழ் இல் விழுப் பொருள்கள் பாடினோம் கேட்டிலையோ
வாழி ஈது என்ன உறக்கமோ வாய் திறவாய்
ஆழியான் அன்புடைமை ஆம் ஆறும் இவ்வாறோ
ஊழி முதல்வனாய் நின்ற ஒருவனை
ஏழை பங்காளனையே பாடு ஏல் ஓர் எம்பாவாய் 8

குருகு-நாரை; பறவைப் பொதுப் பெயருமாம். ஏழில்-ஏழு துளைகளையுடைய துளைக்கருவி; நாத சுரம். கேழில்-ஈடு இணையற்ற. வாய்-வாயில். ஆழியான்-ஆக்ஞாசக்கரமுடைய இறைவன். ஏழை-உமை.

சென்ற இரு பாடல்களைப் போலவே இப்பாடலும் புறத்தே நிற்பவர்கள் கூற்றாகவே அமைந்துள்ளது. வீட்டில் வளர்கின்ற கோழி, உறக்கம் கலைந்து கூவியவுடன் மரங்கள் முதலியவற்றில் வாழும் பறவையினங்கள் விழித்து ஒலியெழுப்பத் தொடங்கின. பறவையினங்கள் இவ்வாறு ஒலியெழுப்ப, மக்கள் விழித்தெழுந்து 'ஏழில்' என்று சொல்லப்படும் நாதஸ்வரத்தையும் வெண் சங்குகளையும் இசைக்கத் தொடங்கினர்.

'சொற்கள் இல்லாமல் ஓசை அளவிலும் இசை அளவிலும் மேலே கூறிய குருகுகளும் வெண் சங்குகளும் ஒலிக்கின்ற அதே நேரத்தில், ஒப்பு உவமை இல்லாத மாபெரும் கருணையின் வடிவே என்றும், ஒப்பு உவமை இல்லா விழுப்பொருளே என்றும் பொருள் பொதிந்த சொற்களால் அவன் புகழைப் பாடினோம். தோழி! சங்கு முதலியவற்றின் ஓசைக்காவது நீ எழுந்திருந்திருக்கலாம். அதுதான் இல்லையென்றாலும் எங்கள் பாட்டிற்காவது எழுந்திருந்திருக்கலாம். இவை அனைத்தும் சேர்ந்த பொழுதும் நீ எழவில்லை என்றால், இது எப்படிப்பட்ட உறக்கம்! நீ வாழ்வாயாக.'

'விழித்திருக்கின்றபொழுது இறைவனிடத்து ஆழியான் கொண்டிருந்த அன்புக்கு என்னுடைய அன்பு குறைந்த தன்று. ஆழியானாவது ஏதோ ஒரு பொருளை இறைவனிடம் வேண்டி அன்புசெய்தான். இறைவனது அருளைத் தவிர வேறு எதையும் நான் விரும்பவில்லை. அன்பை அன்புக்காகவே செய்கின்றேன் என்றெல்லாம் சொல்லுவாயே, உனது அன்பு எத்தகையது என்று இப்பொழுது புரிந்துகொண்டோம்.'

*'தோழி! அனைத்தையும் அழிக்கும் மகா பிரளயத்தின் போதும், தான் ஒருவனாகவே நின்று அப்பிரளயத்தை ஏவுகின்ற முதல்வன், நாம் வணங்கும் இறைவன். அவ்வளவு பெரியவன் நமக்கு எங்கே அருள்செய்யப் போகின்றான் என்று கவலை கொள்ளாதே. நம்மைப் போன்ற பெண்ணாகிய ஒருத்திக்குத் தன் உடம்பிலேயே பாதியைத் தரும் வள்ளல் அவன். அத்தகையவனைப் பாடுவோம் வா' என்றனர்.*

*19ஆம் நூற்றாண்டில் தோன்றிய வள்ளலார் திருவாசகத்தில் 'நான்' என்பதைக் கரைத்துக்கொண்டு மணிவாசகரிடம் ஈடுபட்டு, பன்னாளும் இப்பாடல்களைப் பாடி, இறுதியாகத் திருவாசகம் ஆகிய பழத்தைப் பிழிந்து சாறாக எடுத்தது 'அருட்பெருஞ்சோதி தனிப்பெருங் கருணை' என்பதாகும். இந்தத் தொடர் முழுவதும் மேலேயுள்ள திருவெம்பாவைப் பாடலில் 'கேழில் பரஞ்சோதி கேழில் பரங்கருணை' என்ற அடியில் அமைந்திருப்பதைக் காணலாம்.*

*கோழி சிலம்புவதும், குருகுகள் சிலம்புவதும் ஏதோ தங்களுடைய குரலை வெளிப்படுத்துகின்றன என்று கொள்ளாமல், கோழியும் குருகும் நாதஸ்வரமும் வெண்சங்கும் தங்களுக்கே உரிய முறையில் இறைவன் புகழைப் பாடுகின்றன என்று குறிப்புப்பொருள் காண்பதில் தவறொன்றுமில்லை.*

**163.** முன்னைப் பழம் பொருட்கும் முன்னைப் பழம் பொருளே
பின்னைப் புதுமைக்கும் பேர்த்தும் அப் பெற்றியனே
உன்னைப் பிரானாகப் பெற்ற உன் சீர் அடியோம்
உன் அடியார் தாள் பணிவோம் ஆங்கு அவர்க்கே பாங்கு ஆவோம்
அன்னவரே எம் கணவர் ஆவார் அவர் உகந்து
சொன்ன பரிசே தொழும்பாய்ப் பணி செய்வோம்

இன்ன வகையே எமக்கு எம் கோன் நல்குதியேல்
என்ன குறையும் இலோம் ஏல் ஓர் எம்பாவாய் 9

பிரானாக-தலைவனாக. பாங்கு-உரிமை. தொழும்பு-அடிமை.

சென்ற எட்டுப் பாடல்களும் உறங்கியவள் கூற்றாகவும் அவளை எழுப்புவோர் கூற்றாகவும் அமைந்துள்ளன. அவ்வாறு அமையாமல் அனைவரும் ஒன்றாகச் சேர்ந்து இறைவனை வேண்டுதலை இப்பாடல் பேசுகிறது. உள்ளே இருப்பவள், வெளியே இருப்பவர் என்ற வேறுபாடற்று ஒரு நோக்கத்துடன் ஒரே குரலில் அனைவரும் ஒன்றாகவே பேசுவதை இப்பாடல் வெளியிடுகின்றது.

பாடலின் முதலடி இறை இலக்கணத்தை மிகச் சிறப்பாகப் பேசுகின்றது. பழமை, புதுமை என்ற சொற்கள் ஒப்புநோக்குச் சொற்களே அன்றித் தனித்துவம் வாய்ந்தவை அல்ல. காலம் என்ற ஒன்று இடையீடின்றிச் செல்வதாகும். காலத்திற்குத் தோற்றமோ முடிவோ இல்லை. அதனாலேயே இறைவனைக் 'காலமே! உனை என்றுகொல் காண்பதே' (திருவாச:47) என்று முன்னரும் அடிகளார் கூறியுள்ளார்.

இந்தக் கால ஓட்டத்தில் நேற்றுத் தோன்றியவை இன்று பழமையாகவும், இன்று தோன்றியவை அடுத்த விநாடியே பழைமையானவையாகவும், நாளை தோன்றப் போகின்றவை புதுமையானவையாகவும் பேசப் பெறுகின்றன. வேறு வகையாகக் கூறினால், பழமையை இறந்த காலம் என்றும், புதுமையை எதிர்காலம் என்றும் கூறுவதில் தவறில்லை. எந்த ஒன்றும் இந்த விநாடி தோன்றுகிறது என்றால், அது தோன்றிவிட்ட நிலையில் இறந்த காலமாகவும், தோன்றுவதற்கு முன்னர் எதிர் காலமாகவும் இருத்தலின் பழமை, புதுமை என்பன இந்த இரண்டு காலங்களுள் அடங்கிவிடுகின்றன.

இந்த அடிப்படையை மனத்துள்கொண்டே பௌத்தர்கள் நிகழ்காலம் என்ற ஒன்றை மறுத்து, இறந்த காலம், எதிர்காலம் என்ற இரண்டைமட்டுமே கொண்டனர்.

அடிகளார் 'முன்னைப் பழம் பொருட்கும் முன்னைப் பழம் பொருளே' என்று கூறியது சிந்திக்கத் தக்கது. பொதுவாகப் பொருள் என்று கூறினால், அது திண்மையும் வடிவும் உடையதாக இருத்தல் வேண்டும். இவை இரண்டும் இல்லாத காற்றை, ஓரோவழிப் பொருள் என்று கூறினார்களேனும், அதனைப் பொருள் என்று கூறும் மரபு இல்லை. ஆனால், அடிகளார் விஞ்ஞானி ஆதலால் காற்றையும், காலி இடத்தையும் (empty space) பொருள் என்றே கொள்கிறார்.

பல கோடி ஆண்டுகளின் முன்னர்த் தோன்றிய பிரபஞ்சம், இந்த உண்டைகளின் நடுவே உள்ள காலி இடம் என்பவை என்று தோன்றின என்று கூறும் ஆற்றல் இற்றை நாள் விஞ்ஞானத்திற்கு இல்லை. ஆனாலும், இந்தப் பிரபஞ்சத்திற்குத் தோற்றம் உண்டு என்றே மெய்ஞ்ஞானி களும் விஞ்ஞானிகளும் கூறியுள்ளனர். எந்த ஒன்றும் தோன்றிற்று என்றால், அது மறைந்தே தீரவேண்டிய கடப்பாடுடையது.

அடிகளார் முன்னைப் பழம் பொருள் என்று குறிப்பிட்டது முக்கூட்டுப் பரிமாணம் உடைய இந்த அண்டத்தையே ஆகும். ஒரு கர்த்தாவால் அண்டம் படைக்கப்பட்டது என்றால், படைக்கப்பட்ட பொருளைக் காட்டிலும் படைத்தவன் முற்பட்டவனாக (பழமையான வனாக) இருத்தல் உறுதி.

இந்தப் பழம் பொருள்கள் அனைத்தும் என்றோ ஒரு காலத்தில் படைக்கப்பட்டவை என்றால், அதற்கு முன்னர் என்ன இருந்திருக்கும் என்ற வினாத் தோன்றுமன்றோ?

அவ்வினாவிற்கு விடை கூறுவார்போல 'உண்மைதான்! கண்ணாலும் கருத்தாலும் காணப்படுகின்ற இப்பிரபஞ்சத் திற்கு முன்னரே ஒரு பழம்பொருள் இருந்தது; இருக்கின்றது; என்றும் இருக்கும் என்கிறார். இப்பிரபஞ்சம் ஒரு காலத்தில் இல்லாமலிருந்தது; இப்பொழுது இருக்கின்றது; என்றோ ஒரு காலத்தில் இல்லாமல் போய்விடும். அதாவது தோற்றம், இருப்பு, மறைவு ஆகிய மூன்று இயல்புகளும் பிரபஞ்சத்திற்கு இயல்பு. இந்த மூன்று இயல்புகளும் இல்லாத ஒரு பழம்பொருளும் உண்டு. இதனைக் குறிப்பிடவே 'முன்னைப் பழம்பொருட்கு முன்னைப் பழம்பொருளே' என்றார்.

என்றோ ஒரு காலத்தில் தோன்றிய பிரபஞ்சம் நாள்தோறும் புதுமைகள் பல பெற்று விளங்குகிறது. வளர்ச்சி என்பதே புதுமைதான். விரிந்து செல்கின்ற பிரபஞ்சத்தில் பூமி, கதிரவன் போன்ற கோள்கள் நேற்று இருந்த இடத்தில் இன்று இல்லாமல் இடம் மாறி விரிந்து கொண்டே செல்கின்றனவே, அதுவும் புதுமைதானே! இந்தப் புதுமைகளைத் தொடர்ந்து தோற்றுவிக்கின்ற கர்த்தா, புதுமைக்கும் புதுமையன் என்று பேசப்படுகிறான். அவன் என்றும் ஒருநிலைப்பட்டவனாகவே உள்ளான். என்றும் வளர்கின்ற புதுமையிலும் அவன் இடம் பெறுகிறான். ஆதலால், 'புதுமைக்கும் அப்பெற்றியனே' என்றும் கூறுகிறார்.

'உறைசேரும்' என்று தொடங்கும் திருவீழிமிழலைப் பதிகத்தில் காழிப் பிள்ளையார் இக்கருத்தைச் சற்று விளக்கமாகவே பேசுகிறார். 'நிறைசேரப் படைத்து, அவற்றின் உயிர்க்கு உயிராய், அங்கங்கே நின்றான்' (திருமுறை: 1—132—4) என்று சொல்லுகின்றார். நிறைசேரப் 'படைத்து' என்பதால் படைக்கப்பட்ட பழைய பொருள்களுக்கு முன்னே உள்ளான் என்பது பெற்றோம். 'உயிர்க்கு உயிராய்' அங்கங்கே நின்றான் என்று கூறியதால்

தோன்றி, வளர்ந்து, மறையும் உயிர் பல்வேறு உடல்களை எடுக்கிறது, அவ்வாறு எடுத்தாலும் உயிர் ஒன்றாகவே உள்ளது. என்றாலும் புல்லாய்ப் பூடாய் என்று கூறுவதுபோல உடம்பு மாற்றம் காரணமாக அந்த உயிர், வளர்ச்சியை அடைகிறது என்பது தெளிவு. எனவே, அந்தந்த உடலிலும் அந்தப் பழைய உயிர் புதிய வளர்ச்சியைப் பெறுதலின் புதுமையாகவே உள்ளது. உயிர் பெற்ற இவ் வளர்ச்சியையே 'புதுமை' என்று கூறுகின்றோம். அந்த உயிருக்கு உயிராய் அதனுள் இருக்கும் இறைவன் இந்தப் புதிய வளர்ச்சியில் தானும் இடம் பெறுகிறான் ஆதலின், புதுமைக்கும் புதுமையனாகவே இருக்கிறான்.

தருக்க முறையில் இவ்வாறு சிந்தித்தால் 'முன்னைப் பழம் பொருட்கும் முன்னைப் பழம்பொருளே பின்னைப் புதுமைக்கும் பேர்த்தும் அப்பெற்றியனே' என்று அடிகளார் பாடியது எவ்வளவு பொருத்தமானது என்பது விளங்கும்.

அடுத்து உள்ள 'உன்னைப் பிரானாக...... பணி செய்வோம்' என்ற பகுதி பொதுவாக அனைவருக்கும், சிறப்பாக அடியார்களுக்கும் மிகவும் தேவையான பகுதியாகும்.

'எண்ணித் துணிக கருமம்' (திருக்குறள்: 467) என்றும் 'இதனை இதனால் இவன் முடிக்குமென்று ஆய்ந்து அதனை அவன்கண் விடல்' (திருக்குறள்:517) என்றும் அனுபவ ரீதியான ஒரு முடிவைக் குறள் பேசியுள்ளது. இந்தக் கன்னிப் பெண்களைப் பொறுத்தமட்டில் தாங்கள் யார் என்பதை நன்கு யோசித்து, ஒரு முடிவுக்கு வந்து, 'உன்னைப் பிரானாகப் பெற்ற உன் சீரடியோம்' என்று கூறியுள்ளார்கள். தாங்கள் யார் என்பதை ஐயம் திரிபுக்கு இடமின்றித் தெளிந்த சிந்தனையுடன் முடிவாக உன் 'சீரடியோம்' என்று கூறிவிட்டனர்.

எனவே, அடுத்துச் செய்யவேண்டியதை எண்ணித் துணிகின்றார்கள். சீரடியார்களாகவும் மகளிராகவும் உள்ள அவர்கள் வாழ்க்கை முன்னேறி, முழுப்பயன் தரவேண்டும் என்றால், அதற்கு இன்றியமையாத தேவை ஒன்றுண்டு. வாழ்க்கை முழுமை அடைய ஒரு கணவன் வேண்டும். அப்படிக் கணவனாக வருகின்றவன் இவர்களின் வாழ்க்கைக் குறிக்கோளை ஏற்றுக்கொண்டவனாகவும், அதற்குத் துணை நிற்பவனாகவும் இருத்தல் வேண்டும். அத்தகைய ஒருவனைத் தங்கள் 'சிற்றறிவு கொண்டு தேடியடைதல் இயலாத காரியம். ஆதலால், இதுவரை தங்களுக்கு அருள்செய்து இந்த மனநிறைவோடு வளர்த்து விட்ட இறைவனிடமே இந்த வேண்டுகோளையும் வைக்கின்றனர்.

தங்களுக்கு இறைவன் தரப்போகின்ற கணவனிடம் என்ன தகுதி இருக்க வேண்டும் என்பதை இதோ பேசுகிறார்கள். 'நின் அடியார் தாள் பணிவோம்' என்றதால், வருகின்ற அவர்கள் எத்தகையவர்கள், அவர்கள் தங்கள் வளர்ச்சிக்கு உதவக்கூடியவர்களா என்ற ஆராய்ச்சியில் அவர்கள் இறங்கவில்லை. ஏன்? வரப் போகின்றவர்கள் அடியார்கள் ஆதலின் மேலெதுவும் பேசாமல் அவர்கள் தாள் பணிவோம் என்று கூறிவிட்டனர்.

'ஆங்கவர்க்கே பாங்காவோம்' என்றதால், அடியார் களிடமே சரண்புகப்போவதால் தங்கள் தனித்துவத்தை விட்டுவிட்டு அவர்களோடு ஒன்றிவிடுவோம் என்கிறார்கள்.

இதனைக் கூறியவர்கள் அத்தகைய ஒருவரே தங்கள் கணவராக வரவேண்டுமென்றும் வேண்டுகின்றனர்.

அடுத்து உள்ளது 'அவர் உகந்து சொன்ன பரிசே தொழும்பாய்ப் பணிசெய்வோம்' என்பதாகும். இந்த அடியில் 'உகந்து' என்ற சொல்லை, உகந்து சொன்ன பரிசு

என்றும், சொன்ன பரிசே உகந்து பணிசெய்வோம் என்றும் இரண்டு இடங்களிலும் கூட்டிப் பொருள் செய்வது நலம். அடியார்களாகிய தமக்கு இறையடிமை பூண்ட ஒருத்தியே மனைவியாகக் கிடைத்துள்ளமையின், அவளிடம் எதைக் கூறினாலும் மன மகிழ்ச்சியோடு கூறுகிறார்கள் என்பதை உகந்து சொன்ன பரிசு என்பதற்குப் பொருளாகக் கொள்ளலாம்.

ஒருவர் தம் விருப்பத்தை எவ்வாறு கூறினாலும், மனைவியாக இருப்பவள் அதனைச் செய்யும் கடப்பாடுடையவள் என்பது, இந்நாட்டில் ஒரு காலத்தில் இருந்த கொள்கையாகும். விரும்பினாலும் விரும்பா விட்டாலும் சொன்ன பரிசே தொழும்பாய்ப் பணி செய்தல் என்பது இந்தக் கொள்கையாளரின் அடிப்படைத் தத்துவம். இந்த அடிப்படையை மாற்றிப் புதிய முறையில் பேசுகிறார்கள் இப்பாடலில் வரும் பெண் அடியார்கள். உகந்து பணி செய்வோம் என்று அமைத்துக்கொண்டால் இப்புதிய பொருள் கிட்டும். அதாவது, அடியார்களாகிய கணவன்மார்கள் எந்தக் கட்டளை இட்டாலும் மனம் ஒப்பி மிக்க மகிழ்ச்சியோடு அப்பணியை நிறை வேற்றுவோம் என்றால், கணவன்மாரிடத்து உள்ள நம்பிக்கையும், அவர்கள் கட்டளைகளை நிறைவேற்றுவதில் இம்மகளிருக்கு இருந்த மகிழ்ச்சியும் இதனால் பேசப்பெற்றன.

மனித மனத்தின் இயல்பு வினோதமானது. ‘அரிது பெற்றிடினும் பெற்றதில் விருப்பம் அறப் பெறாதன விரும்பும் உயிர்கள்’ என்றார் ஒரு பெரியவர். குறை இல்லாத மனம் இவ்வுலகில் இல்லை. அப்படியிருக்க இந்தச்சீர் அடியார்களாகிய பெண்கள், அடியார்களாகிய கணவன்மார்கள் தங்களுக்குக் கிடைத்துவிட்டால் எவ்விதக் குறையும் இலோம் என்று சொல்வது அவர்கள் மன

*நிறைவையும் பண்பாட்டையும் விளக்குகின்றது. அடியார் களுக்குக் குறையென்பதே இல்லை என்பதைக் 'கேடும் ஆக்கமும் கெட்ட திருவினார்'(பெ.புரா: திருகூட்டச் சிறப்பு—8) என்ற தொண்டர்சீர் பரவுவாரின் அடி விளக்கமாகச் சொல்கிறது.*

**164.** பாதாளம் ஏழினும் கீழ் சொல்கழிவு பாத மலர்
போது ஆர் புனை முடியும் எல்லாப் பொருள் முடிவே
பேதை ஒருபால் திருமேனி ஒன்று அல்லன்
வேத முதல் விண்ணோரும் மண்ணும் துதித்தாலும்
ஓத உலவா ஒரு தோழன்(ம்) தொண்டர் உளன்
கோது இல் குலத்து அரன்தன் கோயில் பிணாப் பிள்ளைகாள்
ஏது அவன் ஊர் ஏது அவன்பேர் ஆர் உற்றார் ஆர் அயலார்
ஏது அவனைப் பாடும் பரிசு ஏல் ஓர் எம்பாவாய் 10

சொற்கழிவு-சொல்லெல்லையைக் கடந்த இடம். வேதமுதல்-பிரணவம். பிணாப்பிள்ளை-பெண்பிள்ளைகள். ஓத உலா-சொல்லில் அடங்காத.

*பாடிக்கொண்டு நீராடச் செல்கின்ற பெண்கள் குளத்திற்குச் சென்றபோது, தங்களுக்கு முன்னரே ஒரு மங்கையர் கூட்டம் அங்கிருப்பதைக் கண்டனர். இவர்களைப்போலத் தனித்தனி வீடுகளிலிருந்து வந்தவர்கள் அல்லர், பிணாப் பிள்ளைகள் என்று அழைக்கப்படும் அப்பெண்கள்.*

*கன்னிமாடங்களில் இருந்துகொண்டு திருக்கோயில் பணியையே தம் முழுநேரப் பணியாகக் கொண்டவர்கள் அப்பிணாப் பிள்ளைகள். கன்னிப் பருவத்திலேயே திருக்கோயில் பணிக்கென்று தம்மை அர்ப்பணித்துக் கொண்ட இவர்கள், தம் போன்றவர்கள் தங்குமிடமாகிய கன்னிமாடத்தில் முழுமையாகத் தங்கிவிட்டனர்.*

நம்பியாரூரர் திருமணம் செய்துகொண்ட பரவையாரும் சங்கிலியாரும் இவ்வகையைச் சேர்ந்தவர்களே ஆவர். இங்ஙனம் கன்னி மாடங்களில் தங்கியவர்களில் ஒருசிலர் தாங்களாகவே அடியார் ஒருவரைத் தேர்ந்தெடுத்து மணம் செய்துகொண்டு அவருடனேயே வாழ்வதும் உண்டு. அத்தகையவர்களையே 'பிணாப்பிள்ளைகாள்' என்று அடிகளார் குறிப்பிடுகின்றார்.

நாம் காணக்கூடிய பிரபஞ்சங்கள் அனைத்தும் ஒலி வடிவும் பொருள் வடிவும் கொண்டனவாகும். இவ்வடிவுகள் இரண்டும் அவற்றின் இயல்புகளாகும். வெற்றிடம் என்று சொல்லப்படுகின்ற ஆகாயத்திலும் அநாதியான சப்தம் உண்டு என்று இன்றைய விஞ்ஞானமும் ஏற்றுக்கொள்கிறது. இதனையே அடிகளார் 'சொற்கழிவு' என்றும் 'பொருள் முடிவு' என்றும் கூறினார்.

'சொற்கழிவு' என்றதால் சப்தப் பிரபஞ்சத்தையும் 'பொருள்முடிவு' என்றதால் அர்த்தப் பிரபஞ்சத்தையும் கூறினார். இதன் மூலம் இறைவன் சப்த, அர்த்தப் பிரபஞ்சங்களைக் கடந்து நிற்பவன் என்பதையும் கூறினார் ஆயிற்று.

பாதமலர் கீழுலகம் ஏழையும் கடந்து, சுட்டப்படும் சொல்லையும் கடந்து இன்னும் கீழே சென்றுள்ளது. அவனுடைய திருமுடி நிலையியல் பொருள், இயங்கியல் பொருள், வன்பொருள், நுண்பொருள் ஆகிய அனைத்துப் பொருள் வடிவையும் கடந்து நிற்பதாயுள்ளது.

உண்மையைக் கூறுமிடத்து ஒரு சொல்லுக்கும் அது குறிக்கும் பொருளுக்கும் எவ்விதத் தொடர்பும் இல்லை. ஒரு குறிப்பிட்ட சொல் குறிப்பிட்ட பொருளைப் பண்டு தொட்டு மரபுபற்றிக் குறிப்பதாகவே நம் முன்னோர் கருதினர்; அதனை இடுகுறி என்றே கூறினர். சில சமயங்களில் இச்சொல் அப்பொருளைச் சுட்டாமல்

போவதும் உண்டு. இவற்றையெல்லாம் மனத்திற்கொண்ட தொல்காப்பியனார் 'எல்லாச் சொல்லும் பொருள் குறித்தன' (தொல்:சொல்-5-1) என்று கூறிப்போனார்.

இந்த அடிப்படையை மனத்துட்கொண்டு பார்த்தால், பாதமலர் சொற்கழிவு என்று கூறுவதன் அடிப்படையை ஓரளவு புரிந்துகொள்ள முடியும். பாதம் என்ற சொல் திருவடி ஆகிய பருப்பொருளையும், 'பாதாளம் ஏழினும் கீழ்' என்ற தொடர் நீட்டல் அளவையையும் குறிப்பதாகக் கொள்ளுதல் பொருத்தமாகத் தெரியவில்லை. அதேபோலப் 'புனைமுடியும் எல்லாப் பொருள் முடிவே' என்பதும் உயரத்தின் அளவையோ வடிவத்தையோ குறிப்பதாகக் கொள்வதும் சரியாகத் தோன்றவில்லை. பாதாளம் ஏழினும் கீழ் என்றதால் இவ்வாறு பொருள் கூறினர்போலும்.

மனத்தில் தோன்றும் எண்ணம், கற்பனை ஆகியவற்றிற்குச் சொல் ஓரளவு வடிவு கொடுக்கின்றது என்பது உண்மைதான். ஆனால், உணர்வின் அடிப்படையில் தோன்றும் எண்ணங்களுக்குச் சொல் வடிவு கொடுக்க இயலுவதில்லை. 'கருங்கோல் குறிஞ்சிப் பூக்கொண்டு பெருந்தேன் இழைக்கும், நாடனொடு நட்பு நிலத்தினும் பெரிதே; வானினும் உயர்ந்தன்று, நீரினும் ஆர் அளவின்று' (குறுந்தொகை:3) என வரும் சங்கப்பாடல் உணர்விற்கு அளவு கூற முடியாமையை நன்கு உணர்த்துகின்றது. கண்ணால் காணக்கூடியதை வைத்துக்கொண்டு காண முடியாத பருப்பொருளல்லாத நட்பின் பெருமையை இப்பாடல் குறிக்கின்றது.

சொல்லின் மூலம் எவ்வளவு அடுக்கிக் கூறினாலும் அது எல்லையுடையதாக ஆகிவிடுகின்றது என்பதை மறுத்தற்கில்லை. இந்தப் பிரச்சினையைப் போக்கிக் கொள்ள ஒரே வழிதான் உண்டு. அந்த அடிப்படையில் 'சொற்கழிவு' என்று கூறுவதன்மூலம் எல்லை கடந்து என்ற பொருளை அடிகளார் பெறவைக்கின்றார்.

எங்கும் நிறைந்துள்ளதும் வடிவு கடந்ததுமாகிய பரம்பொருளுக்கு, மக்கள் மனத்தில் பதியவேண்டும் என்ற ஒரே காரணத்திற்காக வடிவு கற்பிக்கின்றார் அடிகளார். அதனாலேயே பாதமலர், புனைமுடி என்ற சொற்கள் மூலம் அவ்வடிவிற்கு ஒரு எல்லை காட்ட முயல்கிறார். எல்லையாக ஒன்றைக் கூறிவிட்டால் அனைத்தையும் கடந்து நிற்கும் அந்தப் பொருளின் இயல்பிற்கு இழுக்கு வந்துவிடும் என்ற நினைவு தோன்றவே, பாதமலர் சொற்கழிவு என்றும் புனைமுடி பொருள்முடிவே என்றும் கூறினாராயிற்று.

'பேதை ஒருபால் திருமேனி ஒன்றல்லன்' என்ற தொடரில் மிக நுண்மையான பொருள் அமைந்திருத்தலை அறிதல்வேண்டும். திருமேனி ஒன்றல்லன் என்றதால், உலகிலுள்ள எல்லாப் பொருளும் அவன் திருமேனி ஆகும். அதாவது, அவன் வடிவே ஆகும் என்பது கருத்து.

இவ்வாறு கூறியவுடன் ஒரு திருமேனி என்றால், அவன் ஒருவனுடைய வடிவையே அது குறிக்கும் என்று நினைந்துவிட வேண்டா. அந்த ஒரு திருமேனியிலும் ஒரு பகுதி சக்தியின் வடிவாகும் என்று கூறுகிறார்.

பொருள் (matter) , சக்தி (energy) என்ற இரண்டின் கூட்டாகவே அணு முதல் அண்டம்வரையுள்ள அனைத்தும் அமைந்திருக்கின்றது என்பதை இற்றைநாள் விஞ்ஞானம் ஏற்றுக்கொள்கின்றது. பொருளிலிருந்து சக்தியைத் தனியே பிரிப்பது ஏறத்தாழ இயலாத காரியம். இந்த அரிய கருத்தையே, திருமேனி ஒன்றல்லன் பேதை ஒருபால் உண்டு என்கிறார்.

அடுத்துள்ள அடி 'வேதம் முதல் விண்ணோரும் மண்ணும் துதித்தாலும் ஓத உலவா'தவன் என்பதாகும். வேதம் யாராலும் இயற்றப்படாதது என்ற பொருளில் அபௌருஷேயம் என்ற சொல்லால் குறிக்கப்படுகிறது.

வேதத்தை அடுத்து, நுண் உடம்புடன்(சூக்கும சரீரத்துடன்) உள்ள விண்ணோரைக் கூறினார்; அதனை அடுத்துப் பருப்பொருளாக உள்ள மண்ணோரைக் கூறினார். இவ்வாறு கூறியதன் நோக்கம் ஒன்று உண்டு. மண்ணோர், காலம், இடம் (time and space) என்ற இரண்டிற்கும் கட்டுப்பட்டவர் ஆவர். தேவர்கள் காலத்திற்குக் கட்டுப்பட்டாலும் இடத்திற்குக் கட்டுப்படாதவர் ஆவர். வேதம், காலம் இடம் இரண்டையும் கடந்து நிற்பது. ஒன்றுக்கொன்று நுண்மைத்தாய மண் முதல் வேதம் வரையுள்ள அனைத்தையும் கடந்து நிற்கின்றான் என்ற கருத்தைத்தான் 'ஓத உலவா' தவன் என்றார்.

இவ்வாறு கூறியவுடன் மிகத் தாழ்ந்தவர்களாகிய நமக்குக் காலம், இடம் என்பவற்றைக் கடந்து நிற்கும் அவன் பயன்பட மாட்டான் என்ற அச்ச உணர்ச்சி தோன்றுதல் இயல்பே ஆகும். இந்த அச்சம் காரணமாகவே அவனை வழுத்துவதைச் சாதாரண மக்கள் விட்டுவிடுவர். மனித மனத்திற்கு ஓர் இயல்பு உண்டு. தன் எல்லைக்கு அப்பாற்பட்ட ஒன்றை அது சிந்திப்பது கடினம். அந்த ஒன்று தனக்கு உதவும், பயன்படும் என்ற நினைவு தோன்றினால் அந்தப் பொருளை மனித மனம் நாடிச்செல்லும். இக்குறைபாட்டினை நன்கு அறிந்த அடிகளார், நம் அச்சத்தைப் போக்க ஒன்றைச் சொல்கிறார். ஓத உலவாதவன் அவன் என்பது உண்மைதான்; ஆனால், அவனிடம் மற்றோர் இயல்பும் உண்டு. உயிர்கள்மாட்டுக் கொண்ட கருணையால் கரிக்குருவிக்கும் பன்றிக் குட்டிக்கும் அருள் சுரப்பவன் என்பதை நமக்கு நினைவூட்டுவார்போல 'ஒரு தோழன்' என்றார். தோழனாக வரினும் என்றோ ஒரு முறை வந்து சில நேரம் உடனிருந்து பிறகு பிரிந்து சென்றுவிடுவானோ என்ற அச்சம் தோன்றாதிருக்கத் 'தொண்டர் உளன்' (தொண்டர்களிடையே எப்போதும் உள்ளான்) என்றும்

கூறினாராயிற்று. 'ஒரு தோழம்' என்ற பாடமும் உண்டு. தோழம் என்ற சொல் மிகப் பெரிய பேரெண்ணை, ஆதாவது 'எண்ணிலி' என்பதைக் குறிப்பதாகும் இச் சொல். 'ஓத ஒரு தோழம்' என்றதால் அவனைப் பற்றியும், அவன் பெருமைகளைப் பற்றியும் ஓதத் தொடங்கினால் எண்ணிலடங்காதவனாவான் என்ற பொருளைத் தந்து நிற்கும்.

நீராட வந்துநின்ற பெண்கள் கோயில் பிணாப் பிள்ளைகளைக் கண்டவுடன் தங்களையும் அவர்களையும் ஒப்பிட்டுப் பார்க்கின்றனர். காலை நேரத்தில் ஒன்றுகூடி இறைவன் புகழைப் பாடிக்கொண்டு நீராடுகின்ற இவர்கள் அப்பணி முடிந்து வீடு திரும்பியதும் தத்தம் பணிகளில் ஈடுபடுவர். இறைவனைப்பற்றிச் சிந்திக்கவோ அவன் இயல்புகளை ஆராயவோ அவர்களுக்கு நேரம் இருப்பதில்லை. ஆனால், கன்னி மாடங்களில் தங்கி இறை பணியிலேயே நாள் முழுவதையும் செலவிடும் இப்பிணாப் பிள்ளைகள், அவனைப்பற்றிச் சிந்திக்க மிகுந்த வாய்ப்புடையவர்கள் ஆயிற்றே. எனவே, தங்கள் மனத்தில் தோன்றிய ஐயங்களை அவர்கள்பால் கேட்டுத் தெளியலாம் என்ற எண்ணத்தில் இதோ பேசுகின்றனர்.

'கோயில் பிணாப் பிள்ளைகாள்! ஏது அவன் ஊர்? ஏது அவன் பேர்? (அவனுக்கு) உற்றார் யார்? அயலார் யார்? அவனைப் பாடும் பரிசு எது?' என்று தம் மனத்தில் இதுவரை முடங்கிக் கிடந்த ஐயங்களை வெளியிடு கின்றனர்.

அதிகம் பழக முடியாமல், ஆனால், நம்மால் பெரிதும் மதிக்கப்படுகின்ற ஒரு பெரியவரிடம் நெருங்கிப் பழகுகின் றவர்களைக் கண்டவுடன், அப்பெரியவரைப்பற்றி அறிந்து கொள்ள நாம் முயல்வது இயல்பன்றோ? இந்த இயல்பை

அடிப்படையாகக் கொண்டே பிணாப் பிள்ளைகளிடம் நீராட வந்தவர்கள் வினாக்களைத் தொடுக்கின்றனர்.

இவ்வினாக்களைச் சற்றுச் சிந்தித்தால் இப்பெண்களின் மனநிலையை ஒருவாறு புரிந்துகொள்ள முடியும். எங்கும் எல்லாவற்றிலும் நிறைந்தும் அவற்றை கடந்தும், கால தேச வர்த்தமானங்களைத் தாண்டி நிற்கும் பொருள் அது என்ற பொருள்பட இதுவரை பாடிக்கொண்டு வந்தவர்கள் இவர்கள். அவ்வாறு பாடுகின்றவரையில் அப்பொருளி னிடத்து அச்சம் கலந்த பக்தி தோன்றிற்றே தவிர நெருக்கம் ஏற்பட வாய்ப்பில்லை. இப்பொழுதுதான் அவன் ‘தொண்டருளன் ஒரு தோழன்’ என்ற புதிய சிந்தனை தோன்றிற்று. திருவருட் பயனாகத் தோன்றிய இந்தப் புதிய சிந்தனை மனத்திடை வந்ததும், அவனிடம் நெருக்கம் மிகுதியாயிற்று; நெருக்கம் மிகுதியானவுடன் அவன்பற்றிய சில கூறுகளை அறிந்துகொள்ள வேண்டும் என்ற எண்ணம் தோன்றவே இவ்வினாக்கள் வெளிப்பட்டன.

இந்த எண்ணம் தோன்றியவுடன் எல்லா உயிரிலும், எல்லா உடம்பிலும் நீக்கமற நிறைபவன் அவன் என்ற எண்ணம் பின்னடைந்துவிடுகிறது. எனவே, அவனுக்கு நண்பர்கள் யார்? அவனை அறியாமல், அறிய முயலாமல் இருக்கும் அயலார் யார்— என்ற வினாக்களைத் தொடுக்கின்றனர்.

இதுவரை அவர்கள் பாடிவந்தது, கற்பனைக்கு அப்பாற்பட்டுள்ள ஒருவனின் பெருமையைக் குறிப்பிடு வதாகும். இப்பொழுது தம்முள் ஒருவனாக நெருங்கிவிட்ட அவனைப் பழைய முறையில் வாழ்த்திப் பாடுவது பொருந்தாதோ என்று ஐயுறுகின்றனர். எனவேதான், அவனைப் பாடும் பரிசு எது என்று பிணாப்பிள்ளைகளை வினவுகின்றனர்.

165. மொய் ஆர் தடம் பொய்கை புக்கு முகேர் என்னக்
கையால் குடைந்து குடைந்து உன் கழல் பாடி
ஐயா வழி அடியோம் வாழ்ந்தோம் காண் ஆர் அழல்போல்
செய்யா வெள் நீறு ஆடீ செல்வா சிறு மருங்குல்
மை ஆர் தடம் கண் மடந்தை மணவாளா
ஐயா நீ ஆட்கொண்டருளும் விளையாட்டில்
உய்வார்கள் உய்யும் வகை எல்லாம் உய்ந்து ஒழிந்தோம்
எய்யாமல் காப்பாய் எமை ஏல் ஓர் எம்பாவாய் 11

மொய்-(வண்டுகள்) மொய்க்கின்ற. மருங்குல்-இடை. எய்யாமல்-இளைக்காமல்.

அகன்ற பெரிய பொய்கையிடத்து முகேரெனப் பாய்ந்து கையால் குடைந்து முன்னேறிச் செல்லுதல் உடம்பின்வசப்பட்டதாகும். இந்தச் செயலில் கை, கால் முதலிய உறுப்புகள் பல்வேறு தொழில்களைச் செய்வதால் குளத்தில் பாய்தலும் முன்னேறிச் செல்லுதலும் இயன்றது என்க.

இந்த நிலையில் வாய் தனக்கென ஒரு பணியை மேற்கொண்டுள்ளது. சாதாரணமாக நீரில் குளிப்பவர் ஆ...ஊ.... என்று ஆரவாரித்துத் தம் மகிழ்ச்சியை வெளியிடுவர். நீராடுவதால் உடலுக்கு ஏற்படும் இன்பத்தை, அவர்களின் வாய் ஆரவாரம் வெளிப்படுத்தும்.

இந்தச் சராசரி இயற்கைக்கு மாறாக, இப்பெண்கள் நீரில் துளையமாடும்போதும், அவர்கள் வாய், ஆரவாரம் செய்யாமல் இறைவன் திருவடிப் புகழைப் பாடகின்றது என்ற கருத்தை 'உன் கழல்பாடி' என்ற சொற்களால் பெறவைத்தார்.

தம்மாட்டு உள்ள இறையன்பு வலுப்பெற்றதற்குரிய காரணம் தங்கள் பரம்பரைச் சிறப்பே என்பதை நினைவூட்டவே 'வழியடியோம்' என்றனர்.

கழலைப் பாடும் இந்தப் பணி, அவர்கள் நீராடும் பொழுதுதான் நடைபெறுகிறது போலும் என்று கருத வேண்டா. 'கழல்பாடி' என்ற தொடரை அடுத்துவரும் 'வாழ்ந்தோம் காண்' என்பதனோடு சேர்த்தல் வேண்டும். பாடி என்ற வினையெச்சம் வாழ்ந்தோம் என்ற வினைகொண்டு முடிகிறது. வாழ்தலாகிய இக்காரியம் நடைபெற, பாடுதலாகிய காரணம் உதவிற்று என்க. வாழ்ந்தோம் என்ற சொல்லுக்கு உடல் அளவில் வாழ்கின்றோம் என்று பொருள் கூறல் சரியன்று. மேலும் மேலும் ஆன்ம வளர்ச்சியடைகின்ற தன்மையையே வாழ்வு என்ற சொல் குறிப்பிடுகின்றது.

நின் கழல்பாடி வாழ்ந்தோம் என்று கூறுவதால் உன் திருவடிகளைப் பாடப்பாட எங்கள் வாழ்வு மேலும் மேலும் வளர்ச்சி அடைகின்றது என்பதே இதன் உண்மைப் பொருளாகும். பாடி என்ற இறந்தகால வினையெச்சத்திற்கு ஏற்ப, வாழ்ந்தோம் என்ற இறந்த கால வினைமுற்று வந்ததேனும், பாட வாழ்கின்றோம் என்பதே இதன் பொருளாகும்.

'ஐயா நீ ஆட்கொண்டு அருளும் விளையாட்டின் உய்வார்கள் உய்யும் வகையெல்லாம் உய்ந்தொழிந்தோம்' என்ற தொடர் பல்வேறு வகையாகப் பொருள்கொள்ள இடந்தந்து நிற்கின்றது. சைவ சித்தாந்த அடிப்படையில் பலரும் இதற்குப் பொருள் கூறியுள்ளனர். இத்தொடருக்கு வேறு வகையாகப் பொருள்காண்டலும் கூடும் எனத் தோன்றுகிறது.

படைத்தல், காத்தல் முதலிய ஐந்தொழில்களையும் இறைவன் விளையாட்டாகச் செய்கிறான் என்பதைத் தமிழர் தொன்றுதொட்டே கூறிவந்தனர். சைவர்கள்மட்டுமல்லாமல் வைணவர்களும் இக்கருத்தைக் கூறியுள்ளனர் என்பதை 'அலகிலா விளையாட்டு உடையார்' என்ற கம்பன் பாடல் அறிவுறுத்தும்.

இவ்விளையாட்டின் பயன் ஒன்று உண்டு என்பதை அடிகளார் இங்குக் குறிப்பிடுகின்றார். பொதுவாக விளையாட்டில் ஏற்படும் இன்பம் விளையாடுபவனுக்கே நிகழ்வதாகும். ஆனால், இறைவன் விளையாட்டு அவனுக்கு எவ்வித இன்பத்தையோ வேறு எதனையோ தருவதில்லை. எதனாலும் பற்றப்படாதவன் ஆதலால், அவன் ஏன் இந்த விளையாட்டை நிகழ்த்த வேண்டும் என்ற வினாத் தோன்றுமன்றே? அதற்கு விடையாக, 'ஆட்கொண்டு அருளும் விளையாட்டு' என்றார். இறைவன் ஆற்றும் ஐந்தொழில்களும் அவன் அருள் காரணமாக உயிர்களை ஆட்கொள்வதற்கே நிகழ்த்தப்பெறுகின்றன என்பது பெற்றாம்.

விளையாட்டு ஒன்றே ஆயினும் அதனால் பயன்பெறுவோர் அனைவரும் ஒரே நேரத்தில், ஒரே பயனை அடைவார்கள் என்பது உறுதியில்லை. அவரவர் மன நிலைக்கும் தகுதிக்கும் ஈடுபாட்டிற்கும் ஏற்ப அவர்கள் அடையும் பயன் மாறுபடுகின்றது.

அதனைக் கூறவந்த அடிகளார் 'உய்வார்கள் உய்யும் வகை எல்லாம்' என்று கூறினார். உய்பவர்கள் பலராயினும் ஒருவர் பெற்ற உய்வு மற்றவருடைய உய்வைப்போல் அன்று என்பது பெற்றாம். ஒரே உயிர் பிறவிகள்தோறும் இந்த உய்வைப் பெற்று, மேலும் மேலும் வளர்ச்சியடைகின்றது என்பதை 'வகை எல்லாம் உய்ந்தொழிந்தோம்' என்று கூறினார்.

இதிலும் ஒரு சிறப்புண்டு. படைத்தல் முதலிய தொழில்கள் அனைவருக்கும் பொதுவாகவே நடைபெறுகின்றன. அவனுடைய அருளும் பொதுவாகவே அனைத்து உயிர்களுக்கும் வழங்கப்பெறுகின்றது. அப்படியானால் இந்த உயிர்கள் அனைத்தும் ஒரே நேரத்தில் அந்த அருளைப் பெற்று உய்யலாமே என்றால், அது இயலாத காரியம் என்கிறார். ஆறு நிறையத் தண்ணீர்

போனாலும் குவளை, செம்பு, தவலை என்பவற்றைக் கொண்டுசெல்பவர்கள் அப்பாத்திரங்களுக்கு ஏற்பத்தான் நீரை முகக்க முடியும். இதே கருத்தை அடிகளாரும்,

> வழங்குகின்றாய்க்கு உன் அருள் ஆர் அமுதத்தை
> வாரிக்கொண்டு
> விழுங்குகின்றேன் விக்கினேன் வினையேன் விதி
> இன்மையால்
> (திருவாச:417)

என்று பாடியுள்ளதில் காணலாம்.

'உய்வார்கள் உய்யும் வகை எல்லாம் உய்ந்தொழிந்தோம்' என்பதால் 'நின் அருள் காரணமாகப் பல படிகளில் முன்னேறுபவர்கள்போல நாமும் அந்தப் படிகளைக் கடந்து, இப்பொழுது இறுதி நிலைக்கு வந்துவிட்டோம்' என்பதும் பொருளாயிற்று.

உய்ந்தொழிந்தோம் என்று கூறியதால், நாங்கள் உய்ந்துவிட்டோம் என்று கூறுவது, தற்புகழ்ச்சியின் பாற்பட்டதாகிவிடுமோ என்று ஐயுறத் தேவையில்லை. 'இறுமாந்து இருப்பன் கொலோ ஈசன்தன் பல்கணத்து எண்ணப்பட்டு' (திருமுறை:4.9.11) என்று நாவரசர் கூறியது இங்கு நோக்கத்தக்கது. அவன் திருவருளால் உய்கதி அடைந்துவிட்டோம் என்று பேசும்போது அங்குத் தற்புகழ்ச்சிக்கோ தருக்கடைவதற்கோ இடமில்லை என்க.

அடுத்து நிற்பது 'எய்யாமல் காப்பாய்' என்பதாகும். 'ஐயனே! எல்லாப் பிறப்பும் பிறந்து இளைத்தேன்; உய்யும் வகையெல்லாம் உய்ந்தொழிந்தேன்; இனிப் பிறப்பெடுத்து அடையவேண்டியது ஒன்றுமில்லை. மறுபடியும் பிறப்பெடுத்து இளைத்துவிடாமல் எம்மைக் காப்பாயாக' என்று வேண்டுகின்றனர்.

166. ஆர்த்த பிறவித் துயர் கெட நாம் ஆர்த்து ஆடும்
தீர்த்தன் நல் தில்லைச் சிற்றம்பலத்தே தீ ஆடும்
கூத்தன் இவ் வானும் குவலயமும் எல்லோமும்
காத்தும் படைத்தும் கரந்தும் விளையாடி
வார்த்தையும் பேசி வளை சிலம்ப வார் கலைகள்
ஆர்ப்பு அரவம் செய்ய அணி குழல்மேல் வண்டு ஆர்ப்பப்
பூத் திகழும் பொய்கை குடைந்து உடையான் பொன் பாதம்
ஏத்தி இரும் சுனை நீர் ஆடு ஏல் ஓர் எம்பாவாய் 12

ஆர்த்த-கட்டிய. ஆர்த்த ஆடும்-ஆரவாரித்து ஆகின்ற. தீர்த்தன்-தூய்மையானவன். குவலயம்-உலகம். கரந்தும்-மறைந்தும். விளையாடி-விளையாடுபவனே. வார்த்தையும்-புகழ்.

*நாம் விரும்பினும் விரும்பாவிடினும் நம்மைப் பிடித்திருக்கின்ற இப்பிறவித் துயர் கெடவேண்டுமானால் அதற்கு ஒரே வழிதான் உண்டு. தில்லைச் சிற்றம்பலத்து, தீயைக் கையிலேந்தி ஆடும் இறைவனை, தீர்த்தம் எனக் கருதி அவனிடத்து மூழ்கி எழவேண்டும் என்க.*

*தீர்த்தன் என்ற வடசொல்லுக்குத் தூய்மை வடிவானவன் என்ற பொருள் இருத்தலின் மாசுடைய பிறப்பைக் கழுவ இறைவனாகிய தீர்த்தத்தில் ஆடுதல் ஒன்றே வழி என்கின்றார்.*

*தீயாடும் தீர்த்தன் என்றமையின் ஒன்றுக்கொன்று முரண்பட்டதும் ஒன்றையொன்று அழிக்கக்கூடியதுமாகிய நீரையும் தீயையும், அவற்றின் இயல்பை மாற்றித் தன்பால் கொண்டவன் என்ற கருத்தும் பெறப்படுகிறது.*

*அன்றியும் தீயாடும் தீர்த்தன் என்று கூறியது முரண்பாட்டினிடையே முழுமுதலைக் காணும் சிறப்பிற்கு ஒரு எடுத்துக்காட்டாகும்.*

*சென்ற பாட்டில் கூறியது போலவே உடம்பு நீருள் நனையும்போது, நனைபவர்களின் மனமும் சொல்லும்*

இறைவன் திருவருளில் நனையவேண்டும் என்பதைக் கூறினாராயிற்று.

அவனைப் பற்றிப் பேசும் வார்த்தைகள் எவையாக இருத்தல் வேண்டும் என்ற வினாவிற்கு விடை கூறுவார்போல, இந்தப் பிரபஞ்சம் முழுவதையும் விளையாட்டாகப் படைத்து, காத்து, கரப்பவனைப்பற்றிய வார்த்தைகளாக இருக்க வேண்டும் என்பதையும் கூறினார்.

**167.** **பைம் குவளைக் கார் மலரால் செம் கமலப் பைம் போதால்**
**அங்கம் குருகு இனத்தால் பின்னும் அரவத்தால்**
**தம்கண் மலம் கழுவுவார் வந்து சார்தலினால்**
**எங்கள் பிராட்டியும் எம் கோனும் போன்று இசைந்த**
**பொங்கு மடுவில் புகப் பாய்ந்து பாய்ந்து நம்**
**சங்கம் சிலம்பச் சிலம்பு கலந்து ஆர்ப்பக்**
**கொங்கைகள் பொங்கக் குடையும் புனல் பொங்கப்**
**பங்கயப் பூம் புனல் பாய்ந்து ஆடு ஏல் ஓர் எம்பாவாய் 13**

**குருகு-நாரை; வளையல். அரவம்-பாம்பு; ஓசை. அங்கம்-அவயவம் ; அழகு. பின்னும்-மேலும்; பின்னிக்கிடக்கும். மலம் அழுக்கு; ஆணவமலம். சிலம்ப-ஒலிக்க.**

சென்ற 165ஆம் பாடலில் 'எமை எய்யாமல் காப்பாய்' என்று வேண்டினார்கள். எய்யாமல் காக்க வேண்டும் என்று வேண்டுதற்கு உரிய காரணத்தையும் அப்பாடலிலேயே கூறிவிட்டனர். 'வழியடியோம்' என்று கூறிவிட்டமையின் தங்களை எய்யாமல் காக்கவேண்டிய பொறுப்பு அவனுடையதாகும் என்று உறுதிபடக் கூறினர்.

இந்த வேண்டுதலின் பின்னர் அவர்கள் மனநிலையில் ஒரு வளர்ச்சி ஏற்பட்டிருத்தல் வேண்டும். அந்த வளர்ச்சியின் பயனாக எதிரே உள்ள குளத்தைப் புதிய நோக்குடன் காண்கின்றனர். இதுவரையில் முகேரெனப் பாய்ந்து விளையாடுவதற்கு இடமாக இருந்த அக்குளம்,

இப்பொழுது ஒரு புதிய காட்சியை நல்கத் தொடங்கிற்று. பல்லாண்டுகளாக அவ்வூரில் அக்குளம் இருக்கும் இடத்தில்தான் இருக்கிறது. தாமரைப் பூ, கருங்குவளைப் பூ, பறவைக் கூட்டங்கள், நீர்ப் பாம்புகள் என்பவை அக்குளத்தில் என்றுமே இருந்துவருகின்றன.

ஒருவரை ஒருவர் எழுப்பிக்கொண்டு குளத்தருகே வந்ததை 163ஆம் பாடல் முதல் பார்க்கிறோம். அந்த நிலையிற்கூட இந்தப் பழைய குளம் புதுக் காட்சியை அவர்களுக்கு நல்கியதாகத் தெரியவில்லை.

தாங்கள் வழியடியார்கள் என்ற நினைவு அவர்கள் மனத்திடைத் தோன்றலாயிற்று. பரம்பரையாகச் சில பண்புகள் தொடர்ந்து வருகின்றன என்பதும் இவற்றைத் தாங்கிநிற்கும் 'ஜீன்'கள் ஒவ்வொருவர் உடம்பிலும் எவ்வளவுக்கு எவ்வளவு அதிகமாக உள்ளதோ அவ்வளவுக்கு அவ்வளவு அவற்றிற்குரிய பண்புகள் மிகுந்து காணப்படும் என்பதும் விஞ்ஞானத்தால் கண்ட உண்மை. இதனை நம் முன்னோர் என்றோ அறிந்திருந்தனர். ஆதலால்தான், 'பழ அடியார்' என்றும் 'வழி அடியோம்' என்றும் பாடல்களில் அடிக்கடி பேசப்பெறுகிறது.

வழி அடியோம் என்ற நினைவு இப்பெண்களுக்கு வரும்வரை துளையமாடுகின்ற குளமாகவே அக்குளம் காட்சியளித்தது. இந்நினைவு வந்தவுடன் குளம், குளமாக மட்டும் காட்சி அளிக்கவில்லை. மாதொரு கூறனாகவும் காட்சியளிக்கத் தொடங்கிற்று.

ஒரே பொருள் மாறுபட்ட இரண்டு பொருள்களாகக் காட்சியளிப்பது உண்டா என்ற வினாத் தோன்றும். இவ்வினா நியாயமானதே. காண்பானுடைய மனப் பக்குவத்திற்கு ஏற்பக் காணப்படுபொருள் காட்சியளிக்கும். இம்மகளிர், உலகியல் நிலையில் நின்றபொழுது வெறும் குளமாகவும், மலர்கள் குருகுகள் பாம்புகள் முதலியவை

இருந்தபடியேயும் காட்சியளித்தன. வழி அடியார்களுக்கு உரிய மனப்பக்குவம் வளரத் தொடங்கியவுடன் அதே குளம் இறைவன் இறைவியாகவும் காட்சி அளித்தது.

இவர்கள் இன்னும் ஓரளவு வளர்ந்திருப்பார்களே யானால், அவர்கள் பார்வையில் குளம் தென்பட்டிராது. அதற்குப் பதிலாக இறைவன் இறைவியாகவே காட்சியளித்திருக்கும்.

பொருள்களையெல்லாம் படைத்து அவற்றின் உயிர்க்குயிராய் அங்கங்கே மறைந்து நிற்பவனல்லவா அவன்? சாதாரணப் பார்வையில் பொருள்கள்மட்டும் கண்ணில் படுகின்றன. பக்தி மீதூர்ந்தவர் பார்வையில் பொருள்கள் மறைந்து உள்ளே உறையும் இறைவன் காட்சி நல்குகின்றான்.

பொருள், பொருளாகத் தெரிவது முதல்நிலை; பொருள் மறைந்து, இறைவன்மட்டுமே தெரிவது இறுதிநிலை. பொருளும் உள்உறையும் இறைவனும் தெரிவது இடைப்பட்ட நிலை.

'பார்க்கின்ற மலர் ஊடு நீயே இருத்தி' என்று தாயுமானவ அடிகள் பேசுவது இந்த இடைப்பட்ட மனநிலையைக் குறிப்பதாகும். அவர்க்கு மலரும் தெரிகிறது; அதனுள் இருக்கும் இறைவனும் தெரிகின்றான். அதனாலேயே 'மலரூடு' என்று பாடினார்.

இப்பெண்களைப் பொறுத்தமட்டில் ஓரளவு வளர்ச்சியடைந்து இந்த நிலையை எய்திவிட்டனர் ஆதலால், குளம் 'எங்கள் பிராட்டியும் எங்கோனு'மாகக் காட்சி அளிக்கிறது.

செங்கமல மலர் இறைவனது திருமேனியைக் காட்டி நிற்கின்றது; பைங்குவளை மலர் நீலமேனி வாலிழையைக் காட்டி நிற்கின்றது; 'குருகினம்' என்ற சொல் பறவைக்

கூட்டங்களையும், அன்னை கையில் அணிந்துள்ள வளையல்களையும் காட்டி நிற்கின்றது; 'அரவம்' குளத்திலுள்ள பாம்புகளையும், மகளிர் தம்முள் எழுப்பும் பேச்சு ஒலியையும், இறைவன்மேலுள்ள பாம்புகளையும் காட்டி நிற்கின்றது.

மனிதர்களுக்கு உடம்புபற்றிய புற அழுக்கும், உயிர் பற்றிய அக அழுக்கும் இயல்பாகவே அமைந்துள்ளன. புற அழுக்கைப் போக்கக் குளம் உதவுகிறது; அக அழுக்கைப் போக்கிக்கொள்ள இறைவன் உதவுகிறான்.

'எம்கோனும் போன்று இசைந்த பொங்கு மடு' என்ற தொடரில் போன்று என்ற உவமை உருபு வருவதால் குளத்தை இறைவனுக்கு உவமையாகக் காட்டி, அவ்வாறே பலரும் பொருள் கூறியுள்ளனர்.

இவர்கள் மன வளர்ச்சியைக் கருத்திற் கொண்டு பார்த்தால், ஒரே நேரத்தில் குளம் குளமாகவும், இறைவன் இறைவியாகவும் காணப்படுதலை அறிய முடியும். இவ்வாறு பொருள் செய்யும்போது 'எம்கோனும் போன்றிசைந்த மடு' என்பதற்கு எம்கோனோடு பொருந்தி இசைந்துள்ள மடு என்று பொருள்கொள்வது சரியாக இருக்கும்.

**168.** காது ஆர் குழை ஆடப் பைம் பூண் கலன் ஆடக்
கோதை குழல் ஆட வண்டின் குழாம் ஆடச்
சீதப் புனல் ஆடிச் சிற்றம்பலம் பாடி
வேதப் பொருள் பாடி அப் பொருள் ஆமா பாடிச்
சோதி திறம் பாடிச் சூழ் கொன்றைத் தார் பாடி
ஆதி திறம் பாடி அந்தம் ஆமா பாடிப்
பேதித்து நம்மை வளர்த்து எடுத்த பெய்வளை தன்
பாதத் திறம் பாடி ஆடு ஏல் ஓர் எம்பாவாய் **14**

குழை-காதணி. கலன்-அணி. கோதை-மாலை. அப்பொருள் ஆமாபாடி-இறைவன் அகரப் பொருளாய் இருப்பதைப் பாடி;

அந்தம் ஆமாபாடி-இறுதியாயிருப்பதையும் பாடி. பேதித்து நம்மை வளர்த்து எடுத்த பெய்வளை-இரும்பைப் பொன்னாக்கினாற் போலச் சிவஞானத்தின்னமுதம் ஊட்டி,

*இப்பாடலின் தனிச்சிறப்பு மனம், மொழி, மெய் என்ற மூன்றிற்கும் ஒருங்கிணைந்த பணியைத் தருதலேயாகும். நீருள் குதித்து முங்கிமுங்கி எழும்பொழுது குழை முதலியன மேலும் கீழுமாக ஆடுதல் இயல்பு. உடலிலுள்ள பல்வேறு உறுப்புக்களோடு தொடர்புடைய அணிகலன்கள் ஆடஆட என்பதால், இவை மேலும் கீழுமாக அசைந்து ஒருவகை ஒலியை எழுப்புகின்றன. ('காதார் குழையாட' என்பது முதல் 'கோதை குழலாட' என்பதுவரை உள்ள பகுதி மேலே குறிப்பிட்டுள்ள ஆடலைக் குறிப்பதாகும்).*

*இந்த அணிகலன்களின் அசையும் தாளகதிக்கு ஏற்ப வாய் பாடத் தொடங்குகிறது. மேலேயுள்ள நான்கில் குழை, கலன், குழல் என்பவை உயிரற்ற பொருள்களாகும். தாமே ஆடும் ஆற்றல் அவற்றிற்கு இல்லை. அவை சேர்ந்த உறுப்புக்கள் ஆடுதலால் இவற்றை ஆட என்றார். நான்காவதாகவுள்ள வண்டு, பாடும் இயல்புடையது. ஆனால் இவர்கள் குழல்மேலுள்ள பூவில் பாட்டை மறந்து அமர்ந்திருந்தன அவை. அந்தக் கூந்தல் நீரில் மூழ்கும்போது எழுந்தும் எழும்போது அமர்ந்தும் வண்டுகள் ஆடுகின்றன. இந்த மலர்களில் அமர்ந்துவிட்ட காரணத்தால் வண்டுகள் பாட்டை மறந்தன.*

*அதேபோல மக்களாகிய நாமும் உலக இன்பங்களில் தோய்ந்துவிட்டமையின் இறைவன் புகழைப் பாட மறந்துவிட்டோம். கூந்தலிலுள்ள வண்டுகள் அமைதியாக இருக்க முடியவில்லையே! அந்தக் கூந்தல் நீருள் மூழ்கும்போது எழுந்தும் அக்கூந்தல் வெளிவரும்போது அதன்மேல் அமர்ந்தும் நிலையற்ற இன்பத்தை அனுபவிப்பதைப் போலத்தானே நாமும் நிலையற்ற உலக இன்பத்தை அனுபவிக்கின்றோம்.*

நீருள் மூழ்கிய கூந்தல் வெளியே வரும் என்ற நம்பிக்கையில் எழுந்த வண்டுகள் வேறிடம் செல்லாமல் அங்கேயே சுற்றுகின்றன. அதேபோல நாம் அனுபவிக்கும் இன்பம் நம்மை விட்டுப் போய்விட்டாலும் இன்றில்லா விடினும் நாளை அது நமக்கு மீட்டும் கிடைக்கும் என்ற இச்சையால் நாமும் அதைச் சுற்றிச் சுற்றி வருகின்றோம்.

கூந்தலிலும் மலரிலும் நாட்டம் கொண்ட வண்டு, அடுத்துள்ள சீதப் புனலில் குளிக்கவேண்டுமே என்ற எண்ணமே இல்லாமல், கூந்தலை எதிர்பார்த்து நிற்பதுபோல, இறைவன் திருவருள் சீதப்புனல்போல் நம்மைச் சுற்றியிருக்கவும் அதில் மூழ்கமாட்டாமல் நிலையற்ற இன்பத்தை என்று வரும் என்று காத்து நிற்கின்றோம். இத்தனை பொருளும் அடங்குமாறு அடிகளார் இப்பாடலை அமைத்துள்ளார்.

'சிற்றம்பலம் பாடி' என்பது தொடக்கம் 'பாதத் திறம்பாடி' என்பதுவரை உயிர்கள் பாட வேண்டிய வற்றைப் பட்டியலிட்டுக் காட்டுகிறார் அடிகளார்.

இறைவழிபாடு என்பது உருவ வழிபாட்டில் தொடங்கி மேலேமேலே சென்று எல்லாப் பொருளிலும் அருவமாய் நிற்கும் பரம்பொருளைச் சிந்திப்பதே ஆகும். ஆனால், அடிகளார் இம்முறையைத் தலைகீழாக மாற்றுகின்றார்.

சிற்றம்பலம் என்பது வெளியைக் குறிப்பது ஆகும். ஆக, சொல் பொருள் கடந்து நிற்கும் அப் பரவெளியைப் பாடுக என்கிறார். இப்பரவெளிக்குக் கீழே இறங்கினால் அடுத்து நிற்பது 'சப்தப் பிரபஞ்சம்' ஆகும். அபௌர்ஷேயம் எனப்படும் வேதம், ஒலிக் களஞ்சியம் ஆதலால் அதனை முன்னர்க் கூறி, அதனை அடுத்து நிற்பது அர்த்தப் பிரபஞ்சம் ஆதலால் அதனைக் குறிக்கப் 'பொருள்' என்ற சொல்லைப் பயன்படுத்துகின்றார். வேதப்பொருள் பாடி என்ற தொடர் வேதமாகவும், அது குறிக்கும் பொருளா

கவும் அதாவது சப்த, அர்த்தப் பிரபஞ்சங்களாகவும் உள்ளான் என்பதைக் குறித்து நிற்கின்றது.

அடுத்து உள்ளது 'அப்பொருள் ஆமா பாடி' என்பதாகும். வேதப் பொருள் என்ற தொடருக்குப் பின்னர் அப்பொருள் என்று வருவது சிந்திக்கத்தக்கது. வேதம் என்பது பல்வேறுபட்ட பல்வேறு வகையான ஒலிக் கூட்டங்களின் தொகுதியாகும். அதுபோல அச்சொற்கள் குறிக்கும் பொருள்களும் பல்வேறுபட்டனவாகும். இவ்வேறு பாடுகளின் இடையே ஒருமைப்பாட்டைக் காண்பதே 'அப்பொருள்' என்ற சொல்லின் பொருளாகும்.

பல்வேறு ஒலிகளும், பல்வேறு பொருள்களும் வேதத்தில் குறிப்பிடப்படினும், அவை அனைத்தும் அவன் ஒருவனே என்பதை அறிவிக்கவே 'அப்பொருள் ஆமா பாடி' என்றார்.

காளிதாசன் ரகுவம்சத்தின் முதல் பாடலில் இக்கருத்தை மிக அழகாக 'வாக்காகவும்(சொல்லாகவும்) அர்த்தமாகவும் (பொருளாகவும்) விளங்குகின்ற உமா காந்தனை வணங்குகிறேன்' என்று கூறியுள்ளது அறியத்தக்கதாகும்.

அடுத்து நிற்பது 'சோதி திறம்பாடி' என்பதாகும். சோதியின் திறம் என்று கூறியமையின் புறத்தே காணப்படும் புற ஒளியை அல்லாமல் அகத்தின் ஆழத்தே தோன்றும் அக ஒளியையே குறிப்பிடுகின்றார் என்பதை அறிதல் வேண்டும்.

'ஆதித்த ஹ்ருதயம்' போன்ற நூல்கள் புற உலகின் இருளைப் போக்கும் சூரியனைச் சோதி என்று புகழ்ந்து பாடின. ஆனால், அடிகளார் ஆதித்தன் இறைவனால் படைக்கப்பட்டவன்; அவனுடைய ஒளியும் இறைவனிட்ட பிச்சையே ஆகும் என்பதைக் குறிக்க 'அருக்கனில் சோதி அமைத்தோன்' (திருவாச:3-20) என்று பாடியுள்ளார்.

எனவே, சோதி திறம் என்று இங்கு அடிகளார் குறிப்பிடுவது அக மனத்தின் ஆழத்தில் தோன்றும் ஒளிவடிவான இறைவனையே ஆகும்.

மிக நுண்மையானதாகிய பர வெளியில் தொடங்கி ஓர்ளவு கட்புலன்களுக்குத் தட்டுப்படும் சோதிவரையில் கூறியபிறகு சாதாரண மக்களின் நினைவு அடிகளாரின் உள்ளத்தில் தோன்றுகிறது. 'சூழ் கொன்றைத் தார்பாடி' என்றதால் கட்புலனுக்கும் எளிதில் கிடைக்கக்கூடிய கொன்றை மாலையை நுண்மையில் ஈடுபட முடியாதவர்களுக்கு கூறினார் ஆயிற்று.

கொன்றை மாலையைக் கூறியவுடன் அதனை அணிந்திருப்பவனுடைய நினைவு மனத்தில் தோன்றும். அந்நினைவும் மானிட வடிவு தாங்கிய இறைவனைப் பற்றியதாகவே இருக்கும். மானிட வடிவு பற்றிய அந்த நினைவு தொடராமல் இருக்க 'ஆதி திறம் பாடி'. என்றார். அந்தமாக உள்ளதும் அதுவே என்பதை 'அந்தம் ஆமா பாடி' என்றார்.

இவ்வாறு கூற ஒரு காரணம் உண்டு. மானிட வடிவு கற்பித்தவுடன், மனித மனம் இறைவன் திருமேனிக்கு அடி முடி கற்பித்துக்கொண்டு அந்த எல்லைக்குள் அவனை நிறுத்திவிட முயலும். அத்தவறு நிகழாதிருக்கவே அனைத்திற்கும் ஆதியாக உள்ளவனும் அந்தமாக உள்ளவனும் அவனே என்ற கருத்தை மனத்தில் பதிக்க வேண்டிச் 'சூழ்கொன்றைத் தார்பாடி' என்றதன்பின் இதனை வைத்தார்.

சூழ்கொன்றை என்று கூறியவுடன் எளிமையாக மனத்தில் அவன் வடிவைப் பதித்துக்கொண்ட நாம், ஆதி, அந்தம் என்றவுடன் கலங்கிவிடுகிறோம். ஆதி, அந்தம் அற்ற இப்பொருள் நம் மன எல்லைக்குள் வந்து நமக்குப் பயன்படாதோ என்ற கலக்கம் வருதல் இயல்புதானே?

அதனைப் போக்கவே 'பேதித்து நம்மை வளர்த்தெடுத்த பெய்வளை' என்கிறார்.

'வளர்த்தெடுத்த பெய்வளை' என்பதால் தாய் என்று கூறினாராயிற்று. தாய் உடம்பை வளர்க்கின்றாள். அகத்தில் உள்ளவை தாமே வளர்கின்றன. மானிடத் தாய்க்கும் இறைவிக்கும் உள்ள வேற்றுமையைப் 'பேதித்து' என்ற ஒரு சொல்லால் விளக்குகிறார் அடிகளார். 'பேதித்தல்' என்பது நிலையை மாற்றுதல் என்ற பொருளைத் தருவதாகும்.

கணந்தோறும் அறிவு வளர்கின்றது. ஒவ்வொரு வளர்ச்சியின்போதும் சென்ற கணத்தில் சூழ்ந்திருந்த அறியாமை வெளிப்படுகின்றது. இங்கே 'பேதித்தல்' என்பது புதிய வளர்ச்சியில் பழைய அறியாமையைப் போக்குதல் என்ற பொருளைத் தருவதாகும். 'வளர்த்து எடுத்த' என்பது உடல் வளர்ச்சியை மட்டுமன்றி உள்ள வளர்ச்சி, அறிவு வளர்ச்சி என்பனவற்றையும் குறிப்பதாகும்.

உடலை வளர்க்கும் தாயே முதலில் அறியப்படுகின்ற தெய்வம் என்றால், அறிவையும் மனத்தையும் வளர்த் தெடுக்கின்ற பெருமாட்டி அன்னையினும் சிறந்தவள் என்பதால், அவள் 'பாதத் திறம்பாடி' என்றார்.

**169.** **ஓர் ஒரு கால் எம்பெருமான் என்று என்றே நம் பெருமான்**
**சீர் ஒரு கால் வாய் ஓவாள் சித்தம் களி கூர**
**நீர் ஒரு கால் ஓவா நெடும் தாரை கண் பனிப்பப்**
**பார் ஒரு கால் வந்தனையாள் விண்ணோரைத் தான் பணியாள்**
**பேர் அரையற்கு இங்ஙனே பித்து ஒருவர் ஆம் ஆறும்**
**ஆர் ஒருவர் இவ்வண்ணம் ஆட்கொள்ளும் வித்தகர் தாள்**
**வார் உருவப் பூண் முலையீர் வாய் ஆர நாம் பாடி**
**ஏர் உருவப் பூம் புனல் பாய்ந்து ஆடு ஏல் ஓர் எம்பாவாய்**
**15**

வாய் ஓவாள்-வாய் ஒழியாமல் பேசுவாள். ஓவா-இடைவிடாத. தாரை-நீர்த்துளி. பார் ஒருகால் வந்தனையாள்-பூமியின்கண் ஒரே முறையாக விழுந்து வணங்குதலையுடையவள். வார்-கச்சு. ஏர்-எழுச்சி.

*இப்பாடலில் கூறப்பெறும் செய்திகள் அந்த நங்கையர் கூட்டத்தில் யாரோ ஒருத்திக்கு நிகழ்ந்த இறையனுபவத்தை விளக்கிக் கூறுவதாகும். என்றோ ஒருநாள் நடந்த அந்நிகழ்ச்சியைக் கண்ட ஒருத்தி, அச்செய்தியைத் தன் தோழிமாருடன் இன்று பகிர்ந்துகொள்கிறாள். பாடலின் சரிபாதி தோழிக்கு நிகழ்ந்தவற்றைக் கூறுவதாயினும் பாடலின் உயிர்நாடிப் பகுதி இது அன்று.*

*நம்முள் ஒருத்தியாக உலக வாழ்க்கையில் ஈடுபட்டுள்ள ஒருத்தியை, ஒரு விநாடியில் பெருமாற்றம் செய்தான்; அவளுடைய பொறி, புலன்களையும் மடை மாற்றம் செய்தான்; அவள் தன்னை மறந்து, தன் நாமம் கெட்டுப் பித்தியானாள் என்றால், இம்மாபெரும் மாற்றத்தைச் செய்யக்கூடியவன் எத்தகையவன்? அத்தகையவனைப் பாடவேண்டும் என்று கூறும் பின் அடிகளே பாடலின் உயிர்நாடியாகும்.*

*இதிலுள்ள சிறப்பைச் சற்றுச் சிந்தித்தல் வேண்டும். இளமை பொருந்திய ஒருத்திக்கு, எத்தனையோ கற்பனைகளுடன் இல்வாழ்க்கையில் ஈடுபட்டு இன்பமாக வாழலாம் என்று கனவுலகில் சஞ்சரிக்கும் ஒருத்திக்கு, இம்மாற்றம் வருகிறது. தொடர்ந்து பல பிறவிகள் எடுத்து, ஒவ்வொரு பிறவியிலும் பல பயிற்சிகளைச் செய்து, இறுதியாகப் பெறவேண்டிய மாற்றமாகும் இது. அந்த மாற்றம் இப்பிறவியிலே இந்த இளம் வயதிலேயே இவளுக்கு வந்தது என்றால், இவளெடுத்த முற்பிறவிகளின் பயனாக, அப்பிறவிகளில் மேற்கொண்ட தவப்பயனாக, இந்நிலை வந்தது என்று தோழிகள் நம்பத் தயாராக இல்லை. இம்மாற்றம் இவளுடைய ஆற்றலால் வந்ததன்று.*

எனின், பின்னர் எவ்வாறு வந்தது என்ற வினாத் தோன்றுமன்றோ? அதற்கு விடையாகத்தான் ஆர் ஒருவர் இவ்வண்ணம் இவளை மாற்றி ஆட்கொண்டார் என்ற வினாவை எழுப்புகிறார்கள்.

பலருடைய மனத்திலும் தோன்றிய இவ்வினாவிற்கு விடை, ஆட்கொண்ட வித்தகர் ஒருவருண்டு என்பதாகும். இப்பெண்ணுக்குக் கிடைத்த வளர்ச்சியை நாமும் பெறவேண்டுமேயானால் அந்த வித்தகனைக் கண்டுபிடித்து அவன் தாள் பணிய வேண்டும் என்று முடிக்கின்றார்கள்.

அப்பெண்ணுக்குக் கிடைத்த அனுபவம் பாடலின் முற்பகுதியில் பேசப்பெறுகிறது. ஒரு முறை எம்பெருமான் என்று சொல்லத் தொடங்கியவள் பிறகு அதை நிறுத்தவேயில்லை. எம்பெருமான் சீர்களை அடுக்கடுக்காகக் கூறிக்கொண்டேயிருக்கின்றாள். இவள் எதிரே நின்று இவள் கூறுவதைக் கேட்டவுடன், ஒன்று நன்றாக விளங்கிவிட்டது. இவளுடைய பொறி, புலன்களில் வாய் தவிர வேறொன்றும் பணிபுரியவில்லை. மனம், புத்தி, சித்தம், அகங்காரம் என்ற இவளுடைய அந்தக்கரணங்கள் நான்கில் மனம், புத்தி, அகங்காரம் என்ற மூன்றும் செயலிழந்துவிட்டன. சித்தம் ஒன்றுமட்டும் விழித்திருக் கிறது. அந்தச் சித்தம் முழுவதும் ஆனந்தம் நிறைந் திருக்கிறது. மகிழ்ச்சி, இன்பம் போன்ற உணர்வுகள் நிலையில்லாதனவாய் மனத்திடைத் தோன்றி மறையும் இயல்புடையன. ஆனால், இவள் சித்தத்தில் ஏற்பட்ட ஆனந்தமோ இறையனுபவத்தில் கிடைத்ததாகலின் நிலைபேறு உடையதாய் அடிமனத்தின் ஆழத்தில் உள்ள சித்தத்தில் நிரம்பி வழிகின்றது என்பதை எதிரே உள்ள பெண்கள் அறிந்திருந்தார்கள் ஆதலின், 'சித்தம் களி கூர' என்றார்கள்.

அடிமனத்தின் ஆழத்தில் நிறைந்து வழிகின்ற ஆனந்தம் நுண்மையிலும் நுண்மையானது ஆயிற்றே! அதை எப்படி

இவர்கள் அறிந்தார்கள் என்று ஐயுறுவார்க்கு, அவர்களே இதோ விடை கூறுகின்றனர்.

உள்ளத்தின் ஆழத்தில் ஏதோ ஒரு நிலையான உணர்வு தோன்றினாலொழிய, கண்ணில் வழியும் நெடுந்தாரை ஓவா நெடுந்தாரையாக இராது. மனம் முதலியவற்றில் தோன்றும் உணர்வு காரணமாகக் கண்ணீர் பெருகினால், அது விட்டு விட்டுப் பெருகுமே தவிர ஓவா நெடுந்தாரையாக இராது. ஆனால், இவளைப் பொறுத்தமட்டில் 'நீர் ஒருகால் ஓவா நெடுந்தாரை கண் பனி'க்கின்றது. ஆதலாலும், எம்பெருமான் சீரை விடாமல் பேசிக்கொண்டே இருத்தலாலும், இந்தப் புறச் செயல்களைக் கண்டு, இவள் சித்தம் களி கூர்ந்து உள்ளது என்பதை உறுதி செய்தனர்.

இவ்வாறு உறுதி செய்துகொண்ட பின்னர் அந்தத் தோழியர்கள் இவளை மீண்டும் உன்னிப்பாகக் கவனித்தனர்.

இப்பெண், மண்ணில் வீழ்ந்து வணங்கியபடியே கிடக்கின்றாள். இளம்பெண் ஆகிய இவள், இந்திரன் முதலிய பல சிறு தெய்வங்கள்பற்றியும் அறிந்திருப்பாளோ? தன் வாழ்வு சிறக்கவேண்டும் என்பதற்காக வேதம் கூறுகின்ற முறையில் இந்திரன் முதலிய தெய்வங்களை வழிபடுபவளோ என்று நினைத்தால், இல்லை இல்லை என்கிறார்கள் தோழிமார்கள். எங்கள் தலைவி 'விண்ணோரைத் தான் பணியாள்' என்று அறுதியாகக் கூறுகின்றார்கள்.

விண்ணோரைப் பணியாள் என்று கூறியிருந்தாலே போதுமே! 'தான் பணியாள்' என்று அதிகப்படியாகக் கூறவேண்டிய காரணம் என்ன? 'தான்மட்டு மல்ல, அவளோடு சேர்ந்த எங்களையும்கூடச் சிறு தெய்வங்களைப் பணிய விடமாட்டாள்' என்ற பொருள், 'தான்' என்ற சொல்லில் தொக்கி நிற்கின்றது.

இவ்வளவு நிகழ்ந்த பின்னர், 'இளம் வயதுடைய எங்கள் தோழியை ஒரு விநாடி நேரத்தில் இப்படி ஒருவன் ஆக்கினான்' என்றால், அவன், பேர்அரையனாகவே இருத்தல் வேண்டும். அப்படி இல்லாவிட்டால் இப்படி இவளைப் பித்தியாக ஆக்கியிருக்க முடியாது. இந்த மாபெரும் செயற்கு அரிய செயலைச் செய்த அவன், ஒரு வித்தகனாகத்தான் இருத்தல் வேண்டும் என்ற முடிவிற்கு வந்தனர்.

**170.** முன்னிக் கடலைச் சுருக்கி எழுந்து உடையாள்
என்னத் திகழ்ந்து எம்மை ஆளுடையாள் இட்டிடையின்
மின்னிப் பொலிந்து எம்பிராட்டி திருவடிமேல்
பொன் அம் சிலம்பில் சிலம்பித் திருப் புருவம்
என்னச் சிலை குலவி நம்தம்மை ஆள் உடையாள்
தன்னில் பிரிவு இலா எம் கோமான் அன்பர்க்கு
முன்னி அவள் நமக்கு முன் சுரக்கும் இன் அருளே
என்னப் பொழியாய் மழை ஏல் ஓர் எம்பாவாய் 16

**சுருக்கி-வற்றச்செய்து. உடையாள் என்ன-எம்மை உடைய உமையம்மையின் திருமேனியின் நிறம் போல. இட்டிடை-மிகச்சிறிய இடை. பொன்னஞ் சிலம்பு-பொன்னாலாகிய சிலம்பு. சிலம்பி-ஒலித்து. சிலை குலவி-வில்லை வளைத்து. முன்னி-முதலில்.**

சங்கப் பாடல்களில் காணப்பெறும் தைந் நீர் ஆடலிலும், மகளிர் மழையை வேண்டிநிற்கும் பகுதி காணப்பெறுகிறது. அப்பாடல்களின் வளர்ச்சியே திருவெம்பாவை ஆதலின், இதிலும் மகளிர் மழை வேண்டிநிற்கும் பாடல் இடம்பெறுகிறது.

திருவண்டப் பகுதியில் மாபெரும் உருவகம் ஒன்றைச் செய்த மணிவாசகர் என்ற மாபெருங் கவிஞர், இப்பாடலில் மழையைமட்டும் இறைவியோடு உவமை செய்கின்றார். உலகில் உயிர்களை மழை புரத்தல்போல

அன்னையும் உயிர்களைப் புரக்கின்றாள் ஆதலின், இந்த உவமையில் இறைவியையே உவமைப் பொருளாகக் கொள்கிறார். பல உவம உருபுகளைப் பெற்று, மேகமும் மழையும் அன்னையோடு உவமிக்கப்பட்டாலும், இதனை உருவக மாகக் கொள்வதில் தவறொன்றும் இல்லை. என்ன என்ற உவமை உருபு மும்முறை பயன்படுத்தப்பெறினும் உருவகம் என்றே கொள்வதில் தவறில்லை.

வெள்ளை மேகம் கடல் நீரை முகந்துகொண்டு மேலே எழும்பி, அன்னையைப்போல நீல நிறம் பெற்று, அன்னையின் இடையைப்போல மின்னி, திருவடிச் சிலம்பைப்போல இடித்து முழக்கி, அவள் திருப் புருவத்தைப்போல வானவில்லை உண்டாக்கி, கண்ணுக்குப் புலப்படாமல் நமக்குக் கிடைக்கும் அவள் அருளைப் போல, கண்ணுக் தெரியும்படியாகவே அவள் அருள் போன்ற மழை பொழிவதாக! என்பதாம்.

திருவெம்பாவையின் முதல் பாடல்கள் ஒருவரை ஒருவர் எழுப்புவதாகவே அமைந்துள்ளன. அதனை அடுத்து வரும் பாடல்களில் அப்பெண்கள் தம் வாழ்க்கை வளம் பெறத் தேவையான கணவன், குழந்தைகள் என்பவர்களைப்பற்றி பேசினர். இதுவரை அவர்கள் ஈடுபாட்டின் அடித்தளத்தில் தம் வாழ்வு, தம்முன்னேற்றம் என்ற தன்னலம் இழையோடி இருப்பதைக் காணமுடிகிறது.

ஈடுபாட்டின் மிகுதியால் கொஞ்சம் கொஞ்சமாகத் தன்னலம் மறைந்து, நீராடும் குளத்தை இறைவன் இறைவி வடிவாகக் காணும் வளர்ச்சி வந்தது. இந்த வளர்ச்சியின் முடிவில் எங்கும் எல்லாவற்றிலும் இறைவனைக் கண்டு உணரக்கூடிய வளர்ச்சி வந்தது. இந்தத் தலையாய உணர்வு ஏற்பட்டவுடன், தாம், தம் வாழ்வு, தன்னலம் என்பவை மங்கத் தொடங்கிவிட்டன. இறைவியின் திருவருள், அவ்வருளை வேண்டி நிற்கும் தங்களை அல்லாமல், அனைவருக்கும் கிடைக்க வேண்டும் என்று கருதினர்.

இவ்வெண்ணத்தின் முடிவில் மழை நினைவுக்கு வருகின்றது. நல்லவர், தீயவர், உடையவர், இல்லாதவர் என்ற வேறுபாடின்றி நன்கு பொழிந்து மக்களை உய்விக்கின்ற அந்த மழையின் தன்மை நினவுக்கு வருகின்றது.

இப்பாடலில் அப்பெண்கள் அனைவரும் ஒருசேரத் தம்மையும் தன்னலத்தையும் மறந்துவிட்டனர். அதன் பயனாகவே பாடலின் இறுதியில் மிக நுண்மையான ஒரு கருத்து பேசப்பெறுகிறது. வேறுபாடு பாராட்டாமல் அனைவருக்கும் பொழிகின்றது மழை; இது மழையின் தனிச் சிறப்பாகும். இந்த நினைவு வந்தவுடன் அன்னை யின் அருள் வேறுபாடின்றி அனைவரையும் புரத்தலின் மழை அருளுக்கு உவமை ஆகிறது. அதனாலேயே, ‘அவள் நமக்கு முன் சுரக்கும் இன்னருளே என்னப் பொழியாய்’ என்று பாடுகின்றனர். இப்பாடல் முழுவதிலும் தம்மைப் பற்றிய நினைவு எதுவும் இல்லாமல், எல்லா உயிர்களும் அவள் அருளைப் பெற்று உய்ய வேண்டும் என்ற பிறர் நலம் பேணுவதைக் காண முடிகின்றது.

இன்னருளே என்னப் பொழியாய் என்பதில் ‘என்ன’ என்பதை உவம உருபு ஆக்காமல் ‘என்று சொல்லும் படியாக’ என்று பொருள் கொண்டால் இன்னும் சிறப்பாக இருக்கும். அன்னையின் இன்னருள் என்று சொல்லும் படியாக மழையே பொழிவாய் என முடிக்கலாம்.

மேலோட்டமாகப் பார்ப்பவர்கட்கு இந்த உவமையில் ஒரு சிறு குறை தோன்றாமல் இராது.

வேறுபாடின்றிப் பொழிந்தாலும் மழை ஆக்கல், அழித்தல் என்ற இரண்டையும் செய்கின்றது. ஆழ்ந்து சிந்தித்தால் அந்த அழிவும் பின்னர் நலத்தைப் பயப்ப தாகவே உள்ளது. மழைநீர் வெள்ளமாக வந்து வயலில் நின்றுவிட்டால் அதன் அடியிலுள்ள பயிர் அழிவது உறுதி.

*ஆனால், அடுத்த ஆண்டு பயிர் செய்வதற்கு வண்டல் உரம் வயலுக்கு மிகுதியாகக் கிடைத்துவிடுகிறது.*

*அதேபோல அன்னையின் அருள் சில சமையங்களில் துன்பத்தைத் தருவது உண்மைதான். நாம் செய்த வினைக்கு ஏற்பத் தரப்பெற்றாலும், துன்பத்தை அனுபவித்து முடிந்த பிறகு மனம் தூய்மை அடைந்து மேல் வளர்ச்சி அடைகிறது. மழையின் அழித்தல் வளர்ச்சிக்கு உறுதுணை யாக இருப்பதுபோல, அன்னையின் இன்னருளும் துன்பத்தைத் தந்து பின்னர்த் தூய்மை அடைய உதவுகிறது.*

**171. செம் கண் அவன்பால் திசைமுகன்பால் தேவர்கள்பால்**
**எங்கும் இலாதது ஓர் இன்பம் நம்பாலதாக்**
**கொங்கு உண் கரும் குழலி நம் தம்மைக் கோதாட்டி**
**இங்கு நம் இல்லங்கள்தோறும் எழுந்தருளிச்**
**செம் கமலப் பொன் பாதம் தந்தருளும் சேவகனை**
**அம் கண் அரசை அடியோங்கட்கு ஆர் அமுதை**
**நங்கள் பெருமானைப் பாடி நலம் திகழப்**
**பங்கயப் பூம் புனல் பாய்ந்து ஆடு ஏல் ஓர் எம்பாவாய் 17**

**செங்கணவன்-திருமால். கொங்கு-மணம். சேவகன்-வீரன். ஆர் அமுது-நிறைந்த அமுது ; கிடைத்தற்கரிய அமிர்தமுமாம்.**

*164ஆம் பாட்டில் தொண்டரிடையே வந்து ஒரு தோழனாகவும் காட்சியளித்து அருள் செய்பவன் இறைவன் என்று குறித்த செய்தியை, விரிவுபடுத்தும் முறையில் இப்பாடல் அமைந்துள்ளமை நோக்கத்தக்கது.*

*செங்கண்ணவனாகிய திருமாலும், திசைமுகனாகிய நான்முகனும் தேவர்களும் வேறு எவ்விடத்தோரும் பெறுதற்கு அரியதாகிய இறையின்ப அனுபவத்தை, நம்பாலதாகத் தந்து அருள்கின்ற சேவகன் என்றார்.*

*இந்த இன்பத்தைத் தருபவன் அவன் என்றாலும், அவனை அடைய விரும்பிய நாம் அவனை நாடிச்சென்று*

இதனைப் பெறவேண்டும் என்று நினைத்தால், அது இயலாத காரியம் என்பதை அனைவரும் அறிவோம். நான்முகன், தேவர்கள் முதலியோர்க்கும் கிட்டாத இன்பம் என்றால், அந்த இன்பத்தைத் தருபவன் அவர்களையும் தாண்டி எங்கோ மேலே இருக்கின்றான், இன்பத்தைப் பெறுமாறு எங்ஙனம் என்று வருந்துவோமல்லவா? வருந்தும் நம்மை நோக்கி 'அஞ்ச வேண்டா; அவரவர்கள் வீடு தேடி எழுந்தருளி வந்து அவனே அதைக் கொடுக்க முன்வந்துள்ளான்' என்று கூறுகிறார் அடிகளார்.

மிகச் சிறந்த இனிய உணவாயினும் மஞ்சட் காமாலை நோயுடையார் அதனைச் சுவைத்து உண்ண இயலாது. அவ்வாறு உண்ண வேண்டுமாயின் முதலாவதாக அந்நோயைப் போக்க வேண்டும். அதேபோல அறுவகைக் குற்றங்களையும் மனத்தில் நிரப்பிக்கொண்டு உழலும் நமக்கு, நம் வீட்டுப் படியேறி வந்து எங்கும் இலாத இன்பத்தை அவன் தந்தாலும், அதனை அனுபவிக்க முடியாது. எனவே, வைத்திய நாதனாகிய அவன் நம்முடைய நோயை முதலில் போக்குகிறான் என்ற கருத்தைக் 'கோதாட்டி' என்ற சொல் மூலம் அடிகளார் பெற வைக்கிறார். 'இல்லங்கள்தோறும் எழுந்தருளி, நம் தம்மைக் கோதாட்டி எங்கும் இலாததோர் இன்பம் நம் பாலதாச்' செய்கின்றான்.

**172.** அண்ணாமலையான் அடிக் கமலம் சென்று இறைஞ்சும்
விண்ணோர் முடியின் மணித் தொகை வீறு அற்றால்போல்
கண் ஆர் இரவி கதிர் வந்து கார் கரப்பத்
தண் ஆர் ஒளி மழுங்கித் தாரகைகள்தாம் அகலப்
பெண் ஆகி ஆண் ஆய் அலி ஆய்ப் பிறங்கு ஒலி சேர்
விண் ஆகி மண் ஆகி இத்தனையும் வேறு ஆகிக்
கண் ஆர் அமுதமும் ஆய் நின்றான் கழல் பாடிப்
பெண்ணே இப் பூம் புனல் பாய்ந்து ஆடு ஏல் ஓர் எம்பாவாய் 18

வீறு அற்றல் போல்-தனித்தனியாகச் சிதறியதுபோல. கண் ஆர் இரவி-இடங்கள்தோறும் நிறைந்திருக்கின்ற சூரியன். கரப்ப-மறைக்க. தாரகைகள்-நஷத்திரங்கள். கண்ணாரமுதம்-அறிவில் நிறைந்த அமுதம். கண்-அறிவு.

இப்பாடலின் முதல் இரண்டு அடிகள், பொழுது ஏறத்தாழ புலர்கின்ற தன்மையை ஓர் அழகிய உவமை மூலம் கூறுகின்றன. இறைவனிடம் செல்வதற்கு முன்னர் இத்தேவர்கள் அணிந்திருக்கின்ற முடிகளிலுள்ள நவரத்தின மணிகள் ஒப்பற்ற ஒளியை வீசிக்கொண்டிருக்கின்றன. இதே தேவர்கள் அண்ணாமலையான் திருவடிகளில் சென்று தங்கள் முடியுடனேயே வீழ்ந்து வணங்குகின்றனர். என்ன அதிசயம்! சற்று நேரத்திற்கு முன், பேரொளிக் கதிர்களை அள்ளி வீசிக்கொண்டிருந்த இம்மணிமுடிகள் இறைவன் திருவடியின் ஒளியின் எதிரே தங்கள் ஒளியை இழந்து மங்கிப்போய்விடுகின்றன.

மணி முடியைக் கூறினாரேனும், அதனை அணிந்துள்ள தலையையும், அதிலுள்ள அறிவையும் குறிப்பால் உணர்த்தியவாறாயிற்று. அமுதம் உண்டு இறவா நிலை பெற்றோம் என்ற அகங்காரம் அத்தலைகளினுள் பொதிந்து கிடக்கின்றது. அறிவு, அகங்காரம் என்ற இரண்டும் தம்மைவிட மேம்பட்டவர் யாரும் இல்லை என்ற எண்ணத்தில் குடியிருத்தலின், அவர்கள் முடிமணி ஒளி வீசி நிற்கின்றது. இது எவ்வளவு நேரம்? இறைவன் திருவடியைச் சென்று அடைகின்றவரை இந்நிலை நீடிப்பது உண்மைதான். அடிக்கமலம் சென்று இறைஞ்சியவுடன் தேவர்களின் தலையினுள் மீதூர்ந்திருந்த அறிவும் ஆணவமும் செயலிழக்கின்றன. திருவடியாகிய அருள் ஒளியின் எதிரே இவர்கள் ஆணவம் அழிக்கப்பட்டு ஒளி இழந்து நிற்பதை, இந்த உவமை மூலம் பெறவைக்கிறார் அடிகளார்.

இத்தகைய ஒரு காட்சியை மனத்துட்கொண்டு விடியற்கால நேரத்தில் ஒளி உமிழ்ந்துகொண்டிருக்கின்ற தாரகைகளைப் பார்த்துக்கொண்டு இருக்கின்றோம். மிக அற்புதமாக இந்த விண்மீன்கள் ஒளியை உமிழ்ந்துகொண்டு இருக்கின்றன. பார்த்துக்கொண்டு இருக்கும்பொழுதே கொஞ்சம் கொஞ்சமாக விண்மீன்களின் ஒளியாட்டம் மங்கத் தொடங்கிவிடுகின்றது. உலகைச் சூழ்ந்துள்ள இருள், இத்தாரகைகள் ஒளி உமிழ்ந்து மின்னப் பின்புலமாக அமைந்துள்ளது. எங்கோ ஒரு மூலையில் கதிரவன் தோன்றுகிறான். அவன் வருவதற்கு முன்னர், அவனுடைய ஒளிக் கதிர்கள் முதலில் இப்பின்புலத்தை அழிக்கின்றன. இந்தப் பின்புலம் அழிய அழிய மின்னிக்கொண்டிருந்த தாரகைகள் தம் ஒளியை இழக்கின்றன. அதாவது, பொழுது விடிய விடியத் தாரகைகளின் ஒளியாட்டம் இருந்த இடம் தெரியாமல் மங்கிவிடுகின்றது. பொழுது விடிகின்ற சிறப்பை மிக அற்புதமான உவமையின் மூலம் விளக்குகின்ற அடிகளார், அந்த உவமையிலேயே ஓர் அருங்கருத்தையும் பொதித்துள்ளமை நம் வாழ்க்கைக்கு வழிகாட்டியாகும்.

அடியார்கள் வேண்டும் இடத்து, வேண்டும் வடிவில் அவர்கள் கண்களுக்கு விருந்தாய் நிற்கின்றான் இறைவன். கண்ணுக்கு அமுதாய் நின்றான் என்றதால் அவரவர்கள் கண்ணுக்கு அவரவர் விரும்பும் வடிவைக் கொண்டு காட்சி அளிக்கின்றான் என்றவாறு.

வேண்டுவார் மன நிலைக்கு ஏற்ப வேண்டுருக் கொண்டான் ஆயினும், அவன் ஒருவனே என்பது திண்ணம். அந்த ஒருவன் யார்?

உலகத்திலுள்ள நிலையியல், இயங்கியல் உயிர்கள் அனைத்தும் பெண்ணுருக் கொண்டும் ஆண் உருக்

கொண்டும், அலி உருக் கொண்டும் விளங்குகின்றன. எத்தனை வகைப் பெண்ணுரு! எத்தனை வகை ஆணுரு! என்ற வியப்புத் தோன்றுகிறது அல்லவா? இந்த உயிர்கள் மேற்கொண்ட வடிவுதான் வெவ்வேறே தவிர மூலத்தில் வேறுபாடு இல்லை. எனவேதான், 'பெண்ணாகி, ஆணாய், அலியாய் நின்றான்' இவன் ஒருவனே என்கிறார்.

இந்த ஐயம் தீர்ந்த பிறகு, பெண் ஆண் பேதம் இல்லாமல் காணப்படும் இயற்கையின் வடிவுகள் 'விண்ணாகி மண்ணாகி' இருக்கும் நிலை விளங்கத் தொடங்குகிறது.

பெண், ஆண் என்று வேறுபட்டு நின்றும் விண், மண் என்று வேறுபட்டு நின்றும், காட்சி தருகின்ற நிலையைக் கண்டு, இவை பல அல்லது, அவன் ஒருவனே வேறுபட்ட இந்த வடிவுகளாகக் காட்சி தருகின்றான் என்பதைக் குறிக்கவே 'பிறங்கு ஒலிசேர் விண்ணாகி மண்ணாகி நின்றான் ஒருவன்' என்று கூறினார்.

'பிறங்கு ஒளி சேர்' என்றே பலரும் பாடங் கொண்டுள்ளனர். விண்ணுக்கு இலக்கணம் ஒலியே தவிர ஒளியன்று. 'பிறங்கு ஒலி சேர்' என்றே பாடங்கொள்ள வேண்டும். பிறங்கு என்ற சொல்லுக்கு விரிதல் என்பது பொருளாகும். 'உண்டைப் பிறக்கம்' (திருவாச: 3-1) முன்னரும் அடிகளார் கூறியது நோக்கத்தக்கது. இங்கு பிறங்கு ஒலி என்றது, ஆகாயத்தில் எப்பொழுது எங்கும் நிறைந்து நிற்கும் ஆதி நாதத்தையே (Premordial Sound) ஆகும்.

மேலே கண்ட பொருள்களுள் கட்புலனுக்கும் தெரியும்படி அமைந்துள்ளவை பெண், ஆண், அலி, மண் என்பவையாம். கருத்துக்கு மட்டும் புலப்பட நிற்பது விண்ணாகும். கண்ணுக்கும் கருத்துக்கும் புலப்பட நின்ற

இவை அனைத்தையும் ஒன்று சேர்ப்பதன் மூலம் அனைத்தும் ஒருவனே என்ற கருத்தைத் தெளிவாக்கி விட்டார்.

இத்தோடு நிறுத்தியிருப்பின் ஒரு பெருங்குறை நேர்ந்துவிடும். இவையனைத்தும் எல்லையுடைய பொருள்களாகும். இவைமட்டும் அவன் வடிவுகள் என்றால் அவனும் எல்லைக்கு உட்பட்டவன் என்று நினைக்கும் தவறு நேர்ந்துவிடும் அல்லவா?

கடவுள் என்ற சொல்லின் 'கட' என்ற முற்பகுதி அனைத்தையும் கடந்து நிற்பவன் என்றல்லவா கூறுகிறது. மேலே அடிகளார் கூறியவை கடவுள் என்ற சொல்லின் 'உள்' என்ற பிற்பகுதியின் பொருளாகும்.

இக்குறைபாட்டை நீக்கவும் 'கட' என்ற சொல்லின் பொருளும் விளங்கவும் 'இத்தனையும் வேறாகி' என்றார். அதாவது, இவைகளாகவும் இவற்றின் வேறாகவும் இருப்பவன் 'கண்ணார் அமுதமாய் நின்றான்' ஒருவன் என்றார்.

இதே கருத்தை காழிப் பிள்ளையார்,

ஈறாய் முதல் ஒன்றாய் இரு பெண் ஆண் குணம் மூன்றாய்
மாறா மறை நான்காய் வரு பூதம் அவை ஐந்தாய்
ஆறு ஆர்சுவை ஏழு ஓசையொடு எட்டுத் திசை தானாய்
வேறாய் உடன் ஆனான் இடம் வீழிம் மிழலையே
(திருமுறை: 1-11-2)

என்ற தேவாரத்தில் 'வேறாய் உடன்' ஆனான் என்று கூறுவதிலிருந்தும் காணமுடிகிறது.

173. உன் கையில் பிள்ளை உனக்கே அடைக்கலம் என்று
அங்கு அப் பழஞ்சொல் புதுக்கும் எம் அச்சத்தால்
எங்கள் பெருமான் உனக்கு ஒன்று உரைப்போம் கேள்
எம் கொங்கை நின் அன்பர் அல்லார் தோள் சேரற்க
எம் கை உனக்கு அல்லாது எப் பணியும் செய்யற்க
கங்குல் பகல் எம் கண் மற்று ஒன்றும் காணற்க
இங்கு இப் பரிசே எமக்கு எம் கோன் நல்குதியேல்
எங்கு எழில் என் ஞாயிறு எமக்கு ஏல் ஓர் எம்பாவாய் 19

பழஞ்சொல்-பழமொழி. கங்குல்-இரவு.

*இப்பாடலின் முற்பகுதி பொருள் செய்வதற்குச் சற்றுக் கடினமாக உள்ளது என்பது உண்மைதான். 'பழஞ்சொல்' என்பது பழமொழி என்று இந்தநாட்டில் வழங்கப்படும் சொல்லே ஆகும். அப்படியானால் இங்கு வழங்கப்பெற்ற பழமொழி யாது? 'உன் கையில் பிள்ளை உனக்கே அடைக்கலம்' என்பதே அப்பழமொழி ஆகும். 'கையில் பிள்ளை' என்பதால் பிள்ளை என்பது மிகச் சிறிய குழவியையே குறிக்கும். ஒருவருடைய கையில், தன்னைத் தான் காத்துக்கொள்ள இயலாத குழவியைக் கொடுத்தால், அந்த விநாடியிலிருந்து அக்குழவியைப் பெற்றுக் கொண்டவர், அதனைக் காக்கும் பொறுப்பை முழுவதுமாக ஏற்றுக்கொள்கிறார் என்பதே பொருளாகும். அப்படிக் குழந்தையைக் கொடுத்த பின்னர், இதனை உம் அடைக்கலப் பொருளாகப் பாதுகாப்பீராக என்று கூறுவது, வேண்டா கூறுவதோடு அன்றி, குழந்தையினை வாங்கிக் கொண்டவரது தரத்தைக் குறைத்து மதிப்பிடுவதும் ஆகும். இவ்வாறு கூறினால், குழந்தையைக் கையில் பெற்றுக் கொண்டவர் 'என் பொறுப்பு என்ன என்பது எனக்குத் தெரியும்; உன் உபதேசம் தேவையில்லை' என்று கூறவும் வாய்ப்புண்டு ஆதலின், அப்பழஞ்சொல்லை மறுபடியும் புதுக்குவதுபோன்று இம்மகளிர் பேசத் தொடங்கியவுடன்*

அவர்களுடைய மனத்தில் ஓர் அச்சம் தோன்றியது. என்றாலும், இறைவனே ஆயினும் அவனிடம் தங்கள் முடிவான கருத்தை வெளியிடவேண்டும் என்ற எண்ணம் உள்ளிருந்து உந்தியதால் 'பழஞ்சொல்லை மீட்டும் சொல்வதில் ஏற்பட்ட அச்சம் காரணமாக, அதை விட்டுவிட்டு வேறு ஒன்றைக் கூறுகிறோம் கேட்பாயாக எம் தலைவனே!' என்று அவர்கள் பேசத் தொடங்கினர்.

முன்னர் 163-ஆம் பாட்டில் 'அன்னவரே எம் கணவர் ஆவார் அவர் உகந்து சொன்ன பரிசே தொழும்பாய்ப் பணி செய்வோம்' என்று கூறியவர்கள் அதே கருத்தை எதிர்மறைமுகமாக இப்பொழுது இங்கே கூறத் தொடங்குகின்றனர்.

இவ்வாறு கூறக் காரணம் என்ன? ஒன்றை வேண்டும் என்று கூறிவிட்ட பின்னர், அவர்கள் வினை வேறுவிதமாக இருப்பின் அவ்வினைக்கு ஏற்ப, வேண்டும் என்று விரும்பியதைத் இறைவன் தாராது இருந்துவிடுவான் அல்லனோ? இம்மகளிர் இவ்வாறு அச்சம் கொள்வது நியாயமானது என்பதைக் காரைக்கால் அம்மையார் வரலாற்றில் காண்கிறோம் அல்லவா? 'பிறந்து மொழி பயின்ற பின்னெல்லாம் காதல் சிறந்து நின் சேவடியே சேர்ந்தேன்' (அற்புதத் திருஅந்தாதி:1) என்று பாடிய அம்மையாருக்கு எத்தகைய கணவன் கிடைத்தான்? இரண்டாவது மாம்பழம் கிடைத்தது 'ஈசன் அருள்' என்று அம்மையார் கூறியவுடன், அவன் குழம்புகிறான். அவனுடைய வரவு செலவுக் கணக்கில் 'ஈசன் அருள்' என்ற பொருளை அவன் கண்டதேயில்லை. அதனால், அம்மையார் வார்த்தை அவனுக்குப் பிடிபடவேயில்லை. இதனைக் கூறவந்த சேக்கிழார் 'ஈசன் அருள் எனக் கேட்ட இல் இறைவன் அது தெளியான்' (பெ.பு:காரை.புரா:29) என்று கூறுகிறார். இத்திருமணம் பொருந்தாத் திருமணம்

என்பதை, 'தளிர் அடி மென் மயிலைத் தாது அவிழ் தார்க் காளைக்குக் கலியாணம் செய்தார்கள்' (பெ.பு:காரை.புரா-11) என்று பாடுகிறார்.

இத்தகைய கணவன் கிடைத்தும் அவனோடு பல காலம் இல்லறம் நடத்தி, இறுதியாக அவன் பிரிந்தபோது தம் உடம்பை நீத்துப் பேய் வடிவு பெற இறைவனை வேண்டிய அம்மையார் சொல்லிய சொற்கள் 'இவனுக்காகத் தாங்கிய வனப்பு நின்ற தசைப் பொதி கழித்து....... பேய் வடிவு வேண்டும்' (பெ.பு.காரை.புரா-49) என்பதாகும்.

இத்தகைய ஒருவனுடன் பல காலம் இல்லறம் நடத்துவது என்பது புனிதவதியாருக்கு இயன்றதே தவிர ஏனையோர்க்கு இயல்வதன்று.

குளத்தில் நீராட வந்த மகளிர் காரைக்காலம்மையார் வரலாற்றை நன்கு அறிந்திருப்பர்போலும். மனத்தளவில் தம் நிலைமை ஒரு சிறிதும் மாறாது இருந்துகொண்டே, தம் உடம்பைமட்டும் கணவனுக்கு அர்ப்பணிக்கின்ற பேராற்றல் காரைக்கால் அம்மையார்போல் தங்கள்பாலில்லை என்பதை உணர்ந்த அப்பெண்கள், 'ஐயனே! பழ மொழியைக் கூறுவது பொருத்தமில்லை ஆயினும் என்ன நேர்ந்துவிடுமோ என்ற அச்சத்தால் உன்னிடம் ஒன்று வேண்டிக்கொள்கின்றோம். தயை கூர்ந்து அதனைக் கேட்பாயாக' என்று பெரியதொரு முன்னுரையுடன் தங்கள் கருத்தை வெளியிடுகின்றனர்.

அடியாரே கணவராக வேண்டும் என்று கேட்டிருந்தால் போதாதோ? அப்படியிருக்க 'எம் கொங்கை நின் அன்பர் அல்லார் தோள் சேரற்க; எம் கை உனக்கு அல்லாது எப்பணியும் செய்யற்க; எம் கண்

மற்றொன்றும் காணற்க' என்று பன்னிப் பன்னி இவர்கள் பேசுவதன் நோக்கமென்ன? யாருடன் இவர்கள் பேசுகிறார்கள்! இறைவனிடம் அல்லவா? முற்றறிவினன் ஆகிய அவனிடம் வரம் வேண்டும் இவர்கள், கொங்கை, கை, கண் என்று தனித்தனியாகப் பிரித்துப் பேசுவதன் காரணமென்ன?

இவ்வினாவிற்கு விடை ஒன்றே ஒன்றுதான். காரைக்கால் அம்மையார், அவர்கள் கண்முன் நிற்கின்றார். இறுதியில் இறைவனால் 'அம்மையே' என்று அழைக்கப் பெறும் பேற்றைப் பெற்றார் ஆயினும், மானுட உடம்புடன் இருக்கும்போது இறையன்பு இல்லாத ஒருவன் தோளில் அவர் கொங்கை சேர்ந்தது; அவனுக்கே அவர் கைகள் பணிபுரிந்தன; தனித்திருக்கும் பொழுதெல்லாம் அவனையே அம்மையாரின் கண்கள் கண்டன.

இத்தனை இருந்தும் இவற்றை வெற்றிகொள்ளும் ஆற்றல் அம்மையார்பால் இருந்தது. அத்தகைய ஆற்றல் எம்மிடம் இல்லை என்ற அச்சத்தால், பழைய பழமொழியை இப்போது புதுக்கிக்கொண்டு, உன்னிடம் ஒரு விண்ணப்பம் செய்கின்றோம் என்ற கருத்தில்தான் 'எம் அச்சத்தால் எங்கள் பெருமான் உனக்கு ஒன்று உரைப்போம் கேட்பாயாக' என்ற பெரிய முன்னுரையுடன், தம் அச்சத்தை வெளியிடுகின்றனர். காரைக்கால் அம்மையார் நினைவு அவர்கள் மனத்தில் ஊசலாடியதால் தான் 'சேரற்க, செய்யற்க, காணற்க' என்று எதிர்மறை முகத்தால் பேசுகின்றனர். இறைவனிடம் எதிர்மறை முகத்தால் பேசுவது சரியன்று என்றாலும், அவர்கள் அச்சம் காரணமாகப் பேசினர் என்க.

174. போற்றி அருளுக நின் ஆதி ஆம் பாத மலர்
போற்றி அருளுக நின் அந்தம் ஆம் செம் தளிர்கள்
போற்றி எல்லா உயிர்க்கும் தோற்றம் ஆம் பொன் பாதம்
போற்றி எல்லா உயிர்க்கும் போகம் ஆம் பூம் கழல்கள்
போற்றி எல்லா உயிர்க்கும் ஈறு ஆம் இணை அடிகள்
போற்றி மால் நான்முகனும் காணாத புண்டரிகம்
போற்றி யாம் உய்ய ஆட்கொண்டருளும் பொன் மலர்கள்
போற்றி யாம் மார்கழி நீர் ஆடு ஏல் ஓர் எம்பாவாய்

போற்றி-போற்றப்படுபவனே. செந்தளிர்கள்-தளிர் போன்ற திருவடிகள். போகம்-பாதுகாப்பு. புண்டரிகம்-தாமரை.

*தைந் நீராடல் என்ற சங்ககால வழக்கு, அடிகளார் காலத்தில் மாறி, மார்கழி நீராடல் எனப் பயின்று வந்தமையை, இப்பாடலின் இறுதி அடி விளக்குகின்றது.*

*'போற்றி அருளுக நின் ஆதியாம் பாதமலர்' என்பதை முதலில் வைத்து, 'போற்றி அருளுக நின் அந்தமாம் செந்தளிர்கள்' என்பதை இறுதியிலுள்ள 'மார்கழி நீர் ஆடேல் ஓர் எம்பாவாய்' என்பதற்கு முன்னர் வைத்துக்கொண்டால் அடிகளார் கூறவந்த கருத்தை நன்கு விளங்கிக் கொள்ள முடியும். பாடல் முழுவதும் திருவடிப் பெருமையைத்தான் பேசுகின்றது. அந்தத் திருவடியே 'முன்னைப் பழம் பொருட்கும் முன்னைப் பழம் பொருளாய் உள்ளது' என்பதை 'ஆதியாம் பாத மலர்' என்ற சொற்களால் கூறினார்.*

*அடுத்து, அந்தத் திருவடி விளையாட்டாக நிகழ்த்தும் ஐந்தொழிலையும் வரிசைப்படுத்திப் பேசுகின்றார். 'எல்லா உயிர்க்கும் தோற்றமாம்' என்றதால் நிலையியல் பொருள், இயங்கியல் பொருள் ஆகிய அனைத்தும் தோன்றுதற்கு*

மூலமாக இருப்பது அந்தத் திருவடி என்கிறார். இது படைத்தல் தொழிலைக் கூறியவாறாயிற்று.

'பூங்கழல்கள் எல்லா உயிர்க்கும்' போகமாம் என்றதால் அத்திருவடி தனு, கரண, புவன, போகம் என்பவையாய் அமைந்து உயிர்கள் வாழ்வதற்குக் காரணமாய் உள்ளது என்பதை வலியுறுத்தினார். இதனால் 'காத்தல்' தொழிலைக் கூறினாராயிற்று.

'இணை அடிகள் எல்லா உயிர்க்கும் ஈறாம்' என்றதால் எல்லா உயிர்களும் அழிவதற்குக் காரணமான முடிவாக உள்ளவையும் அத்திருவடிகளே என்ற கருத்தைப் பேசினார். இதனால் 'அழித்தல்' தொழிலைக் கூறினாராயிற்று.

'நான்முகனும் காணாத புண்டரிகம்' என்றதால் பிரமனுக்கும் தன்னை மறைத்துக்கொள்ளும் திருவடி என்கிறார். நான்முகன் என்ற சொல் ஒரு கருத்தோடு அமைக்கப்பெற்றுள்ளது. ஒரு முகம் உடையார் முன்புறம் காண வல்லரே அன்றி ஏனைய மூன்று திசைகளையும் காணாராயினர். இவன் நான்முகனாக இருந்தும், ஒரு நேரத்தில் எல்லாத் திசைகளையும் காண வல்லவனா யிருந்தும், தாமரை மலர்போன்ற இத்திருவடிகளைக் காணவில்லை என்றால், அவை தம்மை மறைத்துக் கொண்டன என்ற பொருளைத் தந்து நின்றது. இதனால் ஐந்தொழிலில் 'மறைத்தல்' தொழிலை குறிப்பிட்டா ராயிற்று.

எஞ்சியுள்ளது 'யாம் உய்ய ஆட்கொண்டு அருளும் பொன்மலர்கள்' என்பதாகும். நான்முகனுக்குத் தம்மை மறைத்துக்கொண்ட அத்திருவடிகள் எம்போன்றவரும்

உய்கதி அடையும்படி வந்து ஆட்கொள்ளுகின்றன என்பதால் 'அருளல்' தொழிலைக் கூறினாராயிற்று.

'ஆதியாம் பாதமலர்' என்று தொடங்கியவர் ஐந்தொழிலையும் வரிசைப்படுத்திக் கூறிவிட்டு, இதற்கு அப்பால் வேறு ஒன்றும் இல்லையாதலால், அந்தமாம் செந்தளிர்கள் என்றார். அந்தம் என்று கூறியவுடன் நம் அறிவு கொண்டு காணும் எல்லையை மனத்துட் கொண்டு இதுதான் முடிவு இதற்கு அப்பால் ஒன்றுமில்லை என்று நினைந்துவிடுவோமோ என்று கருதிய அடிகளார், அந்தம் என்பது ஐந்தொழிலின் அந்தம் என்றுமட்டுமே கொள்ள வேண்டும் என்ற கருத்தைக் குறிப்பிடுகிறார். அத்திருவடி கட்கு அந்தம் என்று ஒன்று இல்லை; வாக்கு, மனோலயம் கடந்து நிற்கும் ஒன்றிற்கு அந்தம் கூறுவது எப்படி? எனவே, அந்தம் என்று இங்கு குறிப்பிட்டது ஐந்தொழிலின் அந்தமேயன்றித் திருவடிக்கு அந்தமொன்றில்லை என்பதைக் குறிக்க 'அந்தமாம் செந்தளிர்' என்றார். செந்தளிர் என்ற சொல் வளர்ச்சியைக் குறிக்கும் சொல்லாகும். முடிவு என்ற ஒன்று இல்லை. வளர்ந்து கொண்டேயுள்ளது என்பதை அறிவிக்க 'அந்தமாம் செந்தளிர்' என்று கூறினார்.

சிவபுராணத்தில் தொடங்கிய திருவடிபற்றிய விளக்கம் நான்கு அகவல்களிலும் நீண்டு, திருச்சதகத்திலும் நுழைந்து, நீத்தல் விண்ணப்பத்தில் விரிந்து, திருவெம்பாவைக் கடைசிப் பாடலில் முழுவதுமாக மலர்ந்து நிற்கின்றது.

உலகில் தோன்றிய பல்வேறு சமயங்களும் தாம் தாம் கருதிய கடவுட் பொருளுக்கும் பல்வேறு வகையாகப் பெருமை சேர்த்தன. ஆனால், ஒரு நாமம் ஓர் உருவம் ஒன்றுமில்லாத ஒருவனுக்கு, வடிவு கற்பித்து, அதிலும்

சிறப்பாகத் திருவடியைப் போற்றிய பெருமை சைவர்களுக்கே உரியதாகும்.

அடுத்தபடியாக வைணவர்களும் சில இடங்களில் திருவடிப் பெருமை பேசியுள்ளனர். நம்மாழ்வார் தம் திருவாய்மொழியின் முதல் பாடலின் நான்காவது அடியில் 'துயர் அறு சுடர் அடி தொழுது எழல் என் மனனே' (நாலாயிர : திருவாய்மொழி —1) எனப் பாடியுள்ளமை இங்கு நோக்கத் தக்கது.

ஒரு குறிப்பிட்ட தெய்வத்தின் பெயரைக் குறிப்பிடாமல், பொதுமறை கூறிய வள்ளுவப் பேராசானும் திருக்குறளின் முதல் அதிகாரத்தின் ஏழு இடங்களில் இறைவன் திருவடியைப் பற்றியே பேசுகின்றார்.

புத்தம், சைனம் முதலிய எந்தச் சமயத்தைச் சேர்ந்தவர்களாயினும், அவர்கள் தமிழர்களாக இருப்பின் திருவடிப் பெருமை பேசாமல் இரார்.

# 8. திரு அம்மானை

இள மகளிர் உருண்டையாக உள்ள பந்து வடிவான காய்களை, மூன்று அல்லது ஐந்து என்ற அளவில் கையில் எடுத்துக்கொண்டு, அவற்றை மேலே தூக்கிப்போட்டு தரையில் வீழாமல் பிடித்து ஆடும் ஆட்டம் அம்மானை எனப்படும்.

சங்க காலத்தில் கழங்கு ஆடுதல் என்ற பெயருடன் இவ்விளையாட்டு ஆடப்பெற்றது. ஆனால், சிலப்பதிகார காலத்திலேயே கழங்காட்டம் என்ற பெயர் மாறி, அம்மானை ஆட்டம் என்ற பெயர் வழங்கலாயிற்று.

இருவர் முதல் ஐவர்வரை வட்டமாக நின்றுகொண்டு, அவரவர் கையிலுள்ள காய்களைத் தூக்கிப் போட்டுப் பிடித்து ஆடும் ஆட்டம் அன்று வழக்கில் இருந்தது. காய்களை மேலே தூக்கிப் போட்டு பிடிக்கும்போது ஒரு தாளகதிக்கு உட்பட்டே அது நடைபெறல் வேண்டும். இன்றேல், காய்கள் கீழே விழுந்துவிடும். இந்தத் தாள கதியை நிறைவு செய்ய, அதற்கு ஏற்ற சந்தத்தில் பாடல்கள் பாடப்பெற்றன. அம்மானைப் பாட்டின் அடிப்படை இதுவேயாகும்.

ஆடுவோர்கள் இளம்பெண்கள் ஆதலால், காதல்பற்றிய கருத்துக்கள் அன்றைய அம்மானைப் பாடல்களில் பெரிதும் இடம்பெற்றன. எனவே, காதல்பற்றிப் பாடப் பெறும் வரிப்பாடல்களில் இதுவும் ஒன்றாக எண்ணப் பெற்று, அம்மானை வரி என்றும் பெயர் சூட்டப் பெற்றது.

ஒரு நாடு முன்னேற்றம் பெறவேண்டுமானால் அந் நாட்டிலுள்ள மகளிர் முன்னேற்றம் பெறவேண்டும் என்பது இற்றைநாள் சமுதாய இயலார் கண்ட உண்மையாகும்.

மகளிர் முன்னேறாத நாடு முழு முன்னேற்றம் அடையமுடியாது என்ற இற்றைநாள் கண்டுபிடிப்பை அன்றே அறிந்திருந்த அடிகளார், இளமகளிர்க்கு இறை யுணர்வை ஊட்டுவதே அவர்கள் முன்னேற்றத்திற்கு வழி எனக்கண்டார். அதனை அறிவுரையாகக் கூறாமல், அவர்கள் விளையாடும் விளையாட்டுப் பாடல்களிலேயே இந்த அருங்கருத்தைப் புகுத்தினார். அம்மானை, பொற் சுண்ணம், பொன்னூசல், எம்பாவை, சாழல், பூவல்லி ஆகியவை மகளிர் விளையாட்டுக்களே என்பது நன்கு விளங்கும்.

என்றாலும், அதில் ஒரு வேற்றுமை உண்டு என்பதை அறிதல் வேண்டும். பருவமடைந்த இள மகளிர் மனத்தில் காதல் உணர்வை வளர்க்க, இப்பாடல்கள் மூலம் பழங்காலத்தார் முயன்றனர். அந்த இளவயதிலேயே அவர்கள் பாடும் பாடல்களைக் கொண்டே அம்மகளிரின் ஆழ்மனத்தில் இறையுணர்வை ஏற்படுத்த வேண்டும் என்று முதல்முதலாக கருதியவர் அடிகளாரே ஆவர்.

விளையாட்டாகப் பாடப்படும் இப்பாடல்கள் தொடக்கத்தில் கருதிய பயனைத் தராவிட்டாலும், நாளாவட்டத்தில் பலமுறை பாடப்படும்போது அவர்கள் மேல் மனத்தைக் கடந்து உள்ளத்தில் சென்று பதியும் என்ற நுணுக்கத்தை அறிந்துகொண்ட அடிகளார், இந்த விளை யாட்டுக்களை அடிப்படையாகக் கொண்டே பாடல்களை இயற்றினார்.

தொடக்கத்தில் ஆடும்போது இப்பாடல்களின் உட் பொருளை அறிந்து கொண்டே அவர்கள் பாடினார்கள் என்று கூறுவது சரியில்லை. ஆனாலும், பாடல்களின் ஓசை நயம், தாள கதி என்பவை மிகச் சிறப்பாக இப்பாடல்களில் அமைந்திருத்தலின் இவற்றிற்காகவே மீட்டும் மீட்டும்

இப்பாடல்களைப் பாடி ஆடினர். நாளாவட்டத்தில் அவர்களையும் அறியாமல் பாடகளின் உட்பொருள் அவர்கள் உள்ளத்தில் சென்று தங்கிற்று. ஒரு சமுதாயத்தின் சரிபாதியான மகளிரை இளவயதிலேயே இறையுணர்வு பெற்றவர்களாக ஆக்க வேண்டும் என்று நினைத்த அடிகளார், இப்பாடல்கள் மூலம் பெருவெற்றி அடைந்தார் என்று கூறினால், அது மிகையாகாது.

இப்பாடல்கள் 'ஆறடித் தரவு கொச்சகம்' என்ற பெயரில் அமைந்துள்ளன. ஒவ்வோர் அடியும் நான்கு சீர்களைக் கொண்டு அமைந்திருத்தலைக் காணலாம்.

இப்பகுதிக்குப் பழங்காலத்தில் 'ஆனந்தக் களிப்பு' என்று யாரோ பெயரிட்டுள்ளனர். பின்வந்தவர்கள் அத்தலைப்பை அப்படியே ஏற்றுக்கொண்டு அதற்கு விளக்கமும் எழுதினர். ஆனந்தம் என்பது அகத்தே தோன்றுவது. களிப்பு அல்லது மகிழ்ச்சி என்பது புறமனத்தே தோன்றுவதாகும். இந்த ஆனந்தம் அகத்தே நிறைந்திருக்கும்போது அதனை உடைய மகான்கள் அதனை வெளிக்காட்டுவதே இல்லை. அவர்கள் முகத்தில் காணப்பெறும் அமைதி, கண்டார் அனைவரையும் ஈர்க்க வல்லதாகும். அகமனத்தில் நிறைந்த ஆனந்தம் அற்புதமான அலைகளை ஓயாது வெளிப்படுத்திக்கொண்டிருக்கும். ஆதலின், எதிரே உள்ளவர்களையும் ஈர்க்கும் ஆற்றல் உடையது அது. இத்தகைய ஆனந்தம் என்ற சொல்லோடு களிப்பு என்ற மிகச் மிகச் சாதாரணமான சொல்லையும் சேர்த்து ஆனந்தக் களிப்பு என்று பெயரிட்டவர்கள், ஆழ்ந்து சிந்தித்து இப்பெயரைத் தந்ததாகத் தெரியவில்லை.

அடிகளாரின் பின்வரும் பாடல்களில் ஆனந்தமும் அது தோன்றுவதற்குரிய காரணமும் பேசப்பெற்றுள்ளன. அது ஏன் என்பதைப் பின்னர்க் காணலாம்.

175. செம் கண் நெடுமாலும் சென்று இடந்தும் காண்பு அரிய
பொங்கு மலர்ப் பாதம் பூதலத்தே போந்தருளி
எங்கள் பிறப்பு அறுத்திட்டு எம் தரமும் ஆட்கொண்டு
தெங்கு திரள் சோலைத் தென்னன் பெருந்துறையான்
அம் கணன் அந்தணன் ஆய் அறைகூவி வீடு அருளும்
அம் கருணை வார் கழலே பாடுதும் காண் அம்மானாய் 1

இடந்து-தோண்டியும். எம் தரம்-எங்கள் அளவு. தெங்கு-தென்னை. அங்கணன்-அழகிய நெற்றிக்கண்ணையுடையவன். அந்தணன்-குருவாக எழுந்தருளிய அந்தணன். அறைகூவி-வலிய அழைத்து.

*செங்கண் நெடுமால் என்றமையின் மிகக் கூர்மையான பார்வையும் நெடிதான வளர்ச்சியும் பெற்றவன் என்பது பெற்றாம். செங்கண்ணை உடைய ஒருவன் இருந்த இடத்தில் இருந்தே எதிரேயுள்ளதைக் காணும் வாய்ப்பு உடையவன் என்றாலும் இவனைப் பொறுத்தமட்டில் இருந்த இடத்திலிருந்தும் காணமுடிய வில்லை; நெருங்கிச் சென்றும் காணமுடிய வில்லை; நிலத்தை அகழ்ந்தெடுத்தும் காணமுடியவில்லை என்ற அழகு தோன்றச் 'சென்று இடந்தும் காண்பு அரிய' என்றார்.*

*பூமிக்குள் ஆழ்ந்து நிற்கும் பாதத்தைப் 'பொங்கு மலர்ப்பாதம்' என்று அடைகொடுத்துக் கூறியது வியப்பேயாகும். பூமியை அகழ்ந்துகொண்டு உள்ளே சென்றமையின் மிக வன்மையான பாதம்போலும் என்ற நினைவு தோன்றாதிருக்க 'மலர்ப்பாதம்' என்றார். பாதாளம் ஏழினும் கீழ்ச் சென்றிருக்கும் பாதத்தை, 'பொங்கு பாதம்' (ஒளியுடைய பாதம்) என்று கூறுவது எவ்வாறு பொருந்தும்? ஒளிக்கெல்லாம் மூலமாய் இருப்பதாலும் அருக்கனுக்கே சோதி அமைத்ததாலும் அப்பாதத்தை ஒளியுடைய பாதம் என்றார். இந்தக் கருத்து*

திருவாசகத்தில் 172ஆம் பாடலிலும் பேசப் பெற்றிருப்பதைக் காணலாம்.

ஒளி உடைய ஒன்றை அது எங்கே இருந்தாலும் எளிதாகக் காணமுடியுமே! அவ்வாறிருக்க இந்தப் பொங்கு பாதத்தைச் செங்கணவன் சென்றும், இடந்தும்கூடக் காணமுடியாமல் போனது விந்தையே என்ற குறிப்புப் பொருள் சிந்திக்கத் தக்கது ஆகும்.

செங்கணவனே தேடிக் காண முடியாத பாதம் என்று அதன் சிறப்பை இவ்வளவு விரிவாகக் கூறியது ஒரு கருத்தை உட்கொண்டதாகும். செங்கண்ணனுக்குத் தன்னை மறைத்துக்கொண்ட அப்பாதம், சராசரி மனிதர்கள் நடமாடும் இந்தப் பூதலத்தில் வந்தது. அவ்வாறு வருதற்கு, இப்பூதலம் தன் முயற்சியால் தவம் ஏதொன்றும் செய்ய வில்லை. அப்படி இருந்தும், அப்பாதம் பூதலத்தே போந்தது என்றால், பூதலத்தின் தகுதிநோக்கி அன்று; தன் அருள் காரணமாகவே இவண் போந்தது என்கிறார் அடிகளார்.

அருள் காரணமாக இப்பூதலத்து வந்த அத்திருவடி, என் பிறப்பைமட்டுமா அறுத்தது? அத்திருவடியைக் காணும் பேறுபெற்றோர் அனைவரது பிறப்பையும் அறுத்தது என்பதை விளக்க 'எங்கள் பிறப்பறுத்திட்டு' என்று தன்மைப் பன்மையாகக் கூறினார். அடுத்தபடியாக 'எம் தரமும் ஆட்கொண்டு' என்று பேசுகிறார். இவை முன்னும் பின்னுமாகக் கூறப்பெற்றிருப்பினும் ஆட்கொண்டு என்பதை முன்னரும், பிறப்பு அறுத்திட்டு என்பதைப் பின்னரும் வைத்துப் பொருள் கொள்ள வேண்டும்.

பல்வேறு தரமுடைய மக்களை ஒரே நிலைப்படுத்திப் பிறப்பை அறுப்பது எப்படி முடியும்? மக்கள், உடம்பு உடையவர்களேனும் பல்வேறு மனநிலையில் உள்ளவர்கள்

ஆயிற்றே! பிறப்பை அறுக்கவேண்டுமானால் அந்த உயர்ந்த மனநிலைக்கு வளர்ந்தவர்களை மட்டும்தானே ஏற்றுக் கொண்டு அவர்கள் பிறப்பை அறுக்க முடியும் என்ற வினாத் தோன்றுமன்றோ? அதற்கு விடையாக 'எம் தரமும் ஆட்கொண்டு' என்கிறார்.

பிறப்பு அறுபடுவதற்குத்தான் அவர்கள் வளர்ச்சி நிலையை ஆதாரமாகக் கொள்ளவேண்டுமே தவிர, ஆட்கொள்ப்படுவதற்குத் தரம் பார்க்கவேண்டிய தேவையில்லை. அவனுடைய அருள் காரணமாகவும், வள்ளன்மை காரணமாகவும் ஆட்கொள்கிறானே தவிர, ஆட்கொள்ளப் படும் பொருளின் தரம் பார்த்து இது நடைபெறுவதில்லை. இதனை விளக்கவே எங்களுடைய தரத்தைப்பற்றிக் கவலைப்படாமல் எங்கள் அனைவரையும் ஆட்கொண்டான் என்கிறார். அவனால் ஆட்கொள்ளப் பெற்றபின் தரத்திலிருந்த வேறுபாடுகள் அனைத்தும் மறைந்து அனைவரும் ஒருநிலை அடைந்துவிட்டார்கள். ஆதலின், அவர்கள் அனைவருடைய பிறப்பையும் அறுத்தான் என்று கூறுகிறார்.

'தென்னன்' என்பது தென்னாட்டிற்கு உரியவன் என்ற பொருளைத் தந்து நிற்கின்றது.

'அறைகூவி வீடு அருளும் அம் கருணை வார்கழல்' என்ற பகுதியில் அடிகளார் தமக்கு நேர்ந்த அனுபவத்தை நினைந்து பார்க்கிறார். வீடுபேற்றைப்பற்றி ஒரு சிறிதும் சிந்தியாமல் குதிரை வாங்கச் சென்றுகொண்டிருந்த தம்மை, வலிய இழுத்து அத்திருவடிகளைத் தந்தான் என்று கூறுகின்றார். கருணை உடையவன் தன் வார்கழலைத் தந்தான் என்பதற்குப் பதிலாக, கருணையை வார்கழல்மேல் ஏற்றி, அத்தகைய திருவடியைப் பாடிக்கொண்டே அம்மானை ஆடுவோம் என்கிறார்.

*அறைகூவி வீடு அருளும் என்பதற்கு, குருந்த மரத்தின் அடியில் இருந்த குருநாதர் இவரை வாய்விட்டு அழைத்தார் என்று பொருள்கொள்ளத் தேவையில்லை. அவருடைய திருவருளால் திருவாதவூரர் மனத்திடைத் தோன்றிய குரலே ஆகும் அது என்பது கருத்து. இது 'அறை கூவி ஆட்கொண்டு அருளி' (திருவாச: 3—148) என்ற அண்டப்பகுதியில் விளக்கப்பெற்றுள்ளது.*

**176.** **பாரார் விசும்பு உள்ளார் பாதாளத்தார் புறத்தார்**
**ஆராலும் காண்டற்கு அரியான் எமக்கு எளிய**
**பேராளன் தென்னன் பெருந்துறையான் பிச்சு ஏற்றி**
**வாரா வழி அருளி வந்து என் உளம் புகுந்த**
**ஆரா அமுது ஆய் அலை கடல்வாய் மீன் விசிறும்**
**பேர் ஆசை வாரியனைப் பாடுதும் காண் அம்மானாய்** **2**

பாரார்-மனிதர்கள். பேராளன்-பெருமையையாள்பவன். வாரா வழி-முத்தி. பேராசை வாரியன்-பெரிய அன்புக்கடலாக உள்ளவன்.

*'மண்ணுலகம், விண்ணுலகம், பாதாள உலகம், இவற்றைக் கடந்துள்ள ஏனை அண்டங்கள் ஆகியவற்றுள் எங்கே வாழ்பவர்களும், கண்ணாலும் கருத்தாலும் காண்டற்கு அரியனாய் உள்ள ஒருவன் எமக்கு எளியனாய் வந்தான். மானுட வடிவில் எளியனாய் வந்திருப்பினும் அவன் காண்டற்கு அரிய பேராளன் என்பதையும், தென்னன் என்பதையும், பெருந்துறை நாயகன் என்பதையும் யான் புரிந்துகொண்டேன். மானுட வடிவில் வந்த குருவை இவ்வாறு புரிந்துகொள்ள எனக்கு உதவியது என்னுடைய அறிவோ கல்வியோ அனுபவமோ அல்ல. குருவாக வந்தவர் முதலாவதாக எனக்குச் செய்த காரியம் என்னைப் பிச்சனாக்கியதுதான்' என்கிறார்.*

*'உலகத்தார் கண்ணில் நான் பித்தனாகப் படினும் உண்மையில் நடைபெற்றது வேறு ஒன்றாகும். அந்தக்*

குருவானவர் முதலில் என் உள்ளம் புகுந்தார். பின்னர்த் தன் பரிசு, வினை இரண்டு, சாரும் மலம் மூன்றும் என்னை விட்டு நீங்கும்படியாகச் செய்தார். அதனாலேயே யாராலும் காண்டற்கு அரியவனை, பேராளனை, தென்னன் என்றும் பெருந்துறையான் என்றும் எமக்கு எளியவனாக எம் எதிரே அமர்ந்துள்ளான் என்றும் தெரிந்துகொண்டேன்' என்கிறார்.

சென்ற பாடலிலும் இப்பாடலிலும் பின்னரும் பல இடங்களிலும் இறைவனைத் 'தென்னன்' என்று அடிகளார் குறிப்பிடுவது சிந்திக்கற்பாலதாகும். வேதகாலத் திற்கு முற்பட்டே சிவ வழிபாடு தமிழகத்தில் தோன்றி வளர்ந்தது. ஆதலின், 'தென்னன்' என்ற சொல் சிவபெருமானைக் குறிப்பதற்குக் காரணத்தோடு சொல்லப்பட்ட பெயராகும்.

'அலைகடல்வாய் மீன் விசிறும்' என்ற தொடர் திருவிளையாடல் புராணத்தில் காணப்பெறும் 'வலைவீசிய படலக்' கதையை நினைந்து கூறியதாக இருக்கலாம்.

**177.** **இந்திரனும் மால் அயனும் ஏனோரும் வானோரும்**
**அந்தரமே நிற்கச் சிவன் அவனி வந்தருளி**
**எம் தரமும் ஆட்கொண்டு தோள் கொண்ட நீற்றன் ஆய்ச்**
**சிந்தனையை வந்து உருக்கும் சீர் ஆர் பெருந்துறையான்**
**பந்தம் பறிய பரிமேல் கொண்டான் தந்த**
**அந்தம் இலா ஆனந்தம் பாடுதும் காண் அம்மானாய் 3**

**அந்தரம்-ஆகாயம். அவனி-பூமி. எந்தரமும்-எமது நிலை யிலும். சிந்தனை-கவலை. பந்தம்-கட்டு. பரிய-நீங்க. பரி- குதிரை.**

இந்திரன், மால், அயன், வானோர், ஏனோர் என்பவை பொதுவாக மேலுலகம் என்ற பொருளைத் தந்துநிற்கு மேனும், ஒரு காரணம்பற்றியே அடிகளார் இங்கு வரிசைப்படுத்திக் கூறுகிறார்.

இந்திரன் சுக போகங்களை அனுபவிப்பதற்காகவே மேலுலகில் வாழ்பவன். அந்த அனுபவச் செல்வத்தை அளிப்பவன் திருமால். இந்தச் செல்வமும் அனுபவமும் துவர்த்த பிறகு அவற்றின் நிலையாமையை உட்கொண்டு, 'நான் யார்? என் உள்ளம் ஆர்?' என்பனபோன்ற வினாக்கள் அறிவின் அடிப்படையில் தோன்றுகின்றன. அவ்வினாக்களின் பயனாக வானோர் பிரானே எம்தலைவன் என்ற முடிவை அந்த அறிவு தந்தாலும், அவனை அடைவதற்கு உரிய வழி துறைகளைத் தடுத்து, அந்த அறிவே ஆணவ வடிவங்கொண்டு நிற்றலின் அந்த அறிவின் தலைவனாகிய நான்முகனை மூன்றாவதாகக் கூறினார். ஏனோர், வானோர் என்பவர் மேலே கூறிய மூவருக்கும் கீழ்ப்பட்டு இடை நிற்பவர்கள் ஆவர்.

இவர்கள் அனைவருக்கும் அறியொணாதவன் என்றதால் அவனுடைய பெருமை கூறியவாறாயிற்று.

அத்தகையவன் யார் என்ற வினாவிற்கு விடை கூறுவார்போல, சிவன் என்ற பெயரைக் கூறினார். 'அவனி வந்தருளி' என்றதால் குருவடிவில் வந்ததை நினைவூட்டினார்.

குருவடிவிற்கு விளக்கம் தருபவர்போல் 'தோள் கொண்ட நீற்றன்' என்றார். ஆட்கொள்ளப் படுபவரின் தராதரம் பாரது ஆட்கொண்டான் என்பதை 'எந்தரமும் ஆட்கொண்டு' என்றார்.

சீரார் பெருந்துறையான் ஒருவர் உள்ளத்தில் புகுந்தான் என்பதை எவ்வாறு அறிந்துகொள்ள முடியும்? இதோ விடை கூறுகிறார் அடிகளார். நம்முடைய கட்டுப் பாட்டிற்கு அப்பாற்பட்டுச் சித்தத்தினுள்ளே உருக்கம் தோன்றினால், பெருந்துறையான் வந்தான் என்பதை அது அறிவிக்கும். அதனையே 'சிந்தனையை வந்து உருக்கும் சீரார் பெருந்துறையான்' என்கிறார் அடிகளார்.

'பரிமேற் கொண்டான் தந்த அந்தம் இலா ஆனந்தம்' என்பது அவர் வாழ்க்கையில் நிகழ்ந்த நிகழ்ச்சியைக் குறிப்பதாகும்.

இரண்டு பேரைப் பார்க்கும்பொழுது சிந்தை உருகி அந்தமிலா ஆனந்தம் கிடைத்தது. இந்த அனுபவத்தை முதலில் தந்தவர் குருநாதர். அவராவது அடியார் குழுவினிடையே குருநாதராக வீற்றிருந்தார். அவரைக் கண்டவுடன் சிவன் எனத் தேறினார் ஆதலின், ஆனந்தம் கிடைத்தது நியாயமானதே ஆகும்.

ஆனால், குதிரைச் சேவகனாக வந்த ஒருவன் சிவன்தான் என்று எவ்வாறு அடிகளார் தேறினார்? குதிரைச் சேவகனைக் கண்டவுடன் 'தாம் அமைச்சர்; வந்தவன் குதிரைச் சேவகன்' என்ற தராதரம் மறைந்தது. குதிரைச் சேவகன் பாண்டியனிடம்தான் பேசினான்; அடிகளாரிடம் பேசவில்லை; என்றாலும், என்ன அதிசயம்! அங்கு நிகழ்ந்தவற்றை இதோ அடிகளார் பேசுகிறார். 'பரிமேல் கொண்டான் தந்த அந்தமிலா ஆனந்தம்' என்ற தொடர் அதற்கு விடையாகும். திருப்பெருந்துறையில் சிவன் என முதலில் தேறினார்; பிறகு ஆனந்தம் கிடைத்தது. குதிரைச் சேவகனைக் கண்டவுடன் முதலில் ஆனந்தம் பெருகிற்று; எனவே, குதிரைச் சேவகனைச் சிவன் என்றே தேறினார் அடிகளார்.

**178.** வான் வந்த தேவர்களும் மால் அயனோடு இந்திரனும்
கான் நின்று வற்றியும் புற்று எழுந்தும் காண்புஅரிய
தான் வந்து நாயேனைத் தாய்போல் தலையளித்திட்டு
ஊன் வந்து உரோமங்கள் உள்ளே உயிர்ப்பு எய்து
தேன் வந்து அமுதின் தெளிவின் ஒளி வந்த
வான் வந்த வார் கழலே பாடுதும் காண் அம்மானாய் 4

கான் நின்று வற்றி-தவஞ்செய்வதாகக் காட்டிற்புகுந்து உடல்வற்றி. புற்று எழுந்து-உடல்முழுதும் புற்றால் மூடப்பெற்று.

முன்னர்ப் பல இடங்களிலும் பேசியதுபோல இப்பாடலிலும் திருப்பெருந்துறை அனுபவத்தை நினைவுகொள்கிறார் அடிகளார்.

தேவலோகத்தில் உள்ள இந்திரன் உள்ளிட்ட தேவர்கள் அனைவரும் அவ்வுலகத்திலுள்ள இன்பங்களை அனுபவிப்பதற்காக அங்கு உள்ளனர். அன்றி, அங்கிருந்தே தவம் செய்து வீடுபேற்றை அடைந்தார்கள் என்று குறிப்பிட ஒருவருமில்லை. உய்கதி அடைய விரும்பினால் இந்திரன் முதலாய தேவர்களும் பூவுலகிற்கு வந்து இறைவனை வழிபட்ட பின்னரே முன்னேற முடியும்.

தேவர்களும் காட்டினிடை வந்து பல காலம் தவம் செய்து அடைவதற்குரிய அத்திருவடிகள் தம்மைப் பொறுத்தவரை மிகமிக எளிதாகத் திருப்பெருந்துறையில் அறைகூவி ஆட்கொண்டன என்கிறார் அடிகளார்.

அங்குக் கிடைத்த அனுபவம் எத்தகையது என்பதை முன்னர்ப் பலகால் பேசிய அடிகளார், இங்கு மீட்டும் பேசுகின்றார். மயிர்க்கூச்செறிதல், உயிர்த்தல் ஆகிய உடம்பு நிகழ்வுகள் நான்காம் அடியில் பேசப்பெற்றுள்ளன.

குருநாதரின் அத்திருவடிகள் பெருமை வாய்ந்தன என்பதை 'வான் வந்த வார்கழல்' என்கிறார். பருவடிவுடன் இருந்த அத்திருவடிகள் கண்ணுக்கு இதத்தையும், மனத்திற்கு அமைதியையும் தந்தது உண்மை தான். ஆனால், தேன், அமுது என்ற இரண்டையும் இங்கு எப்படி உவமை கூறமுடியும்? திருவடி கட்புலனுக்கு விருந்தாயதுபோலத் தேனும் அமுதும் நாப்புலனுக்கு விருந்து ஆயின. அப்படியானால் இந்த உவமையிலிருந்து பெறக்கூடிய கருத்து ஒன்று உண்டு.

மனத்திற்கு அமைதி, ஆனந்தம் என்பவற்றைத் திருவடி தருகின்றது. அதேபோல அந்த இரண்டையும் இனிய தேனும் தெளிந்த அமுதும் தருகின்றன. எனவே, மனத்திற்கு அமைதி, ஆனந்தம் தந்த காரணத்தால் திருவடிக்கு அமுதும், தேனும் உவமையாகிவிட்டன.

**179.** **கல்லா மனத்துக் கடைப்பட்ட நாயேனை**
**வல்லாளன் தென்னன் பெருந்துறையான் பிச்சு ஏற்றிக்**
**கல்லைப் பிசைந்து கனி ஆக்கித் தன் கருணை**
**வெள்ளத்து அழுத்தி வினை கடிந்த வேதியனைத்**
**தில்லை நகர் புக்குச் சிற்றம்பலம் மன்னும்**
**ஒல்லை விடையானைப் பாடுதும் காண் அம்மானாய்**

**கல்லைப்பிசைந்து கனியாக்கல்-சுவையற்ற வலிய கல்போலும் மனத்தைச் சுவையுள்ள மென்மையான பழமாகச்செய்தல். கடிந்த-நீக்கிய. ஒல்லை விடையான்-விரைந்து செல்லும் இடபத்தை உடையவன்.**

மேலைப் பாடல்களைப்போல இப்பாடலும் திருப்பெருந்துறை அனுபவத்தை நினைந்து பாடியதாகும். இப்பாடலின் தனிவிசேடம் என்னவென்றால், குருநாதர் ஆட்கொள்வதற்கு முன்னர்த் தம் மனநிலை இருந்த தன்மையையும், ஆட்பட்ட பின்னர் அம்மனநிலையில் ஏற்பட்ட மாறுபாட்டையும் சிந்திப்பதாகும்.

'கல்ஆம் மனத்துக் கடைப்பட்ட நாயேன்' என்றதால் ஆட்படுவதன் முன்னர்த் திருவாதவூரரின் மனம் கல்போன்று இருந்தது என்பதாம். தலைமையமைச்சராக இருந்த ஒருவருக்கு அறிவின் பயனாக உள்ள கல்வி, உலக அனுபவம் ஆகிய அனைத்தும் நிரம்பியிருந்தன. ஆனால், இந்தக் கல்விச் செல்வமும், அனுபவத் தொகுப்பும் இவருடைய மனத்தை கனிவிக்க முடியவில்லை; அன்பு

என்னும் உணர்வு அம்மனத்தினுள் நிறைந்து, அது முதிர முதிர மனம் கனியும் என்றபடி.

இந்த அடிப்படைத் தத்துவம் திருவாதவூரருக்கு நன்கு தெரியுமல்லவா? பேரறிஞராகிய அவர், அன்பெனும் உணர்வை மனத்தினுள் செலுத்தி அதனைக் கனியவைத் திருக்கலாமே ஏன் அவ்வாறு செய்யவில்லை? அவர் பலமுறை முயன்றிருத்தல் வேண்டும். ஆயினும், அன்பெனும் உணர்வை மனத்துட் செலுத்த முடியவில்லை. இப்பொழுது திருப்பெருந்துறையில் குருநாதர் வடிவிலிருந்த ஒருவர், ஒரே விநாடியில் அதனைச் செய்து முடித்துவிட்டார். பல்லாண்டுகள் முயன்றும் தாம் செய்யமுடியாத ஒன்றை, ஒரே விநாடியில் குருநாதர் செய்துவிட்டார்; ஆதலின், அவரை 'வல்லாளன்' என்கிறார் அடிகளார்.

நீண்ட காலம் தாம் செய்ய முடியாததை ஒரே விநாடியில் குருநாதர் செய்துவிட்டதால்மட்டும் அவர் வல்லாளன் ஆகிவிடவில்லை. மேலும் ஒரு காரியத்தைச் செய்ததனால்தான் அவர் வல்லாளன் ஆனார். கல்போன்ற மனத்தைப் பிசைந்து கனியாக்குதல் ஒரு மாபெரும் செயல்தான். ஆனாலும், அங்ஙனம் கனிந்த மனம் முழுப்பயனையும் தராது. இன்று கனிந்த பழம் என்று நாம் காணும் பல பழங்கள் பெரும் பகுதி இன்சுவையும், ஒரு சில பகுதிகள் சுவையின்றியும் இருத்தலைக் காண்கிறோம். கல்போன்ற மனத்தைப் பிசைந்து கனியாக்கியவன் மனத்தின் இயல்பை நன்கு அறிந்தவன். கனியாக்கிவிட்டா லும் மறுபடியும் அந்த மனம் திருவாதவூரரிடம்தானே இருக்கப் போகிறது? அப்படிப்பட்ட நிலை வரும்போது கனிவிக்கப்பட்ட இம்மனம், ஒரு சில இடங்களில் பழைய கல் தன்மைக்குப் போய்விடும் அல்லவா?

அவ்வாறு நிகழாமல் இருக்க 'வல்லாளன்' ஒரு காரியம் செய்தான் என்கிறார் அடிகளார். அது என்ன?

'பிசைந்து கனியாக்கி' யவன் அக்கனியைத் 'தன் கருணை' ஆகிய வெள்ளத்துள் அமுழ்த்தினான்.

இன்றும்கூடப் பழம் முழுச்சுவை பெறுவதற்கும் தன் நிலை கெடாமல் நீண்ட நாள் இருப்பதற்கும் பழத்தைத் தேனுள் அமிழ்த்தி வைக்கின்ற பழக்கம் உண்டு. அதனை 'முரபா' என்று கூறுவர்.

அதனையே இங்கு அடிகளார் 'தன் கருணை வெள்ளத்து அமுத்தி' னான் என்கிறார்.

தேனுள் அமுழ்த்திய பொழுது பழத்திலுள்ள குறைகள் எல்லாம் முற்றிலுமாக நீங்கிவிடுவதுபோல, கருணை வெள்ளத்துள் அமுழ்த்தப்பெற்ற மனம், தன் குறைகளாகிய வினைகளிலிருந்து முற்றிலும் நீங்கிவிடுகின்றது என்பதையே 'வெள்ளத்து அமுத்தி வினை கடிந்த வேதியன்' என்கின்றார்.

'தில்லை நகர் புக்குச் சிற்றப்பலம் மன்னும்' என்ற தொடர் மேலோட்டமாகப் பார்க்கும்போது குழப்பத்தை உண்டாக்கும். வரலாற்று அடிப்படையில் கண்டால் (திருஆலங்காட்டுத் தல புராணம்) திருஆலங்காட்டில் ஊர்த்துவ தாண்டவம் ஆடிய பெருமான், உபமன்யு முனிவனுக்காகத் தில்லை நகரை நிர்மாணித்து, அங்கே சிற்றம்பலத்தை உருவாக்கி, அங்கேயே ஆனந்தத் தாண்டவம் ஆடினான் என்பது விளங்கும்.

'புக்கு' என்பது புகுந்து என்று பொருள் தரும். அப்படியானால் எல்லா இடங்களிலும் நிறைந்துள்ள இவன் தில்லையில்மட்டும் இல்லாதிருந்து இப்போது புதிதாகப் புகுந்தானோ என்ற ஐயம் தோன்றுமன்றோ? இம்மாதிரி இடங்களில் புகுந்து என்ற சொல்லை, இருந்து என்ற சொல்லுக்குப் பரியாயச் சொல்லாகக் கொள்ள வேண்டும். அடிகளார் இந்தக் கருத்தில்தான் 'புக்கு' என்ற

சொல்லைப் பயன்படுத்துகிறார் என்பதைப் பின்வரும் திருவாசகத் தொடர்களும் வலியுறுத்தும்.

வான்பழித்து இம் மண் புகுந்து மனிதரை
ஆட்கொண்ட வள்ளல்

(திருவாச:351)

தானே வந்து எனது உள்ளம் புகுந்து
அடியேற்கு அருள் செய்தான்

(திருவாச:555)

புகுதல் என்று கூறினாலே, அதன் எதிர்மறையான வெளிவருதல் என்ற சொல்லை அது நினைவூட்டும். 'புக்கு' என்ற சொல் 'இருந்து' என்ற பொருளைத் தருவதாயினும் சொல்லளவில் புக்கு என்பது வெளிப்படுதல் என்னும் சொல்லுக்கு எதிர்ச்சொல் ஆதலின், இதில் குழப்பம் நேராதிருக்க 'மன்னும்' (நிலை பெறுதல்) என்ற சொல்லைப் பயன்படுத்தியுள்ளார்.

180. கேட்டாயோ தோழி கிறி செய்த ஆறு ஒருவன்
தீட்டு ஆர் மதில் புடைசூழ் தென்னன் பெருந்துறையான்
காட்டாதன எல்லாம் காட்டிச் சிவம் காட்டித்
தாள்தாமரை காட்டித் தன் கருணைத் தேன் காட்டி
நாட்டார் நகை செய்ய நாம் மேலை வீடு எய்த
ஆள்தான் கொண்டு ஆண்டவா பாடுதும் காண் அம்மானாய் 6

கிறி-மாயம். தீட்டு ஆர் மதில்-சுதை தீட்டப்பெற்ற மதில். காட்டாதன-காட்டத்தகாதனவாகிய உண்மை ஞானங்கள்.

இப்பாடலின் உயிர்நாடி 'நாட்டார் நகைசெய்ய நாம் மேலை வீடெய்த' என்ற தொடராகும். இரண்டு செயல்கள் உடனிகழ்ச்சிகளாக இங்கு பேசப்பெற்றுள்ளன. வீடு எய்துதற்குரிய வழிகளைக் குருநாதர் கையாண்டார். அதனால் விளையும் பயனைக் காணவோ அறியவோ

முடியாத சராசரி மனிதர்கள் 'நகை' செய்தார்கள். வீடு எய்துவதற்குரிய முதற்படி புற, அகத் துறவுகளாகும். அமைச்சர் கோலத்தில் வந்த வாதவூரர் திருவடி தீட்சை பெற்றபின் அகத்துறவை உடனே பெற்றுவிட்டார். ஆனால், இதனை யாரும் அறிந்திலர். அமைச்சர் பதவியை விட்டுவிட்டதும் அந்தப் பதவிக்குரிய ஆடை, ஆபரணங்களைத் துறந்துவிட்டதும் அடுத்து நிகழ்ந்த புறத்துறவாகும்.

அடிகளாரின் அகத்துறைவை அறியமாட்டாத மக்கள், புறத்துறவைமட்டும் கண்டுவிட்டு, பெரும் பதவியையும், உயர்ந்த ஆடை ஆபரணங்களையும் துறந்துவிட்ட ஒருவரைப் பார்த்து, பித்தன் என்று கூறி நகையாடினர்.

வீடு எய்துவதற்கு உரிய நிலை படிப்படியாக இவர் உள்ளே நிகழ, அதன் பயனாக விளைந்தது புறத்துறவாகும். மக்கள் நகைத்தார்கள். ஆதலின் 'நகை செய்ய' என்றும் அதே நேரத்தில், அகத்துறவு காரணமாக 'வீடு எய்த' என்றும் கூறினார்.

நாட்டார் நகை செய்வதற்குரிய காரணம் நன்கு விளங்கிவிட்டது. வீடு எய்துவதற்கு உரிய படிகள் எவ்வாறு தோன்றின என்பதை முற்பகுதியில் விளக்குகின்றார்.

'காட்டாதன எல்லாம் காட்டி'னான் என்பது முதற்படியாகும். உலகியல் நிலையில் காணும்பொழுது அந்த மன வளர்ச்சிக்கு ஏற்ப, உலகிடைக் காணப்பெறும் பொருள்கள் பல்வேறு வடிவினவாய்ப் பல்வேறு பெயர் உடையனவாய் ஒன்றுக்கொன்று வேறுபட்டுக் காட்சியளிக்கும்.

அருள் பெற்று, வளர்ச்சி அடையும்போது இப்பொருள்களின் மாறுபாடுகள் மறைந்து, இவற்றின் ஊடே இலங்கும் மூலப்பொருள் ஒன்றே என்பது தெரியத் தொடங்கும். 'பார்க்கின்ற மலரூடு நீயே இருத்தி' என்பது

இதனை விளக்கும். அந்த ஒன்றைக் காண முற்பட்டவுடன் பல்வேறு நாம, ரூபம் உடைய இப்பொருள்கள் மறையத் தொடங்கும். இந்த வளர்ச்சியைத்தான் 'காட்டாதன எல்லாம் காட்டி' என்கிறார்.

காணாதன எல்லாம் காட்டி என்று சொல்லியிருக்கலாமே? 'காட்டாதன' என்று சொல்லியதன் காரணமென்ன? மாறுபாட்டில் ஒருமைப்பாட்டைக் காணும் இயல்பு நம்பால் இல்லை. தலைவனாகிய அவன் நம்முள் இருந்து நம்மை வளர்த்து, அவன் காட்டும் பொழுதுதான் இந்த ஒருமைப்பாட்டை அறிய முடியும். 'காட்டுவித்தால் யாரொருவர் காணாதாரே, காண்பார் ஆர் கண்ணுதலாய்! காட்டாக் காலே' (திருமுறை: 6—95—3) என்று நாவரசர் பெருமான் கூறியதும் இக்கருத்தை வலியுறுத்தும்.

அதாவது, தம் கல்வி அறிவாலும் அனுபவ அறிவாலும் இதுவரை உலகையும் பொருள்களையும் வாதவூரர் கண்டிருந்த முறை வேறு, திருவடி தீட்சைக்குப் பின் அந்தப் பழைய உலகையும் பொருள்களையும் மணிவாசகப் பெருமான் காணுகின்ற முறை வேறு. இப்போதுதான் அவன் காட்டினான். ஆதலால், (இதுவரையில்) 'காட்டாதன எல்லாம் காட்டி' என்றார்.

'சிவம் காட்டி' என்பது அடுத்து நிற்கும் தொடராகும். இங்கே சிவம் என்றது உருவம் கடந்து நிற்கின்ற அருவநிலைப் பொருளைக் குறிப்பதாகும். இப்பொழுது பாடலின் முறைவைப்பை நன்கு அறிந்துகொள்ள முடியும்.

நாம, ரூபங்களோடு கூடிய உலகைக் கண்டு, வேறுபாடு உடையது இவ்வுலகம் என்ற கருத்தில் வாழும் திருவாதவூரரை, இந்த நாம, ரூபங்களைக் கடந்து பொருள்களை காணுமாறு செய்தான் இறைவன். தம்முடைய கருவி, கரணங்களின் துணைகொண்டு

பார்த்தபொழுது வேறுபட்டு நின்ற இந்தப் பிரபஞ்சம் அவன் அருளே கண்ணாகக் கொண்டு காணும்பொழுது ஒன்றாகவே நின்றுவிட்டது. அதாவது நாம, ரூபங்களைக் கடந்து எங்கும் நிறைந்த ஒரே பொருளாக அனைத்தும் காட்சியளித்தன. அந்த ஒன்றைத்தான் 'சிவம் காட்டி' என்றார்.

இத்தகைய காட்சி அனுபவம் அடிகளாருக்கு முன்னர் நாவரசர் பெருமானுக்குக் கிடைத்ததை, அவர் பாடல் மூலம் அறிய முடிகிறது. (திருமுறை 4:3) கயிலை மலையிலிருந்து யாதும் சுவடு படாமல் ஐயாறு அடைந்த போது, பிடியும் களிறுமாகக் காட்சியளித்த யானைகள் மெள்ள மெள்ள மறைகின்றன. மிகப் பெரிய வடிவுடைய யானைகள் மறைந்து, அவன் திருவடிகள் அந்த இடித்தில் காட்சியளிக்கின்றன. முதலில் களிறு வருவதைக் கண்டவர் நாவரசர் என்ற மனிதர். ஒரே விநாடியில் அக்காட்சி மறைந்து எங்கும் நிறைந்துள்ளவன் திருவடிகள் இப்போது காட்சி நல்கின. இக்காட்சி நாவரசர் என்ற மனிதரின் புறக்கண்களுக்கு அப்பாற்பட்டுக் கிடைத்த காட்சியாகும்.

முதலிற் கண்ட காட்சியையும் இப்போது கிடைத்த காட்சியையும் ஒப்பிட்டுப் பார்த்த வாகீசர் 'கண்டு அறியாதன கண்டேன்' என்று பாடுகிறார். இந்த இறைக் காட்சி சித்தித்துவிட்ட பிறகு எங்கும் எதிலும் சிவத்தைக் காணுகின்ற சக்தி வந்துவிடுவதால் அதனையே வாகீசர் 'கண்டறியாதன கண்டேன்' என்று பாடுகிறார். இதனையே மணிவாசகப் பெருந்தகை 'காட்டாதன எல்லாம் காட்டிச் சிவம் காட்டி' என்றார்.

'தாள் தாமரை காட்டி' என்பது அடுத்து நிற்கும் தொடராகும். உண்மையான சிக்கல் இங்கேதான் பிறக்கின்றது. முதலில் வேறுபாட்டில் ஒருமைப்பாட்டைக் காணுமாறு செய்தான். அந்த ஒருமைப்பாடே சிவ சொரூபம் என்பதை விளக்கினான். இப்பொழுது வீடு

எய்துவதற்குரிய தகுதிகள் அனைத்தும் அடிகளாரை வந்து அடைந்துவிட்டன. 'நாம் மேலை வீடு எய்த' 'காட்டாதன எல்லாம் காட்டிச் சிவம் காட்டி' னான் என்பதுவரையில் வளர்ச்சி முறையும் பயனும் நன்கு பேசப்பெற்றுள்ளன.

இந்த நிலைக்குப் போனபின் 'தாள் தாமரை காட்டி' என்று பருப்பொருளைக் கூறுவது மறுபடியும் அடிகளாரை இந்த உலக இயல்புக்குக் கொண்டுவந்துவிட்டான் என்பதை அறிவுறுத்துகிறது. உணவை வாய்க்குள் வைக்கப் புகும்பொழுது கையைத் தட்டிவிட்டதுபோல, மேலை வீடெய்தச் சிவம் காட்டியவன் அந்த நிலையினின்றும் கீழே இறக்கிப் பருப்பொருளாகிய 'தாள் தாமரை காட்டி' னான் என்று கூறுவது கற்கின்ற நமக்கே மருட்சியைத் தருவதாகும். இதனையே அடிகளார் 'கிறி (வஞ்சனை) செய்தவாறு' என்று கூறுகின்றார்.

அவ்வளவு உயர்ந்த நிலையிலிருந்து கீழே வந்தமையின் தம்மை மேலே அழைத்துச் சென்றவன் கீழே இறக்கி வஞ்சனை செய்துவிட்டான் என்று பேசுவதில் நியாயம் இருக்கிறது.

முன்னர் அகவலில், குருநாதர் தம்மை இங்கு விட்டுச் சென்ற காரணத்தை அடிகளாரே விளக்கியுள்ளார். 'பரா அமுது ஆக்கினன்' (திருவாச: 3—181) என்றும் 'கோலம் ஆர்தரு பொதுவினில் வருக' (திருவாச: 2—128) என்றும் தாம் இங்கு விடப்பட்ட காரணத்தை அடிகளாரே கூறியுள்ளார். வீடு எய்துவதற்கு உரிய வாய்ப்புப் பெற்றிருந்தும் குருநாதர் ஒரே விநாடியில் தம்மை இங்கு விட்டுச் சென்றமையின் 'கிறி செய்தான்' என்று அடிகளார் வருந்துவது நியாயமானதே ஆகும்.

**181.** **ஓயாதே உள்குவார் உள் இருக்கும் உள்ளானைச்**
**சேயானைச் சேவகனைத் தென்னன் பெருந்துறையின்**
**மேயானை வேதியனை மாது இருக்கும் பாதியனை**

நாய் ஆன நம்தம்மை ஆட்கொண்ட நாயகனைத்
தாயானைத் தத்துவனை தானே உலகு ஏழும்
ஆயானை ஆள்வானைப் பாடுதும் காண் அம்மானாய் 7

உள்குவார்-தியானிப்பவர்கள். உள்ளான்-உள்ளீடானவன். சேயான்-தூரத்திலுள்ளவன். தத்துவன்-உண்மைவடி வானவன். உலகு எழும் ஆயான்-எழுலகங்களும் ஆனவன்.

*நாயன்மார்கள், அடியார்கள் என்பவர்கள் உறவையும் உலகையும் துறந்துவிட்டு, காட்டுக்கு ஓடிக் கனசடை வைத்து, மூக்கைப் பிடித்துத் தவம் செய்யவில்லை. அவரவர்கள் எந்தச் சூழ்நிலையில் பிறந்தார்களோ, அந்தச் சூழ்நிலைக்கு ஏற்ப இந்த உலகில் தத்தம் கடமைகளைச் செய்தனர். ஆனாலும் என்ன அதிசயம்! ஏனையோர் இறைவனை நாடிச் செல்ல, இறைவன் இவர்களை நாடியல்லவா வருகிறான்!*

*பெரிய புராணத்தில் காணப்பெறும் அத்தனை அடியார்களும் தத்தம் கடமைகளைச் செய்துகொண்டு இவ்வுலகிடை வாழ்ந்தவர்களே. இறைவன்தான் அவரவர்கள் எதிரே வெவ்வேறு வடிவத்துடன் வந்து இறுதியில் வீடுபேற்றையும் தந்தான்.*

*மூவர் முதலிகளைப் பொறுத்தமட்டில்கூட நடந்தது இதுவேயாம். கரையில் நின்று அழும் பிள்ளைக்கு இறைவனே ஓடோடி வந்து பால் தந்தான். திருமணக் கோலத்திலிருந்தவரிடம் தானே வந்து ஏசிய பேச்சை யெல்லாம் கேட்டான்; ஆட்கொள்ளவும் செய்தான். நாவரசரைப் பொறுத்த மட்டில் களைத்து நின்றபொழுது தண்ணீர்ப் பந்தல் வைத்துக் கட்டமுது தந்தான்; கயிலை செல்லும் தளரா ஊக்கத்துடன் செல்பவரை இறைவன்தான் முனிவர் வேடத்தில் வந்து தடைசெய்து, கயிலைக் காட்சியை இப்பிறப்பிலேயே காணுமாறும் செய்தான்.*

மணிவாசகரைப் பொறுத்தமட்டில் திருப்பெருந்துறையில் குருவடிவம் தாங்கிநின்று வழியோடு செல்பவரை வலிதில் அழைத்து, திருவடியாகிய வீடுபேற்றை ஒரே கணத்தில் தந்துவிட்டான்.

இந்த மாபெரும் வரலாற்று நிகழ்ச்சிகள் மிக முக்கியமான செய்தி ஒன்றைத் தெரிவிக்கின்றன என்பதைக் கூர்ந்து சிந்தித்தல் வேண்டும். மாறுபட்ட புறச்செயல்கள் ஒன்றும் இல்லாமல் உலகியலோடு இயைந்த வாழ்வு வாழ்ந்த இவர்களுக்கு, இந்தப் பிறப்பிலேயே இறைவனைக் காணும் பேறும் கிடைத்தது; வீடும் கிடைத்தது.

துறவு பூண்டு தவம் மேற்கொண்டு பல்லாண்டுகள் தவம் செய்வார்க்கும் இச்சிறப்புக் கிடைக்கவில்லை; ஆனால், இவர்களுக்குக் கிடைத்தது. இதற்குரிய காரணம் யாது?

தேவர்களும் முனிவர்களும் நனி வாட, இவர்களுக்கு மட்டும் அந்தத் தனிச்சிறப்புக் கிடைத்தது என்றால், அதற்கு ஒரேயொரு காரணந்தான் உண்டு. அது என்ன என்பதைத்தான் இப்பாடலின் முதலடி இரத்தினச் சுருக்கமாக வெளியிடுகின்றது.

'ஓயாதே உள்குவார் உள்ளிருக்கும் உள்ளானை' என்பது அந்த அடியாகும். ஓயாதே உள்குவார் என்ற இரண்டு சொற்களும் நன்கு தெரிந்த சொற்கள் போலக் காணப் பட்டாலும் ஆழமான பொருளுடையவை என்பதை மறுத்தற்கில்லை. ஓயாது என்றால் ஒரு விநாடியும் இடை விடாமல் என்பது பொருளாகும். உள்குதல் என்பது மனத்தில் நினைப்பது அன்று; மனத்தையும் தாண்டி, மேல் சித்தத்தையும் கடந்து அடிச்சித்தத்தில் நினைத்தலையே உள்குதல் என்ற சொல் குறிக்கும். உள்குதல் என்ற சொல்லின் முற்பகுதி உள் என்பதாகும். எனவே புறமனம், ஆழ்மனம், சித்தம் என்ற வரிசையில்

உள்ளே உள்ளே சென்று தொழிற்படுவதைத்தான் உள்குதல் என்ற சொல்லால் அடிகளார் குறிப்பிடுகின்றார். இதற்கு ஒரு காரணமும் உண்டு.

மேல்மனத்தின் மேற்பகுதி, அடிப்பகுதி, அகமனத்தின் மேற்பகுதி என்பவற்றில் தோன்றும் எண்ணங்களை அதே இடத்தில் நிலைபெறுமாறு செய்தல் மிகமிகக் கடினமாகும். விரும்பிய பொழுதெல்லாம் இப்பகுதிகளில் ஒரு நினைவை உண்டாக்கலாமேனும் சில விநாடிகளுக்கு மேல் அந்நினைவு நிற்பதில்லை.

மன இயலின் இந்த நுணுக்கத்தை அறிந்த அடிகளார், எண்ணுவார், நினைப்பார், சிந்திப்பார் என்ற சொற்களைப் பயன்படுத்தாமல் உள்குவார் என்ற சொல்லைப் பயன்படுத்தியதன் கருத்து இதுவேயாகும்.

உள்ளத்தில் தோற்றுவிக்கப்படும் இந்தச் சிந்தனைகூட, மனத்தோடு ஒப்பிடும்போது மிக நீண்டநேரம் நிலைநிற்கும் என்பது தவிர, நிலைபேறாக நின்றுவிடும் என்று சொல்ல முடியாது. அப்படி அது நிற்கவேண்டுமானால் ஒரு விநாடிகூட இடைவிடாமல் இந்த ஆழ்ந்த சிந்தனை உள்ளத்தின் ஆழத்தில் நிலைபெற்றிருக்குமாறு பார்த்துக் கொள்ள வேண்டியது ஒருவருடைய கடமை என்பதைக் கூறவந்த அடிகளார் 'ஓயாதே உள்குவார்' என்றார்.

இவ்வாறு உள்கினால் கிடைக்கும் பயனை நாம் அறிந்துகொள்வது கடினம். நோய்க்கு வாய்வழியாக உண்ணும் மருந்து குருதியுடன் கலந்து உடல் முழுதும் பரவி நோயைப் போக்குகின்றது என்பது உண்மைதான். ஆனால், அந்த மருந்து உடலின் எப்பகுதியில் உள்ளது, எவ்வாறு பணிபுரிகின்றது, எவ்வாறு நோயைப் போக்கிற்று என்பதை நோயாளி அறிவதில்லை.

அதேபோல ஓயாது உள்குவாருக்கும் ஒரு நிலையான பயன் கிடைக்கின்றது. எல்லோருக்கும் உள்ளே

எப்பொழுதும் மறைந்திருக்கும் இறைவன், ஓயாது உள்குவார்க்குமட்டும் வெளிப்பட்டு, அவர்களே உணரு கின்ற நிலையில் உள்ளே இருப்பான். அவன் இருக்கின்றான் என்பதைக் கணந்தோறும் அவர்கள் உணரமுடியும். அதைத்தான் 'உள்ளிருக்கும் உள்ளானை' என்று கூறினார் அடிகளார்.

ஏனையோர்க்கு உள்ளத்துள் மறைந்து நிற்கும் இறைவன் ஓயாது உள்குவார்க்கு அவர்கள் உணருமாறு வெளிப்பட்டுள்ளான். ஆதலின் இவர்களுடைய வாழ்க்கை யில் ஒரு மாபெரும் மாற்றம் நிகழ்கின்றது. உயிரைப் பற்றி நிற்கும் அச்சம் இவர்களைப் பொறுத்தமட்டில் ஓடி மறைந்துவிடுகிறது. இவர்கள் பார்வையில்பட்டவர்கள், இவர்களை நெருங்கித் தொண்டு செய்பவர்கள் ஆகிய அனைவருக்கும் மாபெரும் சிறப்புக்கள் வந்து எய்துகின்றன.

அடுத்து உள்ளது 'சேயானை' என்ற சொல்லாகும். ஓயாது உள்குவார்க்கு உள்ளத்தின் ஆழத்தில் அவர்கள் உணருமாறு வெளிப்பட்டு நிற்கின்ற ஒருவன், உள்காதவர் உள்ளத்தில் சேயானாய் (தூரத்தில் இருப்பவனாய்) ஆகிவிடுகிறான்.

ஒருவனே ஒரு சிலருக்கு நெருங்கியவனாகவும் ஒரு சிலருக்குச் சேயானாகவும் எப்படி இருக்கமுடியும் என்ற ஐயத்தைப் போக்கிக்கொள்வது எளிது.

தூரத்தே இருக்கும் பொருள்களை அண்மைப் படுத்திக் காண்பதற்குப் 'பைனாக்குலர்' (Binocular) என்ற கருவியைப் பயன்படுத்துகிறோம். இதில் கண்வைத்துப் பார்க்கும் பகுதி சிறிதாகவும் பொருளைக் காட்டும் எதிர்ப்பகுதி பெரிதாகவும் இருப்பதைக் காணலாம். சிறிய பகுதியைக் கண்ணில் வைத்துப் பார்க்கும்போது நூறடி தூரத்திற்கு அப்பாலுள்ள பொருளும் ஒரு அடி தூரத்தில் நெருங்கி இருப்பதுபோலக் காட்சி தரும். இதே

பைனாகுலரைத் திருப்பி வைத்துக்கொண்டு பார்த்தால் ஒரு அடி தூரத்திலுள்ள பொருள்கூட நூறடிக்கு அப்பாலுள்ளது போலக் காட்சியளிக்கும். இதில் காண்பானும், காணப்படு பொருளும் மாறுவதில்லை. இடையிலுள்ள கருவிதான் முன்பின்னாக மாறி நிற்கும். அதேபோல மனிதனும் இறைவனும் அவரவர் இடத்தில்தான் இருக்கின்றனர். ஓயாது உள்குதல் என்ற பைனாக்குலரைப் பயன் படுத்துவோர்களுக்கு முன்னர்த் தூரத்தில் காணப்பட்ட இறைவன் இப்போது நெருங்கி வந்து காட்சியளிக்கிறான். இந்த உள்குதல் ஆகிய செயலை இறைவன் மாட்டுச் செய்யாமல் பிற பொருளின்மேல் செலுத்துவோர்கள் பைனாக்குலரைப் பின்முன்னாக வைத்துப் பார்ப்பவர்கள் ஆவர். இப்படிப்பட்டவர்களுக்கே இறைவன் சேயனாகக் காட்சி அளிக்கிறான். இதனையே அடிகளார் 'சேயானை' என்று கூறினார்.

'சேவகன்' என்ற சொல்லுக்கு வீரன் என்பது நேரடியான பொருளாகும். இங்குக் குதிரைச் சேவகனையும் அச்சொல் குறிப்பால் உணர்த்திற்று.

'நாயான நம் தம்மை ஆட்கொண்ட நாயகனை' என்பது அடுத்து நிற்கும் தொடராகும். மிகவும் வெறுத்து ஒதுக்கத்தகுந்த தம்மையும் ஒரு பொருளாக்கி ஆட்கொண்டான் ஆதலின் அவனைத் தலைவன் என்கிறார்.

'தாயானை தத்துவனை' என்ற சொற்கள் முரண்பட்ட இரு பொருள்களை உடையன. தாய் என்பவள், குற்றம் குறைகள் காண முற்படாமல், எந்நேரமும் தன் கவனத்தைக் குழந்தைக்குத் தருபவள் ஆதலின், அப்பண்புகள் எல்லாம் ஒருங்கேயுடைய இறைவனைத் தாய் என்றார். இம்மட்டோடு நிறுத்தியிருப்பின் இறைவனின் பெருமையை அறியாமல் தாய் என்ற முறையில் எளிதாகக் கருதிவிடக் கூடும். எனவே,

'தத்துவனை' என்ற சொல்லை அடுத்து வைத்தார். தத்துவம் என்ற சொல் உணர்தற்கு அரிய மெய்ப்பொருள் என்ற கருத்தைத் தருவதாகும்.

பிரபஞ்சம் அனைத்தையும் படைத்து, காத்து, அழிப்பவன் என்று சொல்வதுதான் மரபு. இவ்வாறு கூறும் பொழுது இப்பொருள்கள் அவனினும் வேறுபட்டவை என்ற கருத்துக்கு இடங்கொடுத்துவிடும். அதனைப் போக்குவதற்கே 'உலகு ஏழும் ஆயானை' என்கின்றார். ஆயவன் என்றாலே ஆக்கல் தொழிலைச் செய்பவன் என்ற பொருளைத் தராமல் தானே அதுவாக ஆயினவன் என்ற பொருளைத் தந்துநிற்கின்றது. அதுவாக ஆயினவன் என்றால் இவ்வாறு ஆவதற்கு முன்பு ஒரு நிலை உண்டு என்பது பெறப்படுமன்றோ! சோறு ஆயிற்று என்றால் சோறாக ஆகும் நிலைக்கு முன்னர் அரிசி என்ற ஒரு நிலை இருந்தது என்பது பெறப்படும். எனவே, 'ஆயானை' என்றால் உலகேழும் தன் சொரூபமாக நிற்றலோடு, தனியேயும் உள்ளான் என்ற கருத்தைக் குறிப்பால் உணர்த்திற்று.

'ஆள்வானை' என்றதால் படைத்தல், காத்தல் என்ற இரு தொழிலையும் கூறினாராயிற்று.

அம்மட்டோடு அல்லாமல் ஒரு புதிய கருத்தையும் அடிகளார் இங்குப் பெறவைக்கிறார். ஒருவனே தனியாக நிற்கிறான்; அவனே பிரபஞ்சமாக மாறுகிறான்; அப் பிரபஞ்சத்தை அவனே ஆள்கிறான். தொழில் என்ற முறையில் ஆதல், ஆள்தல் என்பவை வெவ்வேறாகக் காணப்படினும் ஒருவனே தன்னைப் பிரபஞ்சமாகப் படைத்துக்கொண்டு அதை ஆள்பவனாகவும் இருக் கின்றான். இரண்டு தொழில்களைக் கூறியமையின் அருத்தாபத்தியால் மூன்றாவதாகிய அழித்தல் தொழிலும் பெறப்பட்டது என்க.

182. பண் சுமந்த பாடல் பரிசு படைத்தருளும்
பெண் சுமந்த பாகத்தன் பெம்மான் பெருந்துறையான்
விண் சுமந்த கீர்த்தி வியன் மண்டலத்து ஈசன்
கண் சுமந்த நெற்றிக் கடவுள் கலி மதுரை
மண் சுமந்த கூலி கொண்டு அக் கோவால் மொத்துண்டு
புண் சுமந்த பொன் மேனி பாடுதும் காண் அம்மானாய் 8

பண்சுமந்த பாடற்பரிசு-பண்ணைத்தாங்கிய பாடல்களை ஆக்கும் தன்மை. விண்சுந்த கீர்த்தி-விண்ணுலகில் வியாபித்த புகழ். மொத்துண்டு-அடிபட்டு. கோ-வரகுண பாண்டியன்.

*'பண் சுமந்த பாடல்' என்பது இறைவன் புகழைப் பாடும் இசைப்பா என்ற பொருளைத் தரும். அடிகளாரைத் தவிர ஏனைய மூவரும். பண் சுமந்த பாடல்களைப் பாடினார்கள். எனவே, இந்த அடி அவர்கள் பாடிய பாடல்களைக் குறிக்கும் என்று பொருள் கூறுவாரும் உளர். அடிகளார் எட்டாம் நூற்றாண்டில் வாழ்ந்தவர் ஆதலின், இவ்வாறு பொருள் கொள்வதிலும் தவறில்லை. இவ்வாறு கொள்ளாமல் பண்ணோடு கூடிய இசைப்பாக்களைப் பாடுகின்றவர்கள் யாராக இருப்பினும் அப்பாடலுக்கு இரங்கி, வீடுபேறு முதலியவற்றைத் தருபவன் என்று பொதுவாகவே பொருள் கொள்ளலாம். இங்ஙனம் கருணையுடைய பெருமானின் புகழ், இவ்வுலகம் முழுவதும் நிறைந்து மேலுலகம் வரையில் சென்றது என்ற பொருள்பட 'விண்சுமந்த கீர்த்தி' என்றார்.*

*கீர்த்தி என்ற சொல்லை இரண்டாவது முறையாக அடிகளார் பயன்படுத்துகிறார் என்பதும் அறியத்தக்கது. புகழ் என்னும் பொருளை உடைய கீர்த்தி என்னும் வடசொல்லை இவர்க்கு முன்னர் யாரும் பயன்படுத்த வில்லை. ஆதலால், அடிகளார் எட்டாம் நூற்றாண்டைச் சேர்ந்தவர் என்று நினைப்பதில் தவறில்லை.*

பாண்டியர், சோழர் கல்வெட்டுக்களில் மெய்க்கீர்த்தி என்ற சொல் பெரிதும் ஆளப்படுவதை இங்கே சிந்திக்கலாம்.

'கலிமதுரை' என்பது தொடங்கி, 'பொன்மேனி' என்பதுவரை உள்ள நிகழ்ச்சிகள் அடிகளார் வாழ்க்கையில் அவர் கண் எதிரே நடைபெற்றவையாகும்.

மண்சுமந்தவனுக்கு முதுகில் விழுந்தது ஒரேயொரு அடிதான். பிரம்பால் ஒரு அடி முதுகில் கொடுத்தால், எந்த ஒரு முதுகும் புண்ணாகிவிடாது. அப்படியானால் 'மொத்துண்டு புண் சுமந்த பொன்மேனி' என்று பாடுவதன் நோக்கம் என்ன?

குழந்தைக்கு ஒரு சிறு துன்பம் நிகழ்ந்தாலும் அதனைப் பெரிதுபடுத்தி வருந்துவது தாய்இயல்பு. அன்பின் எதிரே சிறியதும், பெரிதாகக் காட்சியளிக்கும். எனவே, சொக்கன் முதுகில் பட்ட ஓரடி, அடிகளார் மனத்தில் பெரும் புண்ணைத் தோற்றுவித்தது. தம் மனத்தில் ஏற்பட்ட புண்ணைச் சொக்கன் முதுகின்மேல் ஏற்றி 'புண் சுமந்த பொன்மேனி' என்று பாடுகிறார். இதனால் அடிகளாரின் அன்பின் எல்லை ஓரளவு உய்த்துணரப்படும்.

அடிகளாருக்கு ஆயிரம் ஆண்டுகள் பிற்பட்டு வந்த வடலூர் வள்ளற்பெருமான் இந்தக் காட்சியை மனத்திலே கொண்டுவருகிறார். ஆனாலும், ஒருவேறுபாடு உண்டு. சொக்கன் முதுகில் பட்ட அடிக்கு மனம் நொந்தார் அடிகளார். ஆனால், வள்ளலாரைப் பொறுத்தமட்டில் அந்த அடியைக் காட்டிலும் அதைக் கண்டுகொண்டிருந்த மணிவாசகப் பெருமானின் மனம் என்ன பாடுபட்டதோ என்று நோகிறார். அதற்குக் காரணத்தையும் அவரே சொல்கிறார். 'ஆலவாய்ச் சொக்கனே நீ அடிபட்டாய் என்பதை ஆயிரம் ஆண்டுகள் கழித்து இப்பொழுது காதால் கேட்டவுடனேயே என் நெஞ்சத்தில் இடிவிழுந்தது

போல் ஆயிற்றே, அப்படியிருக்க இதனை நேரே கண்ட அடிகளாரின் உள்ளம் என்ன பாடுபட்டிருக்குமோ' என்ற கருத்துப்படப் பின்வரும் செய்யுளைப் பாடுகின்றார்.

**வண்பட்ட கூடலில் வான்பட்ட வையை வரம்பு இட்டநின்**
**பொன்பட்ட மேனியில் புண்பட்ட போதில் புவி நடையாம்**
**துன்பட்ட வீரர் அந்தோ வாதவூரர் தம் தூய நெஞ்சம்**
**என்பட்டதோ? இன்று கேட்ட என் நெஞ்சம் இடிபட்டதே**
**(திருஅருட்பா: 2251)**

'வாதவூரர் தம் தூய நெஞ்சம்' என்று நெஞ்சுக்கு அடைமொழியாகத் 'தூய' என்ற சொல்லைத் தருகிறார் வள்ளலார். வாதவூரர் நெஞ்சத்தைத் தூய நெஞ்சம் என்று கூறியதால் நான்காவது அடியில் வரும் 'என் நெஞ்சம்' என்பது தூய்மை இல்லாத நெஞ்சம் என்பது பெறப்பட்டது.

தூய்மை இல்லாத நெஞ்சங்கூட ஆயிரம் ஆண்டுகள் கழித்தும் ஒரு நிகழ்ச்சியைக் கேள்விப்பட்டபோதே இப்படி இடிபட்டது என்றால், தூய நெஞ்சம் அந்த நிகழ்ச்சியை நேரே கண்டிருக்கும்போது என்ன பாடுபட்டிருக்குமோ என்று வள்ளலார் நோகின்றார்.

இப்பாடலில் 'மண் சுமந்த கூலிகொண்டு' பாண்டியனால் மொத்துண்டவனைப்பற்றிக் கூறவந்த அடிகளார், பாடலின் முற்பகுதியில் விண் சுமந்த கீர்த்தி உடையவன் என்றும், முக்கண்ணன் என்றும், கடவுள் என்றும் அவன் புகழைப் பாடும்போது, இடையே 'பெண் சுமந்த பாகத்தன்' என்று கூறியுள்ளது சிந்திக்கற்பாலது.

அடிகளார் வாழ்க்கையில், இரண்டுமுறை அவர் தண்டிக்கப்படுகிறார். ஆவணி மூலத்தில் குதிரைகள் வராதபோது, பதினான்கு நாட்களுக்கு மேலாகக் கடுமையான தண்டனையை அவர் ஏற்றபோது, இந்த

நெற்றிக் கடவுள் உதவ முன்வரவில்லை. ஏன்? அடிகளார் செய்த தவற்றிற்காக அப்போது தண்டனை அனுபவிக்கிறார். அரசாங்கத்தில் குதிரை வாங்குவதற்காக என்று ஒதுக்கி வைக்கப்பட்ட பணத்தை(ear-marked fund) வேறு எவ்வளவு உயர்ந்த காரியத்திற்கு என்றாலும் செலவிடுதல் பிழை. அந்தக் குற்றத்திற்காக முதன்முறை அவர் தண்டனை அனுபவிக்கும்போது ஆலவாய்ச் சொக்கன் தலையிட வில்லை. இந்நாட்டில் இம்மரபு காக்கப்பட்டது என்பதை, பக்த இராமதாஸரின் வரலாறும் நன்கு உணர்த்தும். திருவாதவூரரைப்போலப் பக்த இராமதாஸரும் அரசனுக்குச் சேரவேண்டிய வரிப்பணத்தை இராமனுக்கு அழகிய திருக்கோயில் கட்டுவதற்குச் செலவழித்துவிட்டார். அதற்கெனப் பன்னிரண்டு ஆண்டுகள் சிறை இருந்தார்.

ஆனால், இப்பொழுது குதிரைகள் வந்து பாண்டியன் அதனைப் பெற்றுக்கொண்ட பிறகு மற்றோர் நிகழ்ச்சி நடைபெறுகிறது. பரிகள் நரியாயின என்றாலும், இப்பொழுது அவை பாண்டியனுடைய சொத்தாகும். குதிரைகளைக் கயிறுமாற்றிப் பெற்றுக்கொண்ட பிறகு அவை நரியாக மாறினாலும் புலியாக மாறினாலும் மணிவாசகர் அதற்குப் பொறுப்பாகார். இதுவே அரச நீதி. இந்த நீதியை மறந்த மன்னன் மறுமுறையும் அடிகளாரைத் தண்டிக்கத் தொடங்கியபோது வைகையில் வெள்ளம் புரண்டது.

அடியார் துயரம் பொறாத ஆலவாயான் அடிகளாரின் துன்பத்தைத் துடைப்பதற்கும், இறையன்பு மேலிட்ட வந்திக்கும், பாண்டியன் வரகுணனுக்கும் காட்சி நல்கவும் மண் சுமக்கும் கூலியாளாய் வந்து சேர்ந்தான்.

திருவாதவூரர், வரகுணன், வந்தி என்ற மூவருக்கும் ஒரே நேரத்தில் அருள் செய்ய ஏற்றுக்கொண்ட வடிவம்,

மண் சுமக்கும் வடிவம். இந்தக் கருணையை நினைந்து பார்க்கின்றார் அடிகளார். ஆலவாய்ச் சொக்கனுக்கு இந்தப் பெருங்கருணை தோன்ற யாது காரணம் என்று நினைக்கின்றார். புதிதாகத் தகுதி ஒன்றும் மூவருக்கும் வந்துவிடவில்லை. எனவே, சொக்கன் தோன்ற உடனிருக்கும் தாயின் பரிவே காரணம் என்ற நினைவு தோன்றியதால்தான் இவ்வாறு பாடுகிறார். அவன் பெம்மான், விண்சுமந்த கீர்த்தி உடையான், வியன் மண்டலத்து ஈசன், கண்சுமந்த நெற்றிக் கடவுள் என்றாலும் அவன் கூலி ஆளாய் வருவதற்கு இவையல்ல காரணங்கள். பெண் சுமந்த பாகத்தானாய் இருப்பதே அவன் கருணைக்குக் காரணம் என்ற கருத்துப்படப் 'பெண்சுமந்த பாகத்தன்' என்று பாடுகின்றார்.

மண் சுமந்து கூலி கொண்டு, மண் சுமந்த கூலி கொண்டு என்று இருவகைப் பாட வேறுபாடுகள் உள்ளன. 'சுமந்து' என்ற வினையெச்சத்தைக் காட்டிலும் 'சுமந்த' என்ற பெயரெச்சமே சிறப்புடையதாகத் தெரிகிறது.

சுமந்த கூலி என்னும்பொழுது ஒரு சிறந்த கருத்தை அது கொண்டு நிற்பதைக் காணலாம். இறைவன் படைப்பில் எந்த ஒன்றைப் பெறவேண்டுமாயினும் அதற்குரிய விலையைத் தந்தே தீரவேண்டும். அவனுடைய கருணை ஒன்றுக்குத்தான் விலையில்லை. இங்கே வந்தியம்மையிடம் நிரம்பப் பிட்டை வாங்கிக்கொண்டு தின்றுவிட்டு மூட்டையும் கட்டிக்கொண்டு சென்றானே, இது முறையா? ஏழைப் பிட்டு வாணிச்சியிடம் இறைவனே ஆயினும் பிட்டைப் பெறுவது முறையா என்ற வினாவிற்கு விடை கூறுவார்போல இது இலவசமாகப் பெற்றதன்று, மண் சுமந்ததற்காகவே பெற்ற கூலியாகும் என்று பொருள்பட நிற்றலின் இப்பாடமே இங்கு ஏற்றுக் கொள்ளப்பட்டது.

183. துண்டப் பிறையான் மறையான் பெருந்துறையான்
கொண்ட புரிநூலான் கோல மா ஊர்தியான்
கண்டம் கரியான் செம் மேனியான் வெள் நீற்றான்
அண்டம் முதல் ஆயினான் அந்தம் இலா ஆனந்தம்
பண்டைப் பரிசே பழ அடியார்க்கு ஈந்தருளும்
அண்டம் வியப்பு உறுமா பாடுதும் காண் அம்மானாய் 9

கோலமா-அழகிய குதிரை. ஈந்தருளும்-கொடுத்தருளும் வகையை.

*'துண்டப் பிறையான்' தொடங்கி 'அண்டம் முதல் ஆயினான்'வரை இறைவனுடைய சிறப்புக்கள் பல் வகையானும் போற்றப்பெறுகின்றன.*

*பழ அடியார்க்கு அந்தமிலா ஆனந்தத்தை, பண்டைப் பரிசே தருகின்றான் என்பது இந்நாட்டவர் கண்ட பழைய மரபாகும்.*

*பழ அடியார் என்பது பரம்பரை பரம்பரையாக இறைத்தொண்டில் ஈடுபட்டவர்களைக் குறிப்பதாகும். பழ அடியார் என்றும் புத்தடியார் (திருவாச: 157) என்றும் அடிகளாரே குறிப்பிடுகின்றார்.*

*ஏயர்கோன் கலிக்காமரும் பழ அடியார்க்கு இறைவனிடம் உள்ள உரிமையை 'எந்தை தந்தை' (பெ:பு:ஏயர்-392) என்று தொடங்கும் பாடலில் குறிப்பிடுவதைக் காணலாம்.*

*பரம்பரை பரம்பரையாக வரும் சில குணப்பண்புகள் நீக்க முடியாமல் வலுப்பெற்றிருக்கும் என்பது இன்றைய விஞ்ஞான உலகமும் ஏற்றுள்ள முடிவாகும். இதனை நம் முன்னோர் அன்றே கண்டு போற்றியுள்ளனர்.*

*'பழவடியார்க்குப் பண்டைப் பரிசே அருளும்' என்பதனைக் கூர்ந்து நோக்குதல் இன்றியமையாதது. பழஅடியார் என்பது பரம்பரை பரம்பரையாக வந்து*

கொண்டிருக்கும் ஒரு தொகுப்பினரையே குறிப்பதாகும். இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்னர் வாழ்ந்த காரைக்கால் அம்மையார் என்ன வேண்டினாரோ அதையேதான் ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்னர்த் தோன்றிய நாயன்மார்களும், பதினேழு, பதினெட்டாம் நூற்றாண்டுகளில் தோன்றிய குமரகுருபரர் போன்ற பெருமக்களும் வேண்டினர். பரம்பரைக் கணக்கில் இவர்கள் ஒவ்வொருவரும் பழ அடியார்கள் என்பதை மறத்தலாகாது.

இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்னர்த் தோன்றிய காரைக்கால் அம்மையார்க்கு எதனை வழங்கினானோ, அதனையே நாயன்மார்கள் முதலியோர்க்கும் குமரகுருபரர் போன்றோர்க்கும் வழங்கினானாதலால் 'பண்டைப் பரிசே ஈந்தருளும்' என்றார்.

அடியார்கள் அனைவர்க்கும் பண்டைப் பரிசே ஈந்தருளினான் என்றால், எதனை என்ற வினாத் தோன்றுமன்றே! வீடுபேற்றை என்று விடை கூறினாலும், அதனைப் பெற்றால் நமக்கு என்ன கிடைக்கும் என்று உசாவுவது மனிதமனம். அதற்கு விடை கூறுவார்போல 'அந்தமிலா ஆனந்தம்' ஈந்தருளினான் என்கிறார்.

மகிழ்ச்சி, இன்பம் என்பவை குறையுடையன; நிலையில்லாதன; இவ்வுலகிடைக் கிடைப்பன. இக் குறைபாடுகள் எதுவும் இல்லாத, நிலைபேறுடைய ஒன்றை 'அந்தமிலா ஆனந்தம்' என்கிறார் அடிகளார்.

**184.** விண் ஆளும் தேவர்க்கும் மேல் ஆய வேதியனை
மண் ஆளும் மன்னவர்க்கும் மாண்பு ஆகி நின்றானைத்
தண் ஆர் தமிழ் அளிக்கும் தண் பாண்டி நாட்டானைப்
பெண் ஆளும் பாகனைப் பேணு பெருந்துறையில்
கண் ஆர் கழல் காட்டி நாயேனை ஆட்கொண்ட
அண்ணாமலையானைப் பாடுதும் காண் அம்மானாய்

மாண்பு-மாட்சிமைதரும் பொருள். கண் ஆர் கழல்-யாரும் தியானித்தற்கரிய திருவடி. கண்ணுதல்-எண்ணுதல்.

'வேதியன்' என்ற சொல் உயர்ந்தவன் என்ற பொருளைத் தந்து நிற்கின்றது. மன்னர்க்கு மாண்பாகி நின்றான் என்பது கூர்ந்து நோக்கத்தக்கது. எவ்வளவு உயர்ந்தவன் என்று இலக்கியங்கள் கூறினாலும், மன்னன் என்பவனும் முக்குண வசத்தனாய மனிதன்தான். தனிப் பட்ட சாதாரண மனிதர்களுக்குக்கூட வேண்டப்படும் உயர் பண்புகள் ஒரோவழி ஒருவன்பால் இல்லையென்றாலும், அதனால் பெருந்தீங்கு விளைந்துவிடாது. அவனையும் அவனைச் சுற்றியுள்ள ஒரு சிலரையும் மட்டுமே தாக்கும். ஆனால், மன்னனாக இருக்கின்றவன் அனைத்து உயிர்களையும் காக்கின்ற பொறுப்பில் இருப்பவன், ஆதலால் அன்பு, கருணை, இரக்கம், பிறர் துயர்துடைக்கும் பண்பு, பிழை பொறுக்கும் இயல்பு ஆகிய கடவுட் பண்புகள் அவன்பால் இருந்தே தீரவேண்டும். அவை இல்வழி அந்நாடே பெருந்துயரில் மூழ்க நேரிடும். ஆகவேதான், மன்னர்க்குரிய இம்மாண்புகளை, இறைப் பண்புகளை உடையவனே இறைவன் என்றே குறிப்பிடுகின்றார். 'மண்ணாளும் மன்னர்க்கும் மாண்பாகி நின்றானை' என்பதன் பொருள் இதுவேயாகும்.

'மக்கட்கு இறை என்று வைக்கப்படும்' (குறள்:388) என்ற வள்ளுவர் வாய்மொழி இக்கருத்தையே வலியுறுத்தும். கருணை முதலிய இறைப் பண்புகள் நிறைந்த ஒருவனை இறைவன் என்றே மக்கள் போற்றுவர் என்ற குறட் கருத்தையே அடிகளார் 'மாண்பாகி நின்றானை' என்ற தொடரில் பெறவைக்கிறார்.

தமிழை வளர்க்கின்ற பொறுப்பைச் சங்கங்கள் அமைத்ததன் மூலமாகப் பாண்டிநாடே நிறைவேற்றியது

ஆதலின், 'தண்ணார் தமிழ் அளிக்கும் தண்பாண்டி நாடு' என்றார்.

'பாண்டி நாடே பழம்பதியாகவும்' (திருவாச:2-118) என்று முன்னர்க் கூறியுள்ளார். அதே கருத்தை இங்குத் 'தண்பாண்டி நாட்டானை' என்று கூறுகின்றார்.

தண் பாண்டி நாட்டிற்குத் 'தமிழ் அளிக்கும்' என்று அடை தந்ததால் கண்ணுதல் பெருமான் தானும் ஒரு புலவனாய்ச் சங்கம் ஏறித் தமிழாய்ந்தான் என்று கூறுதலும் பொருந்தும்.

அடியார்கள் விரும்பிப் போற்றிப் பரவுகின்ற திருப்பெருந்துறையில் கண்ணார் கழல்காட்டி அடிகளாரை ஆட்கொண்ட சிறப்பு முன்னரும் பல இடங்களில் கூறப் பெற்றுள்ளது.

இப்பாடலிலும் 'அண்ணாமலையான்' என்ற சொல் வருதலின் இது திருஅண்ணாமலையில் பாடப்பெற்றது என்று கூறுவாரும் உளர்.

அடிகளார் எந்த ஊரில் எந்தப் பதிகத்தைப் பாடினார் என்று கூறுவதற்குரிய ஆதாரங்கள் ஏதுமில்லை. திருவாதவூரடிகள் புராணம் முதலியவை சேக்கிழாரைப் போன்ற சரித்திர அறிவு மிக்கவரால் பாடப் பெறவில்லை. எனவே அவற்றை ஆதாரமாகக்கொண்டு இந்தப் பதிகங்கள் எந்த ஊரில் பாடப்பெற்றவை என்று கூறுதல் பொருத்தமாகத் தெரியவில்லை. அன்றியும் தோழி கூற்றுப்போன்று சில பாடல்கள் அமைந்திருப்பதாலேயே இப்பாடல்களை அகத்திணை இலக்கணத்தில் புகுத்தி, தோழி கூற்று, தலைவி கூற்று, இயற்படமொழிதல், இயற்பழித்து மொழிதல் என்ற தலைப்புகளுள் அடக்கிப் பொருள்கூறுவதும் பொருந்துமாறில்லை.

185. செப்பு ஆர் முலை பங்கன் தென்னன் பெருந்துறையான்
தப்பாமே தாள் அடைந்தார் நெஞ்சு உருக்கும் தன்மையினான்
அப் பாண்டி நாட்டைச் சிவலோகம் ஆக்குவித்த
அப்பு ஆர் சடை அப்பன் ஆனந்த வார் கழலே
ஒப்பு ஆக ஒப்புவித்த உள்ளத்தார் உள் இருக்கும்
அப்பாலைக்கு அப்பாலை பாடுதும் காண் அம்மானாய் 11

செப்பு-சிமிழ். அப்பு-தண்ணீர். கழலே ஒப்பாக ஒப்புவித்த உள்ளத்தார்-கழல்களுக்கே தம்மை அடகாகக் கொடுத்த மனத்தினையுடைய அடியார்கள். அப்பாலைக்கு அப்பாலை-சுத்த மாயாபுவனங்களுக்கு அப்பாற்பட்டவரை.

*பிறந்த நாட்டைப்பற்றி வீறு கொள்ளுதலும் அதனைப் புகழ்ந்து பேசுதலும் பழைய இலக்கியங்களில் அதிகம் காணப்படா. மூவர் தேவாரங்கள் அந்தந்த ஊர்களில் பாடப்பெறும்போது அந்த ஊர்களுக்கு உரியவனாகவே இறைவன் பேசப்பெறுவான்.*

*அடிகளாரைப் பொறுத்தவரை தென்னன் என்றும் தென்பாண்டி நாட்டான் என்றும் பல முறை கூறியுள்ளதைக் காணலாம். சிவனைப் பாண்டி நாட்டுக்கு உரியவன் என்ற கருத்தில் முன்னர்த் 'தென்னாடு உடைய சிவன்' (திருவாச: 4-164) என்று கூறினாரோ என நினைக்கத் தோன்றுகிறது. தமிழகம் முழுவதையும் தென்னாடு என்று தமிழர்கள் குறிப்பதில்லை. தட்சிண தேசம் என்று வடவர்கள் குறிப்பிட்டதற்குக் காரணம், இப்பகுதி இந்தியாவின் தென்பகுதியில் உள்ளது என்பதாகும். வடக்கே உள்ளவர்களுக்கு இது தென்னாடே தவிரத் தமிழரைப் பொறுத்தமட்டில் தென்னாடு என்பது பாண்டி நாடே ஆகும்.*

*'தாளடைந்தார் நெஞ்சைத் தப்பாமே உருக்கும் தன்மையினால்' என்று கூறியதால் அன்பர் பணி என்ன,*

ஆண்டவன் பணி என்ன என்பதை விரிவாகவே கூறியுள்ளார்.

ஆறறிவுடைய மனிதராகப் பிறந்தவர்கள் வாழ்வின் குறிக்கோள் யாது என்பதை ஆழ்ந்து சிந்தித்தால், தாள் அடைதலே அக்குறிக்கோள் என்பது நன்கு தெரியவரும். இது மனிதர்கள் கடமையாகும். இது நன்கு நிறைவேறினால் நெஞ்சு உருகும் நிலை ஏற்படக் காணலாம். நெஞ்சு தானாக உருகும் இயல்புடையது அன்று; அதனை உருக்குவிக்கும் தன்மை நம்பாலில்லை. எனவே, நெஞ்சு உருகிற்று என்றால் அதனை உருக்கினான் ஒருவன் உண்டு என்பது நன்கு தெளியப்பெறும். ஒரு பணியைச் செய்தவருக்கு அப்பணியைப் பெற்றுக்கொண்டவர்கள் தவறாமல் கூலி கொடுத்தல்போல் தாள் அடைதலாகிய பணியைச் செய்தவர்க்கு, தவறாமல் அவர்கள் நெஞ்சை உருக்கும் பயனைத் தருகிறான் இறைவன்.

நெஞ்சு உருகிற்று என்றால், ஆன்மாவிற்கு அவன் அருள் கிடைத்துவிட்டது என்பது உறுதி.

'அப்பாண்டி நாட்டைச் சிவலோகம் ஆக்குவித்த அப்பார் சடையப்பன்' என்ற தொடர் திருவிளையாடல் புராணத்தில் வரும் வரகுணனுக்குச் சிவலோகம் காட்டிய கதையைக் குறிப்பதாகவும் இருக்கலாம். இன்றேல் மானுட வடிவு தாங்கிய ஆலவாய்ச் சொக்கன், வலை வீசியது முதலாக, மண்சுமந்ததுவரையான பல திருவிளையாடல் களையும் செய்வதற்கு இடமாகத் தேர்ந்தெடுத்தது பாண்டி நாடே ஆதலின் அதனைக் குறித்ததாகவும் இருக்கலாம்.

'வார்கழலே ஒப்பாக ஒப்புவித்த உள்ளத்தார்' உள்ளிருக்கும் இறைவன் என்பது, யாருடைய உள்ளத்தில் இறைவன் தங்குகிறான் என்பதை விளக்கமாகக் கூறியது. தம்முடைய உள்ளத்தை வார்கழலுக்கு முழுவதுமாக ஒப்புவித்த அடியார்கள் யாரோ அவர்களுடைய

உள்ளத்தில் குடிகொண்டிருப்பவன் என்பதே இதன் பொருளாகும். முற்றிலும் தம்முடைய உள்ளத்தைத் தம் பணி செய்யும் கருவியாகக் கொள்ளாமல் வார்கழல் வந்து தங்குவதற்குரிய இடமாக முற்றிலும் செய்துவிட்டால் அக்கழலுக்கு உரியவனும் அங்கே வந்து தங்கிவிடுவான் என்ற பொருளையும் தந்துநிற்கின்றது. அடிகளார் ஈடு பட்டது வார்கழலிலேயே ஆகும். வார்கழலில் தொடங்கிய அந்த ஈடுபாடு, வெகுவிரைவில் அக் கழலுக்குரியவன் அவருடைய உள்ளத்தில் வந்து தங்குமாறு செய்துவிட்டது. அதே வழியை அனைவரும் பின்பற்ற வேண்டும் என்ற கருத்தில் தம் அனுபவத்தை அடிகளார் இங்கே பேசுகிறார்.

'அப்பாலைக்கு அப்பால்' என்று அடிகளார் கூறுவதில் 'அப்பால்' என்ற சொல் இருமுறை பயன்படுத்தப்பெறுகிறது. அப்பால் என்று கூறினாலேயே அது, சொல், கருத்து, கற்பனை என்பவற்றைத் தாண்டி நிற்பது என்ற பொருளைத் தரும். அப்பால் என்ற சொல், இட அடிப்படையில் பார்த்தால் பருப்பொருளாக இருக்கின்ற பிரபஞ்சத்திற்கு அப்பால் என்ற பொருளையும் தரும். கால அடிப்படையில் பார்த்தால் முடிவில்லாத காலத்தைக் குறிக்கும். எனவே சொல், கருத்து, கற்பனை என்பவற்றைக் கடந்து, பிரபஞ்சத்தைக் கடந்து, முடிவிலாத காலத்தையும் கடந்து இருக்கின்ற ஒரு தன்மையையே 'அப்பாலைக்கு அப்பாலை' என்று குறிக்கின்றார் அடிகளார்.

186. மைப் பொலியும் கண்ணி கேள் மால் அயனோடு இந்திரனும்
எப் பிறவியும் தேட என்னையும் தன் இன் அருளால்
இப் பிறவி ஆட்கொண்டு இனிப் பிறவாமே காத்து
மெய்ப் பொருட்கண் தோற்றம் ஆய் மெய்யே நிலைபேறு ஆய்
எப் பொருட்கும் தானே ஆய் யாவைக்கும் வீடு ஆகும்
அப் பொருள் ஆம் நம் சிவனைப் பாடுதும் காண் அம்மானாய் 12

எப்பிறவியும் தேட-எல்லாப்பிறவிகளிலும் தேட. மெய்ப் பொருங்கண் தோற்றமாய்-அழியாப் பொருளாகிய ஆன்மா வினிடத்து விளக்கமாய். மெய்யே நிலைபேறாய்-சத்துத் தன்னேயே தமக்குநிலையான இடமாகக்கொண்டு. எப்பொருட்குந் தானேயாய் -எல்லாப் பொருளுக்கும் பற்றுகோடாய்.

தமக்கு நேர்ந்த அனுபவத்தை உற்றாராக இருக்கும் ஒருவரிடம் சொல்லி மகிழ்தல் எல்லா மக்களுக்கும் இயல்பாகும். அந்த அடிப்படையில் தோழிப் பெண்ணை நோக்கிக் கூறுவதாக அமைந்துள்ளது இப்பாடல்.

இத்தனை நிகழ்ச்சிகள் நடைபெற்றும் உடனிருந்த தோழி அதனைக் கண்ணால் காணாமல் இருந்தது வியப்பே ஆகும். எனவே ‘மைப்பொலியும் கண்ணி கேள்’ என்று பாடல் தொடங்குகிறது. அதாவது மை தீட்டப் பெற்ற கண்கள் என்பது நேரடிப் பொருள். மை என்பதற்குக் குற்றம் என்ற பொருளும் உண்டு. இயல்பாகக் காணவேண்டியதைக் காணுவதே கண்ணின் தொழிலாக இருப்பவும், இத்தோழியின் கண்கள் அதைக் காணாதது, அவள் கண்ணின் குறைபாடே என்ற குறிப்புப் பொருளையும் தந்து நிற்கின்றன இச்சொற்கள்.

மால், அயன், இந்திரன் ஆகியோர் பல்வேறு பிறப்பெடுத்தும் இறைவனை இன்னும் தேடிக் கொண்டிருக்கிறார்களே தவிரக் கண்டபாடில்லை. அதாவது செல்வம், அறிவு, போகம் என்பன எத்தனையோ வகையான வடிவுகளைக் கொள்ளும். ஆதலால், எந்த வடிவெடுத்துத் தேடினாலும் அவன் கிட்டான் என்பதை அறிவுறுத்தவே ‘எப்பிறவியும் தேட’ என்றார்.

‘தேட’ என்ற சொல்லிலும் ஒரு நயம் உண்டு. தேடுதல் என்ற தொழிலுக்குக் கர்த்தா ஒருவன் வேண்டும். அந்தக் கர்த்தா ஒன்றைத் தேடினான் என்றால், அவன் வேறு, தேடப்படும் பொருள் வேறு, தேடுதலாகிய செயல் வேறு என மூன்று உண்டு.

தேடுபவன், 'நான் தேடுகிறேன்' என்ற முனைப்புடன் இத்தொழிலைத் தொடங்குகிறான். அன்றியும், தன்னால் தேடிக் கண்டுபிடிக்கப்படும் பொருள் அது ஆதலால் அப்பொருள் தன்னைவிட மதிப்பில் குறைந்தது என்றே அவன் கருதுகிறான். எனவே, தன்முனைப்பு, தேடப்படும் பொருளைக் குறைத்து மதிப்பிடுதல் ஆகிய இரண்டு குற்றங்கள் இந்த மூவர் மாட்டும் இருந்தமை புலப்படும்.

'தேடிக் கண்டு கொண்டேன்' *(திருமுறை:4-9-12)* என்ற பாடலில் நாவரசரே திருமாலொடு நான்முகனும் காணாத ஒரு பொருளைத் தாம் தேடிக் கண்டு கொண்டதாகச் சொல்கிறாரே—அந்தப் பாடலில் வரும் தேடி என்ற சொல்லுக்கு மேலே கூறப்பட்ட இரண்டு குற்றங்களும் வாராவா என்ற வினாத் தோன்றினால், அது நியாயமானதே ஆகும்.

தேடி என்ற சொல் இரண்டு இடத்திற்கும் பொதுவாயினும் தேடுபவர்கள் பண்பு காரணமாக ஓரிடத்தில் அது குற்றமாகவும், மற்ற ஓரிடத்தில் குற்றமில்லாதது ஆகவும் அமைகின்றது.

திருமால், நான்முகன் முதலியோர் சிவனையும் தம்முள் ஒருவராகக் கருதி, அவனைவிடத் தாங்கள் உயர்ந்தவர்கள் என்று தருக்கி நின்றனர். அவர்கள் அவனைத் தேட முற்பட்டபோது தம் தருக்குக் காரணமாக அவனைக் குறைத்தும் மதிப்பிட்டனர். எனவே, அவர்கள் தேடலில் இரண்டு குற்றங்கள் அமைந்துவிட்டன.

நாவரசர் தேடும்போது தாம் எத்துணை இழிந்தவர் என்பதை அவர் மறந்ததே இல்லை. திருமால் முதலியவர்களால் காணப்பெறாத பொருளைக் 'கண்டு கொண்டேன்' என்று சொல்வதால் பொருளின் பெரு மதிப்பை அறிந்து கூறினார் ஆயிற்று.

எனவே நாவரசர் தேடலில் குற்றமின்மை அறிக.

'என்னையும் தன் இன்னருளால் இப்பிறவி ஆட்கொண்டு இனிப் பிறவாமே காத்து' என்பது அடுத்துள்ள தொடராகும். என்னையும் என்பதிலுள்ள உம்மை, நாயிற் கடையாகிய என்னையும் என்று பொருள் தந்து நிற்கின்றது.

மேலே கூறிய மால், அயன், இந்திரன் முதலிய மூவரும் பிறவிதோறும் தேடினர். அப்படிப்பட்ட அரும்பொருள் ஆன அவன் நாயேனாகிய என்னை இந்தப் பிறவியிலேயே ஆட்கொண்டான். அப்படியானால் பல பிறவியெடுத்தும் அந்த மூவருக்கும் கிட்டாத ஒருவன் தம்மை இப்பிறவியிலேயே ஆண்டான் என்றால் அவர்களிலும் தாம் மேம்பட்டவர் என்ற தவறான எண்ணம் தோன்றிவிடக் கூடாது என்பதற்காகவே 'தன் இன்னருளால்' என்றார்.

இப்பிறவியிலேயே தாம் காணுமாறு அவன் வெளிப்பட்டு நின்றமைக்கு ஒரே காரணம், அவன் இன்னருளே தவிர வேறில்லை என்கிறார்.

இப்பிறவியில் அவன் வெளிப்பட்டு நின்று அருள் செய்தமையின் இரண்டு பெரும் பயன்கள் கிட்டின. முதலாவது பயன் இந்த மானுட உடம்புடன் இருக்கும்பொழுதே முழுமையான இறையனுபவம் கிட்டியமை என்க. இது உடனடிப் பயனாகும். இரண்டாவதாக, நீண்ட காலப் பயன் ஒன்றும் உண்டு. அடுத்துவரும் பிறப்புக்களில் இருந்து விடுபட்டதே நீண்டகாலப் பயன் என்க. இதனையே 'இனிப்பிறவாமே காத்து' என்றார். இறைவனைப் பல இடங்களிலும் தேன் என்று அடிகளார் கூறுவது உடனடிப் பயன், நீண்ட காலப் பயன் என்ற இரண்டும் தருவதுபற்றியே ஆகும்.

'மெய்ப் பொருட்கண் தோற்றம்' என்பது சத்தியத்தில் தோன்றுபவன் என்ற பொருளைத் தருவதாகும். 'மெய்யே

நிலைபேறாய்' என்றதனால் அந்தச் சத்தியத்திலேயே நிலையாக உறைபவன் என்ற பொருள் பெறப்படும்.

உலகிடைக் காணப்படும் பொருள்கள் பொறி புலன்களால் காணப்படாத உள் பொருள்கள் ஆகிய அனைத்திற்கும் தானே நிலைக்களனாக உள்ளவன். 'தானேயாய்' என்று கூறியமையின் அப்பொருள்களும் அவனுடைய வடிவே என்க.

அவன் சத்திய சொரூபி, சர்வ வியாபி என்ற பெயர் களின் விளக்கமாக இத்தொடர்கள் அமைந்திருத்தலைக் காணலாம்.

மெய்ம்மையில் தோன்றியும், அதிலேயே நிலைபெற்றும் என்று கூறியது 'சத்' என்ற வடசொல்லின் விளக்கமாகும். இவ்வனைத்தும் 'ஏகம் சத்' என்ற வடமொழி வழக்கிற்கு விளக்க உரைபோன்று அமைந்துள்ளது.

இத்துணைப் பெரியவனாக இருப்பினும் உயிர்கள் மாட்டுக் கொண்ட கருணையினால் நம்மிடை வந்து நம்மை ஆட்கொள்பவன்; ஆதலால் அவன் உயர்வு கண்டு அஞ்ச வேண்டா, அவன் நம்முடையவன் என்ற கருத்துப்பட 'நம் சிவனை' என்றார்.

**187.** **கை ஆர் வளை சிலம்பக் காது ஆர் குழை ஆட**
**மை ஆர் குழல் புரளத் தேன் பாய வண்டு ஒலிப்பச்**
**செய்யானை வெள் நீறு அணிந்தானைச் சேர்ந்து அறியாக்**
**கையானை எங்கும் செறிந்தானை அன்பர்க்கு**
**மெய்யானை அல்லாதார்க்கு அல்லாத வேதியனை**
**ஐயாறு அமர்ந்தானைப் பாடுதும் காண் அம்மானாய்** **13**

சேர்ந்து அறியாக் கையானை-குவித்தறியாத கையினை உடையானை ; தான்வணங்குந்தரத்தினர் பிறரின்மையால்.

அம்மானை ஆடுகின்ற பெண்கள் அம்மானைக் காய்களை மேலே தூக்கியெறிந்து மாறிமாறி இரண்டு கைகளிலும் அவை வந்து தங்கிவிடாமல் கைகளை மேலும் கீழும் அசைத்துக் காய்களை மேலே செலுத்துவர். அவ்வாறு செய்யும்போது இடையின் மேலுள்ள அவர்கள் உடம்பு இடப்புறமும் வலப்புறமும் அசையும் ஆதலின் அந்த அசைவால் நிகழும் நிகழ்ச்சிகளைக் 'கையார் வளைசிலம்ப.........' முதலிய தொடர்களில் குறிப்பிட்டார்.

'சேர்ந்தறியாக் கையானை எங்கும் செறிந்தானை' என்ற தொடர்கள் முரண்பட்ட பொருளில் அமைந்து உள்ளன. கை என்ற சொல்லுக்கு இடம் என்ற பொருள் உண்டு. அவனுடைய அருள் இருந்தாலொழிய உயிர்கள் தம் முயற்சியால் சென்று சேர முடியாத இடத்தை உடையவன் என்று பொருள் கூறுவதே சரியாகப்படுகிறது.

உயிர்கள் சென்று அடையமுடியாத இடத்தை உடையவன் என்று கூறியவுடன், இவ்வுயிர்களின் வேறுபட்டுத் தனித்து எங்கோ இருப்பவன் என்ற எண்ணம் தோன்றுமன்றோ? அதனை மறுப்பதற்காக, உயிர்கள் சேர முடியாத இடத்தை உடையவன் என்றாலும், பிரபஞ்சம் முழுவதிலும் எல்லாவற்றிலும் நீக்கமற நிறைந்துள்ளான் என்ற கருத்துத் தோன்ற 'எங்கும் செறிந்தானை ' என்றார். அதாவது எங்கும்-எல்லாவற்றிலும் செறிந்து நிற்பவனும் அதே நேரத்தில் உயிர்கள் சேர்ந்து அறியாத தனி இடத்தில் இருப்பவனும் அவன் ஒருவனே என்ற முரண்பட்ட கருத்தைதான் இத்தொடர்களில் கூறியுள்ளார். 'வேறாய் உடன் ஆனான்' *(திருமுறை:1:11-2)* என்று காழிப் பிள்ளையாரும், 'தோய்ந்தும் பொருளனைத்தும் தோயாது நின்ற தொல் சுடரே' *(கம்பன்-சரப-27)* என்று கம்பநாடனும் கூறுவது இக்கருத்தையேயாம்.

'கையானை' என்பதிலுள்ள கை என்ற சொல் யாவரும் அறிந்த கை என்ற பொருளைத் தருவதோடு,

ஒழுக்கம், தன்மை என்ற பொருள்களையும் தரும். ஆதலால், யாரையும் கைகளைச் சேர்த்து வணங்கி அறியாதவன் என்று பலரும் கூறும் பொருளும் ஏற்றுக் கொள்ளத் தக்கதே ஆகும். இவ்வாறு கூறுவது அவனினும் மேம்பட்டவன் இல்லை என்ற கருத்தைத் தெரிவிப்பதற்கே ஆகும்.

**188.** **ஆனை ஆய்க் கீடம் ஆய் மானிடர் ஆய்த் தேவர் ஆய்**
**ஏனைப் பிறவு ஆய்ப் பிறந்து இறந்து எய்த்தேனை**
**ஊனையும் நின்று உருக்கி என் வினையை ஓட்டு உகந்து**
**தேனையும் பாலையும் கன்னலையும் ஒத்து இனிய**
**கோன்அவன் போல் வந்து என்னைத் தம் தொழும்பில் கொண்டருளும்**
**வானவன் பூம் கழலே பாடுதும் காண் அம்மானாய் 14**

கீடம்-புழு. எனைப்பிறவாய்-மற்றைய பிறவிகளாய். கன்னல்-கருப்பஞ்சாறு. கோன்-தலைவன். தொழும்பு - அடிமை. ஓட்டுகந்து -விருப்பத்துடன் போக்கி.

முதுகெலும்பு உடைய பெரிய வடிவிற்கு யானையையும், அதற்கு முரணாக எலும்பே இல்லாத புழுவையும் கூறியதோடு நில்லாமல், பரு உடலை உடைய மனிதரையும், சூக்கும வடிவுடைய தேவரையும் ஒருங்கிணைத்து உயிர் வர்க்கச் சங்கிலியில் இப்பிறப்புக்கள் அனைத்தும் ஒவ்வொரு கணுவே ஆகும் என்ற விஞ்ஞானக் கருத்தைப் போகிறபோக்கில் அடிகளார் கூறியுள்ளார்.

இந்த பல்வேறு பிறப்புக்களில் எந்தப்பிறப்பை எய்துவது என்பது அந்த உயிரின் நல்வினை தீவினை களைப் பொறுத்ததாகும். அப்படிப் பிறந்துள்ள தமக்குக் குருவடிவில் வந்திருந்து தம் அருளார் அமுதத்தை வாரி வழங்கினார். அதனை உண்டு அறியாத, நம்மைப் போன்றவர்களுக்கு விளங்கிக் கொள்ள வேண்டும்

*என்பதற்காக நாமறிந்த தேன், பால், கன்னல்போன்ற சுவைப்பொருட்களை உவமையாகக் காட்டியுள்ளார்.*

*அருளார் அமுதம் அனுபவிக்கும்போது பெருஞ் சுவையுடைதாய் இருந்தது. கோனாக வந்த அவர் இந்தச் சுவையைத் தந்ததுடன் தன் அடியார்கூட்டத்திலும் ஒருவராகத் தம்மைச் சேர்த்துக்கொண்டார் என்கிறார்.*

**189.** சந்திரனைத் தேய்த்தருளித் தக்கன்தன் வேள்வியினில்
இந்திரனைத் தோள் நெரித்திட்டு எச்சன் தலை அரிந்து
அந்தரமே செல்லும் அலர் கதிரோன் பல் தகர்த்துச்
சிந்தித் திசை திசையே தேவர்களை ஓட்டு உகந்த
செம் தாரப் பொழில் புடைசூழ் தென்னன் பெருந்துறையான்
மந்தார மாலையே பாடுதும் காண் அம்மானாய் 15

அந்தரம்-ஆகாயம். சிந்தி-சிதறி. செந்தார்-சிவந்த மாலை.

*இப்பாடலில் தக்கன் வேள்வியில் நிகழ்ந்த நிகழ்ச்சிகள் கூறப்பெற்றுள்ளன.*

*'செந்தார்ப் பொழில் புடைசூழ் தென்னன்' என்றது சிவந்தும் நன்கு மலர்ந்தும் உள்ள மலர்கள் சூழ்ந்த பொழில்களோடு கூடிய தென்னாட்டின் தலைவன் என்கிறார். அவன், தேவருலகின் மலராகிய மந்தாரப் பூக்களால் தொடுக்கப்பெற்ற மாலையை அணிந்துள்ளான் என்றவாறு.*

**190.** ஊன் ஆய் உயிர் ஆய் உணர்வு ஆய் என்னுள் கலந்து
தேன் ஆய் அமுதமும் ஆய்த் தீம் கரும்பின் கட்டியும் ஆய்
வானோர் அறியா வழி எமக்குத் தந்தருளும்
தேன் ஆர் மலர்க் கொன்றைச் சேவகனார் சீர் ஒளி சேர்
ஆனா அறிவு ஆய் அளவு இறந்த பல் உயிர்க்கும்
கோன் ஆகி நின்றவா கூறுதும் காண் அம்மானாய் 16

ஊன்-உடல். வானோரறியாவழி-பேரின்பவழி. ஆனா அறிவு-அமையாத பேரறிவு.

ஊன் வேறு உயிர் வேறு என்பது பலரும் அறிந்த ஒன்று. உயிருக்கு உயிராய் இறைவன் உள்ளான் என்றாலும் எல்லாவற்றிலும் அவன் கலந்து ஊடுருவி உள்ளான் என்பதால், ஊனினும் கலந்து உயிரிலும் ஊடுருவி உள்ளான் என்பது விளங்கும். எனவே 'ஊனாய், உயிராய்' என்றார்.

கொன்றை மாலை அணிந்த சேவகன் 'வானோர் அறியா' வழி எமக்குக் காட்டினான் என்க.

எந்த வானவரும் அந்த நிலையிலிருந்து நேரே வீடுபேற்றை அடைய முடியாது. மீண்டுவந்து உலகிடைப் பிறந்து, பின்னரே உய்கதி அடைய வழிதேட வேண்டும். ஆனால், அடிகளாருக்குப் பிறவா நெறி அருளினானாதலால் 'வானோர் அறியா வழி எமக்கு தந்தருளும்' என்றார்.

191. சூடுவேன் பூம் கொன்றை சூடிச் சிவன் திரள் தோள்
கூடுவேன் கூடி முயங்கி மயங்கி நின்று
ஊடுவேன் செவ் வாய்க்கு உருகுவேன் உள் உருகித்
தேடுவேன் தேடிச் சிவன் கழலே சிந்திப்பேன்
வாடுவேன் பேர்த்தும் மலர்வேன் அனல் ஏந்தி
ஆடுவான் சேவடியே பாடுதும் காண் அம்மானாய் 17

முயங்கி-கலந்து. மயங்கி-இன்பமீதூர்ச்சியால் போகம் போதாதென்ற எண்ணம் பிறக்க மயங்கி.

இப்பாடலுக்கு தமிழ் அகத்திணை இலக்கண வழிபற்றி முழுவதுமாகப் பொருள் கூறுவர்.

ஆனால், இறைப்பிரேமை என்று முன்னர் நாம் குறித்துள்ளதை இங்கே நினைவுகூர்தல் நலம் பயக்கும்.

இறைப்பிரேமை கொள்பவர்கள் ஆண் பெண் என்ற வேறுபாடின்றி இறைவனையே தலைவனாகக் கொண்டு, தம்மை மறந்தும், சில சமயம் சுயநினைவு வரப்பெற்றும், பாடி ஆடுவர்.

அடிகளாரின் இப்பாடலில் இந்நாட்டு மரபைப் பின்பற்றி இறைவன்மாட்டுக் காதல் கொண்டவர் கூற்றாக இதனை அருளிச் செய்கின்றார்.

'சூடுவேன்' என்பது முதல் 'கூடி முயங்கி மயங்கி நின்று' என்பதுவரை, தம்மை மறந்த நிலையில் நிகழ்கின்ற நிகழ்ச்சிகளாகும். இப்படி இரண்டறக் கலந்த நிலையிலும் ஒரோவழி தற்போதம் தலைதூக்குகின்றது. அது தலை தூக்கியவுடன், தான் — அவன் என்ற வேறுபாடு தெரியத் தொடங்குகின்றது. எவ்வளவு முயங்கியும், திரள்தோள் சேர்ந்தும் முற்றிலும் தான் அதனுள் கலக்க முடியாமையின், தான் — அவன் என்ற வேறுபாடு தோன்ற, ஊடல் தோன்றுகிறது.

முற்றிலுமாக அவன் (தலைவன்) விருப்பப்படியே விட்டிருந்தால் 'தன்னை மறந்து தன் நாமம் கெட்டு, தலைவன் தாளே தலைப்பட்டு' (திருமுறை:6-15-7) இருப்பாள். இவ்வாறு இருக்கும் நிலையில், தான் என்ற பொருளே இன்மையின், ஊடலுக்கு அங்கு இடமே இல்லை. இறைப் பிரேமையின் முழு நிலையாகும் அது.

'ஊடுவேன்' என்று அடிகளார் கூறுவதால் இரண்டற்ற நிலை நீங்கி இரண்டான நிலை தோன்ற ஊடல் தோன்றிற்று. ஊடலைத் தணிக்க வேண்டியவன் வராவழியும் தலைவியின் உள்ளத்தில், அவன் வந்தால் என்ன செய்யவேண்டும் என்ற கற்பனை விரிகின்றது. அதனையே 'செவ்வாய்க்கு உருகுவேன், உள்ளுருகித் தேடுவேன், தேடிச் சிவன் கழலே சிந்திப்பேன்' என்று பாடுகின்றார்.

ஊடுதலில் இரண்டற்ற நிலை மறைந்து விட்டமையின் செவ்வாய்க்கு உருகத் தொடங்கி, சிவன் கழலே சிந்தித்து மலர்கின்ற நிலை ஏற்படுகிறது.

'முன்னம் அவனுடைய நாமம் கேட்டாள்' என்ற நாவரசர் பெருமானின் பாடலின் (திருமுறை: 6-24-7) பின்னிரண்டு அடிகள் இறைப்பிரேமையின் இரண்டற்ற நிலையை விளக்குவதாகும். அந்த நிலை கைகூடுவதற்கு முன்னர், ஒரு சில நேரம் இரண்டற்ற நிலையும், ஒரு சில நேரம் இரண்டாக உள்ள நிலையும் மாறிமாறித் தோன்றுதலின் அந்த நிலையை விளக்கும் பாடலாகும் இது.

**192.** கிளி வந்த இன் மொழியாள் கேழ் கிளரும் பாதியனை
வெளி வந்த மால் அயனும் காண்பு அரிய வித்தகனைத்
தெளி வந்த தேறலைச் சீர் ஆர் பெருந்துறையில்
எளிவந்து இருந்து இரங்கி எண்அரிய இன் அருளால்
ஒளி வந்து என் உள்ளத்தின் உள்ளே ஒளி திகழ
அளி வந்த அந்தணனைப் பாடுதும் காண் அம்மானாய் 18

கேழ்-நிறம். தேறல்-தேன். அளி-கருணை.

கிளிபோன்ற மொழி பேசுபவளும், கிளியின் நிறத்தை ஒத்தவளுமாகிய உமையை தன் உடலின் ஒரு பாதியாக உடையவனும், தேடிக் காண்போமாக என்று கூறிக் கொண்டு புறப்பட்ட மாலுக்கும் அயனுக்கும் ஒளித்து நின்றவனும், தெளிந்த தேன்போன்ற இனியவனும் ஆகிய ஒருவனைப் பாடுதுங்காண் என முடிக்க.

இதுவரை இறைவனுடைய புகழைப் பேசிய அடிகளார், இறப்ப உயர்ந்த அந்தப் பரம்பொருள் திருப்பெருந்துறையில் மானிட வடிவு தாங்கி யாவரும் காண எளிவந்து தமக்கு இன்னருள் புரிந்து என்கிறார்.

அந்த இன்னருள் இரு வகைகளில் அடிகளாருக்கு அருள் செய்தது.

முதலாவது, கற்பனைக்கும் எட்டாத இறையனுபவத்தில் முழுவதுமாக மூழ்கி, தம்மை மறந்த நிலையில், அந்த அனுபவத்தில் ஒன்றிப்போகுமாறு செய்தமை ஆகும்.

இரண்டாவது, ஒளி வடிவான அவன் அந்த ஒளிவடிவோடே உள்ளத்தில் புகுந்தான். அங்கேயே ஒளி வடிவுடன் நின்றுவிட்டான். அதன் பயனாக உள்ளே உள்ள அஞ்ஞானமாகிய இருள் அகன்றது; மெய்ஞ்ஞானம் பிறந்தது.

இவை இரண்டும் நிகழ்ந்தது தம் தகுதியால் அன்று; தம் எளிமைக்கு இரங்கிக் கருணைகொண்டு அவன் அளித்ததனாலேயே என்கிறார் அடிகளார்.

**193.** **முன்னானை மூவர்க்கும் முற்றும் ஆய் முற்றுக்கும்**
**பின்னானைப் பிஞ்ஞகனைப் பேணு பெருந்துறையின்**
**மன்னானை வானவனை மாது இயலும் பாதியனைத்**
**தென் ஆனைக்காவானைத் தென் பாண்டி நாட்டானை**
**என்னானை என் அப்பன் என்பார்கட்கு இன் அமுதை**
**அன்னானை அம்மானைப் பாடுதும் காண் அம்மானாய் 19**

முற்றுக்கும்-அனைத்துப்பொருள்கட்கும். பிஞ்ஞகன்-பிஞ்ஞம் என்று சொல்லப்படும் ஒருவகைச் சடையை உடையவன்.

பிரமன், மால், உருத்திரன் என்ற ஆதி தேவர்கள் மூவர்க்கும் அப்பாற்பட்டு நிற்கும் அநாதி தேவனாய் உள்ளவன். அவர்களுக்கு அப்பாற்பட்டு நிற்பவன் என்பதை 'முற்றுமாய்' என்றார். அவர்களும் சர்வ சங்கார காலத்தில் அவனுள் அடங்குவர் ஆதலின் 'மூவர்க்கும் முற்றுமாய்' என்றார்.

பிரபஞ்சத்தில் தோற்றம், இருப்பு, மறைவு என்ற மூன்றுக்கும் கட்டுப்பட்டு உள்ள எல்லாப் பொருள்களும் அழிந்த பின்னரும், தான் ஒருவனாக நிலைபெறுதலின் 'முற்றுக்கும் பின்னானை' என்றார்.

பிரபஞ்சத்தைப் படைத்தல், காத்தல், அழித்தல் முதலிய தொழில்களைச் செய்யும் ஆதி தேவர்கள் மூவரும் ஏனையோரிலும் மிக உயர்ந்து நிற்பவர்கள் ஆவர். அப்படி உயர்ந்து நிற்கின்ற அம்மூவருக்குமே தோற்றம், இருப்பு, மறைவு என்பவை உண்டாகலின் அவர்கள் தோன்றுவதற்கு முன்னர் இருந்தவன் என்பதை 'முன்னானை' என்ற சொல்லால் குறிப்பிட்டார். அவர்கள் மறைந்த பின்னரும் அவன் ஒருவனே இருத்தலின் 'பின்னானை' என்றார். மும்மூர்த்திகளும் சர்வசங்கார காலத்தில் அடைவதற்குரிய இடமாக இருத்தலின் 'முற்றுமாய்' என்றார்.

அவனைத் தவிர ஏனையோருக்கெல்லாம் உயர்ந்து நிற்றலின் மூவரை முதலில் கூறினார். அடுத்துப் பிரபஞ்சத்தை கூறினார்.

'பிஞ்ஞகன்' என்பது 'பிஞ்ஞம்' என்று சொல்லப்படும் ஒரு வகைச் சடாபாரத்தை உடையவன் என்ற பொருளைத் தரும்.

**194.** பெற்றி பிறர்க்கு அரிய பெம்மான் பெருந்துறையான்
கொற்றக் குதிரையின்மேல் வந்தருளித் தன் அடியார்
குற்றங்கள் நீக்கிக் குணம் கொண்டு கோதாட்டிச்
சுற்றிய சுற்றத் தொடர்வு அறுப்பான் தொல் புகழே
பற்றி இப் பாசத்தைப் பற்று அற நாம் பற்றுவான்
பற்றிய பேர் ஆனந்தம் பாடுதும் காண் அம்மானாய் 20

பெற்றி-தன்மை. பிறர்-அன்பரல்லாத பிறர். கோதாட்டி-சீராட்டி. பற்றி இப்பாசத்தைப் பற்றற-அநாதியே பற்றிநிற்கின்ற பாசத்தில் பற்றற்றுப்போகும்படி. நாம் பற்றுவான் பற்றிய

பேரானந்தம்-நாம் சிவத்தைப் பற்றுவதற்காக நம்மை வந்து பற்றிய சிவானந்தம்.

இப்பாடலின் முதலிரண்டு அடிகள், அடிகளார் வாழ்க்கை வரலாற்று நிகழ்ச்சியாகும். பாண்டியன் உள்ளிட்ட அனைவரும் குதிரைச் சேவகனாக வந்தவன், வந்த கூட்டத்தின் தலைவன் என்று கருதினார்களே தவிர, அவன் இன்னான் என்று அறிந்துகொள்ள முடியவில்லை. ஆனால், அக்கூட்டத்திலிருந்த அடிகளார்மட்டும் குதிரைச் சேவகனாக வந்தவன் ஆலவாய்ச் சொக்கன் என்பதை அறிந்துகொண்டார்.

தாம் செய்த குற்றங்களையெல்லாம் மன்னித்து, அவன் மாட்டுக் கொண்ட உள்ளன்பு என்ற குணத்தைமட்டும் ஏற்றுக்கொண்டு அருள்செய்ய வந்துள்ளான் என்பதை உணர்கின்றார் அடிகளார். அந்த அருள் மற்று ஒன்றையும் செய்தது.

அமைச்சராக இருந்த பெருமகனார்க்குச் சுற்றம் என்ற பெயரில் நூற்றுக் கணக்கானவர் இருந்திருப்பர் என்பதில் ஐயமில்லை. இந்த வாழ்க்கையை வெறுத்து அடிகளார் புறப்படுவதாக இருந்தால் இந்தச் சுற்றத்தார் அவரை விடப் போவதில்லை. அதிகாரம் உடையார் என்ற காரணத் திற்காக, அவரைச் சுற்றிய சுற்றமாகும் இது. எனவே, அவர் அதிகாரத்தை விட்டுப் போகிறார் என்றால், அச்சுற்றத்தார் குறுக்கே நின்று அவர் போக்கைத் தடை செய்திருப்பர் என்பதிலும் ஐயமில்லை. எனவேதான், 'சுற்றிய சுற்றத் தொடர்வு அறுப்பான்' என்று பாடுகின்றார். இது உண்மையில் நிகழ்ந்திருக்கும் என்பதை 'சுற்றம் என்னும் தொல்பசுக் குழாங்கள், பற்றி அழைத்துப் பதறினர் பெருகவும்' (திருவா: 4-48) என்று அடிகளார் முன்னர்க் குறிப்பிட்டுள்ளமையின் அறியலாம்.

இயல்பாகவே உயிரைப் பற்றியுள்ள பற்றை அறுக்க வேண்டுமாயின் அதற்குரிய ஒரே வழி இறைவன் திருவடிகளைப் பற்றுவதே ஆகும்.

'பாசத்தைப் பற்று அற' என்று கூறியது நோக்கத் தக்கது. 'பற்றற' என்பது வேரோடு களைய என்ற பொருளைத் தரும். அவன் திருவடிகளைப் பற்றி நின்றாலொழிய நம்முடைய அகப், புறப் பற்றுக்களை வேரொடு களைதல் இயலாத காரியம்.

அவனுடைய திருவடிகளைப் பற்றிக்கொண்டால் நம்மில் நிறைந்திருக்கின்ற பற்று முற்றிலுமாக அறுபடும் என்றார்.

மனத்தின்கண் நிறைந்துள்ள அகப், புறப் பற்றுக்கள், முற்றிலுமாக அழிந்துவிட்டால் அவை இருந்த இடம் காலியாக இருக்குமே? பற்றறுத்தல் என்பது எதிர்மறைச் செயலாகும். எதிர்மறைச் செயல் என்றும் நிறைவை உண்டாக்காது. எனவே, இந்த நுணுக்கத்தை அறிந்த அடிகளார் பற்று அறுபட்டவுடன், அந்த இடம் காலியாக இல்லை, அந்த இடத்தில் பேரானந்தம் வந்து குடிகொண்டு விட்டது என்ற மிக அற்புதமான நுண்ணிய கருத்தைப் 'பற்றிய பேரானந்தம்' என்று பேசுகிறார்.

இக்கருத்து முழுவதும்,

பற்றுக பற்றற்றான் பற்றினை அப்பற்றைப்
பற்றுக பற்று விடற்கு

**(திருக்குறள்-350)**

என்ற குறளின் முழு விளக்கமாக அமைத்திருத்தலைக் காணலாம்.

# பின்னுரை

திருவாசகத்தின் தொடக்கத்தில் உள்ள நான்கு அகவல்களும் பழைய மரபுபற்றி வரும் அகவல் பாக்களேயாகும். இதிலும்கூட ஒரு புதுமையைக் காணமுடிகிறது. அகவற்பாக்கள் எட்டாம் நூற்றாண்டில் ஏறத்தாழ வழக்கொழிந்துவிட்டன என்றே கூறல் வேண்டும். அதிலும், பக்தி இயக்கத்தில் பெருவீறுடன் தோன்றிய பாடல்கள் இசைப் பாக்களாகவோ விருத்தப் பாக்களாகவோ இருந்தன. ஆறாம் நூற்றாண்டு முதல் எட்டாம் நூற்றாண்டின் தொடக்கம்வரை உள்ள காலப்பகுதியில் மூவர் முதலிகள் தேவாரங்கள்தவிர ஆழ்வார்களின் திவ்யப் பிரபந்தங்களும் தோன்றின. இவை அனைத்துமே இசைப் பா, விருத்தப் பாக்களால் ஆகியவை என்பதை நினைவிற் கொள்வது நலம். கட்டளைக் கலித்துறை போன்ற விருத்தப் பாக்கள் காரைக்கால் அம்மையார் காலத்திலேயே தோன்றிவிட்டன. ஆனால், இதே விருத்தப்பாக்கள் நான்கு முதல்...எட்டுவரை உள்ள சீர்களைக் கொண்டே அமைந்தன. ஆனால், இசைப் பாக்களாக வடிவெடுக்கும் பொழுது முதலடியில் ஐந்து சீர், இரண்டாம் அடியில் நான்கு சீர் என்ற முறையில் பல்வேறு விகற்பங்களுடன் தோன்றலாயின. இவற்றிற்கு ஒரே காரணம் இந்த இசைப் பாக்கள் தாளத்தோடு பாடப்பெற்றதால் அந்தத் தாளக்கட்டுக்கேற்ப முதலடி இரண்டாம் அடிகளில் சீர்களின் எண்ணிக்கை மாறி வரலாயின. இந்த விகற்பங்களைத் திருஞானசம்பந்தர், நம்மாழ்வார் போன்ற பெருமக்கள் பாடிய பாடல்களில் நன்கு காணலாம்.

மணிவாசக அடிகளார் காலத்தில் இசைப்பாக்களும் செல்வாக்கை இழந்துவிட்டன. முன்னரே செல்வாக்கை இழந்த ஆசிரியப்பாக்களுக்குப் புத்துயிர் கொடுத்து நான்கு

அகவல்களைப் பாடும் புதுமையை மேற்கொண்டவர் அடிகளார்.

ஆனால், அவரேகூடப் பக்தி உணர்ச்சியை— அனுபவ வெளிப்பாட்டை வெளியிட ஆசிரியப்பாக்கள் இடம் தரவில்லை என்பதை உணர்ந்தார்போலும். அதனாலேயே அகவல் பாடல்களுக்கு அதிக இடம் தராமல் விருத்தப் பாக்களைக் கையாளுகிறார்.

விருத்தப் பாக்களில் வெளியிடும் உணர்ச்சியை ஆசிரியப்பாக்களில் கொண்டுவருதல் கடினம். அடிகளாரின் சதகத்தின் முதல் பாடலாகிய 'மெய்தான் அரும்பி' என்று தொடங்கும் பாடலை ஆசிரியப்பாவாக மாற்றிப் பாடிப் பார்த்தால் இந்த உண்மை விளங்கும். முன்னர் உள்ள நான்கு அகவல்களில் எந்தப் பகுதியும் 'மெய்தான் அரும்பி' என்ற பாடலுக்கு இணையான உணர்ச்சி வெளிப்பாட்டைக் கொண்டிருக்கவில்லை என்பது தெரியவரும்.

திருவாசகம் இன்று பதிக்கப்பெற்றுள்ள நிலையில் அகவற்பாக்கள் நான்கும் முடிந்த நிலையில் திருச்சதகம் வைக்கப்பெற்றுள்ளது. சதகம் நூறு முடிந்தவுடன் நீத்தல் விண்ணப்பம் இருப்பதற்குக் காரணம் அது ஐம்பது பாடல்களுடன் இருப்பதுதான் என்று இக்காலத்தில் பலரும் உரை கூறியுள்ளனர். அந்த வைப்புமுறைக்குக் காரணம் நூறு, ஐம்பது, இருபது, பத்துப்பாட்டுக்கள் என்ற முறையில் பதிகங்கள் அமைந்திருப்பதால் இவ்வாறு வைக்கப்பெற்றுள்ளன என்று கூறுகிறார்கள். என்னைப் பொறுத்தவரை எதையும் ஏற்றுக்கொள்ளத் தயாராக இல்லை.

திருப்பெருந்துறை அனுபவத்திலிருந்து மீண்ட அடிகளாருக்குப் பெரும் அதிர்ச்சியும் அச்சமும் தோன்றின. தம்பால் உள்ள ஏதோ ஒரு குறை காரணமாகத் தம்மை

உலகிடை விட்டுவிட்டுப் போய்விட்டார் குருநாதர் என்ற ஓர் அச்சம் வலுவாகப் பீடித்து நின்றது. மெள்ள மெள்ள அதிர்ச்சி, அச்சம் என்ற இவை இரண்டும் குறையவே, அந்த அனுபவத்தை மீண்டும் நினைந்து, மறுபடியும் அதனுள் புகுந்து, அனுபவித்துவிட்டு, வெளிவந்து, உடனே அதனைப் படம்பிடித்துப் பாடும் பாடல்கள் திருவாசகத்தில் பெரும்பகுதியாய் அமைந்துள்ளன.

இந்த அடிப்படையில் சிந்திக்கும் என் மனத்தில் தோன்றும் முடிவின்படி பார்த்தால் திருச்சதகத்துக்கு முன்னர் நீத்தல் விண்ணப்பம் இடம் பெற்றிருக்கவேண்டும். இவ்விண்ணப்பம் முடியும் தறுவாயில் எழும் இறுதிப் பாடல்களில், 'என்னை விட்டுவிடாதே' என்று அஞ்சி வேண்டுவதற்குப் பதிலாக, ஒருவகை மனநிறைவு ஏற்பட்டு இறைவனையே எள்ளி நகையாடும் துணிவு பிறக்கின்றது. 'என்னைக் கைவிட்டால் உன் மானத்தை வாங்கி விடுவேன்' என்ற முறையில் அப்பாடல்கள் அமைந்து உள்ளன.

இந்த மனவளர்ச்சிக்குப் பிறகு மனத்தில் ஏற்பட்ட தென்பு காரணமாக ஒரு அமைதி நிலையை அடை கின்றார், அடிகளார். அந்த அமைதியில் பழைய அனுபவம் மெள்ள உள் நுழைகின்றது. வந்த அனுபவத்தை ஓடி விடாமல் பிடித்துக்கொள்ள வேண்டுமேயானால் அதற்கு ஒரே வழி திருவடிகளை நோக்கிக் கூப்பிய கைகளைப் பிரிக்காமல் இருப்பதுதான் என்ற எண்ணம் வர, 'கைதான் நெகிழவிடேன்' என்று பாடத் தொடங்குகிறார்.

சதகம் முழுவதும் பத்துப் பத்துப் பாடல்களாக அமைந்திருப்பினும் ஒவ்வொரு பத்திலும் உணர்ச்சியின் தோற்றம், உச்ச நிலையை நோக்கிச் செல்லுதல், தணிதல் ஆகிய மூன்று நிலைகளும் இடம் பெற்றுள்ளன என்பதைக் கூர்ந்து நோக்கினால், காணமுடியும். இவ்வாறு கூறுவதால் இந்த அளவீடு முற்றிலும் சரியானது, அனைவரும்

ஏற்றுக்கொள்ளவேண்டும் என்ற கருத்தில் இதைச் சொல்லவில்லை.

ஆயிரம் ஆண்டுகளாக ஓலைச்சுவடியிலும் புத்தகத்திலும் அமைந்துள்ள முறையை, மாற்றி வைத்துக் கொண்டால், அடிகளாரின் வாழ்வில் நிகழ்ந்த இறையனுபவ வளர்ச்சியை இந்த அமைப்பு முறை பிரதிபலிக்குமோ என்ற நினைவில் என் சிந்தனைப் போக்கிற்கு இடம் கொடுத்துள்ளேன்.

முதலில் நீத்தல் விண்ணப்பமும் அடுத்துத் திருச்சதகமும் இடம் பெறுவது முறை என்ற சிந்தனைக்குப் பிறகு மிகப் பெரிய வினாவாக நிற்பது முன்னர்ப் பதிப்பிக்கப்பெற்றுள்ள நான்கு அகவல்களைப் பற்றியதே ஆகும். இந்த அகவல்கள் எப்போது பாடப்பெற்றன என்ற வினாவிற்கு விடை காண்பது கடினம். நான்கு அகவல்களிலும் சிவபுராணம் தவிர ஏனைய மூன்றும் ஒரு தனித் தொகுதியாக உள்ளன. இறைவனுடைய பெருமை பற்றியும் உயிர்களின் சிறுமைபற்றியும் இந்த உயிர்கள்மாட்டு இறைவன் கொண்ட கருணைபற்றியும் அமைதியான மனத்துடன் நீண்ட காலம் அடிகளார் சிந்தித்திருக்க வேண்டும். ஒரு தொடர்பும் ஒரு முறையும் இல்லாமல் முன்னும் பின்னுமாய் மனத்தில் தோன்றிய எண்ண ஓட்டங்கள் நீண்டகாலம் நிலைபெற்ற பின்னர், அவை சித்தத்துள்ளே புகுந்து ஊறிய பின்னர், ஒரு வடிவைப் பெற்றுள்ளன. அந்த வடிவு பெற்ற நிலைதான் கீர்த்தித் திருஅகவல், திருஅண்டப்பகுதி, போற்றித் திருஅகவல் ஆகியவையாம். இவைகளிலும், நடுவில் உள்ள அண்டப்பகுதி, புறநிலையில் நின்று (objective outlook) இறைவனைப் பற்றி அடிகளார் கொண்ட சிந்தனையின் முடிவாகும். விரிந்து செல்லும் அண்டமும் சிறியது என்று சொல்லும்படி பெரியதாய் நிற்கும் ஒருவன், சிற்றுயிர் களாகிய பறவை, விலங்குகள், மனிதர்கள் ஆகிய மூவகை

இனத்திற்கும் வேறுபாடின்றி அருள்செய்வதைக் கீர்த்தித் திருஅகவலும், போற்றித்திருஅகவலும் பாடிச் செல்கின்றன.

இந்த மூன்று அகவல்களும் ஒரு புறம் நிற்க, சிவபுராணம் ஒரு மாபெரும் தத்துவத்தைச் சொற்களால் கூற முயலும் முயற்சியில் தொடங்குகிறது. அதைவிடச் சிறப்பு என்ன என்றால், அப்பாடலில் 'சிவபுராணம் தன்னைச் சிந்தை மகிழ, முந்தை வினைமுழுதும் ஓய உரைப்பன் யான்' (திருவாச: 1—19,20) என்று பேசுகிறார் அடிகளார். இது ஆழ்ந்து சிந்திப்பதற்கு உரியது.

சிவபுராணத்திற்கு விரிவாக எழுதப்பெற்ற சிந்தனைப் பகுதியில் (திருவாசகம்—சில சிந்தனைகள்-Pt1) பாடல் செல்லும் முறையில் உரை கூறப் பெற்றுள்ளது. அதற்கு முற்றிலும் மாறாகத்தோன்றிய புதிய சிந்தனை, இங்கு இடம் பெறுகிறது. புதிய சிந்தனைகள் தோன்றும்பொழுது பழைய வற்றிற்கு அவை மாறுபட்டவையாகவும் இருக்கலாம்.

திருஞானசம்பந்தருக்கு இரண்டு நூற்றாண்டுகள் கழித்துவரும் அடிகளார், திருவாசகம் முழுவதிலும் தம்மை நாயினும் கடையேன் என்று கூறிக்கொள்ளும் அடிகளார், 'முந்தை வினைமுழுதும் ஓயச் சிவபுராணம்தன்னை உரைப்பன்' என்று கூறுவது மிகப் புதுமையானது. இந்த ஓர் இடத்தைத் தவிர வேறு எங்கும் இக்கருத்து இடம் பெறவில்லை. இனி, இந்தத் தொடருக்குப் பொருள் செய்யும்பொழுது முன்னும் பின்னுமாக உள்ள சொற் களையும் தொடர்களையும் பின்வருமாறு கொண்டு கூட்டிப் பொருள் கொள்ளுதல் பயனுடையதாக இருக்கும்.

எல்லாப் பிறப்பும் பிறந்து இளைத்தேன், மெய்யே உன் பொன் அடிகள் கண்டு இன்று வீடுற்றேன்(1-31,32). சிவன் அவன் என் சிந்தையுள் நின்ற அதனால், அவன் அருளாலே அவன் தாள் வணங்கி, சிந்தை மகிழ முந்தை வினை முழுதும் ஓய (1,17-20), கண்ணுதலான் தன் கருணை

*எய்தி வந்து (1-21) கண் காட்ட சிவபுராணம் தன்னை (1-19) உரைப்பன் யான் (1,20).*

இவ்வாறு கொண்டுகூட்டுச் செய்ததன் பொருள்: ‘ஓரறிவு உடைய புல்முதல் ஆறறிவுடைய மக்கள் உள்ளிட்ட எல்லாப் பிறப்பும் பிறந்திளைத்தவனாகிய யான், இப்பொழுது சிவபுராணத்தைச் சொல்கின்றேன் என்று நினைக்க வேண்டா. உண்மை என்னவெனில் எல்லாப் பிறப்பும் பிறந்து இளைத்து, இப்பிறவியை அடைந்து பொன்னடிகள் கண்டு வீடுற்ற என் சிந்தையுள், சிவன் அவன் வந்து புகுந்தான்; அதன் விளைவாக முந்தைவினை முழுதும் ஓய்ந்தது; அதன் பயனாக கவலைகளும் துன்பங்களும் நிறைந்திருந்த என் சிந்தை ஆனந்தத்தால் நிறைந்தது. அந்நிலையில் கணணுதலான் தன் கருணை, எய்தி வந்து வழி காட்ட, சிவபுராணம்தன்னை உரைப்பன் யான்’ என வரும்.

இவ்வாறு கூறுவதால், சிவபுராணம் என்ற பகுதியை, தம்முடைய பரந்த அனுபவம், அறிவு, கல்வி, பாடல் இயற்றும் ஆற்றல் என்பவற்றின் துணைகொண்டு தாம் பாடவில்லை என்பதை நுணுக்கமாகப் பெறவைக்கிறார் அடிகளார்.

எனவே, சிந்தையுள் அவன் நின்றதாலும், அவன் அருளைத் துணையாகக் கொண்டு அவன் திருவடிகளை வணங்கியதாலும், முந்தை வினைகள் முழுவதும் ஓய்ந்ததாலும், சிந்தையில் ஆனந்தம் நிரம்பியதாலும் அவன் கருணை வழிகாட்டியதாலும் சிவபுராணம் வெளிப்பட்டது. ‘உரைப்பன் யான்’ என்று தன்மை ஒருமை வினைமுற்றால் அடிகளார் கூறியிருப்பினும் மேலே கூறிய காரணங்களால் இந்த ‘உரைப்பன் யான்’ என்பதற்கு அடிகளாரை முதன்மையாகக் கொள்ள வேண்டிய தேவையில்லை. உரைத்தலாகிய செயல் நிகழ, அடிகளாரின் திருவாய் பயன்பட்டது என்பது உண்மைதான். அந்த அளவில்

'உரைப்பன் யான்' என்பதின் பொருள் முடிந்துவிடுகிறது. அதுதவிர, சிவபுராணத்திற்கும் அடிகளாருக்கும் வேறு தொடர்பைக் கற்பிக்கத் தேவையில்லை. சிந்தையுள் ஒருவன் நிரம்பிய பிறகு உரைப்பன் என்ற சொல்லுக்கு நான் என்ற எழுவாயைப் பயன்படுத்தத் தேவையில்லை. 'சிந்தையுள் நின்றவன் என் வாய்மூலம் உரைத்தான்' என்பதையே பொருளாகக் கொள்ள வேண்டும்.

திரு இலம்பையங் கோட்டூர்த் தேவாரத்தில் 'எனதுரை தனதுரையாக'( திருமுறை *1 : 76—6)* என்று ஆளுடைய பிள்ளையார் கூறியிருப்பதைக் காண்பது மேலே கூறிய கருத்துக்கு அரண் செய்வதாகும். சிவபுராணம் என்ற பெயருடன் வெளிப்பட்டுள்ள இப்பாடலைப் பொருள் உணர்ந்து படிப்பவர் சிவபுரத்துச் சென்று தங்கியிருப்பர் என்ற முறையில் இந்தப் பகுதி முடிகின்றது. ஆதலின் மேலே கூறிய பொருள் வலுவுடையதாக ஆகின்றது.

இவ்வாறன்றி, 'உரைப்பன் யான்' என்பதற்கு அடிகளாரை எழுவாயாக ஆக்கினால், தாம் பாடிய சிவபுராணத்தைப் படிப்பவர் சிவபுரத்தில் சென்று தங்கி இருப்பர் என்று பொருள் கூறிட நேரிடும். அடிகளாரின் வாழ்க்கைமுறை, திருவாசக அமைப்புமுறை ஆகியவற்றை மேலோட்டமாகப் பார்ப்பவர்கள்கூட 'யான் உரைத்த சிவபுராணத்தைப் படிப்பவர் சிவபுரத்தில் சென்று தங்கியிருப்பர்' என்று பொருள் கொள்ளும்படியாக அடிகளார் பாடியிருக்க முடியாது என்பதை எளிதில் உணர்ந்து கொள்ள முடியும்.

ஆளுடைய பிள்ளையார் 'எனதுரை தனதுரை' என்று கூறிவிட்ட காரணத்தால்தான், அவர் பாடல்களைப் படிப்பவர்கள் 'வானில் அரசாள்வர் ஆணை நமதே (2: 85-11) 'பாவம் பறையும்'*(1: 52—11)* 'பிள்ளையினோடு உள்ளம் நினைவாயினவே வரம்பெறுவர் ஐயுற வேண்டா'(2: 48-2) என்று துணிவோடு பாட முடிந்தது.

இதே முறையைப் பின்பற்றி, பாட்டின் பொருள் உணர்ந்து சொல்லுவார் சிவபுரத்தில் சென்று தங்குவர் என்று அடிகளார் கூறியதைப் பார்த்தவுடன் ஆளுடைய பிள்ளையாரின் 'எனதுரை தனதுரை' போல ஒரு பகுதி இந்தச் சிவபுராணத்தினுள் எங்கோ ஓரிடத்தில் இருக்க வேண்டும் என்பதை உணர்ந்துகொள்ள முடியும். எந்த நிலையிலும், தாம் பாடிய பாட்டைப் பாடுபவர் இந்நிலை அடைவர் என்று அடிகளார் கூறியிருக்கமாட்டார். ஆதலின் 'உரைப்பன் யான்' என்பதற்குப் புதிய முறையில் பொருள் காணப்பெற்றது.

மனிதர்கள் பாடிய பாட்டை, ஏனையோர் பொருள் அறிந்து அல்லது பொருள் தெரிந்து மட்டுமே கூடப் பாட முடியும். ஆனால், இறைவனே கூறிய பாடல் ஆதலின் சொல்லிய பாட்டின் பொருள் தெரிந்து அல்லது அறிந்து என்று கூறாமல் 'பொருள் உணர்ந்து சொல்லுவார்' என்று கூறப்பெற்றுள்ளது. இங்கு வரும் 'உணர்ந்து' என்ற சொல்லே, மேலே உள்ள பாடற்பகுதி சிவனுரை ஆகும் என்பதை நுணுக்கமாகத் தெரிவிக்கிறது.

இவ்வாறு கூறியபிறகு, சிவபுராணத்தை அடிகளார் திருவாசகத்தின் முதல் பாடலாகப் பாடினார் என்று கூறுவது சரியாகத் தோன்றவில்லை. திருவாசக நூலில் இப்பகுதி முதற்பாடலாக இடம் பெற்றிருப்பினும் அடிகளாரின் வாழ்க்கையில் மிகப் பிற்காலத்தில் பாடப் பெற்றிருக்க வேண்டும் என்று நினைப்பதில் தவறில்லை. இங்கே ஓர் ஐயம் எழ இடமுண்டு. விருத்தப் பாக்களால் ஆகிய பகுதிகளைப் பாடிய பிறகு மறுபடியும் சிவபுராணத்தை அகவலில் பாட வேண்டிய சூழ்நிலை என்ன? இங்குக் கூறப்பெற்ற கருத்துக்களை விருத்தப்பாக்களில் கூறியிருக்க முடியாதா என்ற வினாத் தோன்றினால், விடை கூறல் ஓரளவு கடினமேயாகும். உணர்ச்சிப் பெருக்கை வெளிப்படுத்தும் விருத்தப்

பாடல்களில் தலையாய இடம் பெறுவது உணர்ச்சிப் பெருக்கே தவிர, செய்திகள் அல்ல. செய்திகளை விரைவாக அடுத்தடுத்து அடுக்கிக்கொண்டே செல்லும் திறம் அகவலுக்கு உண்டே தவிர உணர்ச்சிப் பாடல்களுக்கு, விருத்தப் பாடல்களுக்கு இல்லை.

இறையனுபவத்தில் துளையமாடிய அடிகளார், கடைசிக் காலத்தில் ஒரு முடிவுரை போலவும், ஓரளவு உருக்கமாகவும், உணர்ச்சிகளுக்கு அதிக இடம் கொடாமலும், செய்திகளை அடுக்கிச் சொல்லும் முறையில் ஒரு பாடலைப் பாட நினைத்திருந்தார்போலும். மனித சமுதாயத்திற்கு ஒரே ஒரு பாடலை, அவர்கள் நம்பிக்கையை வளர்க்கும் முறையில், விட்டுச்செல்ல வேண்டும் என்று நினைத்த அடிகளார், இறைவனை நோக்கி 'என் கருத்து முடியும் வண்ணம் முன் நின்று' (திருவாச:378) அருளவேண்டும் என்று பலமுறை வேண்டிக் கொண்டிருத்தல் வேண்டும். அதன் பயனாக, இறைவன் உயிர்கள்மாட்டுக் கொண்ட பரம கருணையினாலும் அடிகளார்மாட்டுக் கொண்ட கருணையினாலும் தானே அவருள் புகுந்து, சிவபுராணத்தை அருளிச் செய்தான் என்று நினைப்பதில் தவறில்லை என்று தோன்றுகிறது. ஒளிவடிவாக உள்ள இறைவன் தன் ஒலி சொரூபத்தை உயிர்கள் உணர்தல் நலம் என்று எண்ணினான் போலும். அதனாலேயே 'நமச்சிவாய' என்று தொடங்கினான். சொல்லிய பாட்டின் பொருளை உணர்ந்து சொல்லும் பொழுது, அவர்களையும் அறியாமல் சொல்பவர்களின் மனத்தில் ஆணவம் புகுந்து விடும். அதனைப் போக்கவே பாடலை முடிக்கின்றபொழுது 'பணிந்து' என்ற சொல்லை இறுதியாக வைக்கின்றான். ஒலிவடிவினனாகிய இறைவனைப் பணிந்து வழிபட்டால் சிவபுரத்தினுள் புகமுடியும் என்பதே இப்பாடலின், திரண்ட கருத்தாகும்.

சிவபுராணத்தின் இந்த அருமைப்பாட்டை அறிந்திருந்த நம் முன்னோர் நூலின் முதற்பாடலாக இதனை வைத்தனர். ஏனைய மூன்றும் அகவலாக இருக்கின்ற காரணத்தால் இதன் பின்னர்ச் சேர்த்தனர் என்று நினைப்பதில் தவறில்லை.

திருவாசகம் போன்ற அருட்பாடல்கள், இறை யனுபவத்தில் மூழ்கியவர்கள், அவ்வப்பொழுது அதிலிருந்து வெளிப்பட்டு வந்து மூழ்கியிருந்த நிலையை நினைக்கும் பொழுது தோன்றியவையாகும்.

ஒரு காப்பியப் புலவனைப்போல ஒரு திட்டம் தீட்டிக் கொண்டு, 'முதலில் இதைப் பாடவேண்டும், அடுத்து இன்னது வரவேண்டும்' என்ற முறையில் அருட்பாடல்கள் தோன்றவில்லை. முதல் பாடல் தொடங்கிவிட்டால் பத்து அல்லது இருபது பாடல்களை ஒருசேரப் பாடிவிட்டுத்தான் முடித்திருப்பார்கள் என்றும் சொல்வதற்கில்லை. பத்து என்ற அளவுவரை சென்று முடிப்பது தேவாரத்திற்கு உகந்ததாக இருக்கலாம். இறைவனை முன்னிறுத்தி, தம் எல்லையற்ற பக்தியை இடைநிறுத்தி, தாம் மூன்றாவதாக நின்றுகொண்டு பாடிய பாடல்களாகும் தேவாரங்கள். அப்பாடல்களைப் பாடியவர்கள், பாடலுக்குள் அமிழ்ந்து போகவில்லை. அவர்கள் தனியே நிற்பதால் பத்து என்ற திட்டம் பொருந்திவருவதாயிற்று.

திருவாசகம் இந்த வகையைச் சேர்ந்ததன்று. எல்லாப் பாடல்களிலும் பாடியவர் பாடலுக்குள் அமிழ்ந்து விடுகிறார்.

பாடியவரைத் தனியே பிரித்து, பாடல்களைத் தனியே பிரித்துப் பார்ப்பது ஒரு முறை. இவ்விதம் பார்ப்பதால் நம்முடைய கவனத்தை முழுவதுமாகப் பாடலில்மட்டும் செலுத்த முடியும். அதன் பயனாக, பாடலுக்குப் பதவுரை, பொழிப்புரை முதலியன காணமுடியும்.

இவ்வாறு செய்வதால் அப்பாடலின் சிறப்பையும் ஆழத்தையும்மட்டும் அறியலாமேதவிர, அதனை இயற்றியவரின் மனநிலையை, அனுபவத்தை அறிய முடியாமல் போய்விடுகிறது.

இம்முறையில் பாடல்களைப் பார்க்கும்போது தனித்தனிப் பாடலாகத்தான் எடுத்து அதனைச் சிந்திக்கின்றோம். காப்பியப் பாடல்களாக இருப்பின் கதைப்போக்கை அறிந்துகொள்வதற்காகவேனும் முன்னர் வந்த பாடல்களில் நம் சிந்தனையைச் செலுத்துகின்றோம். அன்றியும், இக்காப்பியப் பாடல்கள் கதைத் தொடர்பை அடிப்படையாகக் கொண்டமையின் ஒன்றுக்கொன்று தொடர்புடையனவாகவே அமைந்திருக்கும்.

ஆனால், பக்தி அடிப்படையில் தோன்றும் தன்னுணர்ச்சிப் பாடல்களில் (subjective poetry) ஒரு பாடலுக்கு அடுத்த பாடல் தொடர்புடையதாக இருக்க வேண்டுமென்ற இன்றியமையாமை இல்லை. எனவே, படிக்கின்ற நமக்கும் அத்தொடர்பைப்பற்றிச் சிந்திக்கும் வாய்ப்பே தோன்றுவதில்லை. பல சமயங்களில் தனி மரங்களில் சிந்தனையைச் செலுத்தித் தோப்பையே மறந்து விடுகிறோம்.

இக்குறை அல்லாமல் மற்றோர் குறையும் ஏற்படுகிறது. அருட்பாடல்களைப் படிக்கும்போது மரபு என்ற ஒன்று நம் முதுகின்மேல் ஏறிக்கொள்கிறது. அந்த மரபின் அடிப்படையிலேயே பாடல்களைப் படிக்கின்றோம்; பொருள் செய்கின்றோம்; சில சமயங்களில் அனுபவிக்கக் கூடச் செய்கின்றோம்.

உதாரணமாக, திருவாசகத்தில் வரும் திருவெம்பாவை, அம்மானை, பொற்சுண்ணம் போன்ற பகுதிகள் நீண்ட நெடுங்காலமாகத் தமிழ் இலக்கியத்தில் வெவ்வேறு

பெயர்களில் இடம் பெற்றவை ஆகும். எனவே, அத்தலைப்பில் வரும் திருவாசகப் பாடல்களைப் படிக்கும்போது பழைய மரபுபற்றியே அப்பாடல்களுக்குப் பொருள் செய்துகொள்கிறோம்.

இருபது பாடல்களையும் படித்த பிறகுகூட அதில் ஏதேனும் புதுமை இருக்கிறதா என்று நாம் சிந்திப்பது இல்லை. பழைய மரபை விட்டுவிட்டுப் பாடல்கள் முழுவதையும் ஒன்றாக வைத்து, இவற்றில் ஏதேனும் புதிய சிந்தனையை அருளாளராகிய அடிகளார் தருகிறாரா என்று சிந்திக்கத் தொடங்கினால், பல புதுமைகளைக் காணமுடியும். இதுபற்றி, திருவெம்பாவைக்கு எழுதப் பெற்ற பின்னுரையில் சற்று விரிவாகச் சிந்தித்து உள்ளோம். திருஅம்மானை முதலியவற்றிற்கும் அவ்வாறே.

மரபுபற்றிப் பாடப்பெறும் தனித்தனி வருணனைப் பாடல்களிற்கூடக் கவிஞர்கள் தத்தம் முத்திரையைப் பதிக்கின்றார்கள். அப்படியிருக்க அருளாளர்களில் தலைசிறந்த ஒருவராகிய அடிகளார் திருவெம்பாவை, திருஅம்மானை முதலியவற்றில் தம் முத்திரையைப் பதிக்காமல் இருந்திருக்கமாட்டார். இதுவரை நாம் செய்த தவறு, மரபு அடிப்படையில் இப்பாடல்களுக்குப் பொருள்செய்து அத்துடன் திருப்தி அடைந்துவிட்டமையே ஆகும்.

ஒரு தலைப்பில் வரும் அனைத்துப் பாடல்களையும் ஒன்றாக இணைத்துப் பார்க்கும்போது பல புதிய சிந்தனைகளை அவை உள்ளடக்கி இருத்தலைக் காணலாம்.

## திருச்சதகம்

நான்கு அகவல்களையும் அடுத்து இருப்பது திருச்சதகம் ஆகும். நூறு பாடல்கள் அமைந்திருத்தலின்

சதகம் என்ற பெயர் அமைந்துள்ளது. காரைக்கால் அம்மையாரின் அற்புதத் திருவந்தாதி வெண்பாவில் அந்தாதித் தொடையாக அமைந்திருத்தலின் திருவந்தாதி என்ற பெயர் பெற்றது. அடிகளாரின் திருச்சதகமும் அந்தாதித் தொடையாக அமைந்திருத்தலின் அந்தாதி என்ற பெயர் பொருத்தமுடையதே ஆகும். ஆனால், கட்டளைக் கலித்துறை முதலிய பல்வேறு வகைப் பாடல்கள் இதனுள் இருத்தலின், அந்தாதி என்ற பெயரை விட்டுவிட்டுச் சதகம் என்ற பெயரைத் தந்தனர்போலும்.

ஒவ்வொரு பத்துப் பாடல்களுக்கும் ஓர் உள் தலைப்பு கொடுக்கப்பட்டுள்ளது. என்றாலும், பெரும்பான்மையான தலைப்புக்கள் அடுத்துள்ள பத்துப் பாடல்களுடன் எவ்வித பொருத்தமும் இன்றி அமைக்கப்பட்டுள்ளன. ஓரிரு தலைப்புக்கள் மிகப் பொருத்தமாக அமைந்துள்ளன. உள் தலைப்புகள் பொருத்தமில்லவிடினும் எல்லாப் பதிப்பு களிலும் இவை இடம் பெற்றுள்ளன. படிப்பவர் குழப்பமடையாமல் இருக்க இப்பதிப்பிலும் அந்த உள் தலைப்புகள் அப்படியே தரப்பெற்றுள்ளன.

பொருத்தமாக அமைந்த தலைப்புகளுள் மெய்யுணர்தல் என்ற முதல் தலைப்பு மிகச் சிறப்பாக அமைந்துள்ளது. மெய்அறிதல் என்று கூறுவதுதான் மரபு ஒன்று பொய்யா அல்லது மெய்யா என்பதை அறிவின் துணைகொண்டுதான் அறியமுடியும். ஒன்றை மெய்ம்மை யானது அல்லது உண்மையானது என்பதை அறிந்து கொண்டால், மனத்தில் ஒரு திருப்தி ஏற்படும். அறிவின் துணைகொண்டு ஆராய்ந்து அறியப்படும் எந்த ஒன்றும் முடிவானது என்று சொல்வதற்கில்லை. அறிவின் துணைகொண்டு வளரும் விஞ்ஞானத்தில், இன்று மெய்ம்மை என்று கருதப்பட்ட ஒன்று, அறிவு வளர வளர நாளை மாறிவிடுவதைக் காண்கிறோம். இங்கு மெய் என்று

சொல்லப்படுவது 'facts' என்று ஆங்கிலத்தில் சொல்லப்படும் சொல்லிற்கு இணையாகலாம்.

திருச்சதகத்தின் முதல் பத்துப் பாடல்களுக்குத் தரப்பெற்ற மெய்யுணர்தல் என்ற தலைப்பில் வரும் 'மெய்' என்ற சொல்லுக்கு இது பொருள் அன்று. 'Truth' என்று சொல்லப்படும் உண்மையையே (சத்தியத்தையே) 'மெய்' என்ற சொல்லால் முன்னோர் குறிப்பிட்டனர். இந்த மெய்ம்மை என்றும் பொய்யாவதில்லை; மாறுவதும் இல்லை. இதனை அறிவு கொண்டு ஆராய்வது கடினம். பொருளின் இயல்பு, தன்மை என்பவை பற்றி மட்டுமே அறிவு ஆயமுடியும். எவ்வளவுதான் அறிவின் துணைகொண்டு ஆய்ந்து மெய்ம்மையின் தன்மையையும் இயல்பையும் எடுத்துக் கூறினாலும், அதனை முழுவதுமாக அறிவது இயலாத காரியம். சர்க்கரை என்ற இனிப்புப் பொருளின் தன்மை, இயல்பு என்பவற்றை சேதன வேதியியல் (organic chemistry) மிக நுண்மையாக ஆராய்ந்து ஒரு சமன்பாட்டின் மூலம் எடுத்துக்கூறுகிறது. அறிவின் துணைகொண்டு சர்க்கரையை ஆராய்ந்ததின் முடிவு இது ஆகும். இவ்வாறு செய்வதால் சர்க்கரையின் சுவையை அறிய முடியுமா? சுவையை உணரமுடியுமேதவிர அறிய முடியாது.

மேலே கூறிய விளக்கத்தை மனத்தில் வாங்கிக் கொண்டால், மெய்யறிதல் என்று தலைப்பிடாமல், மெய் உணர்தல் என்று ஏன் நம் முன்னோர்கள் பெயரிட்டனர் என்பதை நன்கு விளங்கிக்கொள்ள முடியும். Facts என்று சொல்லப்படும் மெய்ம்மையை அறிவது அறிவின் செயல். Truth என்று சொல்லப்படும் மெய்ம்மையை (உண்மையை) அறிய முடியாது; அதனை உணரத்தான் முடியும்.

இந்த நிலையில், ஒன்றை மனத்துள் வாங்கிக்கொள்ள வேண்டும். சர்க்கரையின் சுவையை உணரும் அனுபவத்திற்கு அதன் தன்மையையோ இயல்பையோ

அறிந்திருக்கத் தேவையில்லை. சர்க்கரையின் தன்மையைக் கூறும் வேதியியல் சமன்பாட்டினை அறியாமலும் சர்க்கரையைச் சுவைக்கமுடியும். அதேபோலச் சத்தியப் பொருளை, உண்மையை, அல்லது மெய்ம்மையை உணர்ந்துகொண்டு, அதனில் மூழ்கி அதனை அனுபவிப்பதற்கு அதன் இயல்பு, தன்மை என்பவற்றை அறிய வேண்டிய தேவையில்லை.

இவற்றையெல்லாம் மனத்தில் கொண்டுதான் மெய்யறிதல் என்று சொல்லாமல் மெய்யுணர்தல் என்ற தலைப்பைக் கொடுத்தனர். வள்ளுவர் காலம் தொடங்கி 13-ஆம் நூற்றாண்டுவரை உண்மை என்ற சொல்லுக்குப் பதிலாக மெய் என்ற சொல்லையே தமிழ் இலக்கியம் பயன்படுத்திவந்தது என்பதை அறிதல் வேண்டும். சத்தியப் பொருள் அல்லது உண்மைப் பொருள் என்று சொல்லவேண்டிய இடத்தில் அடிகளாரும் மெய் என்ற சொல்லையே பயன்படுத்துகிறார்.

'மெய்யே! உன் பொன்னடிகள் கண்டின்று வீடுற்றேன்'(திருவாச : 1—32) 'மெய்யா! விமலா!'(திருவாச: 1-34) என்று வரும் தொடர்களில் மெய்யே என்ற சொல்லாட்சி சத்திய வடிவினனே என்ற பொருளில் அமையக் காணலாம்.

மெய்யுணர்தல் என்ற தலைப்பு, முதல் பத்துப் பாடல்களுக்குத் தரப்பெற்றிருப்பினும் சதகம் முழுவதிலும் பல இடங்களில் இது பேசப்பட்டிருப்பதைக் காணலாம். உணர்தல் என்பது தல் என்ற விகுதி பெற்ற தொழிற்பெயர் ஆகும். எனவே, உணர்தல் என்பது ஒரு செயலை அல்லது தொழிலைக் குறிக்கும் சொல் ஆகும். ஒரு தொழிலை அல்லது செயலைச் செய்தோம் என்றால், புறக்கருவிகள் ஆகிய கை, கால் முதலியவற்றைப் பயன்படுத்தித்தான் அத்தொழிலைச் செய்யமுடியும். கால்கள் மிக விரைவாகத்

தொழிற்படும்போது ஓடுதல் என்ற தொழில் நடை பெறுவதாகக் கூறுகிறோம். உறுப்புக்களின் பெயர்கள் குறிப்பிடப்பெறாவிடினும் ஓடுதல் என்று கூறினவுடன் அல்லது செய்தல் என்று கூறியவுடன் கால்களோ அல்லது கைகளோ பயன்பட்டன என்பதை அறிகிறோம் அல்லவா? இந்தக் கை,, கால்கள் தாமே செயல்படுமாறு இல்லை, மூளையில் தோன்றும் உந்துசக்தி நரம்பின் வழியே கை கால்களுக்கு இத்தொழிலில் ஈடுபடுமாறு ஆணையிடுகிறது. இந்த உறுப்புக்களின் செயல்களைமட்டும் கண்டுவிட்டு மூளையுள் தோன்றிய உந்துசக்தியை அறிகிறோம் அல்லவா?

அதன் எதிராகப் பக்தி மீதூர்ந்த நிலையில் நிற்கும் ஒருவருடைய உடல் நடுங்குகிறது; வியர்வை துளிர்க் கின்றது; நாக் குழறுகிறது; கண்ணீர் வருகின்றது. ஒரே நேரத்தில் செயல்கள் நடைபெற்றாலும் இவை ஒன்றுடன் ஒன்று தொடர்புடையவை அல்ல. இந்த நிலையில் அறிவின் நிலைக்களனாகிய மூளை தொழிற்படவில்லை. அதாவது மூளை உந்துசக்தியாகவும் இல்லை; ஒருங்கிணைக்கவும் இல்லை.

என்றாலும், மெய் நடுங்குதல் போன்ற செயல்கள் நடைபெறுகின்றனவே! கண்ணீர் ஆறாகப் பெருகுகின்றதே! எந்த ஒரு பொருளையும் கண்ணால் கண்டோ காதால் கேட்டோ இச்செயல்கள் நடைபெறவில்லை. கண்கள் மூடி உள்ளன. புறத்தே எழும் ஒலியும் காதில் விழுந்ததாகத் தெரியவில்லை. புற உடம்பில் இத்தனை செயல்கள் நடைபெற்றாலும் அறிவின் செயற்பாடு இல்லை; மூளையின் அதிகாரம் இங்கு இல்லை என்று கூறி விட்டோமே. அப்படியானால் இந்தச் செயல்களுக்கு மூலமாக இருப்பது எது?

மனத்தில் தோன்றும் எண்ணம் ஒரு வேளை இதைச் செய்திருக்குமோ என்றால், எண்ணங்களுக்கு இவ்வளவு ஆற்றல் இல்லை. எனவே, இச்செயல்களுக்குக் காரணம் எண்ணமோ, அறிவோ, மூளையோ இல்லை என்பது தெளிவு. இச்செயல்களுக்கு மூலகாரணம் என்பது எது என்று சிந்திக்கத் தொடங்கினால் ஓர் உண்மை விளங்கும். அறிவு, எண்ணம் என்பவற்றை எல்லாம் கடந்து சித்தத்தின் ஆழத்தில் தோன்றும் உணர்வே, உடம்பில் காணப்படும் வேறுபாடுகளின் காரணம் என்று அறிந்துகொள்ள முடிகிறது. உணர்வினால்மட்டுமே இவற்றைச் செய்ய முடியும். அந்த உணர்வு எதைப் பற்றிக்கொண்டு தோன்றிற்று? மெய்ம்மைப்பொருள் அல்லது சத்தியப் பொருள் சித்தத்தின் அடிப்பகுதியில் புகுந்தவுடன் அறிவு முதலியவை தொழிற்பாட்டை இழக்கின்றன. அம் மெய்ப்பொருளால் ஏற்பட்ட உணர்வாகிய அனுபவம் சித்தத்தை நிறைத்து, மனத்தின் செயற்பாட்டை ஒழித்து, புத்தியை மடக்கி, அகங்காரத்தையும் செயல் இழக்குமாறு செய்கிறது. மயங்கிய நிலையில், சித்தம் தொழிற்படாமல் நிற்கும்போது ஒருவன் செய்யும் செயல்களைப் பைத்தியத்தின் செயல்கள் என்று கூறுகிறோம். ஆனாலும், புத்தியும் ஆணவமும் செயலிழந்து நிற்க, சித்தத்தில் தோன்றிய உணர்வு, அந்தக்கரணங்கள் நான்கையும் மூடி, முழுவதும் உணர்வுமயமாகி நிரம்பிய நிலையில், உள்ளே நிகழும் நிகழ்ச்சி புற உடலைத் தாக்குகிறது. இந்த உணர்வின் தாக்கத்தால் உடம்பு முழுவதும் நடுங்குகிறது; நாக் குழறுகிறது; வியர்வு பொடிக்கின்றது; கண்ணீர் பெருகுகின்றது.

புறத்தே நிகழும் இச்செயல்பாட்டை முதற்பாடல் தெரிவிக்கின்றது. ஆதலின், முன்னோர் இதனை மெய்யுணர்தல் என்ற தலைப்பில் கொண்டுவந்தனர்.

உலகிடை மனிதர்களாகப் பிறந்து வாழ்கின்றவர்களுள் அடிகளாரைப் போன்றவர்கள் இறையனுபவத்தைப் பெற்றுத் தம்மை மறந்த நிலையில் இருக்கின்றார்கள். என்றாலும், மனித உடலில் அவர்கள் வாழ்கின்றார்கள். ஆதலின், அந்த இறையனுபவம்கூட இருபத்து நான்கு மணி நேரமும் ஒருபடித்தாக நிலைத்து இருப்பதில்லை. சித்தத்தில் தோன்றும் உணர்வுகூட அலைகளைப் போன்று மேல் எழுந்தும் இறங்கியும், ஏற்ற இறக்கங்களோடு இருத்தல் இயல்பே ஆகும். அப்படியானால், சாதாரண மனிதர்களின் மனத்தில் உணர்ச்சிகள் ஏற்ற இறக்கங்களோடு இருப்பது போல்தான் இவர்களுக்கும் இருக்கின்றதா? சாதாரண மனிதர்களின் உணர்ச்சிகள் விநாடிக் கணக்கில் மாறுகின்றன; இப்பெருமக்களின் உணர்வுகள் மணிக் கணக்கில் நிலைபெறுகின்றன. என்றாலும், ஒரோவழி அந்த உணர்வுகள் இறங்கிவிட அவர்களும் நம்மைப்போல ஆகிவிடுகிறார்கள்.

இப்படி இறங்கிவிட்ட நிலையில் உணர்வில் மூழ்கியிருந்த பழைய நிலையை நினைந்து பார்க்கிறார்கள். இப்பொழுது தாம் யார், தம்மைச் சுற்றி உள்ளவர்கள் யார், அவர்கள் தம்மைப்பற்றி என்ன பேசுகிறார்கள் என்பவை மனத்திரையில் நிழலாடுகின்றன. இவர்களுடைய பழைய அனுபவ நிலையின் இயல்பை அறியாத, சுற்றி நின்றவர்கள் இவர்களைப் பைத்தியம் என்று கூறினார்கள். பைத்தியம் என்று இப்பொழுதுதான் சொல்கிறார்களா? அனுபவத்தில் மூழ்கியிருந்த காலத்திலும் கூறினார்கள்; அதனிலிருந்து வெளிப்பட்ட காலத்திலும் கூறினார்கள். அனுபவத்தில் மூழ்கியிருந்தபோது அயலாரின் ஏச்சு இவர்கள் காதில் ஏறவில்லை.

இப்பொழுது உள்ள சாதாரண நிலையில், சராசரி மனிதர்களாக இருப்பின், பிறர் எள்ளி நகையாடும் பழைய நிலைக்குப் போக வேண்டாம் என்று நினைப்பர்.

அடிகளார் போன்றவர்கள் இதற்கு நேர் மாறாகத் 'தத்தம் மனத்தன பேச எஞ்ஞான்றுகொல் சாவதுவே'(திருவாச : 7) என்று புலம்புகிறார்கள்.

சாவது என்ற சொல் இங்கே மரணத்தைக் குறிக்கவில்லை; பிறர் அவமதித்துக் கூறும் சொற்கள் காதில் விழாத நிலை, விழுந்தாலும் அதைப்பற்றிக் கவலைப் படாத நிலை என்ற இரண்டு நிலைகளையுமே குறிக்கின்றது. எனவே, 'சாவது' என்ற சொல் அகங்கார மமகாரங்களை அறவே ஒழித்து நிற்கும் நிலையைக் குறிப்பதாகும்.

'மெய்தான் அரும்பி' என்ற 5-ஆம் பாடல் மெய்யுணர்வு அனுபவத்தில் முழுவதும் மூழ்கிவிட்ட நிலையைக் குறிக்கும். அந்த அனுபவத்திலிருந்து மீண்ட நிலையில் பொறி, புலன்கள் விழிப்படைய, 'நான்' ஓரளவு தலையெடுக்கிறது. அப்போது சுற்றி நின்றவர்கள் பேச்சு காதில் விழுகின்றது. இவையெல்லாம் காதில் விழாத நிலைக்கு எப்போது போகப் போகிறோம் என்ற ஆதங்கத்தில் வெளிப்பட்டதாகும் ஏழாவது பாடல்.

தாம் நினைத்தவுடன் பழைய நிலைக்கு போகும் வழியில்லை. இந்த நிலையில் அந்த இறையனுபவம் எதனால் வந்தது, எவ்வாறு வந்தது— முதலிய வினாக்களை எழுப்பி ஆழ்ந்து சிந்திக்கிறார் அடிகளார். இச்சிந்தனையின் பின்னர் ஓர் உண்மை அவருக்குப் புலனாகின்றது. தம்பால் உள்ள எந்தத் தகுதியினாலோ எந்தப் பண்பாட்டினாலோ அந்த நிலையை அடையவில்லை என்பதை அறிகின்றார்.

திருப்பெருந்துறையில் குருதரிசனம் கிடைத்தபோது நூற்றுக்கணக்கான அடியார்கள் சுற்றி அமர்ந்திருந்தார்கள். எப்பொழுதும் இறையனுபவ நிலையில் இருப்பவர்கள் அவர்கள். எப்பொழுதும் அனுபவத்தில் மூழ்கியிருக்கின்ற வர்களிடையே சில நேரம் மட்டுமே அவ்வனுபவத்தின்

பேற்றைப் பெற்ற தாம் புகுதல் பொருத்தமன்று என்று நினைக்கின்றார். அந்த நினைவு 'புகவே தகேன் உனக்கு அன்பருள் யான்'(14) என்ற தொடராக வெளிப்படுகிறது.

தமக்கோ தகுதியில்லை. ஆனால், அத்தகுதியை முழுவதும் படைத்தவர்களிடையே சில நேரம் தங்கி இருக்குமாறு செய்தார் குரு. அவ்வாறு அவர் செய்தது ஒரு நாடகம் போன்றுள்ளது என்று நினைக்கின்றார் அடிகளார். இது எவ்வாறு நாடகமாயிற்று? அடுத்த வேளைச் சோற்றுக்கில்லாதவனை, நாடகம் முடிகின்றவரை அரசன் வேடத்தில் இருத்துவதுதான் நாடகத்தின் இயல்பு. அதேபோலத் தகுதியற்ற தம்மைத் தக்கார் ஊடே இருத்தியதை நாடகம் என்று நினைக்கின்றார்.

அடுத்துள்ள தலைப்பு 'அறிவுறுத்தல்' ஆகும். பதினான்காம் பாடலில் குருநாதர் செய்தது நாடகம் என்று பேசிய அடிகளார் 15-ஆம் பாடலில் நாடக வேடதாரிகள் இடையே ஒரோவழி நடைபெறுகின்ற புதுமையைப் பேசு கின்றார். நாடகத்தில் வேடம் அணிபவர்கள் பெரும்பாலும் தம்மை மறப்பதில்லை. ஒரோவழி ஒரு சிலர் தாம் யார் என்பதை மறந்து வேடத்திற்கு ஏற்ற பாத்திரமாகவே மாறுகின்றார்கள். அவ்வாறு மாறிவிட்ட நிலையில் பொருந்தாத சில செயல்களைச் செய்ததாகக் கேள்விப் படுகிறோம். காரணம் மிக எளிதாக விளங்கும். சில மணித்துளிகள் தம்மை மறந்து பாத்திரமாக ஒன்றிவிட்ட நிலையில் நிகழ்வதாகும் இது.

இத்தகைய ஒரு நிலையைத்தான் அடிகளார் பதினைந்தாம் பாடலில் குறிப்பிடுகிறார். குருநாதர் நிகழ்த்திய நாடகத்தில் உண்மை அடியார்களிடையே சிறிது நேரம் அடிகளாரையும் இருக்குமாறு செய்தார். தாம் திருவாதவூரர் என்பதையும் அமைச்சர் என்பதையும் மறந்து அடியார்களிடையே இருந்த சில நேரத்தில், அவர்களைப் போல் தாமும் வீடுபேற்றை அப்பொழுதே அடைந்துவிட

வேண்டும் என்று நினைத்ததாக இப்பாடலில் பேசுகிறார். 'வீடகத்தே புகுந்திடுவான் மிகப் பெரிதும் விரைகின்றேன்' என வரும் தொடரின் பொருள் இதுவேயாகும். 'விரைகின்றேன்' என்பது நிகழ்காலத்தைக் குறிக்கும் தன்மை ஒருமை வினை முற்றாகும். ஆனால், இப்பாடல் பாடப்பெறுகின்ற நேரத்தில் இங்குக் கூறப்பெற்ற செயல் எதுவும் நடைபெறவில்லை. சிலகாலம் முன்னர்த் திருப்பெருந்துறையில் நிகழ்ந்த நிகழ்ச்சியே ஆகும் அது.

அந்த நிகழ்ச்சியைத் தொடர்ச்சியாக மனத்துள் நினைந்துபார்க்கும் அடிகளார், இவ்வாறு கூறுகிறார். இறைவன் இவரை ஆட்கொள்ளும்பொழுது இவர் தம்வசத்தில் இல்லை. அதேபோல அடியார் கூட்டத்தி னிடையே அமருமாறு குருநாதர் ஆணையிட்ட பொழுதும் இவர் தம்வசத்தில் இல்லை. இறையநுபவத்தில் முற்றிலுமாக மூழ்கியிருந்தபொழுது நடைபெற்ற செயல் களாகும் இவை. அந்த அநுபவம் நீடிக்கவில்லை; அதன் விளைவாக அடியார் கூட்டத்தினிடையே இருந்த நிலையும் நீடிக்கவில்லை. தம்முடைய நிலைக்கு மீண்டபொழுது நடந்தவற்றை நினைந்து பார்க்கையில், அடிகளார் மனத்தில் புதிதாகத் தோன்றிய எண்ணமாகும் இது.

அமைச்சராக அந்த விநாடிவரை இருந்த தாம், ஒரு விநாடி நேரத்தில், இறையநுபவம், அடியார் கூட்டம் என்ற இரண்டிலும் ஈடுபட்டுப் பின்னர் மீண்டது வாழ்க்கையில் நிகழ்ந்த ஒரு நாடகம் என்றே நினைக்கின்றார் அடிகளார். அந்த நாடகத்தில் அடியார்களிடையே இருக்குமாறு தம்மைப் பணித்தவர் நாடகத்தை நடத்தும் குருநாதர் அல்லவா? நாடகத்தின் தலைவராகிய குருநாதர், நாடகம் முடிந்துவிட்டது என்பதை அறிவிப்பதுபோல மறைந்து விட்டார். நாடகம் முடிந்து, தமக்குரிய வேடத்தைக் கலைத்துவிட்டு மறுபடியும் அமைச்சர் பொறுப்பை ஏற்பதை விட்டுவிட்டு, மறுபடியும் நாடகத்தில் வந்த

ஏனைய பாத்திரங்கள் குருநாதருடன் சேர்ந்து வீடுபேற்றை எய்தியதுபோலத் தாமும் எய்தவேண்டும் என்று நினைத்தது ஒரு வேடிக்கை அல்லவா? எனவே, அந்த நிகழ்ச்சியில் நிகழ்ந்தவற்றைக் கூறும்பொழுது 'மிகப்பெரிதும் விரைந்தேன்' என்று கூறவந்த அடிகளார், அந்த விரைவில் உள்ள உறுதிப்பாட்டைக் கோடிட்டுக் காட்டுவதற்காக 'விரைகின்றேன்' என்று நிகழ்காலத்தால் கூறினார். உரையாடலில் வருவேன் என்ற எதிர்காலச் சொல் பயன்படவேண்டிய நிலையில் விரைவும், உறுதியும் கருதி 'வந்தேன்' என்று இறந்த கால வாய்பாட்டில் வருகிறதல்லவா? அதேபோல இங்கு விரைந்தேன் என்ற இறந்தகாலச் சொல், உறுதி கருதி 'விரைகின்றேன்' என்ற நிகழ்காலச் சொல்லாக மாறிவந்துள்ளது.

உறுதி கருதியே இறந்தகால வினைமுற்றுக்குப் பதிலாக நிகழ்கால வினைமுற்று வந்தது என்று கூறுவதற்குரிய காரணம் 16ஆம் பாடலில் விரிவாகப் பேசப்பெற்றுள்ளது. ஒரு குறிப்பிட்ட இடத்தை நோக்கி ஒருவர் விரைகின்றார் என்றால் அதன் பொருள் யாது? முன்னர் இருந்த இடத்தில் தொடர்ந்து இருக்க விருப்பமில்லை. புதிய இடத்திற்குச் செல்லவேண்டுமானால் உடனே செல்ல வேண்டும். நாளைச் செல்லலாம்; நாளைச் செல்லலாம் என்று காலங் கடத்தினால் நாளை என்பது வராமலும் போய்விடலாம் அல்லவா? எனவே, இருந்த இடத்தை விட்டுப் புதிய இடத்திற்கு விரைகின்ற நிலை ஏற்படு கின்றது. இருந்த இடத்தில் எவ்வளவு சுகங்கள் கிடைப்பினும் ஒருவர் அதனை உதறிவிட்டு மற்றொரு இடத்திற்கு விரைகின்றார் என்றால், அந்தப் புதிய இடத்தில் பழைய இடத்திலிருந்த சுகத்தைவிட அதிக சுகம் கிடைக்கும் என்ற உறுதிப்பாடு காரணமாகவே விரைகின்ற நிலை ஏற்படுகின்றது. 'வானேயும் பெறில் வேண்டேன்

மண்ணாள்வான் மதித்துமிரேன்' என்பது இப்பொழுது கிடைத்துள்ள சுகம், மேலே வரக்கூடிய சுகம் ஆகிய இரண்டையும் குறிக்கின்றது.

இவற்றையெல்லாம் உதறிவிட்டு மிக்க உறுதிப் பாட்டுடன் வீடுபேற்றை நோக்கிச் செல்ல முடிவு செய்துவிட்டமையின் 'விரைகின்றேன்' என்று நிகழ்காலத்தால் கூறினார்.

முதல் பத்துப் பாடல்களுக்கு மெய்யுணர்தல் என்ற தலைப்புத் தரப்பெற்றுள்ளது. அத்தலைப்பு மிகவும் பொருத்தமானது என்று முன்னர்க் கூறினோம். இரண்டாம் பத்தின் தலைப்பு அறிவுறுத்தல் என்பதாகும். மெய்யை உணர்ந்தபின், அறிவுறுத்தல் வருவதற்கு இடமேது என்ற ஐயம் நியாயமானதே ஆகும்.

மெய்யை உணர்ந்த நிலையில்தான், தாம் இன்னும் அந்த முழுநிலையை அடையவில்லை என்பதை அடிகளார் உணர முடிகின்றது. மெய்யுணர்தலில் முழுத்தன்மை பெற்றிருந்தால் ஏனைய அடியார்களோடு சேர்ந்து வீட்டுலகம் சென்றிருக்கலாம்.

நடைமுறை வேறுவிதமாக உள்ளது. அவர்கள் போய்விட்டார்கள். அடிகளார் தங்கிவிட்டார். சிறிது நேரம் மெய் உணரும் வாய்ப்புத் தமக்குத் தரப்பெற்றது ஒரு நாடகப்பாத்திரத்துக்குரிய வேடமே என்று நினைக்கின்றார்.

ஆனாலும், அந்தச் சிறிதுநேர அனுபவம் அதனை முழுமையாய்ப் பெறவேண்டும் என்று உந்துதலை அவருள் ஏற்படுத்தியது உண்மை. மெய்யுணர்ந்த நிலையில் குருநாதர், குருநாதர் மட்டுமல்ல; 'வானாகி மண்ணாகி ........ நின்றாயை' என்றும் உணர்கின்றார். இப்படிப்பட்ட ஒருவரை என்ன சொல்லி வாழ்த்துவது என்று மருள்கின்றார்.

இதனை அடுத்த, மூன்று பாடல்களில் வாழ்த்துதலுக்கு அப்பாற்பட்டு நிற்கும் அவனுடைய அருமை, பெருமைகளைப் பேசுகின்றார்.

மெய்யுணர்ந்த நிலையில் இருந்து விடுபட்டு, தம் நிலைக்கு மீண்ட நிலையில் இந்தப் பத்துப் பாடல்களும் இடம் பெறுகின்றன. அதிலும் ஒரு புதுமை உள்ளது. முதல் இரண்டு பாடல்கள் அநுபவநிலையில் பெற்ற இன்பத்தைக் குறிக்கின்றன. அந்த அநுபவத்தின் பயனாகத் தலைவன் எத்தகையவன் என்பதையும் அறிந்துகொண்டதை அடுத்த எட்டுப் பாடல்களும் குறிக்கின்றன.

இதன் கடைசி இரண்டு பாடல்களும் அறிவுறுத்தல் என்ற தலைப்புக்குப் பொருத்தமாக அமைந்துள்ளன. இத்துணை நேரம் எங்கோ சஞ்சரித்துக்கொண்டிருந்த அந்த மனம், திடீரென்று தன் இயல்பைக் காட்டத் தொடங்கி விட்டது. தூரத்தே குருநாதரைக் கண்டதிலிருந்து, அவர் திருவருளைப் பெற்றுச் சுயநினைவுக்கு வரும்வரை அடங்கி ஒடுங்கிப் பெட்டிப் பாம்புபோல் இருந்த மனம், இப்பொழுது லேசாகத் தலை தூக்குகிறது. சராசரி மனிதர்களுக்குரிய சாதாரணப் பாலுணர்ச்சி மெள்ளத் தலை தூக்குகிறது. 23-ஆம் பாடலில் வரும் முதல் இரண்டடிகள் மனம் தன் புத்தியைக் காட்டும் நிலையை அறிவிக்கின்றன. அந்த மனத் தொடர்பிலிருந்து தம்மைப் பிரித்துக்கொண்ட அடிகளார், குரங்கின் தலையில் குச்சியால் தட்டும் குரங்காட்டிபோலப் 'பாழ் நெஞ்சே' என்ற சொற்களின் மூலம் அந்த மனத்தின் தலையைத் தட்டுகிறார். தட்டியவுடன் குரங்கு குரங்காட்டியின் பக்கத்தில் பணிவுடன் நிற்பதுபோல அந்த நெஞ்சம் அடிகளாரின் அண்மையில் பணிந்து நிற்கின்றது.

அந்த நெஞ்சை நோக்கி 'ஏ நெஞ்சே! நீ செய்த அடாத காரியத்தைப் பார்த்தாயா? தவறான

எண்ணங்களிலிருந்து விடுபட்டு நீ அடங்கியிருந்தபொழுது என்ன நிகழ்ந்தது என்பதை இதோ உனக்கு நினைவூட்டுகிறேன். மரத்தடியில் இருந்த குருநாதர் வழியோடு சென்ற நம்மை இழுத்துப் பிடித்து நமக்குள் புகுந்தார். என்ன அற்புதமான அநுபவம் கிடைத்தது தெரியுமா உனக்கு! ஊனெலாம் நின்று உருகிற்று. ஏ நெஞ்சே! நீ அப்படியே ஒழுங்காக இருந்திருந்தால், அந்த அநுபவம் நீடித்திருக்கும். திடீரென்று நீ உன் புத்தியைக் காண்பித்துவிட்டாய். அதன் பயன் என்ன தெரியுமா? நம்முள் புகுந்து, ஊனெலாம் உருக நம்மை ஆண்டவர் இப்பொழுது நம்மை விட்டுவிட்டு வானத்திற்குச் சென்று விட்டார். இனி என்ன செய்வது? இந்த அநுபவம் போனபொழுதே நீயும் செத்து ஒழிந்திருக்க வேண்டும். என்ன வேடிக்கை? ஊனுருகும் நிலை போய்விட்டது; அதனை உருக்கியவர் வானத்திற்குப் போய்விட்டார். செத்து ஒழியாமல் நீமட்டும் வாழ்கின்றாய். நான் என்ன செய்யட்டும்?

இந்த அநுபவப் பிரிவினால் மாண்டிருக்க வேண்டிய நெஞ்சம் மாளாமல் வாழ்கின்றது. ஆதலால், அதன்மாட்டுக் கருணை கொண்ட அடிகளார், அந்த நெஞ்சை நோக்கி இறுதியாக ஓர் அறிவுரை கூறுகிறார். 'நெஞ்சே! நீ இப்படியே இருந்தால் மீளாத் துயரக் கடலில் விழப் போவது உறுதி. அப்படி நீ விழாமல் இருக்க வேண்டுமானால் ஒரே வழிதான் உண்டு. உன் பழைய இயல்பை விட்டுவிட்டு, இத்துயரக் கடலில் வீழாமல் காப்பவரை ஏத்துவாயாக' என்று முடிக்கின்றார்.

திருச்சதகத்தில் மூன்றாவதாக அமைந்துள்ள பத்துப் பாடல்களுக்கும் 'சுட்டறுத்தல்' என்ற தலைப்புத் தரப் பெற்றுள்ளது. அது எவ்வளவு தூரம் பொருந்தும் என்பதைச் சிந்திப்பது நலம். இந்தத் தலைப்பை

மறந்துவிட்டுப் பாடல்களுக்குள் நுழைந்தால், மேலைப் பாடல்களோடு இவற்றுக்குள்ள தொடர்பு நன்கு விளங்கும்.

சென்ற பாடலில் 'அவலக்கடலில் வீழாமல் காப்பவனை ஏத்த வேண்டும்' என்று நெஞ்சுக்கு அறிவுரை கூறினார் அல்லவா? எப்படி ஏத்த வேண்டும்? என்ற வினாவிற்கு விடை கூறுவதுபோல அமைந்துள்ளன இப்பாடல்கள்.

'வெள்ளந்தாழ் விரிசடையாய்' என்று ஏத்தத் தொடங்கினால் உள்ளந்தாள் நின்றுச்சியளவும் நெஞ்சாய் உருக வேண்டும். உடம்பெல்லாங் கண்ணாய் வெள்ளம் பாய வேண்டும்.

இவ்வாறு நடைபெறாமல் செய்வது நம்முடைய வினையின் கோளாறு என்று வருந்துகிறார் அடிகளார். அவ்வினைக்கு முற்றுப்புள்ளி வைக்கும் ஆற்றல் கொண்டவன் இறைவன் என்பதை 'வினைக்கேடன்' என்ற சொல்லால் அறிவிக்கின்றார்.

அந்த வினைக்கேடன் தம்மிடம் வந்து தம் வினையைப் போக்கத் தம்பால் என்ன தகுதி இருக்கிறது என்பதை நினைக்கத் தொடங்கி, தகுதி ஒரு சிறிதும் இல்லாத நாய்போன்றவனாகிய தம்மிடத்து வினைக்கேடன் வந்தது, அவன் கருணையால் என்று குறிப்பிடுகின்றார்.

அவன் கருணையினால் ஆட்கொண்ட பிறகுதான், நாம, ரூபம் கடந்து எங்கும் எதிலும் நிறைந்திருப்பவன் அவன் என்பதை அவரால் உணரமுடிந்தது. ஆனாலும், என்ன புதுமை? நாம, ரூபம் கடந்த அப்பொருள் தம் எதிரே வந்து, 'வண்ணங் காட்டி, வடிவு காட்டி, மலர்க்கழல்கள் அவை காட்டி' ஆட்கொண்டது என்கிறார்.

வண்ணம், வடிவு, மலர்க்கழல்கள் என்பவற்றைப் புறத்தே காட்டிய அப்பொருள், உள்ளே புகுந்தது. அதன்

பயனாகச் சுற்றித் திரிகின்ற சிந்தனை அவர்மாட்டுச் செல்லத் தொடங்கிற்று. கண்டதையெல்லாம் பார்க்கின்ற கண்கள் அவர் திருவடிகளையே பார்க்கத் தொடங்கிற்று. பேசும் சொற்களும் பிரார்த்தனையும் அத் திருவடிக்கே என முடிந்தது.

இதனை அடுத்துள்ள பாடலில் சராசரி மனிதர்களுக்குரிய குறைபாடுகளோடு இருந்த தாம், ஐந்தெழுத்தாகிய புணையைப் பற்றிக் கரையேறிய சிறப்பைக் கூறுகிறார்.

இரண்டாவது பத்தின் இறுதிப் பாடலில் தம் நெஞ்சை அறிவுறுத்தத் தொடங்கிய அடிகளார், இந்தப் பத்தின் இறுதி மூன்று பாடல்களில் தம் வாழ்வில் நிகழ்ந்த அற்புதம் வேறு யாருக்கும் கிட்டாத ஒன்றாகும் என்பதை விரிவாக எடுத்துக்கூறி உலகத்தாருக்கு அறிவுறுத்துகின்றார்.

பல நூற்றாண்டுகளின் முன்னரே தேவார, திருவாசகங்கள் மக்களிடையே பெரிதும் பரவி அவர்களை ஆட்கொண்டிருந்தன. 9 ஆம் நூற்றாண்டு முதலே தேவார, திருவாசகப் பாடல்கள் திருக்கோயில்களில் ஓதப்பெற்று வந்தன என்ற உண்மையை வைரமேகப் பல்லவ மன்னனின் திருத்தவத்துறைக் கல்வெட்டிலிருந்தும், பின்னர் வந்த சோழர்கள் கல்வெட்டிலிருந்தும் அறியமுடிகிறது. 13, 14-ஆம் நூற்றாண்டுவரை பக்தி அடிப்படையில் எவ்வித வேறுபாடும் இன்றித் திருமுறைகள் கோவில்களிலும், வீடுகளிலும் ஓதப்பெற்றுவந்தன.

14-ஆம் நூற்றாண்டுவாக்கில், சைவ சித்தாந்த சாத்திரங்கள் தோன்றலாயின. அறிவின் துணைகொண்டு பேசப்பெறும் சாத்திரங்கள் ஒருவகை. உணர்வின் துணைமட்டுமே கொண்டு ஓதப்பெற்ற திருமுறைகள் ஒருவகை. 15-ஆம் நூற்றாண்டின் இறுதியிலும், 16-ஆம்

நூற்றாண்டின் தொடக்கத்திலும் இவ்விரண்டையும் ஒருங்கிணைக்கும் முயற்சி தொடங்கப் பெற்றது. சமய குரவர்கள் நால்வர் வாழ்க்கையும்கூடச் சன்மார்க்கம், சத்புத்ரமார்க்கம் என்றெல்லாம் பெயரிடப் பெற்றுச் சரியை, கிரியை, யோகம், ஞானம் என்பவற்றுள் சமய குரவர்கள்கூடப் புகுத்தப்படும் முயற்சி தொடங்கிற்று.

நல்ல வேளையாக இம்முயற்சியைச் செய்தவர்கள் திருமுறைகளில் கைவைக்கவில்லை. சாத்திரம், தோத்திரம் என்று பிரித்து, திருமுறைகளைத் தோத்திரம் என்ற தலைப்பில் அமைத்துவிட்டனர். பல திருமுறைகள் இப்பெருமக்கள் பார்வையில் படவில்லை என்றாலும் என்ன காரணத்தாலோ திருவாசகம் இவர்கள் கையில் சிக்கிக்கொண்டது. சாத்திரத்தில் ஊறித் திளைத்து, அந்தச் சட்டையை அனைவருக்கும் அணிவித்து மகிழ்ந்த அந்தப் பெருமக்கள் திருவாசகத்தின் ஆழ்ந்த உட்பொருளை அறியாமற்போனதில் வியப்பில்லை.

திருவாசகம் ஏனைய திருமுறைகளைப் போலல்லாமல் தனித்து நிற்கும் சிறப்புடையதாகும். ஏழு திருமுறைகளும் இறையநுபவத்தில் தோய்ந்த மூவர் முதலிகளால் பாடப்பெற்றன என்பது உண்மைதான். ஆனால், அவர்கள் அனைவரும் இறைவனைப் புகழ்ந்து அவனுடைய அளப்பரும் தன்மையைப் பாடினார்களே அன்றி, தாம் பெற்ற இறையநுபவத்தை அது எவ்வாறு இருந்தது என்பதைப் பாடவில்லை. இந்த நிலையில் மூவர் முதலிகளுக்குப் பிற்பட்டு, மணிவாசகப்பெருமான் தோன்றுகிறார். அவர் பாடிய திருவாசகம் முழுவதும் அவர் பெற்ற இறையநுபவத்தைப் பிழிந்து, பாடல்களாகத் தருவதாகும்.

இந்த வேறுபாட்டையும் நுணுக்கத்தையும் அறிந்திராத சிலர் ஏனைய ஏழு திருமுறைகளைப்போல் திருவாசகம்

இல்லை என்பதைமட்டும் கண்டுகொண்டனர். இந்த வாய்ப்பைப் பயன்படுத்திக்கொண்டு சாத்திரங்களில் காணப்பெறும் சில பெயர்களைத் திருவாசகத்தின் பல பகுதிகளுக்குத் தலைப்புகளாகச் சூட்டிவிட்டனர். திருச்சதகத்தில் காணப்பெறும் பல தலைப்புகள் இந்த முறையில் இடம்பெற்றவை; ஆதலின், அவை பொருந்தாது நிற்றலை ஆழ்ந்து நோக்குவார் எளிதில் அறியமுடியும்.

ஆத்தும சுத்தி என்ற தலைப்பும் இப்படி இடம் பெற்ற ஒன்றாகும். இதில் வரும் பத்துப் பாடல்களில் முதல் வரும் ஐந்து பாடல்கள் (35—39) அடிகளார் தம் விருப்பப்படி நடவாத நெஞ்சை நோக்கி நொந்து கூறியனவாகும். இறை அருளில் மூழ்கி ஆடுதல் முதலியவற்றைச் செய்யாத தம் நெஞ்சைப் 'பிண நெஞ்சே' என்று விளிக்கின்றார். இதே கருத்து ஏனைய நான்கு பாடல்களிலும் தொடர்கின்றது.

தம்முடைய நெஞ்சம் திருப்பெருந்துறை அநுபவத்தில் மூழ்கி அதிலேயே தங்கிவிடாமல் வெளியே வந்து தன் விருப்பம் போல் ஆட்டம் போடுவதற்குரிய காரணத்தைச் சிந்திக்கின்றார் அடிகளார். குருநாதரே தம்மை ஒதுக்கி விட்டாரோ என்ற ஐயம் ஒரு விநாடி மனத்தில் தோன்றினாலும், குருநாதர் அவ்வாறு செய்யவில்லை என்ற முடிவுக்கு வருகின்றார். அதனையே, 'வினை என் போல்.....'(41) என்று தொடங்கும் பாடலில் 'தினையின் பாகமும் பிறிவது திருக்குறிப்பு அன்று' என்ற முடிவுக்கு வருகிறார். அவ்வாறானால் குருநாதர் திருவடியை விட்டுப் பிரிந்ததற்குக் காரணம் தம்முடைய கொடிய வினையே என்ற முடிவுக்கு வந்ததால் 'வினை, என்போல் உடையார் பிறர் யார்?' என்று பாடுகிறார்.

இனிமையின் எல்லையாக உள்ள குருநாதரைப் பிரிந்து நெடுங்காலம் ஆகிவிட்டதுபோல அவருக்குத் தோன்றுதலின், 'இன்னும் இந்த உடம்பை வைத்துக் கொண்டு

காப்பாற்றுகின்றேன், இது என்ன கொடுமை?' என்ற கருத்தே 42-ஆவது பாடலில் பேசப்படுகின்றது.

நெடுங்காலம் பிரிந்துள்ளோம், இந்த உடம்பைக் காப்பாற்றுகின்றோம் என்ற எண்ணம் தோன்றியவுடன் அவனுடைய கருணைப்பெருக்கும், தம் சிறுமையின் எல்லையும் வெளிப்படுதலின் தீயில் புகுந்தோ, மலையிலிருந்து உருண்டோ உடம்பைப் போக்கிகொள்ள வேண்டும் என்று நினைக்கின்றார்.

திருச்சதகத்தில் இதுவரை கண்ட நாற்பது பாடல்களில் இறையநுபவப் பெருக்கு, அதில் ஆழ்தல், மீட்டு வெளிவருதல் என்பவைபற்றிப் பாடும்பொழுதே எந் நேரமும் அந்த இறையநுபவத்தில் மூழ்கியிராமல் வெளியே வந்துவிடும் நெஞ்சை நோக்கி, ஏசிப் பேசுகின்ற பாடல்களும் இடம் பெற்றுள்ளன.

இந்த நாற்பது பாடல்களில் இரண்டு பாடல்களில் (23, 44) மகளிர்பற்றிய குறிப்பு வருகிறது. இந்தப் பால் உணர்வே தாம் ஈடுபாட்டை இழப்பதற்குக் காரணம் என்று நினைக்கின்றார் அடிகளார். அநுபவ வளர்ச்சியைக் கூறிக்கொண்டுவரும் நாற்பது பாடல்களில் அந்த அநுபவ இடையீடு, பால் உணர்வால் ஏற்பட்டது என்பதை அப்படியே குறிக்கின்றார் அடிகளார்.

ஆத்தும சுத்தி என்ற தலைப்பிற்கும், இந்தப் பத்துப் பாடல்களுக்கும் எவ்விதத் தொடர்பும் இல்லை என்பதை விளங்கிக்கொள்ள முடியும்.

தம் விருப்பம்போல் தலைப்புகள் கொடுக்க யாருக்கும் உரிமை இல்லை. திருவாசகப் பாடல்களின் இயல்பை அறியாதவர்கள் தரும் ஆத்தும சுத்தி போன்ற உள்தலைப்புகள் பின்னே வருகின்றவர்களைக் குழப்பிவிடுகின்றன. இத்தலைப்புகள் பொருந்தும்படியாக

விளக்கம் தரவேண்டும் என்ற விருப்பத்தினால், குழப்பத்தை மிகுதிப்படுத்துகின்றனர்.

நாற்பத்தைந்து முதல் ஐம்பத்து நான்கு வரை உள்ள பாடல்களும் இதுவரை கூறிய கருத்துக்களையே மீட்டும் கூறுகின்றன.

இந்தப் பத்து பாடல்களில், மூன்று பாடல்கள் (46, 51, 47) சிந்திக்கத் தக்கன. குருநாதராக வந்து ஆட்கொண்டு அருள்புரிந்து மறைந்துவிட்ட பிறகு, மானுட வடிவில் வந்த அவர் யார் என்பதை நன்கு உணர்ந்துகொண்ட அடிகளார், ஒரு விநாடி நேரம் அந்த உணர்விற்கு ஓய்வு கொடுத்துவிட்டு, தம் அறிவு கொண்டு குருநாதராக வந்தவரை ஆராய்கின்றார். இந்த மெய்ஞ்ஞானியின் விஞ்ஞானப் பார்வையில் தம்மை ஆண்டுகொண்ட கூத்தன், கூத்தனாகமட்டு மில்லாமல் எல்லையற்ற வனாகவும், காலதத்துவமாகவும் உள்ளான் என்பது தெரிகின்றது. இந்த விஞ்ஞானப் பார்வை, பொருளின் இயல்பை அறிவு கொண்டு ஆராய்ந்ததில் கிடைத்த விளக்கம் என்பது உண்மைதான். இந்த விளக்கத்தை அறிந்துகொண்டதால், அடிகளாருக்கு அச்சம் இருந்ததேதவிரக் கூத்தனிடம் நெருக்கம் ஏற்படவில்லை. ஒரு பொருளிடம் நெருக்கம் ஏற்படவேண்டுமாயின் அங்கு அறிவு தொழிற்பட்டுப் பயனில்லை. அந்த அறிவு பொருளின் பெருமையையும், தனது சிறுமையையும் சுட்டிக்கொண்டே இருக்குமாதலின் நெருக்கம் ஏற்பட வழியே இல்லை.

எனவே, அடிகளார் இந்த அறிவு ஆராய்ச்சியை விட்டுவிட்டு, உணர்வின் துணைகொண்டு கூத்தனைப் பார்க்கின்றார். அந்த உணர்வின் பெருக்கம் பொருளிடம் நெருக்கத்தை உண்டாக்குகின்றது. அதன் பயனாக, 'யாவருஞ் சிந்தையாலும் அறிவருஞ் செல்வன், முந்தி என்னுள் புகுந்தனன்' (51) என்றும், 'தொண்டனேற்கு

உள்ளவா வந்து தோன்றினாய்' (46) என்றும் பாட முடிந்தது.

அடுத்து வரும் ஐம்பத்தைந்து முதல் அறுபத்து நான்கு வரை உள்ள பாடல்கள் இறையநுபவத்தில் மூழ்க முடியாமல், தடையாக நிற்கும் தம் உடலை விட வேண்டும் என்ற குறிப்பில் பாடப்பெற்றவை ஆகும். இப்பத்தில் ஏழாவது பாடல் (61) மறுபடியும் பாலுணர்வு பற்றியே பாடுகிறது. இந்த உடம்பு இருக்கின்றவரையில் பாலுணர்வுப் பிரச்சினை தீராது என்று அடிகளார் நினைத்திருக்க வேண்டும். எனவேதான், உடலை ஒழிக்க வேண்டும் எனப் பாடும் இத்தொகுப்பினுள் இப்பாடல் இடம் பெறுகின்றது.

அறுபத்தைந்து முதல் எழுபத்து நான்கு வரை உள்ள பத்துப் பாடல்களும் ஒரு புதிய திருப்பமாக அமைந்து உள்ளன. திருப்பெருந்துறை அநுபவத்திலிருந்து விடுபட்ட நிலையில், மீட்டும் அதனைப் பெறவேண்டும் என்ற துடிப்பும், அதனைப் பெறுவதற்கு இவ்வுடம்பு தடையாக உள்ளது என்ற ஏக்கமும் முன்னர் உள்ள அறுபது பாடல்களில் பேசப்பெற்றதைக் கண்டோம். இந்தப் பத்துப் பாடல்களும் போற்றி போற்றி என்று முடிதலின், ஏதோ ஒரு திருப்பம் ஏற்பட்டுள்ளது என்பதை அறிவிக்கின்றன. இறையநுபவத்தைத் தரும் குருவின் திருவடியை இனி எப்பொழுது காண்பது என்று வருந்திய அடிகளாருக்கு இப்பொழுது அது கிடைத்திருக்க வேண்டும். இவ்வாறு கூறுவதால் மறுபடியும் குருவடிவில் வந்து ஆட் கொண்டான் என்பது பொருளன்று. முதன் முறையாகக் குருவைக் கண்டபொழுது எந்த அநுபவம் சித்தித்ததோ அந்த அனுபவம் மீட்டும் இங்கே சித்தித்திருக்க வேண்டும். அதனாலேயே போற்றி போற்றி என்று பாடல்கள் போற்றி செய்கின்றன.

இங்கு மூன்று பாடல்களில் வரும் மூன்று தொடர்கள் சிந்திக்கத்தக்கன. பெருந்துறை அநுபவம் கைவிட்டுப் போனதுபோல இப்பொழுதும் நிகழ்ந்துவிடக்கூடாது என்ற அச்சத்தால் 'புறமெனைப் போக்கல் கண்டாய்' (66) என்று பாடுகிறார்.

மறுபடியும் கிடைத்துள்ள இந்த அநுபவம், மறுபடியும் கைவிட்டுப் போய்விடாமல் இருக்கவேண்டுமே என்ற அச்சம் மனத்தில் தோன்றுகிறது. உடம்பு என்ற ஒன்று இருக்கின்றவரையில் அநுபவம் நிலையாக நில்லாது என்று அஞ்சிய அடிகளார், 'இங்கு இவ்வாழ்வு ஆற்றகில்லேன்' (69) என்றும் 'உடலிது களைந்திட்டு ஒல்லை உம்பர்தந் தருளு போற்றி' (68) என்றும் பாடுகிறார்.

முந்தைய பாடல்களைப் போலவே அடுத்த பத்துப் பாடல்களும் (75—84) அநுபவப் பெருமையையும் அவற்றை விட்டுவிட நேர்ந்த இயல்பையும்பற்றியே பேசுகின்றன.

எழுபத்தாறாவது பாடல் தமக்கு என்ன வேண்டும் என்பதை அடிகளார் கூறுவதாக அமைந்துள்ளது. போகம், இன்பம் என்பவற்றை மனம் என்றும் நாடும் என்பதில் ஐயமில்லை. மகிழ்ச்சித் தரும் போகங்களில் இந்திரபோகம் மிக உயர்ந்தது என்பர். அந்த இந்திராதி போகமும் வேண்டிலேன் என்று முதலிரண்டு அடிகளில் அடிகளார் கூறுகிறார். அப்படியானால் அதற்குச் சமமானதாக அல்லது அதைவிட உயர்ந்ததான ஒன்றை அல்லவா கேட்க வேண்டும். ஆனால் அடிகளார் கேட்பது சற்று வித்தியாசமானதாகும்.

உடம்பு நைய, தலைமேல் கைகள் ஏற, கண்ணீர் ஆறாகப் பெருகவேண்டும். இவையே அடிகளார் வேண்டுவனவாகும். சற்று நின்று நிதானித்தால் இந்த வேண்டுதலின் சிறப்பை, ஆழத்தைப் புரிந்து கொள்ள முடியும். கைகள் தலைமேல் ஏறுவது, மனம் நைதல்,

கண்ணீர் பெருகுதல் ஆகியவை இந்த உடம்பின் செயல்கள் அல்லவா? இந்த உடம்பிற்குக் கர்த்தா அடிகளார் அன்றோ? அவர் எப்பொழுது விரும்பினாலும், இவற்றைச் செய்ய முடியுமே. அப்படியிருக்க, மனம் நையவும், கண்ணீர் ஆறாகப் பெருகவும் ஐயன் அருள் செய்ய வேண்டும் என்று ஏன் கேட்கிறார்?

மனத்தின்கண் இன்பம், துன்பம் ஆகிய எந்த உணர்ச்சி ஆழமாகத் தோன்றினாலும் மனம் நையும், கண்ணீர் பெருகும். ஆக, கைகள் தலைமேல் குவிய வாய்ப்பே இல்லை. அதனைக் கூறியதால், இன்ப துன்பமாகிய இரண்டு உணர்ச்சிகளையும் நீக்கிவிட்டு, வேறு ஏதோ ஓர் உணர்வை வேண்டி நிற்கின்றார் என்பது வெளிப்படை. அந்த உணர்வு என்ன என்பதை வெளிப்படையாகக் கூறாமல், குறிப்பால் உணர்த்துகின்றார்.

இன்ப, துன்ப உணர்வுகள் ஆழமாக மனத்திடைத் தோன்றவேண்டுமாயின் அவற்றிற்குக் காரணமாக ஏதாவது ஒன்று இருத்தல் வேண்டும். இந்த மனம் எதில் அதிகம் ஈடுபட்டு, எதைப் பற்றிக்கொண்டு நிற்கின்றதோ அதுவே இன்ப, துன்ப உணர்வுக்குக் காரணமாகும். இவற்றை ஆசா பாசங்கள் எனக் குறிப்பர். இவை காரணமாகத் தோன்றும் பற்றே இன்ப, துன்ப உணர்வுக்குக் காரணமாக அமைகின்றது.

'இந்திராதி போகம் வேண்டிலேன்' என்று அடிகளார் கூறுவதால், அந்த ஆசா பாசம் காரணமாகத் தோன்றும் பற்று அவர்மாட்டு இல்லை என்பது வெளிப்படை.

ஆசா பாசங்களைத் துறத்தல் என்பது எதிர்மறைச் செயலாகும். மனம் இந்தப் பற்றுக்களை விடவேண்டும் என்று விரும்பினால், அந்த மனத்திற்கு வேறு ஏதாவதொரு பற்றைத் தந்துதீர வேண்டும். ஏதாவதொரு பற்றுக் கோடில்லாமல் தன்பால் உள்ள பற்றுக்களை மனம்

விடாது. இது கருதியே வள்ளுவப் பேராசான், மனத்திடை உள்ள பற்றுக்கள் நீங்கவேண்டுமாயின், பற்றற்றானைப் பற்றுக என்று கூறிப்போனார். இக்கருத்தைத்தான் அடிகளார் இப்பாடலின் இரண்டாவது அடியில் விவரிக்கின்றார். 'ஏக! நின் கழல் இணை அலாது (வேறு பற்று) இலேன்', என்று கூறுவதால் கழல்களாகிய பற்றுக்கோட்டை இறுகப் பற்றிக்கொண்டார் என்பது தெரிகிறது. வேறு பற்று இலேன் என்பதால் ஆசா பாசங்கள் காரணமாக வரும் பற்றை அறவே துறந்து, கழற் பற்று ஒன்றையே ஆதாரமாகக் கொண்டுள்ளார் என்ற கருத்தையே இந்த அடி விளக்குகின்றது. இந்தக் கழற் பற்று உறுதிப்பட, அந்த உறுதிப்பாட்டை வெளிப்படுத்தும் முறையில் உள்ளம் நைதல், கைகள் தலைமேல் ஏறுதல், கண்ணீர் ஆறாகப் பெருகுதல் ஆகிய மெய்ப்பாடுகள் நடைபெறுகின்றன என்பதை மூன்று, நான்காம் அடிகள் அறிவிக்கின்றன.

மெய் கலந்த அன்பு என்றால், சத்தியமான—தூய்மையான—வேறு கலப்பில்லாத முழுத்தன்மை பெற்ற அன்பு என்பதே பொருளாகும்.

இதையல்லாமல், இந்தத் தொடருக்கு மற்றொரு குறிப்புப் பொருளையும் கூறலாம். மனத்தளவில் நின்றுவிடும் அன்பு ஒரு வகை. அது பெரும்பாலும் புறத்தே வெளிப்படுவதில்லை; உடம்பில் எவ்வித மாறுபாட்டையும் செய்வதில்லை. மனம் விரும்பிய பொருளிடத்துச் செலுத்தப்படும் அன்பாகும் இது.

மனம், அடிமனம், மேல் சித்தம் என்பவற்றைக் கடந்து சித்தத்தின் அடிப்பகுதியில் தோன்றும் அன்பு, தான் இருப்பதை உடம்பின்மூலம் வெளிப்படுத்தியே தீரும். சித்தத்தில் தோன்றும் அன்பு, உள்ளம் நையவும், தலைமேல் கைகள் ஏறவும், கண்ணீர் ஆறாகப் பெருகவும் செய்துவிடும். உடம்போடு தொடர்புடைய, மேலே கண்ட

செயல்களை வெளியிடச் செய்யும் அன்பு என்பதால் இதனை 'மெய் கலந்த' அன்பு என்று கூறினார் போலும்.

'மெய் கலந்த அன்பர்' என்ற தொடரால் அடிகளார் இத்தகைய அன்பர்களை இனம் பிரித்துக் காட்டுகிறார். இந்த மெய் கலந்த அன்பர் அன்பில், துன்பத்திற்கோ துயரத்திற்கோ நிலையாமைக்கோ இடமே இல்லை. இவர்கள் அன்பு ஆனந்தமயமானது, நிலையானது. இதன் பயனாகவே இவர்கள் நாள் முழுவதும் நையும் உள்ளத்தோடு தலைமேல் ஏறிய கையராய், கண்ணீரை ஆறாகப் பெருக்கிக்கொண்டு நிற்கின்றனர்.

இதனையே சேக்கிழார் பெருமான் 'இறவாத இன்ப அன்பு' (பெ.பு—காரைக்கால் 60) என்று பேசுகிறார்.

இத்தகைய பெருமக்களின் அன்பு, எத்தகையது என்பதை ஒருவாறு அறிந்துகொண்ட அடிகளார், அத்தகைய அன்பு தமக்கும் வேண்டும் என்று கேட்கின்றார்.

அடுத்து வரும் பத்துப் பாடல்கள் (85—94) முன்னர் உள்ள பத்துப் பாடல்களோடு ஓரளவு மாறுபட்ட நிலையில் அமைந்துள்ளன. திருப்பெருந்துறை அனுபவம் கடந்த நிலையில், மனம் வருந்தி அந்த அநுபவம் மீட்டும் தமக்கு வரவேண்டும் என்று பேசும் நிலையில் அமைந்துள்ளன இப்பாடல்கள்.

திருப்பெருந்துறையில் கிடைத்த இறையனுபவமும் அடியார் கூட்டமும் தம்மை விட்டுப் போயினமைக்குத் தம்முடைய வாழ்க்கையில் ஏதோவொரு பெருங்குறை உள்ளதுபோலும் என்று நினைத்த அடிகளார், அது எதுவாக இருக்கும் என்ற ஆராய்ச்சியில் ஈடுபடுகின்றார். சென்ற 77ஆவது பாடலின் இறுதியில், 'மெய் கலந்த அன்பர் அன்பு எனக்குமாக வேண்டும்' என்று வேண்டி நின்றவர், அக்கருத்தை மேலும் தொடராமல் இறைவனிடம்

அது வேண்டும் என்று மேலும் வேண்டிப் பாடாமல், திடீரென்று புதிய திசையில் போகின்றார்.

சென்ற பத்துப் பாடல்களில் பலமுறை இத்தகைய அன்பு வேண்டும் என்று பாடியவர், திடீரென்று புதிய திசையில் போவதற்குரிய காரணம் என்ன?

ஒன்றைப் பல முறை வேண்டியும், அது கிட்டவில்லை என்றபொழுது இரண்டு வகையான காரணங்களைச் சிந்திக்கலாம். ஒன்று அதனைக் கொடுக்க வேண்டியவர் மனம் இரங்கவில்லை என்ற முடிவுக்கு வரலாம். இந்தக் காரணம் அடிகளாரைப் பொறுத்தமட்டில் பொருந்த வில்லை. வழியோடு போனவரை வலிதில் பற்றி இழுத்து ஆட்கொண்டு அனுபவத்தைத் தந்தவர், அடியார் கூட்டத்திடை இருக்கச் செய்தவர், தம்மாட்டு இரக்கம் கொள்ளவில்லை என்று நினைப்பதே தவறு.

அப்படியானால் இரண்டாவதாக உள்ள காரணத்தைச் சிந்திக்கலாம். என்ன காரணமாக இருக்கும்? இரக்கமுள்ளவரே, முன்னர் எளிதாகத் தந்தவரே இப்பொழுது தரவில்லை என்றால், அவர்மேல் குற்றம் இல்லை. எனவே, இரண்டாவது காரணத்தில் தம்மிடம் உள்ள குறை காரணமாகவே அவர் தரவில்லை என்ற முடிவுக்கு வருகிறார் அடிகளார். தம்மாட்டு உள்ள குற்றம் என்ன என்பதை நினைந்தவுடன், பொய் என்ற ஒன்று, விசுவரூபம் எடுத்து அடிகளாரின் முன்னே நிற்கின்றது. இந்தப் பத்துப் பாடல்களிலும், பின்னரும் பல பாடல் களிலும் பொய்யைத் தம் வாழ்க்கையோடு இணைத்துப் 'பொய்யன்' என்று தம்மை அடிகளார் கூறிக்கொள்கிறார்.

இந்த ஆய்வின் முடிவில் அடிகளாருக்கு ஓர் உண்மை தெளிவாகின்றது. தாம் எவ்வளவு பொய்யராக இருப்பினும், தம்முடைய அன்பு எவ்வளவு பொய்யாக இருப்பினும், தம் பிழையை நினைந்து அழுதால் மறுபடியும் அவர்

அநுபவத்தைத் தருவார் என்ற முடிவுக்கு வருகிறார் அடிகளார்.

திருச்சதகத்தின் கடைசிப் பத்துப் பாடல்கள் அடிகளார் மனத்தில் மறுபடியும் துளிர்த்த புது நம்பிக்கையை வெளிப்படுத்துவதாக உள்ளன.

பொய்யோடு தம்மைத் தொடர்புபடுத்தி அதனாலேயே தாம் அவரைவிட்டுப் பிரிய நேர்ந்தது என்று சென்ற பத்துப் பாடல்களில் வருந்திய அடிகளார், இப்பொழுது புதிய கருத்தொன்றைப் பேசுகிறார். மனித வாழ்க்கையில் இயல்பாக நடைபெறுகின்ற ஒன்று உண்டு. கையில் ஒரு பொருள் கிடைத்தால் அதன் அருமைப்பாடு தெரியாமல் எளிதில் அதனை இழந்துவிடுவதும் உண்டு. அதுபோலத் திருப்பெருந்துறையில் எளிதில் தமக்குக் கிடைத்த குருநாதரையும் அவர் தந்த அனுபவத்தையும் கிடைத்தற் கரியது என்று அதன் அருமைப்பாட்டை அறிந்து போற்றி வைத்துக்கொள்ளாமல் அலட்சியமாக இருந்துவிட்ட தாகவும், அதனாலேயே அந்த அநுபவம் கழன்று போயிற்று என்றும், ஓர் எண்ணம் அடிகளார் மனத்தில் தோன்றியது போலும். அதன் பயனாகவே 'மையிலங்கு நற் கண்ணி பயங்கனே' (96) என்ற பாடல் வெளிவருகிறது.

சென்ற பத்துப் பாடல்களில் தம்மை பொய்யன் என்று கூறிவிட்டு, இப்பொழுது அவர் அருமை தெரியாமல் கவனக்குறைவோடு இருந்தமையின் அவர் நழுவிவிட்டார் என்று பேசிக்கொண்டே வந்த அடிகளாருக்கு, ஓர் ஊக்கம் கிடைத்தது. அந்த ஊக்கம் பிறக்கத் திருப்பெருந்துறை நிகழ்ச்சியே காரணமாய் அமைகின்றது.

அமைச்சராக இருந்த தாம், அதிகாரம் காரணமாகக் கடமை என்ற பெயரில் பிறர்மாட்டுச் செலுத்த வேண்டிய அன்பை மறந்து, மனத்தைக் கல்லாக ஆக்கிக் கொண்டிருக்க வேண்டும். திருப்பெருந்துறைக்காரர் ஒரே

விநாடியில் அந்தக் கல்லைப் பிசைந்து கனியாக்கினார். அத்தகைய பேராற்றல் படைத்தவர், தாம் எவ்வளவு பிழை செய்தாலும் அதனை மன்னித்து ஏற்கும் இயல்புடையவர் என்ற நம்பிக்கை பிறக்கிறது. இந்த அடிப்படையில்தான் 'இல்லை நின் கழற்கு அன்பு அது என் கணே' *(98)* என்ற பாடல் பிறக்கின்றது.

திருச்சதகத்திற்குக் கொடுக்கப்பட்டிருக்கும் உள் தலைப்புகளை எல்லாம் ஒருசேர ஒதுக்கிவைத்துவிட்டு, சதகம் முழுவதையும் மனத்துள் கொண்டு சிந்தித்தால் ஒரு சில சிந்தனைகள் தோன்றுகின்றன.

'மெய்தான் அரும்பி' என்று தொடங்கும் முதல் பாடல், இறையனுபவத்தின் உச்ச கட்டத்தில் தோன்றிய பாடலாகும். இதற்கு நேர் எதிராக, 'துணையிலி பிணநெஞ்சே' என்று வரும் பகுதி அனுபவத்தை இழந்து வருந்தும் ஒரு நிலையாகும். இந்த இரண்டு நிலைக்கு உட்பட்டு அடிகளாரின் மனநிலை ஊசலாடுகின்றது. இறையனுபவம் உட்பட எந்த அனுபவமும் உடம்போடு ஒருவன் இருக்கின்றவரை, ஒருபடித்தாக நிலைத்து நிற்பதில்லை. ஏறுவதும் இறங்குவதும், திடீரென்று காணாமல் போவதும் — அதேபோலத் திடீரென்று தோன்றுவதும் அனுபவத்தின் இயல்பாகும். எனவே, அனுபவத்தின் உச்சகட்டத்தை அறிவிக்கும் திருச்சதகத்தின் முதற்பாடலும், 'துணையிலி பிணநெஞ்சே'*(35)* என் வரும் பாடலும், இந்த ஏற்ற இறக்கங்களுக்கு உதாரணமாகும். இந்த அனுபவத்தின் ஏற்ற இறக்கங்களுக்கு ஏற்ப மனித நம்பிக்கையும் அதனோடு சேர்ந்து ஏறி இறங்கும் இயல்புடையதாகும். இவ்வாறு கூறுவது சிலருக்கு வியப்பையும் சினத்தையும் உண்டாக்கலாம். அனுபவம் அலைபோல ஏறுவதும் இறங்குவதும், நம்பிக்கையும் அதனோடு சேர்ந்து ஏறுவதும் இறங்குவதும் நம்போன்ற சாதாரண மனிதர்களுக்குக் கூறுவது சரி. அடிகளார்போல

மாமனிதர்களுக்கும் இது பொருந்தும் என்று கூறுவது அடாதசெயல் என்று சிலர் கருதலாம். இம்மாமனிதர்களின் வாழ்க்கையைக்கூட அறிவு கொண்டு ஆராய்தலில் தவறொன்றுமில்லை. அவ்வாறு ஆராய்வதால்தான் நாமும் அவர்களைப் பின்பற்றி முன்னேறலாம் என்ற நம்பிக்கை மனித சமுதாயத்துக்குப் பிறக்கிறது. நால்வர் பெருமக்களில் திருஞானசம்பந்தர் தவிர ஏனைய மூவரையும் இவ்வாறு ஆராய்வதில் தவறொன்றுமில்லை. ஏன் திருஞான சம்பந்தரைமட்டும் விட்டுவிடவேண்டும்? திருஞான சம்பந்தர் ஏனை மூவரைப் போலப் பிறப்பெடுத்துச் சிலவற்றைச் செய்து, வீடுபேற்றை அடைய வேண்டிய நிலையிலில்லை. 'துறக்குமா சொலப்படாய்' (திருமுறை: 2-98-5) என்ற பாடலில் வரும் 'திருந்தடி மறக்குமாறு இலாத எனை இம் மண்ணின்மேல் பிறக்குமாறு காட்டினாய்' என வரும் பிள்ளையாரின் திருவாக்கும், இலம்பையங்கோட்டூர்த் தேவாரத்தில் 'எனதுரை தனதுரை' என்ற திருவாக்கும், அவர் மூவரினும் வேறுபட்டவர் என்பதனை அறிவுறுத்தும். எல்லாவற்றையும் கடந்து இறைவன் திருவடி நீழலில் இருக்கும் சில ஜீவன்முக்தர்கள் அவ்வப்பொழுது குறிப்பிட்ட செயலை நிறைவேற்ற உலகிற்கு அனுப்பப் படுகிறார்கள். அவர்களுள் ஒருவர் திருஞானசம்பந்தர். இந்த நுணுக்கத்தைச் சேக்கிழாருக்குப் பிறகு யாரும் தெரிந்துகொண்டதாகத் தெரியவில்லை. 'நால்வர் நான்மணிமாலை' ஆசிரியர் உள்பட யாரும் இதனைத் தெரிந்துகொண்டதாகத் தெரியவில்லை. 19-ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த வள்ளற்பெருமான்மட்டும் இதற்கு விலக்காவார். நால்வரைப்பற்றியும் பாமாலை சூட்டிய வள்ளலார் திருஞானசம்பதரிடம் வரும்பொழுது தம்மை மறந்து, 'ஞானசம்பந்த குருவே' என்று பாடத் தொடங்குகின்றார்.

மணிவாசகப் பெருமானைப் பொறுத்தமட்டில் திருச்சதகம் அநுபவ ஏற்ற இறக்கத்தை அப்படியே

படம்பிடித்துக் காட்டும் பகுதியாகும். இறையநுபவம் விட்டுப் போனதற்குத் தம்மாட்டுள்ள குறைகளே காரணம் என்று கருதித் தம்மைப் பொய்யன் என்று கூறிக்கொள்ளும் அடிகளார், கடைசிப் பகுதியில் குறைகளை நினைந்து அழுதால் அவன் அருளைப் பெறலாம் என்ற நம்பிக்கையோடு திருச்சதகத்தை முடிக்கின்றார்.

## நீத்தல் விண்ணப்பம்

விண்ணப்பம் என்ற சொல் ஆறாம் நூற்றாண்டிலேயே நாவரசர் பெருமானால் பயன்படுத்தப்பெற்ற சொல்லாகும். 'பொன்னார் திருவடிக்கு ஒன்று உண்டு விண்ணப்பம்' *(திருமுறை: 4-109-1)* என்பது அவருடைய திருவாக்கு. விண்ணப்பம் என்பது உயர்ந்தோரிடத்துத் தாழ்ந்தோர் தங்கள் வேண்டுகோளை அறிவிக்கும் செயலாகும். வேண்டுகோள் என்று சொல்வதைவிட விண்ணப்பம் என்ற சொல் சற்று அழுத்தமுடையதாகும். ஒருவரிடம் வேண்டுகோள் விடுத்தால் அவர் அதைக் காதில் வாங்கிக் கொள்ளாமலும் இருக்கலாம். ஆனால் விண்ணப்பம், அவருடைய கவனத்தை ஈர்க்கும் முறையில் செய்யப் படுவதாகும்.

நீத்தல் விண்ணப்பம் என்பது நீத்தலைப்பற்றிய வேண்டுகோள். அப்படியானால் 'நீத்தல்' என்ற செயல் எங்கே வந்தது? குருவாக வந்தவர் தம்மைவிட்டு மறைந்ததே, தம்மை அவர் நீத்த செயலாகும் என்று கருதினார் அடிகளார்.

ஒருவரை மற்றவர் விட்டு நீங்கிச் சென்றால் (நீத்தல்) அதற்கு இரண்டு காரணங்கள் இருக்க வேண்டும். ஒன்று, தம் துணை தேவையில்லை என்ற நிலையில் நீத்துச் செல்வார்கள். இரண்டாவது, இனி இவருடன் இருந்து எவ்விதப் பயனும் இல்லை; ஆகவே, நாம் சென்றுவிடலாம் என்ற எண்ணத்தில் நீத்துச் செல்வதாகும்.

பெருந்துறை நாயகன் நீத்தும் சென்றுவிட்டான் என்றால் அதை மேலே கூறிய இரண்டு காரணங்களில் எந்த அடிப்படையில் நிகழ்ந்தது என்று அடிகளார் சிந்திக்கத் தயாரில்லை. என்றாலும் அவன் போய் விட்டான் என்ற உண்மை மனத்தை உறுத்திற்று. எனவேதான், எந்தக் காரணத்தைக் கொண்டும் எந்த நிலையிலும், என்னை விட்டுவிடலாகாது என்ற கருத்தில் ஐம்பது பாடல்கள் பாடுகிறார்.

தம்மைக் கைவிட்டுவிட வேண்டா என்று இறைவனை வேண்டிக்கொள்கின்ற கருத்தைப் பலரும் பாடியுள்ளனர். ஆனால், இந்த ஒரே கருத்தை ஐம்பது பாடல்களிலும் மையமாக வைத்துப் பாடிய பெருமை, சமய இலக்கிய உலகில் அடிகளார் ஒருவருக்கே உரியதாகும். ஒவ்வொரு பாடலிலும் 'விட்டுவிடாதே' என்று கூறுவதால், இந்த ஐம்பது பாடல்களும் ஒரு தொகுப்பாயிற்று.

சதகத்தின் முடிவில் 'அழுதால் உன்னைப் பெறலாமே' (திருவாச: 94) என்று பாடியவர் மறுபடியும் தளர்ச்சி அடைகிறார். 'உன்னைப் பெறலாம்' என்ற நம்பிக்கை தளர்வதற்குக் காரணம் ஒன்று உண்டு.

எதிர்பாராமல் பெற்ற அனுபவம் ஒருமுறை கைவிட்டுப் போனமையின் அழுது அவன் அருளைப் பெற்றாலும், மறுபடியும் அது கை நழுவிப் போய்விடுமோ என்ற அச்சமும் தளர்ச்சியும் தோன்றுகின்றன. மனத்திட்பமும் தளர்ச்சியும் மாறி மாறி வருவதைச் சதகம் முழுவதிலும் காணமுடிகிறது. எந்த உயர்ந்த நிலையை ஒருவர் அடைந்துவிட்டாலும், மனித உடலுடன் இந்த உலகில் இருக்கின்ற வரை, இந்தத் திட்பமும் தளர்ச்சியும் இருக்கத்தான் செய்யும். இந்த அடிப்படையைப் புரிந்து கொள்ளாவிட்டால் மாறி மாறி வருகின்ற எண்ணப் போக்கைத் தெரிவிக்கும் பாடல்களைச் செம்மையான முறையில் புரிந்துகொள்ள இயலாது.

நீத்தல் விண்ணப்பத்தின் முதல் பாடல் சற்று ஆழ்ந்து சிந்திப்பதற்குரியது. தம்மைப் பொய்யன் என்றும் பெருங்குற்றங்கள் உடையவன் என்றும் அருளைப் பெறத் தகுதியற்றவன் என்றும் இதுவரை கூறிவந்த அடிகளார், இப்போது மற்றொரு புதிய கருத்தைப் பேசுகிறார். இவருக்குத் தகுதி இருக்கிறதா இல்லையா என்று பார்த்துப் பெருந்துறையான் ஆட்கொள்ளவில்லை. தமது தகுதியின்மை, தமக்கே தெரியும்பொழுது பெருந்துறை நாயகனுக்குத் தெரியாமலா இருந்திருக்கும்? அப்படி இருந்தும் வழியோடு சென்ற தம்மை வலிந்து ஆட்கொண்டான் என்றால், அதற்குக் காரணம், அவனுடைய கருணை என்பது நன்கு விளங்கும். தகுதிபற்றி ஆராயாமல் கருணை ஒன்றையே காரணமாகக் கொண்டு ஆண்டுகொண்டான் என்றால் அந்தக் கருணை வற்றிவிடக் காரணம் இல்லையே! மனித உணர்ச்சிகளைப்போல இறைவனுடைய கருணை, ஏறி இறங்கும் தன்மை உடையதல்லவே! அது என்றும் ஒருபடித்தாக உள்ளதன்றோ!

இவற்றையெல்லாம் மனத்திற் கொண்ட அடிகளார், 'கடையவனேனைக் கருணையினால் கலந்து, ஆண்டு கொண்ட விடையவனே!' (திருவாச:105) என்று விளிக்கின்றார். இப்படி விளித்திட்ட பிறகு 'விட்டிடுதி கண்டாய்' என்று சொன்னால், அது அவன் கருணையைக் குறை கூறியதாக முடியுமே; என்றும் ஒருபடித்தாக உள்ள அந்தக் கருணை—தகுதிபற்றி ஆராயாமல் ஆண்டுகொண்ட அந்தக் கருணை இப்பொழுது விட்டுவிடும் என்று நினைப்பதே தவறல்லவா?

அப்படியிருக்க, விட்டிடுதி கண்டாய் என்று அடிகளார் கூறுவது எப்படிப் பொருந்தும்? இந்தச் சிக்கலைத் தீர்ப்பதற்கு இப்பாடலின் இறதி அடியில் அடிகளார் பயன்படுத்திய ஒரு தொடரை நன்கு மனத்தில் பதித்துக் கொள்ள வேண்டும். 'எம்பிரான்! தளர்ந்தேன்

என்னைத் தாங்கிக் கொள்ளே' என்பதே அந்தத் தொடராகும்.

தளர்தல், அடிகளாரைப் பொறுத்ததாகும். தளர்ச்சி அடைந்து விழப்போகிறோம் என்ற அச்சம் அடிகளார் மனத்தில் தோன்றுகிறது. எனவேதான், விழப்போகின்ற வனைப் பின்னிருந்து இரண்டு கைகளையும் கொடுத்துத் தாங்கிக்கொள்வதுபோல், தம்மைத் தாங்கிக்கொள்ள வேண்டும் என்கிறார்.

இக்கருத்தைச் சற்று விரிவாகக் காணவேண்டும். பசியுற்றிருப்பவர், நோயுற்றிருப்பவர் என்ற இருவருக்கும் பசியையும் நோயையும் போக்கிவிட்டால் அதன்பிறகு அவர்கள் தாமே இயங்க முற்படுவார்கள்; பிறருடைய உதவி தேவையில்லை. பெருந்துறையில் ஆட்கொண்டு, இறையனுபவத்தைத் தந்து, அடிகளாரின் வாழ்க்கையில் ஒரு புதிய திருப்பத்தைக் குருநாதர் உண்டாக்கிவிட்டார் அல்லவா? எவ்வாறு ஆட் கொண்டார்? திருவடி தீட்சை செய்தார்; அடியார் கூட்டத்திடை இருக்கச் செய்தார். இவ்வளவும் நடந்து முடிந்த பிறகு, அவ்வழியைப் பின்பற்றி, அடிகளார் தாமே செல்ல வேண்டும் என்று இறைவன் கருதினால் அதில் தவறு என்ன இருக்கின்றது?

அவ்வழியைப் பின்பற்றிச் சென்று, சதா சர்வ காலமும் இறையனுபவத்தில் மூழ்கி இருக்கவேண்டும் என்று அடிகளார் விரும்புகின்றார். அது நடவாதபோது அச்சம் தோன்றுவது இயல்புதானே? எனவேதான், ஐம்பது பாடல்களிலும் 'என்னைக் கைவிட்டுவிடாதே' என்று பாடுகிறார்.

முதற் பாடலில் கைவிட்டுவிட வேண்டாம் என்ற விண்ணப்பத்தோடு மற்றொரு விண்ணப்பத்தையும் வைக்கின்றார். 'தளர்ந்துவிட்டேன் என்னைத் தாங்கிக் கொள்' என்று சொல்லும்பொழுது ஒரு புதிய

வேண்டுகோளாக அது வெளிப்படுகிறது. கைகொடுக்க வேண்டியவன் முன்னே நிற்கின்றான். தன் எதிரே இருப்பவனை அஞ்சாதே என்று சொல்லி அவனுடைய கைகளைப் பற்றிக்கொண்டு மனத்திற்குத் தென்பைத் தருகின்றான்.

இந்தச் செயலில் கைகொடுப்பவனின் உதவி ஐம்பது சதவிகிதம் என்றால் கை கொடுக்கப்பட்டவன் ஐம்பது சதவிகிதம் தென்புடையவனாக இருத்தல் வேண்டும். 'விடுதி கண்டாய்' என்று சொல்கின்றவரையில் இந்த அடிப்படைதான் பேசப்பெறுகிறது.

பாடலின் நான்காவது அடியில் இந்த நிலை மாறி விடுகிறது. கைகொடுக்கப்பட்டவனிடம் இருக்கவேண்டிய தென்பு முற்றிலுமாக அழிந்துவிடுகிறது. இப்பொழுது எதிரே இருப்பவன், கையைமட்டும் கொடுத்துப் பயன் இல்லை. கொடுத்த கையைப் பற்றிக் கொள்ளும் ஆற்றல்கூட இவனிடம் இல்லை. அந்த நிலையைத்தான் 'தளர்ந்தேன்' என்ற சொல்லால் குறிப்பிடுகிறார்.

தளர்ந்து விழப்போகும் ஒருவனை, மற்றவன் பின்னே வந்து இரண்டு கைகளாலும் தாங்கிக்கொள்ள வேண்டுமே தவிர, முன்னே நின்று ஒரு கையை நீட்டிப் பயன் இல்லை. இந்த நுண்ணிய கருத்தைத்தான் 'தளர்ந்தேன், என்னைத் தாங்கிக் கொள்ளே' என்று குறிப்பிடுகிறார்.

இத்தொடரில் மற்றொரு பொருளும் அமைந்திருக்கக் காணலாம். விழுகின்றவனுக்குத் தன்னிச்சை, தன்செயல் என்ற இரண்டும் இல்லை என்பதும் பின்னே இருந்து தாங்குகின்றவனிடம் முழுவதும் அடைக்கலம் ஆகி விட்டான் என்ற பொருளும் தொனிக்கின்றதல்லவா?

அடிகளார். தளர்ந்தேன், என்னைத் தாங்கிக்கொள்ளே என்று கூறும்போது தம்மை முழுவதுமாகத் தலைவனிடம் ஒப்படைத்துவிட்டார் என்ற கருத்தும் பெறப்படுகிறது

அல்லவா? இதன் விரிவுரையாகத்தான் 'அன்றே என்தன் ஆவியும் உடலும்' (திருவாச:500) என்ற பாடலும் பின்னர் வெளிப்படுகிறது.

தம்மைத் தாங்கிக்கொள்ள வேண்டும் என்று இறைவனை அழைக்கும் அடிகளார், 'சடையவனே' என்ற சொல்லை அற்புதமாகப் பயன் படுத்துகிறார். இறைவனைக் குறிக்க ஆயிரக்கணக்கான சொற்கள் இருக்க, சடையவனே என்று ஏன் சொல்ல வேண்டும்? அதற்கொரு காரணம் உண்டு. தம்மைத் தாங்கிக்கொள்ள வேண்டும் என்று அவரிடம் விண்ணப்பம் செய்யும்பொழுது கீழே விழும் எதனையும் தாங்கிக் கொள்ளும் அநுபவம் ஏற்கெனவே அவனுக்கு உண்டு என்பதை அறிவிக்கவே, இந்தக் கருத்துடை விளிச் சொல்லைப் பயன்படுத்துகிறார். மேலிருந்து விழும் கங்கையையே அநாயாசமாகத் தன் சடையில் தாங்கிக் கொண்டவன் அல்லவா அவன்? அகங்காரத்தோடு வந்த அவளையே தாங்கிக்கொள்ளும் அவன், தளர்ந்திருக்கும் அடியவராகிய தம்மைத் தாங்குதல் எளிதாகலின் 'தாங்கிக்கொள்ளே' என்றார். ஆதலின், 'சடையவனே' என்ற சொல்லைப் பயன்படுத்துகிறார்.

தம் குறை தீர்க்கவேண்டும் என்று மிக்க பணிவோடு நீத்தல் விண்ணப்பத்தைத். தொடங்கினார் அடிகளார். ஒவ்வொரு பாடலிலும் விட்டுவிடாதே என்ற வேண்டுகோளைத் திரும்பத் திரும்பச் சொல்லிக்கொண்டே வருகிறார். மனம் உருகிப் பாடுகின்ற இவர் ஒருமுறை அல்லது இருமுறை சொன்னால் போதாதா? ஐம்பது பாடல்களிலும் இதைச் சொல்லவேண்டிய காரணம் என்ன? நீத்தல் விண்ணப்பம் தொடங்கி, பல பாடல்களைப் பாடியபிறகும் தம்மை இறைவன் விட்டுவிட மாட்டான் என்ற நம்பிக்கை முழுவதுமாக வரவில்லை போலும். தம் குறை தீர்க்கவேண்டும் என்று கெஞ்சும் முறையில் பாடிக்கொண்டு வந்த அடிகளார், 152, 153-ஆம்

பாடல்களில் கெஞ்சும் முறையை அடியோடு மாற்றி விட்டார். இந்த இரு பாடல்களும் இறைவனுக்கு எச்சரிக்கைவிடும் முறையில் அமைந்துள்ளன. நீ எனக்கு அருள் செய்யாவிட்டால் உலகத்தார் உன்னைக் கண்டு சிரிக்கும்படியாகச் செய்துவிடுவேன் என்ற பொருளில் இரண்டு பாடல்களைப் பாடுகிறார். இது சற்றுப் புதுமையான திருப்புமுனை ஆகும்.

தம்மை இறைவனின் அடிமை என்று மனம், மொழி மெய்களால் ஒப்படைத்துவிட்ட ஒருவர், தம்முடைய எஜமானனுக்கு எச்சரிக்கை விடுவது எவ்வாறு பொருந்தும்?

இறைவனுக்குத் தம்மை அடிமையாக்கிக்கொண்ட நாவரசர் பெருமான்கூட திருநாகைக் காரோணத் திருவிருத்தத்தில் பின்வருமாறு பாடுகிறார்:

**வங்கமலி கடல் நாகைக்காரோணத்து எம் வானவனே**
**எங்கள் பெருமான் ஓர் விண்ணப்பம் உண்டு அது கேட்டு அருளீர்**
**கங்கை சடையுள் கரந்தாய்! அக் கள்ளத்தைமெள்ள மெள்ள உமை**
**நங்கை அறியின் பொல்லாது கண்டாய் எங்கள் நாயகனே**
**(திருமுறை: 4-103-8,9)**

அடக்கம், அமைதி என்பவற்றையே தம் வடிவாகக் கொண்ட நாவரசர் பெருமானுக்கு, இறைவனையே கேலி செய்யும் இந்தத் துணிவு எவ்வாறு வந்தது?

முழுதும் இறையடிமை பூண்ட நாவரசர், மணிவாசகர் ஆகிய இருவருமே இறைவனை எச்சரித்தும், கேலி செய்தும் பாடினார்கள் என்றால், தோழமை பூண்ட சுந்தரரைப் பற்றிக் கேட்கவும் வேண்டுமோ? கண்களை இழந்த நிலையில், சுந்தரர் மனம் மிகுதியும் நொந்து இறைவனைக் குறைகூறிப் பாடிய பாடல்கள் பலப்பலவாகும்.

பிழையுளன பொறுத்திடுவர் என்று அடியேன்
பிழைத்தக்கால்
பழியதனைப் பாராதே படலம் என் கண் மறைப்பித்தாய்
(திருமுறை: 7-89-1)

அன்றில் முட்டாது அடையுஞ் சோலை ஆரூர் அகத்தீரே
கன்று முட்டி உண்ணச் சுரந்த காலி அவை போல
என்றும் முட்டாப் பாடும் அடியார் தம் கண் காணாது
குன்றில் முட்டிக் குழியில் வீழ்ந்தால் வாழ்ந்து போதீரே
(திருமுறை: 7-95–3)

விற்றுக் கொள்வீர் ஒற்றி யல்லேன் விரும்பி ஆட்பட்டேன்
குற்றம் ஒன்றும் செய்தது இல்லை கொத்தை ஆக்கினீர்
எற்றுக்கு அடிகேள் என் கண் கொண்டீர் நீரே பழிப்பட்டீர்
மற்றைக் கண்தான் தாராது ஒழிந்தால் வாழ்ந்து போதீரே
(திருமுறை: 7–95–2)

பாரூர் அறிய என்கண் கொண்டீர் நீரே பழிப்பட்டீர்
(திருமுறை: 7-95-11)

அடிமைத் திறம் கொண்ட இருவர், தோழமைத் திறம் போற்றிய ஒருவர் ஆகிய மூவருமே இறைவனை எச்சரித்தல், அவனிடம் பிணங்கிக்கொள்ளுதல், கேலி செய்தல் ஆகிய செயல்களில் ஈடுபடுவதைக் கண்டோம். இதன் அடிப்படைபற்றிச் சற்றுச் சிந்திப்பது நலம்.

பெரிய அளவில் இறை நம்பிக்கை உடையவர்கள் இரு வகைப்படுவர். ஒரு சாரார் ஓரளவு அறிவின் துணை கொண்டு அவனைப்பற்றிய ஆய்வில் தொடங்கி, இறுதியாக அனைத்திற்கும் மூல காரணம் அவன்; எங்கும் எல்லாவற்றிலும் ஊடுருவி நிறைந்தும் அவற்றை விட்டு வெளியே தனித்தும் நிற்பவன் அவன், என்பதை அறிகின்றார்கள். இந்த ஞானத்தின் அடிப்படையில் இப் பெருமக்களுக்கு இறை பக்தி அல்லது இறையுணர்வு ஏற்படுகிறது. எந்த நிலையிலும் இறைவன் மேம்பட்டவன்

என்ற நினைவில் உள்ள இவர்கள், அவனிடம் உறவு கொள்ளவோ, தமக்குரியவனாக அவனைச் செய்து கொள்ளவோ முற்படுவதே இல்லை.

இதனெதிராக, மற்றொரு சாரார் ஓரளவு அறிவின் துணை கொண்டு அவனை அறிய முற்பட்டு அந்த ஆய்வின் முடிவில் தம் அறிவை, உதறித் தள்ளி விடுகின்றனர். இவர்கள், உள்ளத்தில் நிறையும் அன்பு காரணமாக அனைத்தையும் கடந்து நிற்கின்ற கடவுளைத் தமக்கு உறவுடைய பொருளாகக் கருதத் தொடங்கி விடுகின்றனர். இந்த உறவுமுறை முதிர்ந்தவுடன் இறைவனைத் தமக்குரியவனாகவே கருதத் தொடங்கி விடுகின்றனர். உறவின் அடிப்படையில் தோன்றிய இந்த உரிமை, முதிர்ச்சி அடைய அடைய அவனைத் தாயாக, தந்தையாக, குழந்தையாக, காவலனாக, நண்பனாக, எஜமானனாக, தமக்கே உள்ள உரிமைப் பொருளாக (காதலனாக) இவர்கள் கருதத் தொடங்கிவிடுகின்றனர். இதனைப் பொதுவாக மேனாட்டாரும், சிறப்பாகக் கிறித்துவர்களில் ஒரு பகுதியினரும் தனி உரிமைக் கடவுட்கொள்கை (Concept of Personalised God) என்று கூறுவர்.

தனி உரிமை உறவு முறை ஏற்பட்டதனால்தான் பின்வரும் பாடல்கள் இப்பெருமக்களிடம் தோன்றலாயின:

என்னை வருத்திலையேல் இடும்பைக்கு இடம் யாது
சொல்லே!
(திருமுறை : 4-105-2,3)

யான் செய்யும் துரிசுகளுக்கு உடனாகி
(திருமுறை: 7-51-10)

சங்கிலிக்கா என் கண் கொண்ட பண்ப
(திருமுறை: 7-69-3)

குற்றமே செயினுங் குணமெனக் கொள்ளும்
கொள்கையால் மிகைபல செய்தேன்
(திருமுறை: 7-69-6)

குன்றே அனைய குற்றங்கள் குணமாம் என்றே நீ
கொண்டால்
என்தான் கெட்டது இரங்கிடாய் எண்தோள் முக்கண்
எம்மானே
(திருவாச: 498)

திருவாசகத்தில் உள்ள பாடல்களை ஆழ்ந்து கற்பவர்களுக்கு ஓர் அடிப்படையான ஐயம் மனத்தில் தோன்றினால், அது இயல்பே ஆகும். சிவபுராணத்திலேயே 'இமைப்பொழுதும் என் நெஞ்சில் நீங்காதான்' என்றும், அடுத்து வரும் பகுதிகளில், 'என் உள் புகுந்து ஆண்டான்' என்றும் 'என்னை ஆண்டாய்க்கு' என்றும், 'புகுந்து நின்றான்' என்றும், பலபடியாகப் பாடிய அடிகளார், நீத்தல் விண்ணப்பம் முழுவதிலும் 'என்னை கைவிட்டுவிடாதே' என்று பாடுவது முன்னுக்குப் பின் முரணாக இருப்பதுபோல் தோன்றலாம்.

ஆழ்ந்து நோக்கினால், இந்தக் கூற்றுக்களில் முரண்பாடு ஏதும் இல்லை என்பது தெரியும். திருப்பெருந்துறை நிகழ்ச்சி முற்றாக இவரை இறையனுபவத்தில் மூழ்க வைத்தது என்பதில் எவ்விதமான ஐயமும் இல்லை. அந்த அடிப்படையில்தான் 'இமைப் பொழுதும்' போன்ற தொடர்கள் இடம்பெற்றன.

இந்த அனுபவத்திலேயே அடிகளார் இருந்திருப்பின், திருவாசகம் என்னும் மனித குலத்தை உய்விக்கும் பாடல்கள் தோன்றியிருக்க முடியாது. அந்த அனுபவத்திலேயே முழுவதுமாக இருந்திருப்பின் 'சிரிப்பார், களிப்பார்' என்ற முறையில் அடிகளாரின் வாழ்க்கை கழிந்திருக்கும். மனித வாழ்க்கையில் அடையவேண்டிய மிகப் பெரிய ஒன்றைத் திருப்பெருந்துறையில் அவர்

பெற்றுவிட்டார். பின்வரும் சந்ததியினராகிய நமக்கு அதனால் என்ன பயன்? நமக்குப் பயன் விளைய வேண்டுமானால் திருவாசகப் பாடல்கள் தோன்ற வேண்டும். அந்தப் பாடல்கள் தோன்றவேண்டுமானால் மூழ்கிய இறையனுபவத்திலிருந்து அடிகளார் வெளிப்பட வேண்டும்; வெளிப்பட்ட பிறகு அந்த அனுபவத்தை நினைந்து நினைந்து, உருகி உருகிப் பாட வேண்டும்.

இறையனுபவத்தில் இருந்துகொண்டே அது போய்விட்டதாகக் கற்பனை செய்துகொண்டு பாடமுடியு மேனும், அவ்வாறு பாடியிருப்பின் அது திருவாசகமாக இராது; வெறுவாசகமாகத்தான் இருக்கும். அதனாலேயே இறைவன் அடிகளாருக்குக் கொடுத்த அனுபவத்தை உண்மையிலேயே திரும்ப வாங்கிக்கொண்டான்.

அனுபவம் தம்மை விட்டுப் போய்விட்டது என்ற உணர்வில் பாடியதுதான் நீத்தல் விண்ணப்பம். நீத்தல் விண்ணப்பம் பாடிக்கொண்டுவரும்போதே அந்த அனுபவம் கொஞ்சம் கொஞ்சமாக மீட்டும்வர, முழுவதுமாக அது சித்திக்கவில்லை என்ற மனத்தாங்கலில்தான் 152, 153-ஆம் பாடல்கள் தோன்றுகின்றன.

மனத்தாங்கல் காரணமாக இரண்டு பாடல்களில் ஏசிவிட்டாலும் தாம் ஏசினது பிழை என்று கருதுகிறார் அடிகளார். ஏன்? வழியோடு போன தம்மை இழுத்துப் பிடித்து அருள் செய்து, அனுபவத்தைத் தந்தான். அப்படித் தந்தது அவன் கருணை காரணமாகவே தவிரத் தம் தகுதி காரணமாக அன்று என்பதை அடிகளார் உணர்ந்துள்ளார். கருணை காரணமாகத் தந்த ஒன்றைத் தாம் வைத்துக் காப்பாற்ற முடியாமையால்தான் தம்மைக் கைவிட்டு விடாதே என்று கெஞ்சினார். அந்தக் கெஞ்சல் பயனளிக் காதபோது இரண்டு பாடல்களில் ஏசினார். ஏசுகின்ற பாடல்கள் வெளிவருகின்ற அதே நேரத்தில் அடிகளாரின்

ஆழ் மனத்தில் ஓர் உண்மை புலப்படுகிறது. தம் குறை காரணமாக அனுபவம் கைவிட்டுப்போக, அனுபவத்தைத் தந்தவனை ஏசுவதற்கு என்ன காரணம்? காரணம் ஒன்றும் இல்லை. எனவே, ஏசியது தவறு என்று உணர்கிறார். அப்பிழையைச் செய்ததற்கு மன்னிப்புக் கோரும் வகையில்,

**ஏசினும் யான் உன்னை ஏத்தினும் என் பிழைக்கே குழைந்து**
**வேசறுவேனை விடுதி கண்டாய்**

என்று பாடுகிறார். (வேசறுதல் = கழிவிரக்கம்)

இப்பாடலின் முதலடி 'ஏசினும் யான் உன்னை ஏத்தினும் என் பிழைக்கே குழைந்து வேசறுவேன்' என்று நிற்கின்றது. கொண்டுகூட்டிப் பொருள் செய்தால், யான் உன்னை ஏசினும், ஏத்தினும் என் பிழைக்கு இரங்கி வேசறுவேன் என்று நிற்கும். ஏசினும், ஏத்தினும் என்பவை முற்றிலும் முரண்பட்ட சொற்களாகும். ஏத்துதல் என்பது ஒருவருடைய பண்புகளை உயர்த்திச் சொல்லி, அதன் பயனாக அவர் உயர்ந்து நிற்கின்றார் என்ற பொருளைத் தரும். இதன் எதிராக, ஏசுதல் என்பது அவரிடம் இல்லாத, அல்லது உள்ள குறைகளைப் பெரிதுபடுத்திக் கூறி, அவற்றால் அவர் தாழ்ந்து நிற்கின்றார் என்று பழிப்பதாகும். முற்றிலும் மாறுபட்ட அந்த இரண்டு சொற்களையும் ஒன்றாக அடுக்கி, 'உம்'மையும் கொடுத்துப் பாடுகிறார் அடிகளார்.

ஒரு வேளை ஏசிவிட்டால் பின்னர் அதனை நினைந்து, தாம் செய்தது பிழை என்று உணர்ந்து கழிவிரக்கம் கொள்வது நியாயமே ஆகும். ஆனால், ஏத்திப் புகழ்ந்த பிறகு 'என் பிழைக்கே வேசறுவேன்' என்று கூறுவது எவ்வாறு பொருந்தும்? இதனைப் பாடியவர் இறையருளில் தோய்ந்த தலையாய கவிஞர் ஆவார். எனவே, அவரது ஒவ்வொரு சொல்லையும் சிந்தித்துப்

பொருள்கொள்ள வேண்டும். 'யான்', 'உன்னை' என்ற இரண்டு சொற்களும் 'ஏசினும்' என்ற சொல்லுக்கு முன்னர்க்கூட வந்திருக்கலாம். அவ்வாறு மாற்றிப் பாடி யிருந்தாலும் இதே பொருளைத்தான் தரும். அப்படியிருக்க 'ஏத்தினும்' என்ற சொல்லிற்கு முன்னர் 'யான்' 'உன்னை' என்ற சொற்களைப் பெய்ததன் நோக்கம் என்ன? ஏசல், ஏத்தல் என்ற இரண்டிலும் ஏசப்படுபவனும் ஏத்தப் படுபவனும் ஒருவனாக இருக்கின்றான்; ஏசுகின்றவரும் ஏத்துகின்றவரும் ஒருவராகவே உள்ளார். எனவே, எதிரே ஒருவன், இப்புறம் ஒருவர் என்ற இருவரைத் தவிர மூன்றாவது ஒருவருக்கு அங்கு இடமே இல்லை.

எதிரே உள்ளவனிடம் குறைகள் இல்லாவிட்டாலும், தமக்கு அவன் ஒன்றும் துயர் செய்யாவிட்டாலும், தம் துயரம் காரணமாக, எதிரே உள்ளவனிடம் இல்லாத குறைகளைச் சொல்லி ஏசுதல் மனித மனத்தின் குறைபாடுகளில் ஒன்றாகும். அவன்பால் குறை ஒன்றும் இல்லை என்று அறிந்தவுடன் தாம் ஏசியது தவறு என்று ஏசியவன் உணர்கின்றான். இதில் ஒன்றும் பிரச்சினை இல்லை.

அடுத்தபடியாக உள்ள, ஏத்துதலில் எங்கிருந்து பிழை வரும்? யாரோ ஒருவனை ஏத்தினான் என்றால், ஒன்று அவனிடம் உள்ள நற்பண்புகளை ஏத்தி இருக்க வேண்டும். அல்லது வேறு பயன் கருதாது அவனிடம் இல்லாத, காணப்படாத நற்பண்புகளை அவன்மேல் ஏத்திப் புகழ்ந்திருக்கவேண்டும். இதில் எம்முறையில் ஏத்தினாலும் ஏத்துபவன் எப்பிழையும் செய்யவில்லை. எனவே, வருந்த வேண்டிய தேவையும் இல்லை.

ஆனால், அடிகளாரின் பாடல், 'ஏத்தினும் என் பிழைக்கே இரங்கி' என்று தெளிவாகவே உள்ளது. இதனை விளங்கிக்கொள்ள வேண்டுமானால் முன்னர் உள்ள இரண்டு சொற்களையும் கூர்ந்து கவனிக்க வேண்டும்.

ஏத்துபவர் அருட்கடலில் மூழ்கி எதிரே உள்ள பொருளினை ஏத்தத் தொடங்கினால், சில விநாடிகளில் ஏத்துபவர் அங்கே இருக்கமாட்டார். அதுதான் உண்மையான ஏத்துதல். இவ்வாறில்லாமல் ஏத்துபவர். தம் தனித்தன்மையை மறவாமல், 'நான் ஏத்துகிறேன்' என்ற தன்முனைப்போடு ஏத்தினால், சொற்கள் ஏத்துவதாக இருக்குமேதவிர 'நான்' என்ற ஆணவம் அழியாத காரணத்தால், அது உண்மையான ஏத்துதலாக இராது.

அடிகளாரைப் பொறுத்தவரை 'தான்' என்பது முற்றும் அழியவில்லை என்பதைக் குறிப்பாக உணர்த்தவே 'யான்' உன்னை ஏத்தினும் என்றார். இவ்வாறு பொருள் கொள்வது ஒன்று.

இந்த நுணுக்கத்தை நன்கு புரிந்துகொண்ட வள்ளற்பெருமான் திருவாசகத்தைப்பற்றிப் பாடும்போது நின் வாசகத்தை 'நான்' கலந்து பாடுங்கால் என்று பாடி அருளினார். இறைவனை ஏத்தினாலும் திருவாசகத்தைப் பாடினாலும் 'நான்' என்பது தனித்து நிற்காமல் அந்த ஏத்துதலிலும் பாடுதலிலும் கரைந்துவிட (கலந்து) வேண்டும் என்பதே கருத்தாகும்.

இக்கருத்தைக் 'கடுக்கன்' தியாகராஜ தேசிகர் தாம் பாடிய திருவேரகப் பதிக்கத்தில் 'ஒரு தரம் சரவணபவா' என்று தொடங்கும் பாடலில் மிக நுணுக்கமாக வைத்துக் காட்டுகிறார். 'பரிவாகவே அனந்தம் தரம் சரவணபவா என்று நான் சொல்லியும் எண்ணியது பலியாது இருப்பது ஏனோ?' என்ற பகுதியில் அக்குற்றம் என்ன என்பதை விளக்குகிறார். பரிவாகச் சொல்லியது உண்மை; அனந்தந் தரம் சொல்லியதும் உண்மை; அது பலியாமல் போனதும் உண்மை. இது ஏன் என்பதற்குக் காரணம் ஒரு சொல்லில் சுட்டப்பெறுகிறது. 'நான் சொல்லியும்' என்பதில் உள்ள 'நான்' என்ற சொல்தான் அக்குறையைச் சுட்டி நிற்கிறது.

அடிகளார் பாடலில் 'யான் உன்னை ஏத்தினும்' என்ற தொடரில் 'யான்' இருத்தலால், ஏத்துதல் பயனற்றதாகிவிடுகிறது. வேறு வகையாகக் கூறுமிடத்து அந்த ஏத்துதலே பயனற்ற சொற் கூட்டமாக அமைந்து விடுகிறது. பயனில்லாத சொற்களைக் கூறுதல் பிழை. ஆதலின், 'ஏத்தினும் என் பிழைக்கே இரங்கி' என்றார்.

இவ்வாறு இல்லாமல், வேறு ஒருவகையாகவும் பொருள்கொள்ளலாம். எல்லை கடந்து நிற்கும் ஒருவனுடைய புகழை ஏத்திக் கூறத்தொடங்கும்பொழுது நம்மையும் அறியாமல் ஒரு பிழை நேர்ந்துவிடுகிறது. புகழ்ந்துகொண்டே செல்லும்பொழுது அப்புகழுக்கு ஓர் எல்லை வகுத்துவிட்டதாக மனத்திடை ஓர் எண்ணம் தோன்றக்கூடும். சாதாரண மனிதர்களைப் பொறுத்த மட்டில் அவர்கள் புகழுக்கு ஓர் எல்லை உண்டு. ஆதலின், இவ்வாறு கூறுவதில் தவறு ஒன்றும் இல்லை. ஆனால், எல்லையற்ற புகழுடைய ஒருவனைப் புகழத் தொடங்கி, ஓர் எல்லைக்கு வந்துவிட்டோம் என்று நினைத்தால், அது பெருந்தவறாகும். இறைவனை ஏத்துதலாகிய நற்செயலே ஒரு பிழைக்குக் காரணமாகி விடுகிறது.

இந்த உண்மையைத் திருமுருகாற்றுப்படை நன்கு விளக்குகிறது. முருகப் பெருமானைத் தேடிச் செல்கின்ற பக்தன் ஒருவன், இறுதியில் அவன் இருக்கும் இடத்தைக் கண்டதாக அவனை ஏத்தத் தொடங்குகிறான்.

'மலைமகள் மகனே! மாற்றோர் கூற்றே!' என்ற முறையில் ஏத்தத் தொடங்கி, அவன் புகழைச் சொல்லிக் கொண்டே வந்தான். திடீரென்று அந்தப் பக்தனின் மனத்தில் ஓர் எண்ணம் தோன்றிற்று. என்னுடைய அறியாமை இருந்தவாறு என்னே! எத்தனை பிறவிகள் எடுத்தாலும், அத்தனை பிறவிகளிலும் தொடர்ந்து அவனுடைய புகழைக் கூறிக்கொண்டு வந்தாலும் அது கூறிமுடிந்ததாக ஆகாதே என்று உணர்ந்தான். ஏத்தலில்

கூடப் பிழை உள்ளது என்பதை உணர்ந்த அந்தப் பக்தன், 'ஐய! நின் அளந்து அறிதல் மன்னுயிர்க்கு அருமையின் நின்னடி உள்ளி வந்தனன், நின்னொடு புரையுநர் இல்லாப் புலமையோய்' (திருமுருகாற்றுப்படை: 78-79) என்று கூறிவிட்டு, வாயை மூடிக்கொண்டான். புகழ்தலில்கூடப் பிழை உண்டு என்று உணர்ந்தவன் வாயை மூடிக் கொண்டவுடன் முருகப்பெருமான் வெளிப்பட்டு 'அஞ்சல் ஓம்புமதி! அறிவல் நின் வரவு!' (திருமுருகாற்றுப்படை:291) எனக் கூறிகான் என்ற முறையில் திருமுருகாற்றுப்படை ஒரு புதிய கருத்தைப் பேசுகிறது.

திருமுருகாற்றுப்படையிலும் முருகனைப் புகழ்ந்து பாடியவன் முதலில் தன்னை மறக்கவே இல்லை. தன்னை மறவாமல் 'நான்' என்ற எண்ணத்துடன் எத்தனை புகழ்ந்தாலும் முருகன் அங்கே தோன்றவில்லை. அதனைப் பிழையெனக் கண்ட பக்தன் 'நான்' என்பதை மறந்து தன் வாயை மூடியவுடன் முருகன் வெளிப்பட்டான். இந்த அடிப்படையில் அடிகளாரின் 'யான் உன்னை ஏத்தினும் என் பிழைக்கே இரங்கி' என்ற அடிக்குப் பொருள் கொள்ளலும் ஒருவகையாகும்.

இனி, மூன்றாவது வகையாகப் பொருள் கொள்வதும் ஒன்று. முக்குண வசப்பட்ட ஒருவரைமட்டும்தான் ஏத்தவோ இகழவோ முடியும். குணங்குறி கடந்தவனாகிய பரம்பொருளை ஏத்தினாலும் இகழ்ந்தாலும் அப்பொருள் இதனால் பாதிக்கப்படு வதில்லை. அப்பொருளின் இயல்பை அறியாது ஏத்தவோ இகழவோ செய்தால், அது செய்தவர்களைப் பாதிக்குமே தவிர அப்பொருளைப் பாதிக்காது. ஒரு குறிப்பிட்ட நிலையை அடைந்தவர்கள் ஏத்தல், இழித்தல் என்ற இரண்டிலும் பொருளில்லை என்பதை உணர்ந்து. வாய் மூடி மௌனியாக இருந்துவிடுகின்றனர். ஏத்துபவரின் உள்ளக்கிடக்கை மட்டமானதாகவும் இருக்கக்கூடும்; இகழ்பவரின்

உள்ளக்கிடக்கை மிக உயர்ந்ததாகவும் இருக்கலாம். எனவே, ஏத்தல், இகழ்தல் என்ற இரண்டையும் தாங்கிவரும் சொற்கள் பொருளற்றனவாகி விடுகின்றன. இதனை மனத்திற் கொண்டுதான் அருணகிரிப் பெருமான் 'முத்தமிழால் வைதாரையும் அங்கு வாழவைப்போன்' (கந்த. அல: 22) என்று பாடுகிறார்.

இக்கருத்தை மனத்திற் கொண்டு பார்த்தால் அடிகளாரின் பாடலுக்குப் புதிய விளக்கம் கிடைக்கின்றது. 'என் பிழைக்கே இரங்கி வேசறுவேன்' என்பது சதாசர்வ காலமும் அவருடைய அகமனத்தில் இருந்த எண்ணமாகும். ஆனால், அவருடைய வாய்மட்டும் சில நேரங்களில் ஏத்திற்று. இந்த நிலையில் பாடலுக்குப் பின்வருமாறு பொருள் கூறவேண்டும்: 'ஐயனே என் ஆழ் மனத்தில் இடைவிடாமல் என் பிழையை எண்ணிக் கழிவிரக்கம் கொண்டு இனி என்னே உய்யுமாறு என்று எண்ணிக் கொண்டிருக்கிறேன். அந்த ஆழ்மனத்தோடு தொடர்பு இல்லாமல் வாயளவில் ஏசலும் ஏத்தலும் நடை பெறுகின்றன. எனவே, இவற்றைப் பொருட்படுத்தாமல் பிழைக்கு இரங்கி வேசறும் என்னை விட்டுவிடாமல் காப்பாயாக' என்று பொருள்கூறுதலும் ஒரு வகையாகும்.

அடிகளாரின் உளப்பாங்கை அறியவும், திருப்பெருந்துறை அனுபவத்திற்குப் பிறகு அவர் வளர்ச்சி முறையை அறியவும் நீத்தல் விண்ணப்பம் பேருதவி புரிகின்றது என்பதை மனத்துட் கொண்டு மறுபடியும் நீத்தல் விண்ணப்பத்தைப் படிப்பது நலம்.

## திருவெம்பாவை

திருவெம்பாவைபற்றிய சில செய்திகள் முன்னரே தரப்பெற்றுள்ளன. இந்த இருபது பாடல்களையும் ஒரே நேரத்தில் வரிசையாகப் படித்தால் அதிலொரு புதுமையைக் காணமுடியும்.

மணிவாசகப் பெருமானுக்கு ஏறத்தாழ ஒரு நூற்றாண்டுக்கு முற்பட்டவராகிய கோதைநாச்சியார் தாம் பாடிய திருப்பாவையில் பாவை நோன்பு, அந்த நோன்பிற்கு வேண்டிய பொருள்கள், நோன்பு நோற்கும் முறை ஆகியவைபற்றி விரிவாகப் பேசுகிறார். ஆனால், அடிகளாரின் திருவெம்பாவையில் நோன்பைப்பற்றிய எவ்விதக் குறிப்பும் இல்லை. இதை மனத்துட் கொண்டு பார்த்தால், பழைய பாவை நோன்பின் ஒரேயொரு பகுதியைமட்டும் அடிகளார் எடுத்துக்கொண்டுள்ளார் என்பது தெரியவருகிறது.

விழித்தெழுந்த பல பெண்கள் ஒன்றுகூடி இறைவன் புகழைப் பாடிக்கொண்டு தெருவிலே சென்று, தங்களுள் ஒருத்தியைக் காணாமையால் அவள் இல்லம் சென்று அவளை எழுப்புவதாக உள்ள பகுதி. திருப்பாவை, திருவெம்பாவை என்ற இரண்டிற்கும் பொதுவாகவுள்ளது. இதனைக் கூறவரும் திருவெம்பாவையின் முதல் எட்டுப் பாடல்கள் வேறு ஏதோ ஒரு கருத்தை மனத்துட் கொண்டு, இந்த மரபையும் ஏற்றுக்கொண்டு பாடியதுபோலத் தெரிகிறது.

மனித மனம் எப்பொழுதும் ஒரே நிலையில் நின்று இயங்குவதில்லை. உறங்குகின்ற பெண்ணைப்பற்றிக் கூறவரும் திருவெம்பாவை, அப்பெண் சாதாரண காலத்தில் எப்பொழுதும் என்ன நினைத்தாள், என்ன பேசினாள் என்பதை ‘இராப்பகல் நாம் பேசும்போது எப்போதும் பாசம் பரஞ்சோதிக்கு என்பாய்’ என்ற சொற்களாலும் ‘முன்வந்து எதிர் எழுந்து என் அத்தன் ஆனந்தன் அமுதன் என்று அள்ளூறித் தித்திக்கப் பேசுவாய்’ என்ற சொற்களாலும் மிக அழகாக எடுத்துரைக்கின்றது. மேலும், அப்பெண்கள் ‘எத்தோ நின் அன்புடைமை எல்லோம் அறியோமோ’ என்று கூறு முகத்தால், அவளின் அன்பின் ஆழத்தைத் தாம் நன்கு

அறிந்திருப்பதாகக் கூறுகின்றனர். உறங்குகின்ற பெண் சாதாரண காலத்தில் தோழியருடன் விளையாடிக்கொண் டிருக்கும்போது பேசிய பேச்சு, அவள் அன்பின் ஆழத்தையும், அவளின் நெஞ்சு உரத்தையும், அவள் தன்னம்பிக்கையையும் எடுத்துக் காட்டுவதாய் அமைந்து உள்ளது. 'மால் அறியா நான்முகனும் காணா மலையினை நாம்போல் அறிவோம்' என்று கூறியதால் இவை விளங்கு கின்றன. தனி ஒருத்தி தன்னைப்பற்றிப் பேசும் பொழுது, நான் என்று கூறாமல் தன்மைப் பன்மை வாய்பாட்டால் நாம் அறிவோம் என்று கூறியது ஏன்? மலைஇலக்காக உள்ள பொருளை அறிந்ததால் ஏற்பட்ட உள்ளப் பெருமி தத்தின் விளைவாக வெளிப்பட்ட சொற்களாகும் இவை.

'நாம்போல் அறிவோம்' என்ற தொடரில் போல் என்பதை அசைநிலையாக்கி நாம் அறிவோம் என்றே பலரும் பொருள் கூறியுள்ளனர். அவ்வாறு கொள்ளாமல் போல் என்பதற்குப் போன்றவர்கள் என்று பொருள் கூறினாலும் தவறில்லை. அப்படிப் பொருள் கொள்ளும் போது 'நாம்போல்' என்பதற்கு நம்போன்றவர்கள் என்று பொருள் கொள்ள வேண்டும்.

மேலே கூறிய மூன்று பகுதிகள் உறங்குகின்றவளின் உள்ளக் கிடக்கையையும் அவள் பேச்சுத் திறனையும் எந்நேரமும் இறையன்பில் ஊறித் திளைப்பவள் என்பதையும் நன்கு விளக்கக் காணலாம்.

அப்படிப்பட்ட ஒருத்தி இப்பொழுது ஆழ்ந்த உறக்கத்தில் இருக்கின்றாள். வாயிலில் நின்று தோழிமார் உரக்கப் பாடி எழுப்பினாலும் எழுந்ததாகத் தெரியவில்லை. ஆனால், அவளுடைய உறக்கம் ஏனையோர் உறக்கம் போலச் சோம்பல் காரணமாக விளைந்ததாகத் தெரிய வில்லை. அதன் எதிராகத் திருவெம்பாவையின் முதற்

பாடலிலேயே அவளது உறக்கத்தின் சிறப்புப் பேசப் பெறுகிறது.

தோழிமார்கூட்டம் இறைவன் புகழைப் பாடிக் கொண்டு தெருவழியே வந்து இவள் வீட்டு முன்றிலில் நிற்கின்றது. அப்பொழுது உள்ளே என்ன நடைபெறுகிறது என்பதைத் தோழிகளில் ஒருத்தி கூர்ந்து கவனித்துச் சொல்லுகின்றாள். 'வாழ்த்தொலி வீதிவாய்க் கேட்டலும் விம்மிவிம்மி மெய்ம்மறந்து கிடந்தாள்' என்று கூறுகிறாள் அத்தோழி. எனவே, உள்ளிருப்பவளின் உறக்கம், ஏனையோரின் உறக்கம்போன்றது அன்று என்பது வெளிப் படுகின்றது. இறைவன்பற்றிய ஒலி காதில் நுழைகிறது; உடனே விம்முகிறாள், மெய்ம்மறக்கின்றாள்; அதன் விளைவாக உடல் செயலற்றுக் கிடக்கின்றது.

இறைவன் புகழைக் காதால் கேட்டவுடன் சமாதி நிலையை அடையும் பகவான் இராமகிருஷ்ணரின் வாழ்க்கை, இப்பகுதிக்கு விளக்கம் தருகிறது. இப்படிப்பட்ட ஒருத்தியின் சமாதி நிலையை நன்கு புரிந்துகொள்ளாமல் தோழிமார் நையாண்டி செய்கின்றனர்.

சமாதி நிலை கலைந்தபொழுது இவளும் புறத்தே நிற்கின்ற தோழிமாரைப் பார்த்து, 'எல்லோரும் வந்து விட்டனரோ? நீங்கள் பழை அடியீர், நாங்கள் புத்தடியோம்' என்றெல்லாம் பேசுகிறாள்.

சமாதி நிலைக்குச் செல்லக்கூடிய ஒருவரைப் புறத்தே உள்ளவர்கள் எளிதில் புரிந்துகொள்வது இயலாத காரியம். அந்த நிலைதான் இங்கேயும் நிகழ்கின்றது. முதல் பாடலிலேயே கேட்டல், விம்முதல், மெய்ம்மறத்தல். கட்டைபோல் கிடத்தல் என்ற சமாதி நிலைக்கான எல்லா நிலைகளும் பேசப்பெற்றுவிட்டமையின், உள்ளே உறங்குபவள் சோம்பலில் உறங்கவில்லை என்பதையும், புறத்தே நிற்கின்றவர்களும் அவளுடைய உண்மை

நிலையைப் புரிந்துகொள்ளவில்லை என்பதையும் அடிகளார் விளங்கவைக்கின்றார்.

விழித்துக்கொண்டிருக்கும்போது தன் உறுதிப்பாட்டை வெளிப்படுத்திப் பேசிய அவள், தனக்குச் சமாதிநிலை கைகூடியதைத் தோழிமாரிடம் கூறினாளில்லை. அத் தோழிமாரும் அவளது வளர்ச்சியை அறிந்தார்களில்லை. எனவேதான், உறங்குகின்றவளைப் 'பொக்கங்களே பேசும் பாலூறு தேன்வாய்ப் படிறீ' என்று எள்ளி நகையாடு கின்றனர். இதன் பிறகு, உறங்குகின்றவள் வெளியே எழுந்துவந்து, எல்லோருடனும் சேர்ந்து நீராடச் செல்வதாகப் பாடல்கள் அமைகின்றன.

உறங்கி எழுந்து வந்த அவள், புறத்தே உள்ளவர்களுக்குத் தலைமை வகித்து நீராட அழைத்துச் செல்கிறாள் என்று நினைப்பதில் தவறில்லை.

ஒருத்தி உள்ளே உறங்குகின்றாள், அவளை ஏனையோர் வந்து எழுப்புகின்றனர் என்று சொல்லப்பட்ட பழைய மரபுபற்றியே இதுவரை பலரும் பொருள் கூறியுள்ளனர். இவ்வாறு கூறுவதில் உள்ள குறைபாட்டை உணர்ந்த ஒருவர் நவ கன்னிகைகள், ஒருவரை ஒருவர் எழுப்ப முற்பட்டனர் என்று பொருள் கண்டார். அவ்வாறு கூறுவதால் தெய்வங்களாகிய நவ கன்னிகைகளைக்கூட இந்த உரையாசிரியர் தூங்குமூஞ்சிகளாகக் காட்டிவிட்டார்.

இவை அனைத்தும் மணிவாசகரின் பாடல் போக்கிற்குப் பொருந்தி வாராமையின் முன்னர்க் கூறிய முறையில் சிந்தனை செல்லலாயிற்று.

தெருவில் பாடிக்கொண்டுவந்த மகளிர் இறைவன் புகழைப் பாடினர் என்பது உண்மைதான். ஆனால், பாடுகின்ற அவர்கள் வாழ்க்கையில் என்ன குறிக்கோளை வைத்திருந்தனர், என்ன வேண்டிக்கொள்ள விரும்பினர்

என்பது தெளிவாகத் தெரியவில்லை. பெண்களாதலின் அவர்கள் மனத்தில் இயல்பாகத் தோன்றும் சில விருப்பங்களைப் பிறர் அறிய இறைவனிடம் வெளிப் படையாகக் கூறிடும் மனத் திடம் அவர்கள்பால் இல்லை போலும். அதனால்தான் சமாதிநிலை கலைந்துவந்த ஒருத்தி தம் தோழிமார்களின் உள்ளத்தில் வேர்விட்டு முளைத் திருக்கும் ஆசைகளுக்கு வடிவு கொடுக்கும் முறையில் அவர்களையும் உளப்படுத்திக்கொண்டு இறைவனிடம் அவர்கள் சார்பாகப் பின்வருமாறு வேண்டுகிறாள்:

உன்னைப் பிரானாகப் பெற்ற உன் சீர் அடியோம்
உன் அடியார் தாள் பணிவோம்; ஆங்கு அவர்க்கே
பாங்கு ஆவோம்;
அன்னவரே எம் கணவர் ஆவார்; அவர் உகந்து
சொன்ன பரிசே தொழும்பாய்ப் பணி செய்வோம்
(திருவாச: 163)

என்ற இப்பாடற்பகுதி அனைவரும் சேர்ந்து பாடியது போலக் காணப்படினும் சமாதிநிலை கலைந்து வந்தவளின் சொற்களாகவே அமைந்துள்ளது. இவ்வாறு நினைப்பதற்கு இரண்டு காரணங்கள் உள்ளன. 'உன்னடியார் தாள் பணிவோம், ஆங்கு அவர்க்கே பாங்கு ஆவோம்' என்ற இரண்டும் இம்மகளிரின் செயற்பாடுகள் ஆகும். அவர்கள் மன உறுதி காரணமாகப் பணிவோம், பாங்காவோம் என்று கூறியது நியாயமானதே ஆகும்.

ஆனால், 'அன்னவரே எம் கணவர் ஆவார்' என்று சொல்வதற்கு இவர்களுக்கு என்ன உரிமை இருக்கிறது? தங்களைப் பற்றிச் சொல்லிக்கொள்வது சரி; வரப்போகும் கணவன் எத்தகையவனாக இருக்கவேண்டும் என்று சொல்லி அத்தகையவனைத் தந்தருள்க என்று கேட்பதும் சராசரி மகளிருக்குப் பொருந்துவதே ஆகும். அதை விட்டுவிட்டு அன்னவரே எம் கணவர் ஆவார் என்று

உறுதிப்பாட்டுடன் கூறுவது சராசரி மகளிரின் சக்திக்கு அப்பாற்பட்டதாகும். எனவேதான், சமாதி நிலையிலிருந்து எழுந்துவந்து தலைமை வகித்த பெண்ணின் கூற்று இது என்று சிந்திப்பதில் தவறில்லை.

அடுத்தபடியாக இப்பெண்களின் கூற்றாக வருவது 'என்ன குறையும் இலோம்' என்பதாகும். உயிர்களாகப் பிறந்த அனைவர்க்கும் குறைகள் இருந்தே தீரும். குறையிலாதவன் ஈசன் ஒருவனே. அப்படியிருக்க, 'என்ன குறையுமிலோம்' என்று சொல்வது எப்படி நியாயமாகும்? என்றாலும், சமாதிநிலை கலைந்துவந்தவளின் உயர்விற்கும் உறுதிப்பாட்டிற்கும் 'என்ன குறையும் இலோம்' என்று சொல்வது பொருத்தமுடையதே ஆகும். அதனாலேயே இதனை இரண்டாவது காரணமாகச் சிந்திக்க முடிகிறது.

தனி மனிதன் அல்லது ஒரு பெண் என்பவர்களுக்கு மனம் என்ற ஒன்று இருந்தே தீரும். அந்த மனத்தை ஆட்டிப்படைப்பது 'நான்' என்ற அகங்காரமாகும். அந்த மனம், மொழிகளின்வழி நின்று தன் விருப்பத்தைப் பூர்த்தி செய்துகொள்கிறது. அந்த விருப்பம் தோன்றக்கூடக் காரணம் அகங்காரமே ஆகும். அந்த 'நான்' அழிந்தால், அல்லது செயலற்றுவிட்டால் குறை என்று ஒன்று தோன்றக் காரணமே இல்லை. சமாதி கலைந்துவந்த பெருமாட்டி, ஆணவம் செயலற்றுப் போக, ஓர் அற்புதமான வழியைக் கையாள்கின்றாள்.

ஒரு மோட்டார்க் காரை நாம் ஓட்டிச் செல்லுகின்ற போது, சாலை, சாலையில் தோன்றும் இடையூறுகள், அவற்றைக் கடந்து செல்லும் வழிவகைகள் ஆகியவற்றை ஓட்டுபவர்களாகிய நாமே விநாடிதோறும் ஓயாமல் கவனித்துக்கொள்ள வேண்டும். இத்தனை பொறுப்புக்களும் நமக்கு ஏன் வருகிறது? நாமே வண்டியை ஓட்டத்

தொடங்கியதால் இப்பொறுப்புக்கள் நம்மை வந்து சூழ்ந்து கொள்கின்றன.

இவ்வாறு செய்யாமல் முழுத்தகுதி வாய்ந்த ஓட்டுநர் ஒருவரிடம் ஓட்டும் பொறுப்பை ஒப்படைத்துவிட்டுப் பின்னேயுள்ள இருக்கையில் நாம் சாய்ந்து படுத்துக் கொண்டால், மேலே கூறிய பொறுப்புக்கள் அனைத்தும் நம் மனத்தைவிட்டு அகன்றுவிடுகின்றன; அமைதியாக உறங்கக்கூடச் செய்யலாம். இந்தக் கருத்துத்தான் இப்பாடலில் பேசப்பெறுகிறது.

'உன்னைப் பிரானாகப் (தலைவனாக) பெற்ற உன் சீரடியோம்' என்பதில் நம்மைத் தோற்றுவித்து வாழவும், வளரவும் வழிசெய்து கடைசிவரை உடனிருந்து நடத்துபவன் இறைவன் என்பது பேசப்பெற்றது. அவன் காலம், இடம் என்பவற்றைக் கடந்தவன்; ஆதலால், நமக்கு எதனை எப்பொழுது வழங்கவேண்டும் என்பதை அறிந்து வழங்குபவன் ஆவான். ஆனால், அவன் பருப் பொருளாக எதிரே தோன்றுவதில்லை. தேவை ஏற்படும் பொழுது நம் கைகளால் அவனைப் பற்றிக்கொள்ளும் வாய்ப்பேயில்லை. என்றாலும், அவனே தலைவன் என்பதை அறிந்து கொண்டால் நம்முடைய கவலைகளும் பொறுப்புகளும் பெரும்பகுதி நீங்கிவிடும். தேவை ஏற்படும்பொழுது, இவ்வுடம்பால், பற்றிக்கொள்ள ஒருவர் தேவை. அதற்காகவே கணவன்மார் வேண்டுமென்று இம்மகளிர் விரும்புகின்றனர். சிறந்த கணவர்கள் வாய்க்கும்போது எஞ்சியுள்ள பொறுப்பும் அவர்களிடம் ஒப்படைக்கப் படுகிறது.

இக்கணவன்மார் எத்தகையவர்? இறைவனிடம் ஒப்படைக்கப்பட்ட பொறுப்புகள் போக, எஞ்சியவற்றை இவர்களிடம் ஒப்படைக்கவேண்டுமானால், இவர்கள் அந்த இறைவனுடன் தொடர்புடையவர்களாக இருத்தல் வேண்டும். அவர்கள் அத்தகையவர்கள் என்பதை

விளக்கவே 'நின்னடியார்' என்றும் 'அன்னவரே எம் கணவர் ஆவார்' என்றும் அப்பெருமாட்டி கூறினாள்.

இந்த நிலையிலும் ஒரு பிரச்சினை இருக்கத்தான் செய்யும். எவ்வளவுதான் பொறுப்புகளைப் பிரானிடமும் கணவரிடமும் ஒப்படைத்தாலும் இந்த அகங்காரம் என்ற ஒன்று இருக்கின்றவரையில், பிரானும் கணவரும் செய்கின்றவற்றை மகிழ்ச்சியோடும் பொறுப்போடும் ஏற்றுக்கொள்ளும் வாய்ப்பு ஓரளவு குறையத்தான் செய்யும்.

அவர்கள் எவ்வளவு செய்தாலும், 'இன்னும் கொஞ்சம் செய்திருக்கலாமே; இதை இப்படிச் செய்யாமல் அப்படிச் செய்திருக்கலாமே' என்ற குறைகள் ஆணவத்தில் சிக்குண்ட மனத்திற்கு இருக்கத்தான் செய்யும். ஆணவத்தைப் போக்குதல் என்பது இயலாத காரியம். அந்த ஆணவம் இருக்கின்றவரை இந்தச் சிறு குறைகள் மனத்திடை தோன்றிக்கொண்டே இருக்கும். இந்தச் சிறு குறைகளும் நீங்க வழி என்ன? சமாதிநிலையில் இருந்து வெளிப்பட்ட பெருமாட்டி, தன் அநுபவத்தில் கண்ட எளிய வழியைத் தன் தோழிமார்களுக்கு நேரடியாகவும், நம் போன்றவர்களுக்கு மறைமுகமாகவும் இதோ கூறுகின்றாள்.

தலைவன் என்றோ கணவன் என்றோ இறைவனையும், ஒரு மனிதனையும் முழு மனத்துடன் ஏற்றுக்கொண்ட பிறகு, என்ன செய்யவேண்டும்? 'அவர் உகந்து சொன்ன பரிசே தொழும்பாய்ப் பணி செய்வோம்' என்பதே அந்த எளிய வழியாகும். கவிதை ஆதலின் சொற்கள் முன்பின் மாறி அமைந்துள்ளன. சொற்களை மாற்றி 'அவர் சொன்னபரிசே தொழும்பாய் உகந்து பணிசெய்வோம்' என்ற முறையில் அமைத்துக் கொண்டால், பொருள் எளிதாக விளங்கும். அவர்கள் எந்தக் கட்டளை இட்டாலும் மகிழ்ச்சியோடு அதனை ஏற்றுப் பணி செய்யத் தொடங்கிவிட்டால், ஆணவத்தின் பேயாட்டம் அங்கு இல்லாமல் அடங்கிவிடும். அத்தகைய மன நிறைவு

வந்தவர்கள்தாம் 'என்ன குறையும் இலோம்' என்று சொல்லமுடியும்.

இந்தத் தலைவி இப்பொழுது தோழிமார்களை அழைத்துக்கொண்டு குளத்திற்கு நீராடச் செல்கிறாள். இத்தலைவியுடன் சேர்ந்து அவள் சொற்களைக் கேட்டு, தோழிமார்களும் வளர்ச்சி அடைந்துவிட்டனர்.

இந்த வளர்ச்சியை, அடுத்து வரும் மூன்று பாடல்களும் (திருவாச: 164,165,166) அற்புதமாக விளக்கு கின்றன. உன்னைப் பிரானாகப் பெற்ற அடியோம் என்று தலைவி கூறினாள் அல்லவா? யார் அந்தப் பிரான் என்ற வினாவைத் தோழிமார்க்ள் தலைவியிடம் எழுப்பியிருக்க வேண்டும். அதற்குத் தலைவி பதில் கூறுமுகமாக இதோ பேசுகிறாள்.

'தோழிகளே! யார் அந்தப் பிரான் என்று எளிதாகக் கேட்டுவிட்டீர்கள். இதற்கு நேரிடையாகப் பதில் கூறுவது கடினம். அண்ட பிண்ட சர அசரங்கள் ஆகிய அனைத்திலும், ஊடுருவியும் தனித்தும் நிற்கின்றான் அவன் என்று அஞ்சிவிட வேண்டா. ஓத உலவாத பெருமை யுடையவன் ஆயினும், நமக்குத் தோழனாகவே எப்பொழுதும் உள்ளான். நம்போன்ற அடியவர்களிடையே எப்பொழுதும் இருந்துகொண்டிருக்கிறான் என்று கூறுவது தவிர அவனைப்பற்றிக் கூற வேறொன்றும் தெரியாது. இருபத்துநான்கு மணி நேரம் கோவிலில் தங்கி இருந்து இறைவனுடைய பணிகளைச் செய்துவரும் பிணாப் பிள்ளைகளை ஒருவேளை கேட்டுப்பார்க்கலாம். எது அவனுடைய ஊர்; அவன் பெயர் என்ன; அவனுக்கு வேண்டியவர்கள், வேண்டாதவர்கள் யார் யார்-என்ற வினாக்களை எழுப்பியும் அவர்களாலும் ஒன்றும் விடைகூற முடியவில்லை'.

இவ்வாறு கூறிக்கொண்டு, தலைவன் யார் என்று அறுதியிட்டுக் கூற முடியாத நிலையில் அத்தலைவி தோழிகளோடு சேர்ந்து மொய் ஆர் தடம் பொய்கை புக்கு, கையால் குடைந்து குடைந்து விளையாடினாள்.

அப்படி விளையாடும்போது வாய்கள் என்ன செய்தன? அவன் திருவடிகளைப் புகழ்ந்து பாடின. என்ன சொல்லிப் புகழ்ந்தன? 'செய்யா! வெண்ணீறு ஆடீ! செல்வா! சிறு மருங்குல் மையார் தடங்கண் மடந்தை மணவாளா! ஐயா!' என்று கூறியதோடு நிறுத்தாமல் 'நின் விளையாட்டின் உய்வார்கள் உய்யும் வகையெல்லாம் உய்ந்து ஒழிந்தோம்' என்று கூறிப் புகழ்ந்தன. மொழியும், மெய்யும் இணைந்து செயற்பட்டதை இப்பாடலில் கூறினார் அடிகளார். மனத்தின் உதவியின்றி இங்ஙனம் அவனைப் புகழ்ந்துரைத்திருத்தல் முடியாது. எனவே, மனமும் சேர்ந்தே தொழிற்பட்டது என்பது அருத்தா பத்தியால் பெற்றாம்.

அடுத்துவரும் பாடலில் மனத்தின் தொழிலை அடிகளார் விளக்கமாகவே சொல்கிறார். தில்லையில் கூத்தாடும் பெருமான், தீர்த்தன் (தூய்மையே வடிவானவன்), தீயாடுபவன் ஆவான். இப்படி ஆடிக்கொண்டே அண்டபிண்ட சராசரம் அனைத்தையும் படைத்தும், காத்தும், கரந்தும் விளையாடுகின்றான் என்று கூறுவதால், அவனது புற வடிவத்தையும் அவன் தொழிலையும் மனத்தால் நினைந்து சொல்லால் வடிக்கிறாள் அத்தலைவி.

இவ்வாறு தலைவன் யார், அவன் சிறப்பென்ன, அவன் செய்தொழில்கள் யாவை என்பவற்றை நீராடிக் கொண்டே தலைவி சொல்லும்போது, உடன் நீராடும் தோழிமார்களுக்கு உண்மை விளங்கலாயிற்று. அதுவரை 'எங்கோ கற்பனைக்கு எட்டாத தூரத்தில், விண்ணில் இருக்கிறான் இறைவன்' என்றுகொண்ட எண்ணம்

அகன்று, தம்முள் ஒரு தோழனாகவும் தம்மிடையே உள்ள ஒரு தொண்டனாகவும் உள்ளான் என்பதை உணர்ந்த தோழிமாருக்கு ஒரு புதிய காட்சி தென்படலாயிற்று.

சமாதி நிலையிலிருந்து விடுபட்டுக் குருவாக அமைந்த தலைவியின் கூற்றுகள், அவர்களுடைய அஞ்ஞானத்தைப் போக்கவே, எதிரே உள்ள குளத்தின் காட்சி மாறிவிட்டது.

அந்த விநாடிவரை நாள்தோறும் அவர்கள் கண்டு மகிழ்ந்து, முகேரெனப் பாய்ந்து விளையாடிய குளம், அஞ்ஞானம் போனவுடன் புதிய காட்சியை நல்கிற்று. அந்தக் குளமே இறைவன் இறைவி வடிவாகக் காட்சி தரலாயிற்று. அதனை விளக்குவதே 'பைங்குவளை...' என்று தொடங்கும் பாடல்.

கயிலை யாத்திரை தொடங்குமுன் நாவரசர்பெருமா னுக்கு நன்கு பழக்கப்பட்ட ஊராகும் திருஐயாறு. அங்கே உள்ள திருக்கோயில், அங்கு வழிபட வருவோர், தெருவில் நடமாடிய யானை முதலிய விலங்குகள் அவருக்கு நன்கு பழக்கப்பட்டவையே ஆகும். செல்லும் வழியில் கயிலைக் குளத்தில் மூழ்கி யாதும் சுவடு படாமல் ஐயாறடைந்த பெருமானுக்கு, அதே திருவையாறு முற்றிலும் புதிய காட்சியை நல்கியது. அதனையே நாவரசர் பெருமான் 'கண்டு அறியாதன கண்டேன்' (திருமுறை 4—3) என்று பாடியருளினார். எல்லா இடத்திலும் இறைவனைக் காணும் காட்சி நாவரசருக்குக் கயிலை மலையில் முனி புங்கவர் வேடத்திலிருந்த பெருமானால் அருளப்பெற்றது.

அதேபோன்று சமாதி நிலையிலிருந்து வெளிப்பட்ட நங்கையின் மூலம், நீராடச் சென்ற மகளிருக்கு முன்னர்க் கண்டறியாத காட்சி கிடைத்தது.

உறங்குகின்ற தலைவி என்று பலரும் உரைகண்ட திருவெம்பாவையின் முதற்பாடலுக்கு, அவள் சமாதி நிலையிலிருந்து எழுந்தாள் என்று புதிய சிந்தனை

பெறப்பட்டது. யோக நித்திரை என்று சொல்லப்படும் இந்தச் சமாதிநிலையிலிருந்து எழுந்த அவள், பேசிய பேச்சுக்களையும் உடன் வந்த தோழிமார்களுக்கு இறைவனின் சிறப்பைக் கூறிய முறையையும் இதுகாறும் கண்டோம்.

அடுத்து 'ஓர் ஒரு கால்..........' என்று தொடங்கும் பாடல் அந்தத் தலைவியை வேறொரு கோணத்தில் காட்டுகின்றது. இப்பொழுது அவள் பேசவில்லை. உடன் இருந்த தோழிமார்கள் அவள் பேசிய பேச்சைக் கேட்டு வியப்படைந்தனர். இவள் தங்கள் பழைய தோழிதானா என ஐயுற்று வியந்தனர். இப்பொழுது அவர்கள் தத்தம் பொறி, புலன்களை ஒருமுகப்படுத்தி, தத்தம் பொறியறிவு முழுவதையும் கண்ணின்மூலம் செலுத்தி, தலைவியை மறுமுறை நோக்குகின்றனர். இப்பொழுது அவர்கள் தலைவியைப் பார்க்கவோ காணவோ விளிக்கவோ இல்லை. அதற்குப் பதிலாக அவளைக் கூர்ந்து நோக்கினர். அவர்கள் பார்வையிற் பட்டு, அவர்கள் உள்ளத்தில் பதிந்த தலைவி உருவம் அடிகளாரால் 'ஓரொருகால்......' என்ற பாடலில் வரையப்படுகிறது.

அடுத்துவரும் *171, 172* ஆகிய இரு பாடல்களும் தலைவியின் சிந்தனை ஓட்டத்தில் ஒரு புதிய திருப்பத்தைக் காட்டுகின்றன. 'பாதாளம் ஏழினும் கீழ்ப் பாதமலர்' *(164)* என்றும் 'பேதை ஒருபால்' *(164)* என்றும் 'திருமேனி ஒன்றலன்' *(164)* என்றும், பிரபஞ்சத்தைப் 'படைத்தும் கரந்தும் விளையாடுபவன்' *(166)* அவன் என்றும் பேசத் தொடங்கிய தலைவி, அவனுடைய எளிவந்த தன்மையை நினைவுகூரும் வகையில் 'ஒரு தோழன் தொண்டருளன்' *(164)* என்று தோழியருக்கு முன்னர் நினைவுறுத்திய அந்தத் தலைவி, இப்பொழுது இவ்விரு *(171, 172)* பாடல்களிலும் திருவடிப் பெருமை பேசுகிறாள். 'பாதாளம் ஏழினும் கீழ்ச் சொல்லுக்கு அடங்காமல் தாண்டிச்செல்லும் அப்பாதமலர்

என்று நினைத்து அஞ்சவேண்டா! அதே பாதமலர் இங்கு நம் ஒவ்வொருவருடைய இல்லந்தோறும் எழுந்தருள்கின்றது. எதற்காக? நம்தம்மைக் கோதாட்டுவதற்காக' என்று, அஞ்சிக்கிடக்கும் மானிட உயிருக்கு அச்சம் தீர்த்து ஊக்கம் தரும் முறையில் இப்பாடல் அமைந்துள்ளது.

இவ்வாறு கூறுவதிலும் ஒரு பிழை உண்டாகிவிடும். நம் இல்லந்தோறும் அத்திருவடிகள் எழுந்தருளுகின்றன என்றால், அதன் சிறப்பைக் குறைத்து மதிப்பிட்டுவிட நேரிடும். அக்குறையைப் போக்கவே இல்லங்கள் தோறும் எழுந்தருளும் அந்தப் பாதமலர், எத்தகையது தெரியுமா என்ற வினாவிற்கு விடை கூறுவதுபோல் அடுத்த பாடல் அமைந்துள்ளது. அண்ணாமலையான் திருவடி, 'பெண் ஆகி, ஆணாய், அலியாய், பிறங்கு ஒலிசேர் விண்ஆகி, மண்ஆகி, இத்தனையும் வேறாகி' நிற்கின்றது.

'ஆதியும் அந்தமும் இல்லா அரும்பெரும் சோதி' என்று வடிவற்ற ஒளிப்பிழம்பாக இருக்கின்றான் இறைவன் என்று தொடங்கும் திருவெம்பாவைப் பாடல், அவனுக்கு ஓர் அழகிய வடிவைக் கொடுத்து அவனுடைய திருவடியைப் புகழும் முறையில் 'கண்ணார் அமுதமாய் நின்றான் கழல்' (172) என்று நிறைவு செய்கிறது.

ஒளியைக் கூறியதன் நோக்கம் அனைத்தையும் ஊடுருவிச் செல்லும் இயல்பை உணர்த்துவதற்கே ஆகும். ஊருடுருவிச் செல்லும் இதனை நம்முடைய சிறிய மனத்துள் நிறுத்த இயலாது. ஆதலின், நின்றான் கழல் என்று நம்முடைய கட்புலனுக்கும் மனத்திற்கும் தெரிவிக்கின்ற முறையில் திருவடிப் பெருமை பேசிற்று.

மேலே 163 ஆவது பாடலில் மிக்க உறுதிப்பாட்டுடன் 'சீரடியோம்' என்றும், 'கணவர் ஆவார்' என்றும், 'பணி செய்வோம்' என்றும் கூறிய அப்பெருமாட்டி 173 ஆவது பாடலில் 'சேரற்க, செய்யற்க, காணற்க' என்று பாடுவதன்

நோக்கம் யாது? இந்த இரண்டு பாடல்களையும் ஒருசேர வைத்துப்பார்த்தால் பல சிந்தனைகள் தோன்றுகின்றன. சேரற்க, காணற்க என்ற பாடல் முன்னர் வந்து, ஆவார் பணிசெய்வோம் என்ற பாடல் பின்னர் வந்திருந்தால் ஒருவேளை பொருத்தமாக இருந்திருக்கலாம். ஆனால், தலைகீழாக இவை இரண்டும் அமைந்துள்ளன. ஏன் என்று சிந்திக்கத் தொடங்கினால், மனித மனத்தின் கூறுபாட்டை மிகத் தெளிவாக உணர்ந்த அடிகளார், வேண்டுமென்றே இந்த முறைவைப்பைப் பின்பற்றியுள்ளார் என்பது புலப்படும்.

புத்தாண்டின் தொடக்கத்தில் சில நல்ல தீர்மானங்களை நினைந்து, அந்த ஆண்டு முழுவதும் அவற்றைப் பின்பற்ற வேண்டும் என்ற முடிவிற்கு வருகின்றோம். இவற்றைச் செய்தேதீரவேண்டும் என்ற முடிவு மனத்திடைத் தோன்றும்பொழுது ஐயப்பாட்டிற்கோ மனத்திண்மை இன்மைக்கோ அங்கு இடமேயில்லை. ஆனால், பதினைந்து நாட்களில் இந்தத் தீர்மானங்கள் நம்மைவிட்டு மெல்ல மறையத் தொடங்கிவிடுகின்றன. இன்னும் சில நாட்களில் தீர்மானம் இருந்த சுவடே தெரியாமல் போய்விடுகிறது. எந்தச் சராசரி மனிதனின் மனப்பாங்கிற்கும் இதுவே இலக்கணமாகும். இதனை மனத்துட் கொண்ட அடிகளார், திருவெம்பாவையின் முதற்பாடலில் காணப்பெறும் தலைவியின் கூற்றாக ஆவோம், பணிசெய்வோம் என்று உடன்பாட்டு முகத்தால் 163ஆம் பாடலில் பாடிவிட்டார்.

அதன் பிறகு ஒன்பது பாடல்களில் இந்த வளர்ச்சி பேசப்படுகிறது. ‘பைங்குவளைக் கார் மலரால்..’ (167) என்று தொடங்கும் பாடலில், தாங்கள் அன்றாடம் நீராடும் குளத்தையே இறைவன் இறைவி வடிவாகக் காணும் புதிய மனோநிலை வந்துவிடுகிறது. இந்த வளர்ச்சியின் முடிவில் அனைத்தையும் படைக்கும் இறைவன், அனைத்தையும்

கடந்துநிற்கும் இறைவன் தன் எளிவந்த தன்மை (ஸௌலப்பியம்) காரணமாக இல்லங்கள்தோறும் எழுந்தருளி நம்மைக் கோதாட்டி ஆட்கொள்கிறான் என்று நினைக்கின்ற வரையில் அந்த வளர்ச்சி தொடர்கின்றது.

ஆனாலும், மனித மனத்தின் இயல்பான குறைபாடு இங்கே புகுந்துவிடுகிறது; பழைய உறுதிப்பாடு தளர்ந்து விடுகிறது. அதன் பயனாக மனம் பேதலிக்கின்றது. சராசரி மனிதர்களைப்போல மனம் வேலைசெய்யத் தொடங்கிய வுடன் உள்ளே தனித்தியங்கும் உறுதி விழித்துக்கொண்டு மனத்திற்குக் கட்டளையிடத் தொடங்குகிறது. அந்தக் கட்டளை எதிர்மறைமுகமாக அமைகின்றது. ‘காணற்க, செய்யற்க’ என்ற எதிர்மறை ஏவல்கள் உறுதியால் பிறப்பிக்கப்படுகின்றன. இப்படி உறுதியால் ஏவப்பெற்ற பொறி, புலன்கள், மனம் என்பவை இந்த ஏவலுக்குக் கீழ்ப்படியுமா என்ற ஐயம் தோன்றிவிடுகிறது. தன் அதிகாரத்தைச் செலுத்த ஒரு துணை தேவைப்படுகிறது. தன்னுடைய செல்வாக்குக் குறைந்திருந்தாலும் துணையின் செல்வாக்கைக் கண்டு பொறி புலன்கள் அஞ்சி நிற்கும் என்று அப்பெருமாட்டி கருதுகின்றாள்.

அப்பெருமாட்டி தேடிய துணைதான் இறைவன். அப்பெருமானிடம் இதனைச் செய்தருள்க என்று நேரடியாகக் கூறாமல், ‘எங்கள் பெருமான் உனக்கு ஒன்று உரைப்போம் கேள்’ (173) என்று தன் விண்ணப்பத்தை அத்தலைவி வைக்கின்றாள். இதனைக் கேட்பாயாக என்று தலைவனிடம் கூறியபிறகு, இல்லங்கள்தோறும் எழுந்தருளிக் கோதாட்டும் தம் பெருமானின் திருவருள் கிடைத்து விட்டது என்ற நம்பிக்கையில் ‘எம்கொங்கை நின் அன்பர் அல்லார் தோள் சேரற்க’, ‘எம் கை உனக்கு அல்லாது எப்பணியும் செய்யற்க’, ‘எம் கண் மற்றொன்றும் காணற்க’ என்று கட்டளையிடுகிறாள்.

தலைவி, உடன் வந்த தோழியர் ஆகிய அனைவரின் பொறி புலன்களும் இக்கட்டளைக்களுக்குக் கீழ்ப்படிந்து விட்டன. ஆதலின், உள்ளத்தில் கொண்ட உறுதிப்பாட்டின் விளைவாக அனைவரும் சேர்ந்து இறைவனைத் துதிக்கத் தொடங்குகின்றனர். அதுவே 'போற்றி அருளுக நின் ஆதியாம் பாதமலர்' (174) என்ற பாடலாகும்.

இப்பாடல் (174) முழுவதும் இறைவனின் திருவடிப் பெருமை பேசுகின்றது. உயிர்கள் அனைத்தும், கூர்தல் அறத்தின் அடிப்படையில் புல்லாய்ப் பூடாய்த் தொடங்கி, மானிட வாழ்க்கையில் புகுந்து, அதிலும் சில பிறப்புக்கள் கடந்து, கடைசியாகத் 'தெய்வம் என்பதோர் சித்தமுண்டாகி' மேலும் வளர்ந்து, நிறைவாகத் திருவடி தரிசனம் பெற்று உய்கதி அடைகின்றன. ஆதலால், அத்திருவடிப் பெருமையை இப்பாடல் முழுவதிலும் கூறியுள்ளார்.

## திரு அம்மானை

தைந் நீராடல் என்ற பழைய பெயர் மறைந்து, மார்கழி நீராடல் என்ற பெயர் நிலைத்துவிட்ட காலத்தில் தோன்றிய அடிகளார், மகளிர்விளையாட்டில்கூட ஆன்ம வளர்ச்சி பெறமுடியும் என்பதை உணர்த்துவார்போலத் திருவெம்பாவை பாடினார். அதன் இறுதியில் இறைவன் திருவடிபற்றியே ஒரு முழுப்பாடல் முகிழ்த்தது.

மூவர் தேவாரங்களில் இறைவன் திருவடி பேசப்பெறினும், அவன் இறைவனாகவே இருந்து செய்த வீரச் செயல்களே மிகுதியாக இடம் பெற்றன. திருவாசகத்தின் தொடக்கத்திலிருந்து இறுதிவரை நூற்றுக் கணக்கான பாடல்களில் குறிப்பாகத் திருவடியே பேசப்பெறுகிறது. இதன் காரணத்தைச் சிந்தித்தால் அதனை எளிதில் விளங்கிக்கொள்ள முடியும்.

திருவாதவூரராக அமைச்சர் பதவியிலிருந்து உலகியலில் முழுவதுமாக மூழ்கியிருந்த ஒருவரைப் பெருந்துறையிலிருந்த குருநாதர் இழுத்துப் பிடித்துத் தம் திருவடிகளில் விழுமாறு செய்தார். குதிரையிலிருந்து இறங்கிக் குருநாதரிடம் வருகின்றவரை அவருடைய மானிட வடிவம், அவருடைய இரண்டு பாதங்கள் என்பவை திருவாதவூரரின் கண்களில் நன்கு பட்டுக்கொண்டிருந்தது உண்மை. அத்திருவடிகளைப் பற்றிக்கொண்டு, வீழ்ந்து வணங்கி எழுந்தவுடன் ஒரே விநாடியில் திருவாதவூரரும், அமைச்சரும் முற்றிலுமாக மறைந்துவிட, அங்கே மணிவாசகர் தோன்றினார். தம்முடைய இந்த மாற்றத்திற்குக் குருநாதரைவிட அவருடைய திருவடிகளே காரணம் என்று அடிகளார் முழுமையாக நம்பியமையே, அவர் திருவடிகளைப்பற்றி இவ்வளவு அதிகமான பாடல்களில் பாடியமைக்குரிய காரணமாகும்.

திருப்பெருந்துறைக் காட்சியைப் பல இடங்களில் கூறி அருளினாரேனும் 'புவனியில் சேவடி தீண்டினன் காண்க; சிவன் என யானும் தேறினன் காண்க' (திருவாச: 3-61, 62) என்று வரும் பகுதி ஒரு விளக்கத்தைத் தருகிறது.

நம்மைப் பொறுத்தவரை எதிரே அமர்ந்திருக்கும் ஒருவரைப் பார்த்துக்கொண்டே வருவோமானால் முதலில் தெரிவது அவருடைய வடிவம். நெருங்கிச் சென்று பார்க்கும்போதுதான் அவருடைய கால்கள் தெரியும். ஆனால், அடிகளாரைப் பொறுத்தவரை நிலைமை தலைகீழாக உள்ளது. எதிரே உள்ளவரை, சிவன் என அவர் தேறுவதற்கு முன்னர் அவருக்கு காட்சி தந்தது புவனியைத் தீண்டிய குருவின் சேவடியாகும். அந்த முதற்காட்சியே இறுதிவரை அடிகளார் மனத்தில் நிலைத்துவிட்டதாதலால் தம்முடைய மாற்றத்திற்குக் குருநாதரைவிட அவர் திருவடிகளே காரணம் என்று

அடிகளார் நினைக்கின்றார். ஆதலின், அத்திருவடிகளை நூற்றுக்கணக்கான பாடல்களில் விடாது பாடிக்கொண்டே வருகிறார்.

'நமச்சிவாய வாஅழ்க' என்று ஒலிவடிவாக இறைவன் உள்ளான் என்று தொடங்கிய உடனேயே அடுத்து நினைவுக்கு வருவது 'நாதன்தாள் வாழ்க' என்ற அவனது திருவடிகளே ஆகும். இந்த நினைவு சிவபுராணத்தின் பதினைந்து அடிகள் கடக்கின்றவரை அடிகளாரைவிட்டு நீங்கவில்லை.

இங்குப் பேசப்பெற்ற திருவடி என்ற சொல்லுக்குத் திருவருள் என்ற சாத்திரப் பொருள் கொண்டு குழப்பிக் கொள்ளத் தேவையில்லை. அடிகளார் குறிப்பது குருநாதரின் திருவடிகளைத்தான்.

இந்த அடிப்படையை மனத்துட் கொண்டு திரு அம்மானைப் பாடல்களைப் பார்ப்பது நலம். திருவெம்பாவையின் இறுதிப் பாடலில் விரிவாகப் பேசப்பெற்ற திருவடியே, அம்மானையின் இருபது பாடல்களில் ஐந்து இடங்களுக்குமேல் இடம்பெற்றுள்ளது.

எங்கோ சுற்றித் திரிந்த தம்மை ஈர்த்து ஆட்கொண்டது அத்திருவடிகள் ஆதலால், தம்முடைய மாற்றத்தைப்பற்றி நினைக்கும்பொழுதெல்லாம் அத்திருவடிகள் அல்லவா இம்மாற்றத்தைத் செய்தன என்று இறும்பூது எய்துகிறார்.

கீழ்வரும் திரு அம்மானைத் தொடர்கள் மேலே கூறிய கூற்றை மெய்ப்பிக்கின்றன.

அறை கூவி வீடு அருளும் அம் கருணை வார்கழல் (175)

வான் வந்த வார்கழலே (178)

தாள் தாமரை காட்டி (180)

கண்ணார் கழல் காட்டி நாயேனை ஆட்கொண்ட (174)

என்னைத் தன்தொழும்பில் கொண்டருளும்
வானவன் பூங்கழல் (188)

சிவன் கழலே சிந்திப்பேன் (191)

புவனியில் தீண்டிய குருநாதரின் சேவடி, தமக்கு என்ன செய்தது என்பதை ஐந்து இடங்களில் கற்பார் உள்ளம் உருகும் வகையில் அடிகளார் பேசியிருக்கின்றார். இதில் மிக முக்கியமான பகுதி 'எந்தரமும் ஆட்கொண்டு' என்பதாகும். அதாவது, அருளைப் பெறத் தகுதி உள்ளவனா, இல்லையா என்று பாராமல் எம்போன்ற தரம் குறைந்தவர்களையும் ஆட்கொண்டான் என்று கூறுவதால், மனம் ஒடிந்து கிடக்கும் மனித சமுதாயத்திற்கு மாபெரும் நம்பிக்கையை ஊட்டுகின்றார் அடிகளார்.

......................சீரார் பெருந்துறையில்
எளிவந்து இருந்து இரங்கி எண் அரிய இன் அருளால்
ஒளிவந்து என் உள்ளத்தின் உள்ளே ஒளி திகழ
அளி வந்த அந்தணன்....... (192)

தான் வந்து நாயேனைத் தாய்போல் தலையளித்திட்டு
(178)

நாயான நம்தம்மை ஆட்கொண்ட நாயகன் (181)

................என்னையும் தன் இன்னருளால்
இப்பிறவி ஆட்கொண்டு இனிப் பிறவாமே காத்து (186)

என்பன போன்ற பகுதிகள் அத்திருவடிகளையும், அத்திருவடிகளுக்கு உரியவனாகிய பெருமான் தமக்கு என்ன செய்தான் என்பதையும் விரிவாக எடுத்துப் பேசுகின்றன.

அம்மானையின் பத்தொன்பது பாடல்களில் திருவடிப் பெருமையும், அத்திருவடிகள் தமக்குச் செய்த பேருதவியும், அதனால் தம்மில் நிகழ்ந்த மாற்றமும்பற்றிப் பாடிய அடிகளார், நிறைவுப் பாடலில் தம் வாழ்க்கையில் நிகழ்ந்த ஒரு நிகழ்ச்சியைப் பின்னோக்கிப் பார்க்கின்றார். மதுரை நாயகனாகிய சொக்கன் குதிரையின்மேல் வந்தானென்று கூறாமல், பெருந்துறையான் கொற்றக் குதிரையின்மேல் வந்தான் என்று பாடுவது சிந்திக்கத் தக்கது.

பெருந்துறையில் குரு அருள் செய்கின்றவரையில் அங்குத் திருக்கோயில் ஏதும் இருந்ததாகத் தெரியவில்லை. இன்றும்கூடத் திருப்பெருந்துறைக் கோயிலின் கருவறையில் பீடம் இருக்கின்றதே தவிரச் சிவலிங்க வடிவம் இல்லை. குருவாக வந்தவர் அப்பீடத்திலிருந்து அருள்செய்த பிறகு அப்படியே மறைந்துவிட்டார் என்பதைக் குறிக்கவே, கருவறையில் சிவலிங்க வடிவம் இல்லாமல் கோயில் அமைக்கப்பெற்றுள்ளது. அடிகளாரே இக்கோயிலைக் கட்டினார் என்று வரும் கதைகளில் உண்மை இருக்குமா என்பது சிந்திக்கற்பாலது. புவனியில் சேவடி தீண்டியவன் சிவன் என அடிகளார் தேறிவிட்டமையின், அவர் இக் கோயிலை அமைத்திருப்பின் நிச்சயமாகச் சிவலிங்கத்தை நிறுவியிருப்பார். ஏனவே, அவர் காலத்துக்குப் பின்னர், அவருடைய மன்னனாகிய இரண்டாம் வரகுண பாண்டியன் போன்றவர்கள், நடைபெற்ற நிகழ்ச்சியை வைத்துக்கொண்டு இக்கோயிலைக் கட்டியிருக்க வேண்டும்.

அது எவ்வாறாயினும் 'பெருந்துறையான் கொற்றக் குதிரையின்மேல் வந்தருளிக் கோதாட்டினான்' என்று அடிகளார் கூறுவதால், குருவடிவிலிருந்த பெருமானே இத்திருவிளையாடலைச் செய்தான் என்று அடிகள் நம்புகிறார். அப்படிப் பாடும்போது 'தன் அடியார் குற்றங் களைந்து குணங்கொண்டு கோதாட்டினான்' என்று

கூறுவதால் அவனுடைய தாயன்பை நினைந்து உருகினாராயிற்று.

'குற்றங் களைந்து குணங்கொண்டு கோதாட்டி' என்றால் என்ன? இதற்கு விளக்கம் 'கல்லா மனத்து' (175) என்று தொடங்கும் பாடலில் விரிவாகப் பேசப்பெறுகிறது. கல்லைப் பிசைந்து கனியாக்குதல் என்பது உலகியலில் நடைபெறாத ஒன்று. கல், பிசையக்கூடிய பொருளன்று. பிசையக்கூடிய பொருள் எதுவும் கனியாக மாறுவதில்லை. அப்படியிருக்க, கல்லுக்கு நிகராக உள்ள தம் மனத்தைப் பிசைந்து கனியாக்கினான் என்கிறார். கல்லைப் பிசையக்கூடிய ஒருவன் வல்லாளனாய்த்தான் இருத்தல் வேண்டும். 'உருகா மனம், சிவஞானம் உணரா அறிவு' ஆகியவை கல்போன்றவையாம். இப்படிப்பட்ட மனத்தையும் கனியாக்கவேண்டுமானால் முதலில் ஆணவத்தைச் செயலிழக்கச் செய்யவேண்டும். அதுவும் இறைவன் துணைகொண்டு நடைபெறுதலின் 'பிசைந்து' என்றார்.

மிகப் பெரிய அறுவை மருத்துவம் மேற்கொள்வதற்கு முன்னர், மயக்க மருந்து தருவதுபோல ஆணவத்தோடு இணைந்திருக்கின்ற மனத்தைக் கனிவிக்க வேண்டுமாயின் அந்த மனத்தை ஆணவத்திலிருந்து பிரிக்கவேண்டும். பெருந்துறை வல்லாளனனுக்கு இந்த இரகசியம் தெரியுமாத லால், இந்த மனத்தைப் பற்றியிருக்கும் ஆணவத்தை முதலில் செயலிழக்கச் செய்தான் என்பதைப் 'பிச்சேற்றி' என்ற சொல்லைச் சொல்வதன் மூலம் குறிப்பிடுகின்றார்.

'தான்' என்பதை இழந்தவர்கள்மட்டுமே தம்மிலிருந்து மனத்தைப் பிரித்துவைக்க முடியும். பிச்சேற்றுவதன்மூலம் தான் என்பதை ஒழித்த குருநாதர், மனமாகிய கல்லைப் பிசைந்து கனியாக்கினார் என்றார்.

கனியாக்கப்பட்ட அடிகளாரின் மனம் இறை அனுபவமாகிய தேனுள் மூழ்கி, எழுந்து உலகிற்குத் திருவாசகத்தைத் தரவேண்டும். ஆதலால், தன் கருணை வெள்ளத்து அழுத்தினான் என்கிறார். அழுத்தியதால் என்ன நிகழ்ந்தது? சஞ்சிதம், பிராரத்துவம், ஆகாமியம் என்ற மூன்று வினைகளும் அவரைவிட்டு நீங்கின. இவை அனைத்தும் நீங்கியபிறகு அங்கு வாதவூரரும் இல்லை, மணிவாசகரும் இல்லை. வினைகள் கடியப்பட்டவுடன் இறைவன் ஆணையை, திருவாசக வடிவில் தரும் ஒரு பிழம்பாகவே அடிகளார் ஆகிவிட்டார். இதன்பிறகு அவரைப் பொறுத்தவரை 'தன் பரிசும், வினை இரண்டும், சாரும் மலம் மூன்றும் அற, அன்புப் பிழம்பாய்' (பெ.பு: கண்ண: 154) திகழ்ந்தார். அந்தப் பிழம்பிலிருந்து தெறித்து விழுந்த சுடர்கள்தாம் திருவாசகப் பாடல்களாக முகிழ்த்தன.

இதனை அடுத்து வரும் 'தில்லை நகர்புக்குச் சிற்றம்பலம் மன்னும்' என்ற பகுதி இவருடைய குருநாதரை மட்டுமல்லாமல் அன்பு பிழம்பாய்த் திரிந்த இவரையும் குறிப்பதாகும்.

ௐ ௐ ௐ

சிவமயம்

# பாட்டு முதற்குறிப்பு அகராதி

